# இதழியல்






இரா. கோதண்டபாணி, எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்ப் பேராசிரியர்
யாதவர் கல்லூரி, மதுரை.




கற்பகம் வெளியீடு
சபரி இல்லம்
201, குறிஞ்சி நகர் ❋ மதுரை-14.

6 - 5

Dr. Nadig Krishnamurthy, M.A., (M.O.), Ph.D., (MYS)
Formerly Professor and Head,
Department of Post-Graduate Studies and
Research in Journalism,
University of Mysore.

# FOREWORD

*I am extremely happy that Mr. R. Kothandapani has taken up the venture of publishing a book on Journalism in the Tamil language. It is really praiseworthy and will be of value to the scholars who wish to know and study Journalism through Tamil, I am sure.*

*The days are for language newspapers. However, this is not to under–estimate the importance of English. Yet, it is the Indian languages Journalism which needs priority over on alien language and must take the pride of place.*

*My best wishes to the author, assuming that he will make some more vigorous strides in permeating the subject of Journalism.*

(Sd.) Nadig Krishnamurthy

# பொருளடக்கம்

# என்னுரை

பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள் போன்ற கல்வி நிறு வனங்களின் அண்மைக்கால அழுத்தமான சிந்தனையில் இதழியல் துறை தனித்ததோர் இடத்தினைப் பெற்றுள் ளது. இத்துடன் இதழியல் கண்ணோட்டம் கற்றோ ரிடம் மட்டுமன்றி, மற்றோர்களிடமும் உருவாகியுள்ளது. இந்த வளரும் பயிருக்கு உரமூட்டும் வகையில் தமிழில் இதழியல் துறை நூல்கள் பல வெளிவரத் தொடங்கி யிருப்பதும் மகிழ்ச்சியான செய்தியாகும். இதழியல் துறையில் முன்னோடி நூலாக வெளிவந்து அறிஞர் உலகம் அன்புடன் பாராட்டிய **'இதழியல்'** இப்போது இரண்டாம் பதிப்பாக வெளிவருகின்றது.

இந்நூலின் முதற்பதிப்பு வெளிவந்தபோது நான் இதழி யல் துறையில் அடியெடுத்து வைத்திருந்தேன். தொடர்ந்து இத்துறையில் பணியாற்றும் வாய்ப்பு உருவான காலத்தில் பல்கலைக் கழகத்திலும் கல்லூரி யிலும் நான் நடாத்திய இதழியல் பாட வகுப்புகள் என்னை மேலும் செம்மைப்படுத்திய பட்டறைகளாயின. மதுரைத் தமிழ்ச் சங்கம் வெளியிட்ட **'செந்தமிழ்'** எனும் பழம் பெரும் இலக்கிய இதழ் குறித்து ஆராய்ந்து முனைவர் பட்டம் (Ph. D.) பெற்ற பின்பு இதழியல் துறையை ஆய்வுக் கண்ணோட்டத்தில் அசை போட் டேன். அதன் விளைவில் 'இதழியல்' இரண்டாம் பதிப்பாகியது.

இவ்விரண்டாம் பதிப்பு, திருத்தப்பட்ட பதிப்பு என்ப தினும், புதியசெய்திகள் சேர்க்கப்பட்ட பதிப்பு' என்பதே பொருத்தமாகும். படங்கள் புதிதாக இணைக்கப் பட்டுள்ளன. இதழியல் துறை பற்றிய அறிஞர்களின் ஆங்கிலக் கருத்துத் தொடர்கள் தொகுத்து அளிக்கப் பட்டுள்ளன.

இத்துறையில் என்னைச் செலுத்திப் பாராட்டி மகிழும் எங்கள் கல்லூரியின் மேனாள் முதல்வர் பேராசிரியர் தி.அ. சொக்கலிங்கம், தேர்வுக்கட்டுப்பாடு அலுவலர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அவர்களுக்கும்; இந்நாள் முதல்வர், முனைவர் தமிழ்க்குடிமகன் அவர் களுக்கும் நன்றியுடையேன். இந்நூலாக்கத்தில் துணை செய்த ஆங்கிலத்துறைப் பேராசிரியர் கோதண்டராமன், முனைவர் தொ. பரமசிவன், பெரும்புலவர் முத்துக் குமரனார், தம்பி ஓடை. தமிழ்ச் செல்வன், அறிமுக உரை வழங்கிய மைசூர்ப் பல்கலைக் கழக மேனாள் இதழியல் துறைப் பேராசிரியர் முனைவர் நாடிக் கிருஷ்ணமூர்த்தி மற்றும் யாதவர் கல்லூரித் தமிழ்த் துறைப் பேராசிரியர்கள் ஆகியோருக்கு நன்றி கூறுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

அழகிய முறையில் அச்சிட்ட கோனார் அச்சகத்தி னருக்குப் பாராட்டு வழங்குவதில் பெருமையடைகிறேன்.

— இரா. கோதண்டபாணி

உலகின் மிகப் பழமையான நூல் 'டைமண்ட் சூத்ரா' கி.பி. 868-இல் சீனாவிலிருந்து மரக் கட்டை அச்சில் வெளிவந்தது. [பக்கம்-146]

மர அச்சுக்களைப் பயன்படுத்தி போர்ச்சுக்கல் நாட்டு லிஸ்பன் நகரிலிருந்து 1554-இல் வெளி வந்த 'லூசோ தமிழ்ச் சமய வினாவிடை' என்ற நூல். தமிழ் எழுத்துக்கள் ரோம வரி வடிவத்தில் அமைந்துள்ளன. [பக்கம்-149]

DOCTRINA CHRISTAM
en Lingua Malauar Tamul.

Soli DEO honor, & gloria. Amen.

இந்திய மொழிகளின் முதல் அச்சுப்புத்தகம் 1578-இல் தமிழ் மொழியில் கொல்லத்திலிருந்து வெளிவந்தது. ஏற்கனவே வெளிவந்த டக்ரினா கிறிஸ்டம் (1557) என்ற இந்நூலை ஹென்ரிக் குவிஸ் பாதிரியார் தமிழில் 'தம்பிரான் வணக்கம்' என்ற பெயரில் வெளியிட்டார். [பக்கம்-8]

இந்தியா

பாரதியார் 1906-இல் வெளியிட்ட 'இந்தியா' வார இதழ். தமிழ் இதழ்களில் முதன்முதலாக அரசியல் கருத்துப் படங்களை முதல் பக்கத்தில் பாரதியார்தான் வெளியிட்டார். [பக்கம்-177]

HICKY's
BENGAL GAZETTE;
OR,
Calcutta General Advertiser.

இந்தியாவின் முதல் செய்தித்தாள் 'பெங்கால் கெஜட் அல்லது கல்கத்தா ஜெனரல் அட்வர்டைசர்' 1780-ஆம் ஆண்டு சனவரி 19-ஆம் நாளன்று ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி என்பவரால் கல்கத்தாவிலிருந்து வெளியிடப் பட்டது.

[பக்கம்-10]

# இதழியல்

அறிவினைத் தூண்டி அறியாமை எனும் சாபக்கேட்டினைத் தொலைக்க வேண்டுமெனில் முன்னதை ஊக்கிப் பின்னதைத் தவிர்க்கும் இதழியல் துறையைப் பள்ளிகள், கல்லூரிகள் போன்ற அறிவாலயங்களாக வளர்க்க வேண்டும். ஏனெனில் பத்திரிகையும் பள்ளிப் படிப்பும் அறிவு மரத்தின் இருவேறு கிளைகளாகும்.

— ஜேம்ஸ் பக்கிங்காம்

உலகம் நம் கண்முன்னே சுருங்கிக்கிடக்கிறது. பரந்து கிடக்கும் நிலப்பகுதி ஒரு பார்வைக்குள் அடங்கி விடுகிறது. தொலைவான ஓரிடத்தில் மண்ணை முத்தமிட்டுக்கொண்டிருக்கும் அடிவானத்திற்குள்ளேதான் நிலப்பரப்பே அடங்கியிருக்கிறதென்று கருதிக் கொண்டிருந்த அப்பாவித்தனத்திற்கு அறிவுலகம் முற்றுப்புள்ளி வைத்திருக்கிறது. தொழில் புரட்சியின் பயனாக மேற்றிசையிலிருந்து வீசிய அறிவியல் காற்றை நாம் சுவாசிக்கத் தொடங்கிய பின்பு எத்தனையோ துறைகள் வியக்கத்தக்க முறையில் வளர்ந்துள்ளன. அவற்றுள் இதழியல் துறையும் ஒன்றாகும். விண்ணை இடிக்கும் இமயத்தைக்கூட கண்ணை இமைக்கும் நேரத்திற்குள் செய்திகள் கடந்து வந்து விடுகின்றன. அன்றாடத் தொடர்புகளால் அண்டை நாடுகளெல்லாம் அடுத்த வீடுகளாகி விட்டன. ஆழ்கடலுக்கடியில் உலகத் தொடர்புகள் ஓடிக்கொண்டே இருக்கின்றன. காற்று மண்டலம் உலக நிகழ்ச்சிகளை உதிர்த்துக் கொண்டே இருக்கின்றது. வான மண்டலத்து விண்கூடுகளும் உலகத் தொடர்புகளுக்குக் கருவிகளாகி விட்டன. இன்றையச் செய்திப் பரவலின் விரைவையும் சுறுசுறுப்பையும் ஒப்பிட்டுப் பார்த்தால் வானவூர்திகளெல்லாம் கட்டை வண்டிகளாகி விடுகின்றன. உலகப் பூங்காவிலே அறிவு விளையாட்டுக்கு இதழ்களே ஆடுகளங்களாகத் திகழ்கின்றன.

மனிதன் மொழியைப் படைத்துப் பேசத் தொடங்கிய பின்பு செய்தித் தொடர்பிற்கெனப் பல வாயில்களைப் படைத்திருந்தான். கூவியழைத்தும் சீழ்க்கை, சங்கு, மணி போன்றவற்றை ஒலித்தும்; பறை முதலியவற்றை அறைந்தும் செய்தியறிவிக்கும் எளிய வாயில்களைத் தோற்றுவித்தனர். இம்முறையால் அண்மை இடங்களுக்குச் செய்திகள் அறிவிக்கப்பட்டனவேயன்றித் தொலைவிலுள்ள இடங்களுக்குப் பரப்ப

முடியவில்லை. யானைமீதமர்ந்து முரசறைந்தும், குதிரை யேறிச் சென்றும் செய்திகளைப் பரப்புவது மேட்டுக் குடியின ருக்கே கிட்டிய வாய்ப்பாக இருந்தது. எல்லா இடங்களிலிருந் தும் செய்திகளை அறியும் பெரிய வாய்ப்பு எளிய செய்தித் தாள்கள் வந்த பின்பே சாதாரணக் குடிமகனுக்குக் கிடைத்தது.

இதழ்கள் நாடு, இனம், மொழி ஆகியவற்றால் எழுப் பிய பந்தலிலே படருங் கொடிகளாகும். விடுதலை பெறாத நாடுகளில் விடுதலைக்குச் செய்தித்தாள்கள் வித்திடுகின்றன. விடுதலை பெற்ற நாடுகளில் அவை குடியாட்சியைக் காத்துக் கொண்டுள்ளன.* காட்டாற்று வெள்ளமெனக் கரைபுரண் டோடிய விடுதலையுணர்வை நன்னெறிப்படுத்தி, நாட்டு மக்க ளைத் தட்டியெழுப்பும் வகையில் இதழ்கள் செயல்பட்டதை இந்திய நாட்டு வரலாறு எடுத்துக் காட்டுகிறது. குடியாட்சி படைக்கப் போராடிய உலகநாடுகளுடன் செய்தித் தாள்கள் இணைந்து போராடும் வலிமை பெற்றிருந்தன. ஆசிய மன்னர் கள் அக்பரின் வாள் முனைக்கு அஞ்சினர்; அக்பரோ, அபுல் ஃபாசலின் எழுதுகோல் முனைக்கு அஞ்சினார் நாட்டு மக்கள் அரசாங்கத்தால் மட்டும் ஆளப்படுவதில்லை; அன்றாடம் வெளி யாகும் செய்தித் தாள்களாலும் ஆளப்படுகின்றனர்.†

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு அரண் ஆகியவற் றுடன் செய்தித்தாள் வலிமையும் ஆள்வோரின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றாக அமைந்து விட்டது. செய்தித்தாள்களின் வருகைக்குப் பின்னரே ஆள்வோரும், ஆளப்படுவோரும் ஒரு வரையொருவர் நெருங்கி வந்தனர். எல்லா நாடுகளிலும் இதழ் களே அரசிற்கும் மக்களுக்கும் இணைப்புப்பாலமாக விளங்கு கின்றன. அரசினரின் கொள்கைகளையும் திட்டங்களையும் அறிவித்து, அவற்றின் அடிப்படையில் பொதுமக்கள் கருத்தை (Public Opinion) உருவாக்கும் வாய்ப்பை அவை அளிக்கின்றன. குறிப்பாகத் தேர்தல் காலங்களில் செய்தித்தாள்கள் குக்கிராமங் களிலெல்லாம் குடியேறி குடியாட்சி விதைகளைப் பரவலாக

---

* 'The press is the great Palladium of liberty of the country'
— *Lord Gray*

† 'We live under a government of men and morning news papers'
— *Wendell Philips*

Journalism in Modern India-p. 53.

விதைக்கின்றன. தேர்தல் முடிந்தாலும் செய்தித்தாள்களின் பணி முடிந்துவிடுவதில்லை. நாடாளுமன்றம், சட்டமன்றங் களுக்கிடையே நுழைந்து ஆட்சிமரபுகளைச் செய்திகளாக அள்ளி வந்து நாட்டு மக்களிடையே வழங்குகின்றன. எனவேதான் செய்தித்தாள்கள் குடியாட்சி மரபுகளைக் காக்கும் தேவதை (Guardian angels of democracy) களாகக் கருதப்படுகின்றன.

இதழ்களை வெறும் அச்சுப்பதிந்த தாள்களாக மட்டுமே எண்ணிவிட முடியாது. சமுதாயத் தொடர்புகளோடு நோக்கும் போது அவை தேசிய நிறுவனங்களாகச் செயல்படுகின்றன. மக்கள் அன்றாடம் அறியவேண்டிய செய்திகள், அச்செய்திகள் பற்றிய பொதுமக்களின் கருத்து, மக்களுக்குரிய பொழுது போக்கு போன்றவற்றைப் பெரும்பாலோருக்குக் கிட்டும் வண்ணம் முறையாகவும் நேர்மையாகவும் இதழ்கள் பரப்பு கின்றன * இப்பரப்பு முறையில் அறிவுப்பெருக்கம், அரசியல் விழிப்புணர்ச்சி, தொழில்துறை முன்னேற்றம் ஆகியவற்றைப் பெறுகின்ற வாய்ப்பு மக்களுக்கு எளிதாகக் கிட்டுகிறது. வேறு எந்தத் துறையும் தன்னை இந்த அளவிற்குப் பொதுவாழ்வில் ஈடுபடுத்திக் கொண்டு உறுதியாகவும் சுயமாகவும் செயல்பட முடியாத நிலையில் இதழியல்துறை மட்டும் முழுமையாகச் செயலாற்றிச் சமுதாயக் கல்வி பரப்பும் பல்கலைக் கழகமாகத் திகழ்கிறது.

இதழ்களை மனிதன் வரவேற்கத் தொடங்கிய போது தன்வீடு, தன்னாடு என்ற குறுகிய மனப்பான்மை நீங்கி உலகக் கண்ணோட்டம் ஓங்கியது. மனித நேயம் தன்னல உணர் வால் மரத்துப்போகாமல் உலகந் தழுவிய பொதுநல உணர்வு செழித்து வளரத் தொடங்கியது. சாதி, சமயம், இனம் போன்ற குறுகிய எண்ணங்கள் உடைத்தெறியப்பட்டு, உலகமக்கள் ஒன்றுகூடுவதற்குச் செய்தித்தாள்கள் உதவுகின்றன.

பனித்துளியிலே காணுகிற பகலவனைப் போன்று செய்தித் தாளின் பக்கங்களில் உலகம் முழுவதையும் காணுகிறோம்; அவற்றின் வருகைக்குப் பின்பு வானம் என்ற கூரையின்கீழ் பூமி ஒரே குடும்பமாகிவிட்டது.

---

* Journalism is the systematic and reliable dissemination of public information, public opinion and public entertainment by modern mass media of communication

— *American Journalist G. F. Mott.*

பகுதி 1

# இந்திய இதழியல் வரலாறு
# [HISTORY OF THE INDIAN JOURNALISM]

நாடு, மொழி, இனம் இவைதாம் வரலாறு படைக்கும் வாய்ப்பைப் பெற்றுள்ளவை. பழமையிலும் பண்பாட்டிலும் பெருஞ் சிறப்புப் பெற்றுள்ள இவை மூன்றும் நம்நாட்டின் வரலாற்றினைப் படைத்துக் கொடுத்தவையாகும். தென்றல் பூங்காவினுள் சென்று வெளி வரும்போது தேன்சிந்தும் மலர்களின் மணத்தையும் அள்ளி வருவது போல, இந்திய நாட்டு வரலாறு இதழ்களின் வரலாற்றோடு இணைந்து மணம் பரப்புகிறது. வரலாற்றுப் பூங்காவில் இந்த ஒட்டுமாங்கனியின் சிறப்பான தோற்றம், சீரான வளர்ச்சி, புதுமைப் போக்கு, புகழின் உச்சி எல்லாமே சுவையானவை. ஆங்கில அரசு அடிமைப்படுத்தியிருந்த நாட்டில் கரடுமுரடான அதிகாரப் பாதைகளில் நடந்து, கட்டுப்பாட்டுக் காட்டாறுகளைக் கடந்துவந்த இந்தியநாட்டு வரலாறும் இதழியல் வரலாறும் தம் நீண்ட பயணத்தில் கைகோர்த்து நெருங்கி நடந்தவையாகும். இந்திய அரசியல் வரலாறு இடையிலே வழித் துணையாக வந்து சேர்ந்தது. இதற்குப் பின்பு எல்லாத் துறைகளும் வரலாறு படைத்திருப்பதைப் போன்று இதழியல் துறையும் வரலாறு படைத்துள்ளது. கடந்த இரண்டு நூற்றாண்டுகளில் அதன் தோற்றம், வளர்ச்சி முதலியன காலத்தை ஒட்டிக் கணக்கிடும் முறையில் அமைந்துள்ளன.

# தோற்றம்-வளர்ச்சி

காரிருள் அகத்தில் நல்ல
கதிரொளி நீதான்; இந்தப்
பாரிடைத் துயில்வோர் கண்ணிற்
பாய்ந்திடும் எழுச்சி நீதான்!
ஊரினை நாட்டை இந்த
உலகினை ஒன்று சேர்க்கப்
பேரறிவாளர் நெஞ்சிற்
பிறந்தபத் திரிகைப் பெண்ணே!

— பாரதிதாசன்

மனிதன் எப்படியும் வாழலாம் என்று எண்ணிக் கொண்டிருந்த காலத்தில் தகவல் தொடர்புகளை நினைத்துப் பார்க்கவில்லை; இப்படித் தான் வாழவேண்டும் என்று வாழ்க்கையை வரையறைப் படுத்தியபோது அடுத்து வாழும் மனிதர்களைப் பற்றி அறிய விரும்பினான். கூட்டுக்குடும்பமுறை தோன்றிய பின்பு அடுத்த கூட்டத்தினரைப் பற்றி அறியும் ஆர்வம் அதிகமாயிற்று. காலப்போக்கில் தனிமனித விருப்பமும் சமுதாயத் தேவைகளும் அதிகரித்தபோது, செய்திகளை எப்படியும் அறியும் முனைப்பில் மனிதர்கள் சில செய்தி வாயில்களைப் படைத்துக் கொண்டனர். புறாக்களின் கால்களில் செய்தி ஓலைகளைக் கட்டியனுப்பினர். கூவியழைத்ததும், சீழ்க்கை ஒலியாலும், மணியடித்தும் செய்திகளைத் தெரிவித்துக் கொண்டனர். வேறு சில இடங்களில் தீயம்புகளை வானத்தில் பாய்ச்சியும் செய்தியறிவிப்பு நடைபெற்றிருக்கிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும் அலர் பரவும் முறையினைக்கூட ஒருவகையான செய்திப் பரவல் என்றே கருதலாம். நாட்டு மக்களிடையே நாள்தோறும் நடைபெறும் நிகழ்ச்சிகளை அறிந்து கொள்வதும் அன்றைய வேந்தனின் அன்றாடச் செயலாக இருந்திருக்கிறது.*

சேரன் செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெடுப்பை சேரர் தலைநகர் வஞ்சியில் பறையறைந்து அறிவித்துவிட்டால் உடனே அச்செய்தி வடநாடுகளில் பரவிவிடும் என்ற கருத்துடைய சிலப்பதிகாரக் குறிப்பினால் செய்திகளைப் பறையறைந்து அறிவித்தலும் அது அண்டை நாடுகளுக்குப் பரவுதலும் உண்டு

---

* ''எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்'' (திருக்குறள்-582)

என்பதை அறிகிறோம்.† திருமணம் போன்ற மங்கல நிகழ்ச்சி களை முரசறைந்து நகர மக்களுக்குத் தெரிவித்துள்ளார்கள்.‡

அச்சுக் கலையை அறிவதற்குமுன்பு வாய் மொழிகளாக வும், பொது இடங்களில் அறிக்கைகளை ஒட்டியும் செய்தி களைப் பரப்பி வந்தனர். எகிப்து நாட்டில் அடிமைகளை வைத்துச் செய்திகளைத் தொகுத்தனர். அவ்வடிமைகளே விரை வாக ஓடிச்சென்று சேகரித்த செய்திகளை அரசர்களிடம் கொடுத்தார்கள். கிரேக்கத்தில் குதிரையாட்கள் மன்னரின் செய்திகளை எடுத்துச்சென்று பரப்பியுள்ளனர். இம்முறையில் நாள் ஒன்றிற்குப் பதினைந்துகல் தொலைவிற்குத்தான் செய்தி கள் பரவின. அஞ்சல் வண்டிகள் (Mail Coaches) வந்த பிறகு நூறுகல் தொலைவிற்குச் செய்திகளைக் கொண்டுசெல்ல முடிந் தது. ஜூலியஸ் சீசர் காலத்தில் உரோம நாட்டின் பொதுஇடங் களில் 'Acta Diurna' எனப்பட்ட செய்தி அறிக்கைகளை ஒட்டி வைத்தனர். இவைதவிர செய்திக் கவிதைகளும், செய்தித்துண்டு வெளியீடுகளும் சீசர் காலத்தில் வழக்கிலிருந்தன. ஜூலியஸ் சீசர் 'கால்' என்ற நாட்டில் போரிட்டுக் கொண்டிருந்தபோது அங்கிருந்து தலைநகருக்குச் செய்திகளை அவ்வப்போது அனுப்பிக் கொண்டிருந்தனர்.

நம்நாட்டில் தகவல் தொடர்புச் சாதனங்களின் சிந்தனை அசோகர்காலத்தில் ஏற்பட்டது. அரசாங்கக்கட்டளைகள், அறச் செய்திகள், புத்தமதக் கொள்கைகள் ஆகியவற்றை அசோகர் தூண்களிலும் பாறைகளிலும் செதுக்கி மக்களுக்கு அறிவித் தார். எளிதாக அழிந்துவிடக்கூடிய மைகளைக்கொண்டு கோவிற் சுவர்களில் சித்திரங்களாக வரைந்தும் செய்திகள் பரப்பப் பட்டன. மொகலாயர் காலத்தில் செய்தித் தொடர்புகள் விரி வான முறையில் ஒழுங்குபடுத்தப்பட்டன. ஔரங்கசீப் காலத் தில் நாடு முழுவதும் அலைந்து செய்திகளைச் சேகரிக்கும்

---

† "நாவலந் தண்பொழில் நண்ணார் ஒற்றுநம்
காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா
வம்பணி யானை வேந்தர் ஒற்றே
தஞ்செவிப் படுக்குந் தகைமைய வன்றோ
அறைபறை யென்றே அழும்பில்வேள் உரைப்ப"

(சிலப்பதிகாரம், 3866-3870)

‡ "யானை எருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம்" (சிலப்பதிகாரம்-43 & 44)

செய்தியாளர் வாக்யா நாவிஸ் (Vaquia Navis) என்றும், செய்திகளை அரசிடமிருந்து எடுத்துச் சென்று மக்களுக்கு வழங்கும் செய்தியாளர் சவானிக் நாவிஸ் (Savanik Navis) என்றும் அழைக்கப்பட்டனர். இரகசியச் செய்தியாளர் கோஃபியா நாவிஸ் (Cofia Navis) எனப்பட்டார். 'நாவிஸ்' என்ற உருதுச் சொல் மக்கள் தொடர்பு அதிகாரி என்ற பொருளை உடையது. இச்செய்தியாளர்கள் அனுப்புகின்ற செய்திகள் அரசவையில் படிக்கப்பட்டு அவற்றினடிப்படையில் முடிவுகள் எடுக்கப் பட்டன. நிக்கோலா மேனுசி என்ற வெனிஸ் நாட்டு யாத்திரிகர் ஔரங்கசீப்பின் அரசவைபற்றிக் குறிப்பிடும்பொழுது, "இச்செய்திக் கடிதங்கள் மொகலாய மன்னனின் அரசவையில் பெண்களால் படிக்கப்பட்டன. நடுஇரவு வரைகூட, அரசவை கூடிச் செய்திக் கடிதங்களைப் படித்து முடிவெடுப்பதுண்டு"* என்று எழுதியுள்ளார். மொகலாயர் காலத்துக் கடிதங்கள் எட்டு அங்குல நீளமும் நாலரை அங்குல அகலமுங் கொண்ட தாளில் பெர்சியன் அல்லது உருதுமொழியில் கையினால் எழுதப் பட்டன. 'செய்திக் கடிதம் எழுதியவர்களின் தவறான குறிப்புகளே ஔரங்கசீப்பின் தக்கணப் பீடபூமிப் போரின் தோல்விக்குக் காரணமாக அமைந்தது' என்று 1672-1681 வரை இந்தியாவில் மருத்துவராகப் பணியாற்றிய ஜான் பிரையர் என்பவர் குறிப்பிட்டுள்ளார். இந்திய மன்னர்கள் தகவலறிந்து செயல் பட்டதை அறிந்து கொண்ட ஆங்கில ஆட்சியினரும் செய்திகளின் வலிமையை உணர்ந்திருந்தனர். அவர்களும் செய்திக் கடிதம் எழுதுவோர்களைப் பணியில் அமர்த்தினர்.

அச்சுக்கலையும் தாள் தயாரிப்பும் சீனர்களின் சிந்தனையில் பிறந்தவையாகும். இவை இரண்டினைப் பற்றிய அறிவு பதினைந்தாம் நூற்றாண்டில் ஐரோப்பா முழுமையும் பரவியது. கி. பி. 1476 - ஆம் ஆண்டில் வில்லியம் காக்ஸ்டன் என்பவர் இங்கிலாந்தில் வெஸ்ட்மினிஸ்டர் என்ற இடத்தில் அச்சகம் ஒன்றைத் தொடங்கினார். 1498 - ஆம் ஆண்டில் வாஸ்கோட காமாவின் வருகைக்குப்பின் ஐரோப்பிய உறவு நம்நாட்டிற்குக் கிட்டியது. போர்ச்சுக்கீசியப் பாதிரியார்கள் இந்தியாவிற்கு அச்சுக்கலையை அறிமுகப்படுத்தினர். 1556 - ஆம் ஆண்டு செப்டம்பர் 6 - ஆம் நாள் இந்தியாவின் முதல் அச்சகம் கோவா பகுதியில் அமைந்தது. அடுத்த ஆண்டில் இங்கிருந்து டக்ட்ரினா

---

* Dr. Nadig Krishna Murthy — Indian Journalism-p.8

கிறிஸ்டம் என்ற நூல் அச்சாகியது. 1578 - ஆம் ஆண்டில் இதே நூல் 'தம்பிரான் வணக்கம்' என்ற பெயரில் தமிழ் அச்செழுத்துக்களைக் கொண்டும் வெளியாகியது. இதுவே இந்திய மொழிகளின் முதல் அச்சுப் புத்தகம்.

உலகநாடுகளின் அச்சுக்கலை வளர்ச்சி செய்தி வெளியீட்டில் அடியெடுத்து வைத்தது. ஜெர்மனியில் செய்தித் துண்டு வெளியீடுகள் (News Pamphlets) அச்சிடப்பட்டு மக்கள் மத்தியில் வழக்கிற்கு வந்தன. தொடர்ந்து பல ஐரோப்பிய நாடுகளில் இத்தகைய வெளியீடுகள் சந்தை கூடுமிடங்களில் விற்கப்பட்டன. உலகின் முதல் செய்தித்தாள் ரிலேசன்* (Relation) ஜெர்மனியிலிருந்து 1610 - இல் வெளியாகியது. பதினேழாம் நூற்றாண்டில் பிரான்ஸ் (1631) ஸ்வீடன் (1645), ஸ்பெயின், ஆஸ்திரியா, நெதர்லாந்து முதலிய நாடுகளிலும் செய்தித்தாள்கள் தோன்றின. இங்கிலாந்து நாட்டில் இலண்டன் கெஜட் (1666) ஸ்பெக்டேடர் (1711) போன்ற இதழ்கள் வெளியான போதிலும் டெய்லிகோரண்ட் (1702) என்ற இதழ்தான் முதன்மையானதாகக் கருதப்படுகிறது.

இந்தியாவிலிருந்த ஐரோப்பியர்கள் இங்கிலாந்திலிருந்து கப்பலில் வருகின்ற செய்தித்தாள்களையே நம்பியிருந்தனர். ஒன்பது மாதங்களிலிருந்து ஒருவருடம்வரை காத்திருந்து அச்செய்தித் தாள்களைப் படித்துவந்தனர். கிழக்கிந்தியக் குழுமத்திற்கும், தனியார்களுக்கும் சொந்தமாக அச்சகங்களிருந்தும் செய்தித்தாள்களைத் தொடங்க யாரும் முன்வரவில்லை. ஆங்கில அரசின் தலைமையிடமாகவும், வணிக மையமாகவும் அக்காலத்தில் விளங்கிய கல்கத்தா நகரில், கிழக்கிந்தியக் குழுமத்தில் பணியாற்றிய வில்லியம் போல்ட்ஸ் என்பவர் 1766–இல் இதழ் ஒன்றைத் தொடங்க முயற்சி செய்தார். தங்கள் கருத்துவேறுபாடுகளை அவர் வெளிப்படுத்திவிடுவார் என்ற அச்சத்தில் அம்முயற்சியைக் குழுமத்தார் தடுத்ததோடு அவரையும் பணியிலிருந்து நீக்கிவிட்டனர். அதே ஆண்டின் செப்டம்பர் மாதத்தில் ஒருநாள் போல்ட்ஸ் அரசினர் தலைமைச் செயலகக் கதவில் அறிக்கை ஒன்றினை ஒட்டினார்! அவ்வறிக்கையில் இருந்த செய்தி:

"பொதுமக்களுக்கு

கல்கத்தா நகரில் செய்தித்தாள் இல்லாதது வணிகத்திற்

---

* Leipziger Zeitung (German Name)

கும், சமுதாயத்திற்கும் பெரிய இழப்பாக இருக்கிறது. ஒவ்வொரு இந்தியனுக்கும் அது வேண்டிய ஒன்றாகும். எனவே அச்சுத்தொழில் அறிந்தவர்களுக்கும் அச்சகத்தை நடத்துகிறவர்களுக்கும் ஊக்கமளிக்க நான் தயாராக இருக்கிறேன். பொதுமக்களுக்குச் செய்தியாகச் சொல்ல வேண்டிய எழுத்துப் படிகளை வைத்திருப்பவர்கள் காலை, பத்திலிருந்து பன்னிரண்டு மணிக்குள் என்னை வந்து சந்திக்கலாம்.''*

ஆங்கில அதிகாரிகளின் வட்டாரத்தில் இவ்வறிக்கை பெரிதும் பரபரப்பை உண்டாக்கியது. உடனடியாக வில்லியம் போல்ட்ஸ் ஐரோப்பாவிற்குச் செல்லவேண்டுமென உத்தரவிட்டனர். இந்நிகழ்ச்சியின் பதினான்கு ஆண்டுகளுக்குப் பின்பு இந்திய இதழியல் அடிவானத்தில் புதியதொரு விடிவெள்ளி பூத்தது. ஆம்! இந்தியாவின் முதல் செய்தித்தாளான பெங்கால் கெஜட் அல்லது கல்கத்தா ஜெனரல் அட்வர்டைசர் 1780-ஆம் ஆண்டு சனவரி மாதம் 29-ஆம் நாள் தோன்றியது.

* S. Natarajan -- A history of the press in India p' 10

# தொடக்க கால இதழ்கள்

1780-ஆம் ஆண்டு, சனவரி மாதம் 29-ஆம் நாள் சனிக்கிழமை இந்திய நாட்டின் முதல்-முழுமை பெற்ற-அச்சு வடிவச் செய்தித்தாள் பெங்கால் கெஜட் அல்லது கல்கத்தா ஜெனரல் அட்வர்டைசர் வெளிவந்தது. அச்சுக்கலையில் ஆர்வம் கொண்ட ஆங்கில வணிகர் ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி என்பவர் ஆங்கில மொழியில் வார இதழாக இச்செய்தித்தாளை வெளிக் கொணர்ந்தார். 12''×8'' அளவில் இரண்டு பக்கங்களைக் கொண்டிருந்தது ஹிக்கியின் இதழ். கல்கத்தாவிலிருந்து வெளி வந்த இந்த அச்சுச்சுவடியே இந்திய இதழியலின் வளர்ச்சிக்கு அரிச்சுவடியாய் அமைந்தது. இங்கிலாந்து இதழ்களில் வெளி வந்த செய்திகள், வணிகக்கடிதங்கள், விளம்பரங்கள் இவைகளே பெங்கால் கெஜட்டின் பொருளடக்கமாக அமைந்திருந்தன. அச்சும் அவ்வளவு சிறப்பாக இல்லை. இந்திய மக்களின் அறிவுப் பெருக்கத்திற்கும் மனவளத்திற்கும் இவ்விதழ் எந்த வகையி லும் துணையாய் அமையவில்லை; என்றாலும், இந்திய நாட்டின் முதல் செய்தித்தாள் என்ற சிறப்புப் பட்டத்தை இந்த இதழ்தான் தட்டிக்கொண்டு சென்றிருக்கிறது.

வங்கத்தில் இந்தியாவின் முதல் இதழைத் தொடங்கிய ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி எளிமையானவர்; என்றாலும் மன உறுது உடையவர். இதழ்களின் சுதந்திரத்திற்காக ஆங்கில அரசை எதிர்த்துப் போராடிய ஆங்கிலேயர் இவர். இநதியா வில் இதழ்களுக்குக் கருத்துச் சுதந்திரம் முழுமையாகக் கிட்டி யிருந்தால் அதன் முன்னவராகக் கருதப்படவேண்டியவர் ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கியேயாவார். ஆங்கில அரசு, அதிகாரிகளின் துணையுடன் நடத்திய முறையற்ற செயல்களை எள்ளல் நடையில் எழுதிக் கண்டித்தது பெங்கால் கெஜட். இந்தியத் தலைமை ஆளுநர் வாரன் ஹேஸ்டிங்ஸ், இந்திய உச்ச நீதி மன்றத்தின் நீதிபதி எலிஜா இம்பே ஆகிய இருவருங்கூட ஹிக்கியின் கண்டனக் கணைகளிலிருந்து தப்பவில்லை. அரசின் ஐயப்பார்வையில் பட்ட பின்பு அதிகாரிகளின் பகையிலும் விழுந்தது பெங்கால் கெஜட். இந்தியாவின் இந்த முதல் இதழ் பிறந்த பத்தே மாதத்தில் ஆட்சியாளரின் துன்பப் பிடிக்குள் சிக்கித் துவண்டது. கிழக்கிந்தியக் குழுமத்தின்

நிருவாகச் சீர்கேடுகள் பெங்கால் கெஜட்டின் அன்றாடச் செய்திகளாயின. அத்துடன் இங்கிலாந்து நாடாளுமன்றத்தில் பெங்கால் கெஜட்டில் வெளியான செய்திகள் எதிர்க் கட்சியினரால் எடுத்துச் சொல்லப்பட்டன. தலைமை ஆளுநரின் 'மாட்சிமை தங்கிய மனைவியார்' மீது குற்றஞ்சாட்டி எழுதியதற்காக இதன் அஞ்சல் வழியாக அனுப்பும் சலுகையை நீக்கி ஆணை ஒன்று பிறப்பிக்கப்பட்டது † இந்திய நாட்டு இதழியல் துறையில் வழக்கு மன்றம், அடிதடிகள், அச்சுறுத்தல், சிறைச்சாலை, தண்டம், நாடு கடத்தல் இத்தனை கொடுமைகளையும் மொத்தமாக முதன் முதலில் சந்தித்த மாவீரர் அகஸ்டஸ் ஹிக்கியாவார். இத்தோடு எண்பதாயிரம் ரூபாய் கட்டுத்தொகை; ஐநூறு ரூபாய் தண்டம்; நான்கு மாதச் சிறைத் தண்டனை! சிறைக்குள்ளிருந்தும் பெங்கால் கெஜட் வெளியிடப்பட்டது. அதிகார வர்க்கத்தின் அழுத்தமான பிடிக்குள் அகப்பட்ட ஹிக்கிக்கு மற்றுமொரு வழக்கில் இருநூறு ரூபாய் தண்டம் விதிக்கப்பட்டது. வாரன் ஹேஸ்டிங்ஸ் தொடுத்திருந்த அவதூறு வழக்குத் தீர்ப்பில் ஐயாயிரம் ரூபாய் கட்டவேண்டுமென்றும் ஆங்கில 'நியாயசபை' நீதியை நிலை நாட்டியது! 1782, மார்ச்சு மாதம் அச்சுப்பொறிகளும் எழுத்துக்களும் பறிமுதல் செய்யப்பட்டன; அச்சகம் இழுத்து மூடப்பட்டு முத்திரை வைக்கப்பட்டது. இரண்டே ஆண்டுகளில் பெங்கால் கெஜட் இதழின் கதை முடிந்தது! ஆனால், நீறு பூத்துக் கிடந்த அந்த நெருப்புக்கதைதான் இதழியலில் நீண்டதொரு வரலாறாகத் தொடர்ந்து கொண்டிருக்கிறது. ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி 'இந்தியச் செய்தித் தாள்களின் தந்தை'யாய் நம் நெஞ்சில் நின்று வாழ்கிறார்.

பெங்கால் கெஜட்டைத் தொடர்ந்து கல்கத்தாவில் இந்தியா கெஜட் என்ற இதழ் தோன்றியது. பெர்னார்டு

---

† "Fort Willam, 14th Nov., 1780

Puplic notice is hereby given that as a weekly newspaper called the Bengal Gazette or the Calcutta General Advertiser by **J.A. Hicky** has lately been found to contain several improper paragraphs tending to vilify private characters and to disturb to peace of the settelement, is no longer permitted to be circulated through the channel of the General Post Office *Margarita Barns —The Indian Press*

மெஸ்ஸிங், பீட்டர் ரீட் என்ற இரண்டு வணிகர்கள் தங்கள் வணிகத்தை விளம்பரப்படுத்தி விரிவுபடுத்தும் நோக்கில்தான் இவ்விதழைத் தொடங்கினர். காலப்போக்கில் இந்தியா கெஜட் செய்தித்தாளாக மாறியது. இவ்விரு வணிகர்களும் கிழக்கிந்தியக் குழுமத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். தலைமை ஆளுநர் வாரன் ஹேஸ்டிங்ஸ் விதிக்கின்ற எந்தக் கட்டுப்பாடுகளையும் மீறு வதில்லை என்ற உறுதிப்பாட்டில்தான் இந்தியா கெஜட் வெளிவர முடிந்தது. பெங்கால் கெஜட்டின் போட்டி இதழான இவ்விதழுக்கு மானியம் கிடைப்பதற்காக ஆளுநரின் மனைவி யார் பரிந்துரை செய்திருந்ததைத்தான் கடுமையாகத் தாக்கி எழுதியிருந்தார் அகஸ்டஸ் ஹிக்கி. பெங்கால் கெஜட் மட்டுமே கொள்கைகளை நெஞ்சில் வைத்திருக்க, கல்கத்தாவின் மற்ற இதழ்களெல்லாம் அவற்றை வயிற்றில் கட்டித்தான் வளர்ந்து கொண்டிருந்தன. இந்தியாவின் மூன்றாவது செய்தித்தாள் 'கல்கத்தா கெஜட் அண்டு ஓரியண்டல் அட்வர்டைசர்' 1784-ல் அரசினரின் செய்திகளை வெளியிடுகிற அரசிதழாக வெளி வந்தது. இதனைத் தொடர்ந்து 1785-இல் பெங்கால் ஜெர்னல் என்ற இதழை தாமஸ் ஜோன்ஸ் என்ற வணிகர் தொடங்கினார். ஆங்கில அரசு தரும் விளம்பரங்களை இலவசமாக வெளியிட ஒப்புக்கொண்டு அஞ்சல் சலுகையைப் பெற்றுக் கொண்டது பெங்கால் ஜெர்னல். இதே ஆண்டில்தான் இந்தியாவின் முதல் மாத இதழ் ஓரியண்டல் மேகசின் அல்லது கல்கத்தா அமியூஸ்மெண்ட் என்ற பெயரில் வெளியானது. 1786-இல் கல்கத்தா கிரானிக்கிள் என்ற இதழ் வெளிவந்தது. இதே காலத்தில் வில்லியம் டுயன் என்பவர் தொடங்கிய இந்தியன் வோர்ல்டு (1787) என்ற மற்றொரு இதழ் அரசிற்குப் பணியாத காரணத்தால் இடையில் நின்று போனது.

ஆங்கில அரசின் நிருவாக மையமாகவும், வணிக நிலையங் களின் வளர்ச்சியிடமாகவும், ஆங்கில வணிகர்கள் தங்கி வாழும் இடமாகவும் அமைந்திருந்தபடியால் கல்கத்தா இந்திய இதழி யலின் தோற்றத்தில் முதலிடம் பெற்றது. என்றாலும் இங்கே தோன்றிய இதழ்கள் மக்களின் குரலாக ஒலிக்காமல், ஆண்டு கொண்டிருந்த ஆங்கில மகேசர்களின் குரலாகவே ஒலித்துக் கொண்டிருந்தன. ஆங்கிலேயர் உரிமையில் — ஆங்கிலமொழி யில் — ஆங்கிலேயர் பற்றிய செய்திகளையே தாங்கி வந்ததால் இந்திய மக்களுக்கு இவ்விதழ்களால் எவ்விதப் பயனும் கிட்ட

வில்லை. எனவேதான், விற்பனையில்கூட இவை நூற்றுக் கணக்கில்தான் ஊசலாடிக் கொண்டிருந்தன.

சென்னையின் முதல் செய்தித்தாளை ரிச்சர்டு ஜான்ஸ்டன் என்னும் அச்சகர் மெட்ராஸ் கூரியர் என்னும் பெயரில் 1785, அக்டோபர் 12-இல் தொடங்கினார். ஆங்கில அரசின ரின் விளம்பரங்கள், அரசு ஆணைகள் அனைத்தும் இவ்வித ழில் வெளியிடும் ஒப்பந்தம் ஒன்றும் உருவாகியது. அதற்கெனக் கிடைத்த பரிசு, இலவச அஞ்சல் சலுகையாகும். நான்கு பக்கங் களில் வெளியான இவ்வார இதழில் ஆங்கில நாட்டில் வெளியாகும் இதழ்களின் செய்திகளே பெரும்பாலும் காணப் பட்டன. தொடக்கத்தில் ஆங்கில அரசின் அரவணைப்புத் தொட்டிலில் வளரத் தொடங்கிய மெட்ராஸ் கூரியர் காலப் போக்கில் அதே அரசின் கண்டனத்திற்கும் ஆளாக வேண்டிய திருந்தது. இதன் ஆசிரியர் ஹியூக்பாய்டு அதிலிருந்து விலகி 1791 - இல் ஹாரகாரு என்ற இதழைத் தொடங்கி இரண்டு ஆண்டுகள் நடத்தினார். இராபர்ட் வில்லியம்ஸ் என்பவர் 1795-இல் தொடங்கிய வீக்லி மெட்ராஸ் கெஜட் என்ற இதழ் மெட்ராஸ் கூரியருக்குப் போட்டி இதழாக அமைந்திருந்தது. சில மாதங்களுக்குப் பின்பு ஹம்ப்ரீஸ் என்ற ஆங்கிலேயர் இந்தியன் ஹெரால்டு என்ற இதழைத் தொடங்கினார். ஆனால், அரசினரின் அனுமதி பெறாமல் இதழ் தொடங்கியதற்காக ஹம்ப்ரீஸ் நாடு கடத்தப்பட்டார்.

பம்பாயில் ஆங்கிலம் கற்ற இந்தியர்கள் அதிகமாக இருந் தனர். 1789-இல் வெளிவந்த பாம்பே ஹெரால்டு என்ற ஆங்கில வார இதழே பம்பாயின் முதல் செய்தித் தாளாகும். 1790-இல் லூக் ஆஸ்பர்னர் தொடங்கிய பாம்பே கூரியர் 1838-இல் பாம்பே டைம்ஸ் என்ற பெயர் மாற்றம் பெற்றது. இந்தியாவின் தலை சிறந்த இதழாளர் இராபர்ட் நைட் இதன் ஆசிரியராகப் பொறுப் பேற்றார். இந்த நாளிதழ்தான் இந்தியாவின் இன்றைய முன் னணிச் செய்தித்தாளாக விளங்குகின்ற டைம்ஸ் ஆப் இந்தியா ஆகும். 1791-இல் வெளியான பாம்பே கெஜட்டும் ஏற்கனவே வெளிவந்து கொண்டிருந்த பாம்பே ஹெரால்டும் இணைந்து ஆங்கில அரசின் கொள்கை பரப்பும் இதழாக வெளிவரத் தொடங்கியது.

கல்கத்தாவை அடுத்து, ஆங்கில அரசின் தலைமை இடங்க ளாகிய சென்னை, பம்பாயில் இதழியலின் அடுத்த கட்ட

வளர்ச்சி அமைந்திருந்தது. இம்மூன்று இடங்களிலும் இதழ்கள் தோற்றம் கண்டனவேயன்றிச் சீரான வளர்ச்சியை உடனடியாகப் பெறவில்லை. அன்றைய அரசின் நெருக்கடியே இதற்கு முதற் காரணமாகும்; இதழியல் துறை வணிகச் சிறப்புநிலை பெறாமையும், போக்குவரத்துக் குறைவும் மற்ற காரணங்களாகும். ஆங்கில நாட்டு இதழ்களில் வெளிவந்த செய்திகள், அரசினர் அறிவிப்புகள், ஆங்கிலப் பாடல்கள், அழகுக் குறிப்புகள், வணிக விளம்பரங்கள், ஐரோப்பாவிலிருந்து வருகின்ற—இந்தியாவிலிருந்து புறப்படுகின்ற ஆங்கிலப் பிரமுகர்கள் பற்றிய செய்திகள், முக்கியமானவர்களின் திருமணம் — மறைவு இவைதாம் இவ்விதழ்களின் பொருளடக்கங்களாக அமைந்திருந்தன. வருவாய் நோக்கில் இக்காலத்து இதழ்கள் விளம்பரங்களுக்காக அரசையும் வணிகர்களையுமே நம்பியிருந்தன.

பிறந்த வீடான கல்கத்தாவில் *1790*-ஆம் ஆண்டிற்குப் பிறகுதான்இதழியல் பிள்ளை எழுந்து நடைபோட்டது ஆசியாட்டிக் மிர்ரர் *(1794)*, கல்கத்தா கூரியர், இந்தியன் அப்பல்லோ, பெங்கால் ஹாரகாரு *(1795)*, டெலிகிராப் *(1796)*, கல்கத்தா மார்னிங் போஸ்ட், ஓரியண்டல் ஸ்டார் *(1798)*, ரிலேட்டர் *(1799)* ஆகிய இதழ்கள் கல்கத்தாவில் தோன்றியவையாகும். இதழ்களின் வளர்ச்சி தொடங்கியவுடன் அரசினரின் கண்ணோட்டம் அவற்றின்மீது அதிகரிக்கத் தொடங்கியது. வெல்லெஸ்லி பிரபுவின் காலத்தில் கல்கத்தா இதழ்கள் கடுமையான சட்டங்களைச் சந்தித்தன. 1799-ஆம் ஆண்டில் செய்தித்தாள் தணிக்கை பற்றிய ஆணையொன்று பிறப்பிக்கப்பட்டது, அதன்படி வெளியிடுவதற்கு முன்பு எல்லாச் செய்திகளையும் அரசினரின் பார்வைக்கு அனுப்ப வேண்டியதிருந்தது. 1799-ஆம் ஆண்டு மே மாதம் 13-ஆம் நாள் "இதழ்கள் ஒழுங்குமுறைச் சட்டம்" நடைமுறைக்கு வந்தது. கல்கத்தா இதழ்களின் கருத்துச் சுதந்திரத்தை முடக்கி வைக்கப் பூட்டிய முதல் அடிமைத் தளையாக இச்சட்டம் அமைந்திருந்தது. தலைமை ஆளுநர் வெல்லெஸ்லி விதித்திருந்த கடுமையான சட்டக் காட்டாறுகளை இந்திய இதழ்கள் எதிர்நீச்சல் போட்டுக் கடக்க வேண்டியதிருந்தது. இதழ்களைப் பதிவு செய்யும் சட்டமுறைக்குட்பட்டு கல்கத்தாவின் ஏழு செய்தித்தாள்களும் பதிவு செய்து கொண்டன. எக்காரணம் கொண்டும் ஞாயிற்றுக் கிழமைகளில் இதழ்கள் வெளிவரக் கூடாது என்றும், இறுதிப் பக்கத்தில் அச்சிடுவோர் பற்றிய

விளக்கங்கள் இருக்க வேண்டுமென்றும் அரசு ஆணையிட் டிருந்தது. இச்சட்டத்தை மீறிய இதழாசிரியர்கள் நாடு கடத்தப் பட்டனர். பெங்கால் ஹாரகாரு இதழின் ஆசிரியர் சார்லஸ் மெக்லின்என்பவர் இச்சட்டத்தை எதிர்த்ததால் ஐரோப்டா விற்கு அனுப்பப்பட்டார்.

பதினெட்டாம் நூற்றாண்டில் எழுந்து நிற்கத் தொடங் கிய இதழியல் துறையின் பிஞ்சுக் கால்களை ஆங்கில அரசின் ஆணைகளும் சட்டங்களும் அடிக்கடி வாரிவிட்டன. எழுத் துரிமை கேட்ட இதழ்களின் அஞ்சல் சலுகைகள் நிறுத்தப்பட் டன. எல்லாவற்றையும் விட இக்காலத்து இதழ்கள் ஆங்கிலேயர் களின் பிடிக்குள் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தபடியால் இந்தி யர்களுக்கான கருத்துக்களை வெளியிடும் வாய்ப்பைப் பெற் றிருக்கவில்லை. இந்தியாவில் தங்கியிருக்கும் ஐரோப்பியருக்காக ஐரோப்பியர் நடத்தும் இதழ்களாகவே அவை அமைந்திருந்தன.



# பத்தொன்பதாம் நூற்றாண்டில் இதழ்கள்

**1807**-ஆம் ஆண்டில் கல்கத்தாவிற்கு அருகில் உள்ள செராம்பூரில் கிறித்தவர்கள் அச்சகம் ஒன்றை நிறுவிச் சமயம் பரப்பும் இதழ்களை வெளியிட்டனர். அப்போதைய ஆளுநர் மிண்டோ பிரபு, செராம்பூர் இதழ்கள் அச்சாவதற்கு முன்பு அரசினரிடம் காட்டி ஒப்புதல் பெற வேண்டுமென்று ஆணை யிட்டார். கல்கத்தாவில் தோன்றியிருந்த இதழ்கள் அரசினரின் சட்டக் கடுமையால் தொடரமுடியாமல் ஒவ்வொன்றாக நின்று விட்டன. சென்னை இதழ்கள் ஆங்கில அரசின் ஆட்டத்திற்குத் தப்புத்தாளம் போட்டுப் பிழைக்கவேண்டிய திருந்தது. இந்திய இதழ்களின் ''நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா'' வாக ஹேஸ்டிங்ஸ் பிரபு ஆளுநர் பதவி ஏற்றார். வெல்லெஸ்லியின் இதழ்கள் ஒழுங்குமுறைச் சட்டத்தின் சில விதிகளை மட்டும் வைத்துக் கொண்டு, கடுமையானவற்றை நீக்கினார் ஹேஸ்டிங்ஸ் பிரபு. இதற்குப் பின்பே சொந்தமாக இதழ்களைத் தொடங் கும் எண்ணம் இந்தியர்களிடையே முளைவிடத் தொடங்கியது.

இந்தியர் உரிமையில் முதல் ஆங்கில இதழை வங்காளத் தைச் சார்ந்த கங்காதர் பட்டாச்சாரியா 1816-இல் 'பெங்கால் கெஜட்' என்ற பெயரில் வெளியிட்டார். ஆங்கில நாடுகளில் வெளிவருவதைப் போன்று கார்டியன் என்ற ஞாயிறு இதழும் (Sunday Paper) கல்கத்தா ஜெர்னல் என்ற செய்தித்தாளும் 1820-இல் வெளிவந்தன. இதழ்கள் சமுதாய விழிப்புணர்ச்சிக்குப் பயன்படவேண்டும் என்ற எண்ணத்தை வருவித்துக் கொண்ட முதல் ஆங்கில ஆளுநர் ஹேஸ்டிங்ஸ் பிரபு ஆவார். இந்திய இதழ்களை ஆங்கில அரசின் எதிரிகளாகக் கருதும் ஆட்சியாளர் களின் மனப்பான்மையை அவர்தாம் முதலில் தூக்கி எறிந்தார்.

1818-இல் ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் நன்முயற்சியால் இதழ் தணிக்கை முறை ஒழிக்கப்பட்டவுடன் ஜேம்ஸ் சில்க் பக்கிங் காம் என்ற ஆங்கிலேயர் கல்கத்தா ஜெர்னல் என்ற வார இரு முறை இதழ் ஒன்றை 1818 அக்டோபர் 2-இல் தொடங்கினார். செய்தித்தாள் அமைப்புமுறைகள் இவ்விதழில் முழுமையாகப் பின்பற்றப்பட்டன. எட்டுப் பக்கங்களைக் கொண்ட கல்கத்தா ஜெர்னல் ஒரு ரூபாய்க்கு விற்கப்பட்டது. இந்தியன் கெஜட், பெங்கால் ஹாரகாரு, ஆசியாட்டிக் மிர்ரர் போன்ற பெரிய

இதழ்களுடன் போட்டியிட்டு அக்காலத்திலேயே விற்பனையில் ஆயிரம் படிகளை எட்டிப்பிடித்தது. மிகச் சிறந்த இடத்தைப் பெற்றிருந்த கல்கத்தா ஜெர்னல் இதழின் மூலமாகப் பக்கிங்காம் இந்திய இதழியில் துறையில் தலைசிறந்த இடத்தைப் பெற் ருந்தார். பெருக்கெடுத்து வந்த கல்கத்தா ஜெர்னலின் புகழ் வெள்ளத்தில் மற்ற இதழ்கள் அடித்துச் செல்லப்பட்டன. 1821 - இல் ஜான்புல் இன் த ஈஸ்ட் (John Bull in the East) என்ற இதழ் கிழக்கிந்தியக் குழுமத்தின் அலுவலர்களால் தொடங்கப்பட்டது; என்றாலும் கல்கத்தா ஜெர்னலுக்குக் கிடைத்த வரவேற்பு இதற்குக் கிட்டவில்லை. இதழ்களுக்குக் கருத்துச் சுதந்திரம் வேண்டியும், பெண்கள் உடன்கட்டை ஏறும் கொடுஞ்செயலைக் கண்டித்தும் தம் இதழில் எழுதிய பக்கிங் காம் இந்திய மக்களின் எண்ணத்தில் நிறைந்திருந்தார். நல்ல உள்ளம் கொண்ட ஹேஸ்டிங்ஸ் பிரபு 1823-இல் பதவியிறங்க ஜான் ஆடம் இந்தியத் தலைமை ஆளுநர் பதவியேற்றார். பக்கிங்காம்மீது ஏற்கனவே பொறாமை கொண்டிருந்தார் ஜான் ஆடம் கிழக்கிந்தியக் குழுமத்தின் ஊழல்களைத் தம் இதழில் எழுதியபோது பக்கிங்காம் ஆளுநரால் குற்றஞ்சாட் டப்பட்டு இங்கிலாந்து நாட்டுக்கு அனுப்பப்பட்டார்.

செராம்பூர் கிருத்துவ இயக்கம் 1813 முதல் 1818 வரை வங்காள இதழியல் வளர்ச்சியில் வேகமாக ஈடுபட்டது. 1818-இல் 'தீக்தர்சன்' என்ற மாத இதழ் வங்காள மொழியில் செராம்பூரி லிருந்து வெளிவந்தது. இதுதான் இந்தியமொழி இதழ்களின்முதல் மாத இதழாகும். அடுத்த இரண்டு மாதத்தில் சமாச்சார் தர்பன் என்ற வங்கமொழி வார இதழும், ஃப்ரண்ட் ஆப் இந்தியா என்ற ஆங்கிலமொழி மாதஇதழும் வெளிவரத் தொடங்கின. வங்க இதழியல் வரலாற்றில் ஃப்ரண்ட் ஆப் இந்தியா மிகச் சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது. சமாச்சார் தர்பன் 1940 வரை வெளிவந்து கொண்டிருந்தது அரசினர் அறிவிப்புகளை அரசியல் செய்திகளுடன் வெளியிட்ட இக்கிருத்தவ இயக்க இதழ்கள் இந்துசமயக் கோட்பாடுகளையும், வேதாந்தங்களை யும் விமர்சிக்கத் தொடங்கின. இந்த விமர்சனங்கள் இந்திய இதழியலில் இன்னுமொரு எழுச்சியைப் படைக்கக் காரணங் களாயின. இந்தியச் சமுதாயச் சீர்திருத்தச்சிற்பிகளில் ஒருவரான இராஜாராம் மோகன்ராயை இந்திய இதழியல் துறையில் ஈடுபடுத்தி, மிகப்பெரிய புரட்சியை உண்டாக்கியவை செராம்

பூர் கிருத்தவ இயக்க இதழ்களாகும். இந்துசமயத் தாக்குதல் களுக்குப் பதிலடியும், கண்டனமும் தெரிவிப்பதற்காக பிராமணிக்கல் மேகசின் என்ற இதழை மோகன்ராய் ஆரம் பித்தார். ''கிருத்தவ இயக்கத்தாரின் தாக்குதலை எதிர்த்து இந்துசமயக் கொள்கைகளை நியாயப் படுத்துவது'' (The Vindication of the Hindu religion against christian missionaries) என்ற கொள்கை அறிவிப்போடு இவ்விதழ் வெளிவந்தது. இதனைத் தொடர்ந்து வங்காளம், ஆங்கிலம் ஆகிய மொழி களில் பிராமிண் சேவதி என்ற இருமொழி இதழையும் இராஜாராம் மோகன்ராய் வெளியிட்டார். இந்தியர்கள் உரிமையில் இதழ்கள் வெளிவருவதற்கான ஆக்க பூர்வச் சிந்தனையில் தீவிரமாக ஈடுபட்டு அதற்கான வழியையும் இராஜாராம் மோகன்ராய் வகுத்துக் கொடுத்தார். இச்சிந்தனை செயல்வடிவம் பெற்றபோதுதான் சம்பாத் கௌமதி என்ற இவரது புகழ்பெற்ற வார இதழ் 1821-இல் தோன்றியது. வங்க மொழியை அடுத்து பெர்சியன் மொழியிலும் மீரட்-அல் அஹ்பர் என்ற வார இதழையும் வெள்ளிக்கிழமை தோறும் வெளியிடத் தொடங்கினார் ராய். இதில் வெளிவந்த மோகன் ராயின் தலையங்கக் கருத்துக்களை கல்கத்தா ஜெர்னல் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டது. பெர்சியன் மொழியில் மிகச் சிறந்த இதழான ஷாம் - இ-ஷான் நியூமா 1822இல் வெளிவந்தது. இதே காலத்தில் பெங்க தத்தா அல்லது பெங்கால் ஹெரால்டு என்ற இதழ் ஆங்கிலம், பெர்சியன், வங்காளம், இந்தி ஆகிய மொழிகளில் வெளிவந்தது.

செராம்பூர் கிருத்தவசமய இயக்க இதழ்களும் இராஜா ராம் மோகன்ராயின் இந்துசமய இயக்க இதழ்களும் நடத்திக் கொண்ட சமயப் போராட்டத்தில் இதழியல்துறை புதிய வேகம்பெறத் தொடங்கியது. காலப்போக்கில் இவ்விதழ்கள் அரசியலை எட்டிப் பார்க்கத் தொடங்கிய போது ஆங்கில அரசின் சட்டமொன்று உறுமியது. அதுதான் — 'இந்தியமொழி இதழ்கள் கட்டுப்பாட்டுச் சட்டம், 1823' (Vernacular Pres Act of 1823). விளைவு? முன் அனுமதி, தணிக்கை, எச்சரிக்கை கள், கைது, சிறைச்சாலை, தண்டம், தொல்லைகள் இவற்றை யெல்லாம் இந்தியமொழி இதழ்கள் சந்திக்க வேண்டியதிருந்தது. அதேநேரத்தில் அரசின் கொடுமைகளை எதிர்க்க வேண்டு மென்றும் இந்தியச் சமுதாயம் சிந்திக்கத் தொடங்கியது. இதழியல் சட்டத்தை எதிர்த்துக் கருத்துச் சுதந்திரம் வேண்டி

மோகன்ராய் தலைமையில் எழுந்தது ஓர் கூட்டம். இந்திய ஆளுநரிடம் இந்தியமக்களின் எதிர்ப்புக் குரலை ஒலிக்கும் அறிக்கையொன்றை ராய் அளித்தார். இந்திய இதழ்களுக்குக் கருத்துச் சுதந்திரம் வேண்டிய இவ்வறிக்கை, ஆங்கில நாட்டு இதழ்களுக்குச் சுதந்திரம் வேண்டி மில்டன் 1664-இல் வெளியிட்ட 'ஆரியோபெசடிகா'வைப் போன்றிருந்ததால் 'இந்திய இதழ்களின் ஆரியோபெசடிகா' (Areopagitica of the Indian Press) என்று அழைக்கப்பட்டது. 'இந்தியமொழி இதழ்களின் தந்தை' இராசாராம் மோகன்ராய் இதழியல் துறையில் ஊன்றிய வித்து முளைவிடத் தொடங்கி 1825 - 1857 – க்கு இடைப்பட்ட காலத்தில் இளஞ்செடியாய் வளர்ந்து தளிர்விடத் தொடங்கியது இந்தியாவில் வாழ்ந்த பழமைவாதிகள் மோகன் ராயின் இதழியல் கருத்துக்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். இதற்கெனவே சந்திரிகா சமாச்சார் என்ற இதழை 1822-இல் தொடங்கினர். உடன்கட்டை ஏறும் பழக்கம், பெண்கல்வி மறுப்பு, விதவை மறுமணம் எதிர்ப்பு போன்ற கண்மூடிப் பழக்க வழக்கங்கள் எல்லாம் மண்மூடிப் போக வேண்டுமென்று இராம் மோகன்ராய் தம் இதழ்களில் கண்டித்து எழுதினார். ஆனால் பழமைவாதிகள் இவையெல்லாம் பாரதநாட்டில் தொடரவேண்டுமென்று வலியுறுத்தினர். என்றாலும் இராய்க்கே இறுதி வெற்றி கிட்டியது. 1829-இல் வில்லியம் பெண்டிங் உதவியால் உடன்கட்டை ஏறுதல் ஒழிக்கப்பட்டது. இராயின் இதழியல் தொண்டு சமூகமாற்றங்களுக்கு அடிப் படையாய் அமைந்தது.

இந்திய இதழியல் செய்த நற்பேறு இரண்டு ஆங்கிலத் தலைமை ஆளுநர்களைக் கண்டது. இந்தியர்களின் உரிமை களையும் உணர்வுகளையும் மதிக்கத் தொடங்கிய வில்லியம் பெண்டிங் பிரபு, சார்லஸ் மெக்கால்ப் ஆகிய இரு தலைமை ஆளுநர்களும் இந்தியமொழி இதழ்கள் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவினர். '1835-ஆம் ஆண்டுச் சட்டம், எண்-XI' என்ற திருத்தச் சட்டம் ஒன்று கொண்டுவரப்பட்டு இதழ்களின் கடுமை யான சட்டவிதிகள் தளர்த்தப்பட்டன.

1857-இல் நடைபெற்ற சிப்பாய்க் கலகம் இந்திய விடு தலைக்கான முதல் போராட்டமாகும். இந்திய மக்களுக்குப் புறம்பான ஆங்கில அரசின் சமுதாய, சமய, அரசியல் கொள் கைகள் இந்தியப் போர்வீரர்களுக்கிடையே போராட்டமாக

வெடித்தது. அதன் தாக்கத்தை இந்திய இதழ்களிலும் காண முடிந்தது. அரசுச் சார்பான ஆங்கில இதழ்களின் போராட்டம் பற்றிய தவறான விளக்கங்கள் இந்தியப் போர்வீரர்களுக்கு மேலும் ஆத்திரமூட்டின. இந்திய இதழ்களின் அனல்பறக்கும் ஆதரவுக் கட்டுரைகள் போராட்ட வீரர்களுக்கு உணர்ச்சியூட்டின. ஆனால், ஆங்கில அரசின் கடுமையான சட்டப்பார்வையில் அவை சிக்கிக்கொண்டன. இந்திய மக்களின் இதயத்தில் இதழ்களின் வழியே நாட்டுப் பற்று ஆழமாகப் பாய்வதை உடனடியாகத் தடுக்கவிரும்பிய ஆங்கில அரசினர் இதழ்களின் குரல்வளையை அழுத்திப் பிடிக்குமோர் சட்டத்தைக் கொண்டு வந்தனர் இவ்வாண்டின் சூன் 13-ஆம் நாள் கொணர்ந்த இச்சட்டத்தை "1857-ஆம் ஆண்டுச் சட்டம்-XV" என்று அரசு குறிப்பிட்டிருந்தது. அரசு பற்றிய அவதூறுச் செய்திகளை வெளியிட்டன என்ற காரணங் காட்டி ஃப்ரண்ட் ஆப் இந்தியா, பாம்பே டைம்ஸ், சுல்தான்-அல்-அக்பர் போன்ற இதழ்களின் மீது இச்சட்டம் பாய்ந்து தாக்கியது. பண்டிட் ஈஸ்வர் சந்திர வித்தியாசாகர் தொடங்கிய வங்காள இதழான சோம் பிரகாஷ் தடை செய்யப்பட்டது. பல இதழ்களின் உரிமங்கள் நீக்கம் செய்யப்பட்டன. செய்தித்தாள்களை வெளியிட்டுக் கொண்டிருந்த முப்பத்தைந்து நிறுவனங்களின் எண்ணிக்கை 1857-ஆம் ஆண்டுச் சட்டத்திற்குப் பின்பு ஆறாகக் குறைந்தது. உருது மொழியில் வெளிவந்த முப்பது இதழ்களில் மூன்று மட்டுமே எஞ்சி நின்றன. இந்திய இதழ்கள் சொந்த நாட்டிற்குள் தங்கள் கருத்துக்களை வாய் திறந்து பேசமுடியவில்லை எனவே தான் இச்சட்டத்தை இந்தியர்கள் 'வாய்ப்பூட்டுச் சட்டம்' (Gagging Act) என்று பெயரிட்டு அழைத்தனர்.

இந்திய மொழி இதழ்கள் இச்சட்டங்களால் அடித்து ஒடுக்கப்பட்ட பொழுதெல்லாம் அவை புடம்போட்ட பொன்னாய் வெளிப்பட்டு ஒளிவீசத் தொடங்கின. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இந்தியமக்களின் இதயத்தில் தோன்றிய அரசியல் உணர்வும், இதழியல் பெண்ணின் தேசிய உணர்வும் ஒன்றுகலந்தன. இவை இரண்டும் புரிந்துகொண்ட புரட்சித் திருமணத்தில் பிறந்த குழந்தைதான் இந்திய தேசியக் காங்கிரசு.

ஆங்கில அரசில் பணியாற்றி ஒய்வுபெற்ற ஆலன் ஆக்டேவியன் ஹியூம் என்ற ஆங்கிலேயர்தான் இந்திய தேசியக்காங்கிரசின்

தோற்றத்திற்குப் பெரிதுங் காரணமாக இருந்தார். சிதறிக் கிடந்த தேசிய எண்ணங்களை ஒன்றுகூட்டி ஒரு குரலாய் ஒலிக்கச் செய்ய, இந்தியர்களுக்கென்று வலிமையான இயக்கம் வேண்டு மென்பதை அவரே உணர்த்தினார். 1885-இல் இந்திய தேசியக் காங்கிரசு உருவானது. அதே ஆண்டு திசம்பரில் பம்பாயில் நடந்த அதன் முதல்கூட்டத்தில் கலந்து கொண்டவர்களில் இதழியல் தொடர்புடையவர்கள் அதிகமாக இருந்தனர். அரசியல், பொது நிருவாகம் இவற்றில் இந்தியர்களின் தீவிர நுழைவு இதழ்களின் அன்றாடச் செய்திகளாய் மலர்ந்தன. அரசியல் நிர்ணய சபையில் இந்தியர்களின் பேச்சு, விவாதங் களையும் இதழ்கள் தொகுத்து வெளியிட்டன. பொதுமக்கள் கருத்து (Public opinion) புது வரவாகி இதழ்கள் வளர இட மளித்தன. அரசியல் உணர்வும் இதழ்களும் இணைந்தவுடனே இந்திய மக்களிடையே அரசியல் தெளிவு, விடுதலை உணர்வு, தேசிய ஒருமைப்பாடு, கொள்கைப் பிடிப்பு, தலைமைக்குக் கட்டுப்படுதல் இவையெல்லாம் வேகமாக வளர்ந்து விட்டன.

இந்திய தேசியக் காங்கிரசு இயக்கத்தின் பிரச்சார ஏடாக இந்து சென்னையில் வெளிவரத் தொடங்கியது. 1876, செப்டம்பர் 20 - ஆம் நாள் விசயராகவாச்சாரியார் என்பவர் தம் நண்பர்களுடன் சேர்ந்து வாரம் ஒருமுறை வெளிவரும் சாதாரண இதழாக இந்துவைத் தொடங்கினார். பின்பு ஜி. சுப்பிரமணிய ஐயரும் இணைந்து கொண்டார். 1883 - இல் வாரத்தில் மூன்று நாட்கள் வெளிவந்த இந்து 1889 - இல் நாளிதழாக மாற்றம் பெற்றது. அன்னி பெசண்ட் அம்மை யாரின் முயற்சியில் தேசிய இதழாகச் செயல்படத் தொடங்கியது. ஆங்கிலக் கல்வி கற்ற இந்தியர்களின் எண்ணிக்கை அதிகமான போது இந்துவின் விற்பனை கூடியது. அதன் சட்ட ஆலோச கராக இருந்த கஸ்தூரிரெங்க ஐயங்கார் 1905 - இல் இந்துவை விலைக்கு வாங்கி இன்னும் சிறப்பான முறையில் நடத்தத் தொடங்கினார். 1868 - இலிருந்து சென்னையில் வெளிவந்து கொண்டிருந்த மற்றொரு ஆங்கில நாளிதழ் மெட்ராஸ் மெயில் ஆங்கிலேயர் சார்பிலேயே வெளிவந்து கொண்டிருந்தது. ஆனால் இந்து அன்று தொடங்கி இன்று வரை 'The National News paper of India' என்ற முகப்பு வரிகளைத் தாங்கியே வெளிவருகின்றது. இந்தியன் சோசியல் ரிபார்மர் என்ற ஆங்கில இதழும் 1890 - இல் வெளிவரத் தொடங்கியது. தலை சிறந்த

இதழாளர் காமாட்சி நடராசன் தொடங்கிய இவ்விதழ் 1958 வரை வெளிவந்து கொண்டிருந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் விரைவான அறிவியல் வளர்ச்சியும் இதழ்களின் வளர்ச்சிக்கு உரமாக அமைந்தது. செய்தித் தொடர்பிற்கான அறிவியல் சாதனங்கள் உள்நாடு, வெளிநாட்டளவில் பெருகின. அஞ்சல் துறையும் தொலை வரித் துறையும் புதுப் பொலிவு பெற்றன. பொதுமக்கள் பயன்படுத்தும் அஞ்சல் தொடர்புகள் 1870-இல் தொடங்கின. போக்குவரத்து வசதிகளும் புதிதாக உண்டாயின. இந்தியாவின் பெரிய நகரங்களை இணைத்து ஐயாயிரம் கல் தொலைவிற்குத் தொடர் வண்டித்தடங்கள் போடப்பட்டன. இந்தியாவிற்கும் பிரிட்டனுக்கும் இடையில் மின்தொலைவரி இணைப்பும், கடல் வழித் தொடர்புச் சாதனங்களும் அமைக்கப்பட்டவுடன் செய் திகள் விரைவாக வந்துபோயக் கொண்டிருந்தன. அத்துடன் பிரிட்டனிலிருந்து இந்தியா வருவதற்குக் கப்பல்வழிச் சுருக்கப் பாதையான சூயஸ் கால்வாய் 1869 – இல் திறக்கப்பட்டது. அச்சுக்கலையிலும் புதுமுறைகள் தோன்றி இதழ்களை விரைவு படுத்தின. தாள் தயாரிப்பில் நூதனமுறைகள கண்டுபிடிக்கப பட்டன.

இந்திய தேசியக் காங்கிரசு இந்திய மக்களின் ஒருமித்த இயக்கமாய் வளர்ந்து எழுப்பிய விழிப்புணர்ச்சி, செய்தித் தொடர்புச் சாதனங்களில் ஏற்பட்ட அறிவியல் முன்னேற்றம் இவை இரண்டின் வழியே இந்திய இதழியல்துறை எழுந்து நின்றதோடு விரைந்து நடைபோடத் தொடங்கியது. இந்திய நாட்டின் இன்றைய மிகச் சிறப்பான இதழ்களெல்லாம் இக் காலத்தில் தோன்றியவையே. டைம்ஸ் ஆப் இந்தியா, இந்தியன் சோசியல் ரிபார்மர் (பம்பாய்), பயோனீர் (அலகாபாத்து), ஸ்டேட்ஸ்மேன், அமிர்தபஜார் பத்திரிகா, கேபிடல் (கல்கத்தா), மெயில், இந்து, சுதேசமித்திரன் (சென்னை), சிவில் அண்டு மிலிடெரி கெஜட், டிரிபியூன் (லாகூர்) போன்ற இந்தியாவின் தலை சிறந்த இதழ்களெல்லாம் இதழியல் வானில் சிறகடித்துப பறக்கத் தொடங்கின.

# இருபதாம் நூற்றாண்டில் இதழ்கள்

1900-இல் இலண்டனில் இயங்கிய உலகின் தலை சிறந்த செய்தி நிறுவனமான இராய்டர் (Reuter) செய்தி நிறுவனத் தொடர்பினால் இருபதாம் நூற்றாண்டு இதழ்கள் நிறைவான வளர்ச்சி பெற்றன. சூடான அரசியல் செய்திகளோடு சுவையான பிறசெய்திகளும் இதழ்களின் பக்கங்களை அழகுபடுத்தின. ஆங்கில அரசின் அலுவலர்களும் உயர்தகுதிகள் உடையோரும் மட்டுமே தூக்கி வைத்துக் கொண்டிருந்த நாகரிகப் பொருளான இதழ்கள், பொதுமக்கள் அன்றாடம் பார்த்துப் பயனடையும் பொருளாக மாறின. விடுதலை வீறு கொண்ட இந்திய மக்கள் அரசியலை வேகமாகச் சிந்திக்கத் தொடங்கினர். ஜி. ஏ. நடேசன், சி. ஒய். சிந்தாமணி, என். சி. கேல்கார், கோகலே, லஜபதிராய், அன்னிபெசண்ட், சுரேந்திர நாத்பானர்ஜி, பண்டிட் மதன்மோகன் மாளவியா, பெரோஸ்ஷா மேத்தா, பூபேந்திரநாத், தாதாபாய் நவ்ரோஜி, அரவிந்தர், காந்தியார், பாரதியார் இவர்களெல்லாம் அரசியலைப் போன்றே இதழியல் துறையிலும் ஈடுபட்டுச் செயலாற்றினர்.

நாளிதழ்த் துறையின் நாடியாகக் கருதப்படும் செய்தி நிறுவனங்களின் செய்தித் தொடர்புகள் இந்திய இதழ்களுக்கும் கிடைத்தன. இராய்டர் மூலமாக பெங்காலி இதழ் 1900-இல் செய்திகளைப் பெறத்தொடங்கியது. ஆனால் அதிகக் கட்டணம் செலுத்தியே இந்திய இதழ்கள் இராய்டரின் செய்திகளைப் பெறமுடிந்தது. வேறு சில காரணங்களாலும் இந்திய இதழ்கள் தங்களுக்குச் சொந்தமான செய்தி நிறுவன அமைப்பைச் சிந்திக்கத் தொடங்கின. கே. சி. இராய் ஆறு இந்திய இதழ்களின் அரவணைப்போடு 1910-இல் 'அசோசியேடட் பிரஸ் ஆப் இந்தியா' (Associated Press of India) என்ற முதல் இந்தியச் செய்தி நிறுவனத்தை நிறுவினார். வாராது வந்த மாமணியாம் செய்தி நிறுவனங்களின் தொடர்பினால் நாளிதழ்களின் நேரத்திலும் நிருவாகச் செலவிலும் உண்டான விரையங்கள் தவிர்க்கப் பட்டன.

**இந்திய தேசியக் காங்கிரசின் பிளவு**

இயக்கங்கள் மாறுபட்ட கொள்கைகளால் இரண்டாவதும், கட்சிகள் உட்பூசல்களால் உடைவதும் இன்றைய அரசியலின்

அன்றாட நிகழ்ச்சி. அன்றைய ஒரே இயக்கமான இந்திய தேசியக் காங்கிரசும் பிளவுப் பிணியிலே சிக்கித் தள்ளாடியது. திலகர் தலைமையில் தீவிரவாதிகள் (Extremists) குழுவும், கோகலே தலைமையில் மிதவாதிகள் (Moderates) குழுவுமாக காங்கிரசு இயக்கம இரண்டாகியது. அரசமரத்தைப் பிடிதத சனியன் பிள்ளையாரையும் சேர்த்துப் பிடித்த கதையாய்க் காங்கிரசு இயக்கப் பிளவு தேசிய இதழ்களையும பிளவுபடுத்தியது. 1919-இல் அரசு கொணர்ந்த மிண்டோ-மார்லி சீர் திருத்தத்தைத் தீவிரவாதிகள் முழுமூச்சாக எதிர்த்தனர். சில மாற்றங்களுடன் அதை ஏற்றுக்கொள்ள மிதவாதிகள் முடிவெடுத்தனர். கேசரி, தேசசேவக் என்ற இரு இதழ்கள் தீவ்ரவாதிகளை ஆதரிக்க, மிதவாதிகள் தங்கள் கொள்கைகளை வெளிப்படுத்த லீடர் என்ற நாளிதழை அலகாபாத்தில் தொடங்கினர்.

இந்திய தேசியக் காங்கிரசு பிளவுபட்டிருந்தாலும், உரிமை வாழ்விற்குப் போராடிய இந்திய இதழ்களின் ஒருமத்த உணர்வைப் புரிந்துகொண்ட ஆங்கில அரசு, '1910-ஆம ஆண்டு இந்திய இதழ்கள் சட்டம்' என்றொரு புதிய சட்டத்தால் இதழகளை ஒடுக்க முனைநதது. அதிகமான பிணையத தொகையைக் கட்டிய பிறகுதான் இதழ்கள் வெளிவர முடிந்தது. கெடுபிடிகளைத் தாக்குப் பிடிக்க முடியாமல் எட்டு இந்திய இதழகள் நின்றுவிட்டன. பிணையத்தொகை கட்டமறுத்த இதழ்கள அரசினரால நிறுத்தப்பட்டன. குறைநத பிணையததொகை விதிக்கப்பட்ட நான்கு இதழ்கள் மேலும் தொகை கட்டிவிட்டுத் தொடர்ந்தன. திலகர்மீது அரசுச்சட்டம் 124 – A பிரிவின்கீழ் 'அரசு இரண்டகக் குற்றம்' சாற்றப்பட்டு வழக்குத் தொடரப்பட்டது. அரவிந்தரின் வந்தேமாதரம் இதழ்மீதும் சட்ட நடவடிககை எடுக்கப்பட்டது. பமபாய் நகர் அரசியல் தலைவர்களின் தேசியச் செயலகமாக இருந்தபோது அங்குள்ள செய்தி இதழ்களான டைம்ஸ் ஆப இந்தியா, பாம்பே கெஜட், அட்வகேட் ஆப் இந்தியா ஆகிய மூனறும் ஆங்கிலேயர் வழிச்செல்லும் இதழ்களாகவே அமைந்திருநதன. பெரோஸ்ஷா மேத்தா 1913-இல பாம்பே கிரானிக்கிள் என்ற ஆங்கில நாளிதழைத் தொடஙகினார். ஆங்கில நாளிதழான ஸ்டேட்ஸ்மேனில் பணியாற்றிய பி. ஜி ஹார்னியன் என்ற ஆங்கிலேயரை ஆசிரியராகக் கொண்டிருந்தாலும் இந்தியர்களின் குரலையே ஒலிக்கத் தொடங்கியது பாமபே கிரானிக்கிள். இந்தியர்களின் விடுதலை உணர்வைப்

பாராட்டி வரவேற்ற ஹார்னிமன் ஆங்கில அரசின் அடக்கு முறைகளையும் கண்டித்து எழுதினார். பாம்பே கிரானிக்கிள் காங்கிரசு இயக்க ஏடாகவே கருதப்பட்டது. பஞ்சாபில் நடந்த இராணுவத்தினரின் அட்டகாசங்களைக் கண்டித்து எழுதியதால் 1919 – இல் பெஞ்சமின் ஹார்னிமன் நாடு கடத்தப்பட்டார். அன்னிபெசண்ட் அம்மையார் ஹோம்ரூல் இயக்க வெளியீடாக நியூ இந்தியா நாளிதழை வெளியிட்டார். நியூ இந்தியா, திலகரின் கேசரி, மராட்டா, மௌலானா முகமது அலி தொடங்கிய காம்ரேட் *(1911)*, மௌலானா அபுல்கலாம் ஆசாத்து நிறுவிய உருது இதழ் அல் – ஹிலால், வி. எஸ். சீனிவாசாச்சாரியார் ஆசிரியராயிருந்த செர்வண்ட் ஆப் இந்தியா *(1918)*, இந்திமொழித் தேசியச் செய்தித்தாள் அஜ் *(1920)* ஆகிய இதழ்கள் உரிமை வேண்டிப் போராடியவர்களின் எழுச்சிச் சங்கநாதமாக ஒலித்தன. இதே காலத்தில்தான் தென்னாப்பிரிக்காவில் ஓர் இந்தியத் தலைவர் அறவழிப் போராட்டத்தை நடத்தி, அங்குள்ள இந்தியர்களை ஆதிக்க நாடுகள் அடிமைப் படுத்துவதை எதிர்த்துப் போராடிக்கொண்டிருந்தார். தென்னாப்பிரிக்காவில் அவர் நடத்திய இந்தியன் ஒப்பினியன் என்ற இதழின் கருத்துக்கள் இந்தியச் செய்தித்தாள்களின் பக்கங்களையும் நிறைத்தன. அவர்தாம் பிற்காலத்தில் இந்திய மக்களின் அன்புக் கொழுந்தாய் விளங்கிய மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி.

# காந்தியார் காலத்து இதழ்கள்

1915-இல் காந்தியார் தென்னாப்பிரிக்காவிலிருந்து அரசியல், நாட்டுத் தொண்டு, அடக்கு முறை எதிர்ப்பு இவற்றோடு இதழியல் துறையிலும் நன்கு பயிற்சி பெற்றுத் தாயகம் திரும்பினார். 'விடுதலை என் பிறப்புரிமை; அதை நான் அடைந்தே தீருவேன்' என்று உறுமிக் கொண்டிருந்த இந்திய அரிமா பாலகங்காதர திலகர் 1920-இல் மறைந்த போது இந்திய தேசியக் காங்கிரசு காந்தியாரின் தலைமையை எதிர் நோக்கிக் காத்திருந்தது; அவர் தலைமையேற்று அரசியலில் காலடிகளை எண்ணி எடுத்து வைக்கத் தொடங்கினார். மூடி மணம் பரப்பும் மித உணர்வுக்கும், வெளிப்பட்டுக் காற்றோடு கலந்து மணம் பரப்பும் தீவிர உணர்விற்கும் இடையே அரசியலை ஆடுகளமாக ஆக்கக் காந்தியார் விரும்பவில்லை; என்றாலும் இதழியலில் காந்தியார் ஓர் அசாதாரணத் தீவிரவாதி. அதன்மீது அவருக்கிருந்த நம்பிக்கை அசைக்க முடியாதது. காந்தியாருக்கு இதழியல்துறை புதியதன்று; தென்னாப்பிரிக்காவில் இந்தியன் ஒப்பீனியன் இதழில் பெற்றிருந்த பயிற்சி அவரோடு இருந்தது. காந்தியார் காலத்தில் இந்திய இதழ்கள் அரசியல் பாதையில் போராட்டப் பயணத்தைத் தீவிரமாகத் தொடங்கின. தேசிய இனம், தேசிய மொழி என்ற வரிசையில் தேசிய இதழ் என்ற சொல்லும் இக்காலத்தில்தான் உருவானது. இதழ்கள் மக்களின் உண்மையான ஆதரவைப் பெற்றுக் கொள்கைகளின் சார்பிலேயே நிலைத்து நிற்க வேண்டும் என்று காந்தியார் விரும்பினார்.* எனவேதான், தம் இதழ்களில விளம்பரங்களை அவர் விரும்பியதுமில்லை; வேண்டியதுமில்லை. தொடங்கியபோது விற்குமா என ஐயப்பட்ட அவருடைய யங் இந்தியா (ஆங்கில நாளிதழ்) 45,000 படிகளும், நவஜீவன் (குஜராத்தி நாளிதழ்) 20,000 படிகளும் விற்கத் தொடங்கின. யங் இந்தியா, நவஜீவன் நாளிதழ்களில் வெளியாகும் செய்திகளை இந்தியாவின் எல்லா இதழ்களும் எடுத்து

---

* If it does not become self-supporting, I should conclude that there is inefficient management or editing, or that there is no public demand for such a paper.

— *M. K. Gandhi.*

வெளியிடும் உரிமையை வழங்கியிருந்தார் அண்ணல். புகை நடுவினில் தீயாய் இருந்த ஆதிக்க எதிர்ப்புணர்ச்சி புண்ணிய பூமி முழுவதும் கொழுந்துவிட்டுப் பரவியது. அவருடைய இதழ்கள் இந்தியக் குடிமக்களைத் தேசிய உணர்வாளர்களாக மாறறின. நாடு தழுவிய விடுதலையுணர்வு உருவாகியது. இநதப் பின்னணியில் இதழியல்துறை முழுமைபெறும் வாய்ப் பினைப் பெறறது. மொழி - இனம - பண்பாட்டில் வேறுபட்ட வர்களிடையே காநதியாரின் இதழ்கள் தேசிய ஒற்றுமையை உண்டாக்கும் முயற்சியில் வெற்றிபெற்றன. செய்தித்தாள் அரசியல் பரப்பும் சாதனமாக (Political Medium) மாறியது. இந்திய நாடு மிகப் பெரிய மக்களாட்சி மரபுநாடாகப் பிற் காலத்தில் விளங்க காந்தியார் காலத்து இதழ்கள் அரசியல் உணர்வுகளை விதைத்தன. இந்து - முசுலீம் ஒற்றுமை, மது விலக்கு, கதர் - கிராம முன்னேற்றம், உழவுத் தொழில வரு வாய்ப் பெருக்கம், தீண்டாமை ஒழிப்பு, சுதேசிப் பொருள் ஆதரவு இவையே அவர் இதழ்களில் வரிகளாய்ப் பதிந்தன. பிற இதழ்களெல்லாம் விடுதலை உணர்ச்சிப் பிழம்புகளை வடித்துச் சிதறிய போது காந்தியாரின் இதழ்கள் அமைதி நீரூற்றுக்களாய அரும்பணியாற்றின. அரசியலில மட்டுமன்று; இதழியலிலும் அறவழிச் சிந்தனையில் வெற்றிகண்டவர் காந்தியார்.

பாம்பே கிரானிக்கில், இன்டிபென்டெண்ட் (அலகா பாத்து), தி சர்வண்ட் (கல்கத்தா) முதலிய நாளிதழ்களும் காந்தியாருக்கு முழு ஆதரவு தந்தன. அதே நேரத்தில் சி. ஒய். சிந்தாமணியின் லீடர், சுரேந்திரநாத் பானர்ஜியின் பெங்காலி என்ற இரண்டு இதழ்களும் எதிர்ப்புணர்ச்சியை வெளிப்படுத தின. 1917 - இல் நீதிக்கட்சி ஜஸ்டிஸ் என்ற இதழை சென்னை யிலிருந்து வெளியிட்டது. 1918-இல் சர்ச்லைட் என்ற இதழ சச்சிதானந்த சின்கா என்பவரால் பீகாரில் ஆரம்பிக்கப்பட டது. 1920-இல் 'இந்து அப்சர்வர்' புன்னையா என்பவரை ஆசிரியராகக் கொண்டு வெளிவநதது. 1922 இல் காந்தியக் கொள்கைகளைப் பரப்ப பிரகாசம் 'சுவராஜ்யா'வைத் தொடங் கினார். 1923-இல் ஃபார்வேடு என்ற செயதித்தாளை சி. ஆர். தாஸ் ஆரம்பித்தார். இதே ஆண்டில் காந்தியார் சிறையி லிருந்தபோது நேருவும், சி. ஆர். தாஸும் சுயராஜ்யக் கட்சி என்ற புதிய கட்சிய தோற்றுவித்தனர். இந்தியர்கள்

அரசியல் சபையில் இடம் பெற வேண்டுமென்ற நோக்கத்தோடு இக்கட்சி தொடங்கப்பட்டபோது இதன் கொள்கை பரப்பும் நாளிதழாக 'இந்துஸ்தான் டைம்ஸ்' வெளிவந்தது.* இவற்றுடன் சென்குப்தாவின் அட்வான்ஸ்; சச்சிதானந்தாவின் இந்துஸ்தான் ரிவியூ ஜி. ஏ, நடேசனின் இந்தியன் ரிவியூ; இராமானந்த சட்டர்ஜியின் மாடர்ன் ரிவியூ: அரவிந்தரின் ஆர்யா. கர்மயோகி, தர்மம். முகமது அலியின் காம்ரேட் முதலிய ஏராளமான இதழ்கள் தோன்றின.

இருபதாம் நூற்றாண்டு தொடங்கி, முப்பது ஆண்டுகளில் இந்திய இதழ்களின் வளர்ச்சி வியப்பில் ஆழ்த்துவதாய் அமைந்திருக்கிறது. இதழியல் துறை முழுமைபெற்ற நிலையிலே இதழ்கள் புதிய வேகம் கண்டன. ஆர்வம், உணர்ச்சி, அடிமைத்தளை உடைப்பு இவையே இதழ்களின் நாடுதழுவிய கொள்கைகளாக இருந்தன. தாய்மொழி இதழ்கள் புத்துணர்ச்சி பெற்று வெளிவரத் தொடங்கின. தெற்கே உருவான தேசியத் தலைவர்களின் விடுதலை உணர்வுகள் எரிமலையாய் வெடிக்க, போராட்ட உணர்வுப் பிழம்புகள் இதழ்களில் வேகமாக ஓடிக்கொண்டிருந்தன. ஆங்கிலேயர் நடத்திய இதழ்களும். அவர்களை அரவணைத்துப் பிழைத்துக்கொண்டிருந்த இதழ்களும் ஏகபோக அனுபவ அறுவடையில் சரிவுகாணத் தொடங்கின. தேசியஇதழ்கள் அந்த இடத்தைப் பெற்றன. சென்னையில் மெட்ராஸ் மெயில் வீழ்ந்தது; இந்து சிறந்தது. பயோனீர் இடத்தை டைம்ஸ் ஆப் இந்தியாவும்; ஸ்டேட்ஸ்மேன் இடத்தை லீடரும்; டெய்லி கெஜட்'டின் இடத்தை சிந்து அப்சர்வரும் மிலிடெரி கெஜட்'டின் இடத்தை ட்ரிப்யூனும்' பெற்றுக் கொண்டன. இந்திய நாட்டு விடுதலை பற்றிய வேகமான சிந்தனைக் காலம் தொடங்கிவிட்டது என்பதை இருபதாம் நூற்றாண்டின் தொடக்ககால இதழ்களின் வளர்ச்சியும், அவை வெளியிட்ட செய்திகளும் வெளிப்படுத்தின.

---

*சர்தார் கே.எம். பணிக்கர் இதன் முதல் ஆசிரியரானார். 1927-இல் தொழில் அதிபர் ஜி.டி. பிர்லா இந்துஸ்தான் 'டைம்ஸை' விலைக்கு வாங்கிச் சிறப்புடன் வெளியிடத் தொடங்கினார்.

# இந்திய விடுதலைப் போராட்டத்தில் இதழ்களின் பங்கு

**1920**-ஆம் ஆண்டு தொடங்கி, இந்திய விடுதலை இயக்கம் பல்வேறு போராட்டங்களைச் சந்திக்கத் தொடங்கியது. ஒத்துழையாமை இயக்கம், சத்தியாக்கிரகம், அன்னியப் பொருட்கள் புறக்கணிப்பு, உப்புச் சத்தியாக்கிரகம், ரௌலட் சட்ட எதிர்ப்பு, சைமன்குழு எதிர்ப்பு, வெள்ளையனே வெளியேறு போராட்டம், கிலாபத் இயக்கம் ஆகிய தேசியப் போராட்டங்கள் அனைத்திலும் இந்திய இதழ்கள் திறனோடு செயல்பட்டு வெற்றியைத் தேடித்தந்தன. ஆங்கில அரசின் முதல் எதிரியாக இந்திய இதழ்களே காட்சியளித்தன. எனவே, இந்தியர்களின் போராட்டங்களை நசுக்க விரும்பிய போதெல்லாம் ஆங்கிலேயரின் அடக்குமுறைக் கண்ணோட்டம் இதழ்களின்மீதே அதிகமாகப் பாய்ந்தது. விடுதலைப் போராட்டக்காலத்தில் இதழ்கள் தொழில் அடிப்படையில் இயங்காமல் அரசியல் பணியாற்றும் நிறுவனங்களாகச் செயல்பட்டன. காந்தியாரின் அரசியல் நுழைவும், அவர் மக்கள் மத்தியில் எழுப்பிய அரசியல் உணர்வும் இந்தியமக்களை இதழ்களோடு ஒன்றவைத்தன. நாளிதழ் என்பது இந்தியமக்கள் ஆர்வத்தோடு எதிர்பார்க்கின்ற அன்றாடத் தேவைகளில் ஒன்றாகிவிட்டது. முழுமையான விடுதலை பெற வேண்டுமென்ற எழுச்சிப் பாதையில் இந்திய மக்களை இதழ்கள் அழைத்துச் சென்றன.

மாண்டேகு செம்சுபோர்டு சீர்திருத்தத்தில் மாறுதல்கள் செய்வதற்காக அமைக்கப்பட்ட சைமன் குழுவினரை இந்தியத் தலைவர்களும், இந்திய மக்களும் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். இக்குழு செல்லுமிடங்களிலெல்லாம் மக்கள் புறக்கணித்தனர். அவர்கள் வருகையை எதிர்த்துப் போராட்டமும் தொடங்கியது. புறக்கணிப்புச் செய்திகளையும், போராட்டச் செய்திகளையும் இந்திய இதழ்கள் வெகுவேகமாகப் பரப்பி, நாடுமுழுவதும் அவை தொடரப் பம்பரமாகச் சுழன்று பணியாற்றின. இதே போன்று 1919-இல் ரௌலட் சட்டம் பேச்சு, எழுத்து உரிமைகளைத் தடை செய்த போதும், இந்திய இதழ்கள் அந்தக் கருப்புச் சட்டத்தின்மீது இந்தியர்களின் எதிர்ப்புணர்ச்சியைக் காட்டும் அடையாளமாக ஓரங்களில் கருப்புக் கோடுகளை அச்சிட்டு வெளிவந்தன.

வரலாற்றுச் சிறப்புமிக்க தண்டியாத்திரை 1930, ஏப்ரல் 5-ஆம் நாள் தொடங்கியது. தண்டியில் உப்புக் காய்ச்சும் அறப் போராட்டத்தில் காந்தியாரோடு ஏராளமான போராட்ட வீரர்கள் சிறைப்பட்டனர். மற்ற இடங்களிலும் இப்போராட்டம் தொடர்ந்தது. போராட்டம் பற்றிய செய்திகளைப் போலீசாரால் தாக்கப்பட்டவர்களின் படங்களுடன் இந்திய இதழ்கள் பெரிய எழுத்துக்களில் விரிவாக வெளியிட்டன. இச் செய்திகள் அனைத்தும் இந்திய விடுதலை உணர்வுக்கு உரமாயின. ஆங்கில அரசுக்குப் போராட்டடம் பற்றிய இதழ்களின் தீவிரச்செய்திகள் தீராத தலைவலியாயிற்று. 1930-ஆம் ஆண்டு மேமாதம் இதழ்கள் அவசரச் பட்டம் (The Press Ordinance of May 1930) கொண்டு வரப்பட்ட போது இந்திய இதழாளர்கள் அதன் ஆபத்தை உணர்ந்து ஒன்று கூடினர். இந்து நாளிதழ் ஆசிரியர் ரெங்கசாமி ஐயங்கார். இக் கூட்டத்தின் தலைவராக இருந்தார். இந்தியாவின் முன்னணி இதழ்களின் ஆசிரியர்கள் முதன்முறையாக ஒன்று கூடினர். கேசரி இதழுக்கு ரூபாய் ஐயாயிரம் தண்டம் விதித்தும், பாம்பே கிரானிக்கிள் இதழுக்கு ரூபாய் பதினையாயிரம் பொறுப்புத்தொகை கட்ட வைத்தும் இதழ்களை அவசரச் சட்டம் பயமுறுத்தியது. இந் நேரத்தில் காங்கிரஸ் புல்லட்டின் என்ற இரகசியச் செய்தித்தாள் (Underground Newspaper) பம்பாயிலிருந்து விடுதலைப் போராட்டச் செய்திகளை ஆங்கில அரசு அறியாமல் பரப்பிக் கொண்டிருந்தது. போராட்டங்கள் பற்றிய செய்திகளைப் பரப்பும் உள்நாட்டுச் செய்தி நிறுவனமொன்றை அமைக்கும் முயற்சியில் தலைவர்கள் முனைந்தனர். 1927-இல் சதானந்தம் ஃப்ரீ பிரஸ் ஆப் இந்தியா வைத் தொடங்கினார். இந்தியர்களின் முதல் செய்தி நிறுவனமாக இது அமைந்திருந்தது, அவசரச்சட்டம் இச்செய்தி நிறுவனத்தையும் தாக்கியது. இந் நிறுவனத்தில் உறுப்பினராயிருந்த இதழ்கள் அரசினரின் தொல்லைகளுக்கு ஆளானபோது விலகிக் கொண்டன. என்றாலும் இச் செய்தி நிறுவனமே ஃப்ரீ பிரஸ் ஜெர்னல் என்ற ஆங்கிலச் செய்தித்தாளை 1930, சூன் 13-ஆம் நாள் தொடங்கியது. இவ்விதழ் அரையணா விலையில் இந்திய விடுதலைப் போராட்டச் செய்திகளை அதிகமாக வெளியிட்டது. தலைப்புக்களும் செய்தித்தாளின் அமைப்பும், செய்தி வெளியிடும் முறையும் 'ஃப்ரீ பிரஸ் ஜெர்னலில்' மிகச் சிறப்பாக அமைந்திருந்தன.

இதே காலத்தில்தான் காந்தியாரின் சட்ட மறுப்பு இயக்கம் இந்திய அரசியலில் அமைதியற்ற நிலையை உண்டாக்கியது. போராட்டத்தைத் தொடங்கிய காந்தியாரே அதைக் கட்டுப் படுத்த இயலவில்லை. இந்திய இதழ்களும் போராட்ட செய்திகளை வெடி குண்டுகளாய் வெடித்துக் கொண்டிருந்தன. அதன் விளைவுகள் இதழ்களுக்கே பாதிப்பை உண்டாக்கின. நூற்றுமுப்பத்தொன்று இதழ்களின் பொறுப்புத் தொகையான 1,50,000 ரூபாயினை ஆங்கில அரசு பறித்துக் கொண்டது. காந்தியார், நேரு மற்றும் ஆயிரக்கணக்கில் தலைவர்களும் தொண்டர்களும் சிறையிலடைக்கப்பட்டனர். காங்கிரசு இயக்க மிதவாதிகள் குழுவைச் சேர்ந்த தேஷ்பகதூர் சாப்ரூ, எம். ஆர். செயகர் ஆகிய இருவரும் அரசுடன் கலந்து பேசி வட்டமேசை மாநாட்டிற்கு ஏற்பாடு செய்தனர். இலண்டனில் நடைபெற்ற முதல் வட்ட மேசை மாநாட்டில் காந்தியார் கலந்துகொண்டார். பம்பாய் கிரானிக்கிள், டைம்ஸ் ஆப் இந்தியா, ஸ்டேட்ஸ்மென், அமிர்த பஜார் பத்ரிகா, இந்து, மெயில், லீடர், பயோனீர் ஆகிய இந்திய இதழ்களின் சார்பில் இவற்றின் செய்தியாளர்களும் இம்மாநாட்டில் கலந்துகொண்டனர். லீடர் இதழ் ஆசிரியர் சி. ஒய். சிந்தாமணி; யங் இந்தியாவைச் சேர்ந்த பி. சிவராவ்; பயோனீர் ஆசிரியர் எப். டபிள்யூ. வில்லியம்ஸ் ஆகியோரும் மாநாட்டுச் சார்பாளர்களாகச் சென்று மாநாடு பற்றிய செய்திகளைத் தம் இதழ்களில் வெளியிட்டார்கள். 1931-இல் இரண்டாம் வட்டமேசை மாநாடு நடந்தபோது இர்வின்பிரபு அரசப்பிரதிநிதியானார். சட்டமறுப்பு இயக்கம் புகையுள் தீயாய்ப் பொறி எழுப்பிக் கொண்டிருந்தது. ஆங்கில அதிகாரிகள் சிலர் கொலை செய்யப்பட்டனர். இவ்வாண்டில் 'இந்திய இதழ்கள் நெருக்கடிகால அதிகாரங்கள் சட்டம்' (Indian Press-Emergency Powers Act, 1931) நிறைவேற்றப்பட்டது. கொலை, வன்செயல்களைத் தூண்டும் இதழ்கள் மீது நடவடிக்கை எடுக்க இச்சட்டம் வகை செய்தது. விளம்பரங்கள் தடுக்கப்பட்டதால் காங்கிரசு இயக்கச் சார்பு இதழ்கள் வலுவாய் குன்றி மெலிந்து நின்றன. கட்சியின் அரவணைப்பில் சில இதழ்கள் எழுந்து நடமாடின. டிசம்பர் மாதம் இந்தியா திரும்பிய காந்தியார் அரசப்பிரதிநிதிக்குக் கடிதம்எழுதிச் சில சட்டங்களைத் திரும்பப் பெற வைத்தார் என்றாலும், ஆங்கில அரசு போராட்டம் என்றாலே இதழ்களுக்கான தடைச் சட்டத்தை இயற்றுவதை வழக்கமாகக் கொண்டிருந்தது. இதழ்கள் பற்றிய தடைச்சட்டங்

கள் ஒன்றுதான் இக்காலத்தில் அரசின் ஒரே நடவடிக்கை யாக இருந்திருக்கிறது. காந்தியாரின் வரி கொடா இயக்கம், அன்னியப் பொருட்கள் புறக்கணிப்புப் போராட்டங்களின் போது இந்திய இதழ்களைக் குற்றவியல் தடுப்புச்சட்டம். அயல் நாட்டு உறவுகள் சட்டம் இவற்றால் கட்டிப்போட்டது ஆங்கில அரசு. ஆனால், இந்தியர்களின் போராட்டங்களும் இதழ்களின் செய்திப் பரப்புதலும் சட்டங்களைக் கண்டு தளர்ந்து விட வில்லை. நாடு முழுவதுமாக ஒரே காலத்தில் உண்டான விடுதலை உணர்ச்சி, போராட்ட எழுச்சி இவற்றின் உண்மை வடிவங்களாகவும் முழுமை பெற்ற தேசிய உணர்வுச் சின்னங் களாகவும் இந்திய இதழ்கள் விளங்கின. இந்து, சுதேசமித்திரன் (சென்னை), ஆனந்த பஜார் பத்திரிகா (வங்காளம்), அஜ் (காசி), விஸ்வ கர்னாடகா, சம்யுக்த கர்னாடகா (கர்னாடகம்), ஆந்திரபத்திரிகா (ஆந்திரா), மாத்ருபூமி (கேரளம்) ஆகிய, செய்தித்தாள்கள் காங்கிரசு இயக்கத்தின் வாரிசுகளாக அமைந் திருந்தன.

இக்கால கட்டத்தில் 'ஃப்ரீ பிரஸ் ஆப் இந்தியா' செய்தி நிறுவன அமைப்பாளர் சதானந்தம் அவர்களின் இதழியல் தொண்டு வியந்து பாராட்டுதற்குரியது. 1932-இல் இந்திய விடுதலைப் போராட்டச் செய்திகள் வெளிநாடுகளிலும் பரவ 'ஃப்ரீ பிரஸ் ஆப் இந்தியா' வாயிலாக அமைந்திருந்தது. அயல் நாட்டுச் செய்தி நிறுவனங்களும் இந்தியச்செய்திகளை வாங்கிப் பரப்பின. அத்துடன் இந்தியாவின் எல்லா மாநிலங்களிலும் இதழ்களைத் தொடங்கி விடுதலைப் போராட்டச் செய்திகளைப் பரப்பச் சதானந்தம் எண்ணினார். அம்முயற்சியின் அடிப் படையில் சென்னையிலிருந்து இந்தியன் எக்ஸ்பிரஸ் (ஆங்கிலம்), தினமணி (தமிழ்); பம்பாயிலிருந்து நவசக்தி (மராத்தி), ஜன சக்தி (குஜராத்தி); கல்கத்தாவிலிருந்து ஃப்ரீஇந்தியா (ஆங்கிலம்) ஆகிய செய்தித்தாள்கள் 1933-இல் தொடங்கப்பட்டன. இவை தவிரத் தில்லி, இலக்னோ, இலாகூர் போன்ற இடங்களிலும் செய்தித்தாள்களைத் தொடங்கத் திட்டமிட்டார் சதானந்தம்.

காந்தியாரின் ஹரிஜன சேவக் என்ற குஜராத்தி இதழ் அவர் கொள்கைகளைப் பரப்பிக்கொண்டிருந்தது. அத்துடன் நாடு முழுவதும் விடுதலை இயக்கக் கொள்கையைப் பரப்ப ஆங்கில வாரச்செய்தித்தாள் ஒன்றைத் தொடங்கத் திட்டமிட்

டார் காந்தியார். தொழில் அதிபர் ஜி. டி. பிர்லா உதவியுடன் 1933 பிப்ரவரி 11-இல் ஹரிஜன் வெளிவந்தது. இவ்விதழ் ஹரிஜன்பந்து என்ற பெயரில் இந்தியிலும் வெளிவந்தது. இந்தியாவின் எல்லா மொழிகளிலும் ஹரிஜன் இதழை வெளியிடக் காந்தியார் விரும்பியிருந்தார். தமிழ்மொழி ஹரிஜன் இதழுக்குக் கல்கியை ஆசிரியராக அமர்த்தவும் எண்ணியிருந்தார். ஆனால், இத்திட்டம் நிறைவேறாமல் போயிற்று. வெள்ளிக்கிழமை தோறும் வெளிவந்த ஹரிஜன் தேசியக் கொள்கைகளுடன் தீண்டாமை ஒழிப்பு போன்ற சமுதாயக் கொள்கைகளையும் தாங்கி வெளிவந்துகொண்டிருந்தது. மகாதேவ தேசாய், சவகர்லால் நேரு, கே.ஜி. மஜ்நவாலா, ஆர். ஆர். திவாகர், ஜி. இராமச்சந்திரன், சி. இராசகோபாலாச்சாரியார் போன்ற தேசியத் தலைவர்களின் உணர்ச்சியூட்டும் அறிவு பூர்வமான கட்டுரைகளைத் தாங்கிய ஹரிஜன் காந்தியாரின் மறைவுவரை (1948) வெளிவந்துகொண்டிருந்தது.

1935-ஆம் ஆண்டு அரசியல் சீர்திருத்தச் சட்டத்தின் அடிப்படையில் காங்கிரசுக் கட்சி ஏழு மாநிலச் சட்டசபைகளில் வெற்றிபெற்று அரசு அமைத்தது. இங்கெல்லாம் இதழ்களுக்கான கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டன. பொறுப்புத்தொகைமுறை நீக்கப்பட்டதோடு, ஏற்கனவே கட்டிய தொகைகளும் திருப்பிக் கொடுக்கப்பட்டன. எவ்வித இடையூறுமின்றி நாள்-வார இதழ்கள் பல தோன்றின. சண்டே ஸ்டாண்டர்டு (பம்பாய் - 1936), ஸ்டார் ஆப் இந்தியா, இந்துஸ்தான் ஸ்டாண்டர்டு ஜுகாந்தர் (கல்கத்தா-1937), டான் (தில்லி 1937), இந்துஸ்தான் (தில்லி-1937), ஃப்ரீ பிரஸ் புல்லட்டின், பாரத் ஜோதி (பம்பாய் - 1938), நேசனல் ஹெரால்டு (லக்னோ - 1938), பிளிட்ஸ் (பம்பாய் 1941), வந்தேமாதரம் (பம்பாய் - 1941), பீபிள்ஸ் வார் (பம்பாய் 1942), கல்கி (சென்னை - 1941), தினத்தந்தி (மதுரை-1942) ஆகிய இதழ்கள் வெளிவந்தன. 1939-இல் ஏற்படுத்தப்பட்ட 'இந்தியா மற்றும் கீழைநாட்டு இதழ்கள் கழகம்' (Indian and Eastern Newspaper Society-IENS) அரசுக்கும் இதழ்களுக்குமிடையே இணைப்புப் பாலமாக அமைந்தது. இவை இரண்டிற்குமிடையே கருத்து வேறுபாடுகளைத் தீர்த்துச் சுமுகமான சூழ்நிலைகள் ஏற்பட இக்கழகம் உதவியது. இதழ்கள் பற்றிய அரசினரின் கட்டுப்பாடுகளைப் போக்குவதும்; இதழ்களில் செய்திகள் பற்றிய கட்டுப்பாடுகளை ஆக்குவதும் இக்

கழகத்தின் செயல்களாக அமைந்திருந்தன. இந்திய இதழ்கள் பிறநாட்டு இதழ்களின் அமைப்பு, அச்சு, நிருவாக முறைகளை அறிந்து கொள்ளவும் இக்கழகம் பயன்பட்டது. 1941-இல் பம்பாயில் அமைக்கப்பட்ட 'இந்திய மொழிச் செய்தித் தாள்கள் கழகம் (Indian Language Newspapers Association) மொழி இதழ் களின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரியத் தொடங்கியது. அச்சுக்கலையும், அறிவியல் அடிப்படையில் புதுமைகள் பல வற்றைக் கண்டது. சுழலும் அச்சுப் பொறி (Rotary Press), மின் அச்சுக் கோர்க்கும் கருவிகள் (Mechanical Type-setting apparatus) இவற்றின் வரவினால் பழைய அச்சுப் பொறி களுக்குப் பயணச்சீட்டு வழங்கப்பட்டது.

1939 - இல் இரண்டாம் உலகப் போரில் இந்தியாவை ஈடுபடுத்திய ஆங்கில அரசின் செயலைத் தலைவர்களோடு இதழ்களும் கடுமையாகக் கண்டித்தன. முழுமையான விடுதலை யை அளித்தாலன்றிப் போர்ச் செயல்களை ஆதரிப்பதில்லை யென்று காங்கிரசு இயக்கம் அறைகூவல் விடுத்தது. காந்தி யாரும் தனிநபர் சத்தியாக்கிரகத்தைத் தொடங்கினார். போர்ச் செய்திகளை நேரிடையாகவோ, மறைமுகமாகவோ எதிர்த்து எழுதுவதற்கும், கூட்டங்கள் நடத்துவதற்கும் அரசினர் தடை விதித்தனர். நேஷனல் ஹெரால்டு வெளியிட்ட போரைப் பற்றிய தலைப்புச் செய்திகளும், தலையங்கமும் தடைசெய்யப்பட்டன. அத்துடன் சத்தியாக்கிரகிகளிடம் காவலர் நடத்திய கொடுமைகளை வெளிப்படுத்தி எழுதியதற்காக இதன் ஆசிரியர் இராமாராவ் மீது இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி வழக்குத் தொடர்ந்து ஆறுமாதச் சிறைத் தண்டனையும், எழுநூறு உருபாய் தண்டமும் விதித்தனர். 1942 -இல் ஆகஸ்டுப் போராட் டத்தின் போது 96 செய்தித்தாள்களைப் பல்வேறு குற்றங் களைச் சாற்றி அரசு நிறுத்திவைத்தது இந்திய விடுதலைப் போராட்டத்தின் உச்சகட்டம் ஆகஸ்டுப் போராட்டமேயாகும். காந்தியார் வெள்ளையனே வெளியேறு போராட்டத்தை இறுதியாகத் தொடங்கினார். போராட்டத்தைப் போன்றே அரசினரின் அடக்குமுறையும் உச்சகட்டத்தை அடைந்து, இந்தி யர்கள் வாழ்வா? அன்றிச் சாவா? என்ற முடிவுக்கு வந்து போராடத் தொடங்கினர். நாடு பூராவும் கொந்தளிப்பு நிலை உருவாகியது. இந்திய அரசுச் சட்டங்களின் இரும்புக் கரங்கள் இதழ்களை அடக்கி ஒடுக்கின. 'கட்டுப்படுத்தப்பட்ட செய்தித்

தாள்களை வெளியிடுவதைவிட அவற்றை நிறுத்தியே விடலாம்' என்ற காந்தியாரின் அறிவிப்பைத் தொடர்ந்து ஹரிஜன்' நேஷனல்ஹெரால்டு, இந்தியன் எக்ஸ்பிரஸ், தினமணி ஆகியவை கொஞ்ச காலம் நிறுத்திவைக்கப்பட்டிருந்தன. இந்துஸ்தான் டைம்ஸ் ஆசிரியர் தேவதாசு காந்திமீது பல்வேறு வழக்குகள் தொடரப்பட்டன. அமிர்த பஜார் பத்திரிகா, ஜன்மபூமி, பாம்பே கிரானிக்கிள் ஆகிய இதழ்கள்மீது சட்ட நடவடிக்கைகள் வந்தன. அரசினரின் அடக்குமுறையை எதிர்த்து 1943, சனவரி 6-ஆம் நாள் இந்திய இதழ்கள் வேலைநிறுத்தம் செய்தன. அன்று ஒருநாள் மட்டும் இந்தியச் செய்தித் தாள்கள் வெளிவரவில்லை.

இந்தியர்களின் போராட்டத்திற்கு ஆங்கில அரசு பணிந்தது. 1944. மே மாதம் காந்தியாரும், 1945-இல் மற்றவர்களும் விடுதலை செய்யப்பட்டனர். நேருவின் தலைமையில் இடைக்கால அமைச்சரவை அமைக்கப்பட்டது. 1947சூன் மாதம் இங்கிலாந்து நாட்டு நாடாளுமன்றத்தில் இந்திய விடுதலை பற்றிய அறிவிப்பு வெளியிடப்பட்டது. ஆனால், இந்திய நாட்டில் புதியதொரு சிக்கல் உருவானது. இந்திய முசுலீம்கள் தனிநாடு வேண்டிப் போராடத் தொடங்கினர். இந்தியத் தலைவர்களுக்கும் இதழ்களுக்கும் வருத்தம் தரும் நிகழ்ச்சியாக இது அமைந்தது. நாட்டுப் பிரிவினையில் விருப்பமின்மையை இதழ்களின் தலையங்கங்கள் வெளிப்படுத்தின; என்றாலும் இறுதியில் பிரிவினையே சிக்கல் தீர்க்கும் ஒரே வழியாக அமைந்தது. 1947, ஆகஸ்டு 15-இல் இந்தியா விடுதலை அடைந்தது. பாகிஸ்தான் பிரிந்ததோடு சில இந்திய இதழ்களும் பிரிந்து சென்றன. இந்திய இதழியலில் இப்பிரிவு அப்பொழுது ஏற்பட்ட சிறியதொரு ஊனமாக அமைந்து பின்பு சரிசெய்யப்பட்டது.

இந்திய நாட்டு விடுதலையை மக்கள் எப்படிக் கொண்டாடினார்களோ, அது போலவே இதழ்களும் சிறப்பாகக் கொண்டாடின. ஆகஸ்டு, 15-ஆம் நாள் இந்திய இதழ்கள் அனைத்தும் சிறப்பு மலர்களாகவே பூத்தன. விடுதலைப் போராட்ட வரலாறு, தேசியத் தலைவர்களுக்குப் புகழாரங்கள், போராட்டத் தலைவர்களின் புகைப்படங்கள், பொதுமக்களுக்குப் பாராட்டு—இவைகளே இம்மலரை அழகூட்டின.

# விடுதலைக்குப் பின்பு இந்திய இதழ்கள்

**1857** - ஆம் ஆண்டு தொடங்கிய இந்தியர்களின் இன நலப் போராட்டம் தொண்ணூறு ஆண்டுகள் தொடர்ந்தது. கல்வி, போக்குவரத்து, நிருவாகம், அறிவியல் ஆகியவற்றில் ஆங்கில அரசு இந்தியர்களுக்கு வழிகாட்டியாய் அமைந்திருந் தாலும் இவற்றைப்பற்றி இந்தியர்கள் சிந்திக்க அன்றைய அரசு இடந்தரவில்லை. ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக் காலம் இந்தி யர்களின் சிந்தனை முழுவதும் விடுதலைப் போராட்டத்தில் மூழ்கிக் கிடந்தது. இதழியல் துறை மட்டும் இந்தியர்களின் விடுதலை உணர்வோடு இணைந்திருந்த படியால் சிந்தித்துச் செயலாற்ற முடிந்தது. என்றாலும் நீண்ட காலமாக நசுக்கப் பட்டிருந்த இதழியல் துறைக்கும் விடுதலைக்குப் பின்பே விடிவு காலம் வந்தது.

இந்திய நாட்டு விடுதலையில் இதழ்கள் பெற்ற பயன் கருத்துச் சுதந்திரம் ஆகும். பொது மக்கள் கருத்து (Public Opinion) விடுதலை பெற்ற இந்தியாவில் இதழ்களினால் புதுப் பொலிவைப் பெறத் தொடங்கியது. விடுதலைப் போராட்டக் காலத்தில் அரசியல் செய்திகளையே பொருளடக்கமாகக் கொண்டிருந்த இதழ்கள் விடுதலைக்குப் பின்னர் இலக்கியம், அறிவியல், சமுதாய முன்னேற்றம் இவை போன்ற பிற துறை களையும் இணைத்துச் செய்திகளை வெளியிடத் தொடங் கின. பல்வேறு வகையான வார, மாத இதழ்களும் வெளிவரத் தொடங்கின. இதழியல் துறைக்கும், அதன் சார்பாளர்களுக்கும் சமுதாயச் செல்வாக்குக் கிட்டியது. இத்துறை முழுநேரத் துறையாகி இதழாளர்களுக்குக் கணிசமான ஊதியமும் கிட்டியது. எல்லாவற்றிற்கும் மேலாக இதழியல் துறைக்கு வணிக மதிப்புக் கூடியது. மிகப் பெரிய நிறுவனங்கள் பெரும் முதலீட்டில் இதழ்களைத் தொடங்கின.

## 1. ஒரே மையத்திலிருந்து பல இதழ்களை வெளியிடும் நிறுவனங்கள் (Group Publications)

### (அ) நேஷனல் பிரஸ் நிறுவனம் (பம்பாய்)

ஃப்ரீ பிரஸ் ஜெர்னல், ஃப்ரீ பிரஸ் புல்லட்டின், பாரத் ஜாதி, நவசக்தி ஆகிய இதழ்களை வெளியிடுகிறது.

(ஆ) ஆனந்தபஜார் பத்திரிகா நிறுவனம் (கல்கத்தா) ஆனந்த பஜார் பத்திரிகா, இந்துஸ்தான் ஸ்டாண்டர்டு, தேஜ் (வங்காள வார இதழ்) ஆகிய இதழ்களை நடத்துகிறது.

(இ) கஸ்தூரி & மக்கள் நிறுவனம் (சென்னை)

இந்து, ஸ்போர்ட்ஸ் அண்டு பாஸ்டைம், (இப்போது நிறுத்தப்பட்டுள்ளது) இந்து வீக்லி ரிவியூ ஆகிய இதழ்களை வெளியிடுகிறது. இந்து ஆங்கில நாளிதழ் இப்போது சென்னை, மதுரை, கோவை, பெங்களூர், ஐதராபாத், குர்க்கான் ஆகிய ஆறு இடங்களிலிருந்து வெளியாகிக் கொண்டிருக்கிறது.

இந்தியாவில் படிவப் பதிப்பு (Facsimile Edition) முறையை முதன்முதலில் இந்து அறிமுகப்படுத்தியுள்ளது.

## 2. ஒரே நிறுவனத்தின்கீழ் பல மையங்களிலிருந்து இதழ்களை வெளியிடும் நிறுவனங்கள் (Chain Publications)

(அ) எக்ஸ்பிரஸ் செய்தித்தாள் நிறுவனம் (சென்னை)

இந்தியன் எக்ஸ்பிரஸ் ஆங்கிலச் செய்தித்தாள் சென்னை, மதுரை, பெங்களூர், விஜயவாடா, அகமதாபாத், கொச்சின், பம்பாய், தில்லி, சண்டிகார் ஆகிய ஒன்பது இடங்களிலிருந்து வெளிவருகிறது. இத்துடன் தினமணி (தமிழ்), லோக சாட்டா (மராத்தி), ஆந்திர பிரபா (தெலுங்கு), பைனான்சியல் எக்ஸ்பிரஸ், ஸ்கிரீன் (ஆங்கிலம்) முதலிய இருபத்திரண்டு இதழ்களை இதே நிறுவனம் பல்வேறு இடங்களிலிருந்து வெளியிடுகிறது.

(ஆ) பென்னட் கோல்மேன் குழுமம் (பம்பாய்)

டைம்ஸ் ஆப் இந்தியா (பம்பாய், தில்லி), நவபாரத் டைம்ஸ் (பம்பாய், தில்லி) ஈவினிங் நியூஸ் ஆப் இந்தியா, இல்லஸ்ட் ரேட்டட் வீக்லி ஆப் இந்தியா, எகனாமிக் டைம்ஸ், மகாராஷ்டிரா டைம்ஸ், பிலிம்பேர், பெமினா, தர்மயோக், பாரக், சாரிகா, மாதுரி, இந்திர ஜால காமிக்ஸ், தினமான் முதலிய புகழ் பெற்றிருக்கும் இதழ்களை இந்நிறுவனம் வெளியிட்டுக்கொண்டிருக்கிறது.

**(இ) இந்துஸ்தான் டைம்ஸ் அண்டு அல்லெய்டு பப்ளிகேசன் (தில்லி)**

இச்செய்தித்தாள் நிறுவனம் இந்துஸ்தான் டைம்ஸ், இந்துஸ்தான் டைம்ஸ் ஈவினிங் நியூஸ், இந்துஸ்தான், சாப்தஹிக் இஸ்துஸ்தான், இந்துஸ்தான் பிலிம் விசேஷங்க் ஆகிய இதழ்களைத் தில்லியிலிருந்தும் லீடர், பாரத் ஆகிய இதழ்களை அலகாபாத்திலிருந்தும்; செர்ச் லைட், பிரதீப் ஆகிய இதழ்களை புனாவிலிருந்தும் வெளியிடுகிறது. தொழில் அதிபர் ஜி.டி. பிர்லாவின் மேலாண்மையில் இந்நிறுவனம் இயங்குகிறது.

**3. பொதுநிர்வாக அமைப்பில் இதழ்களை வெளியிடும் நிறுவனங்கள் (Trust Publications)**

**சௌராஷ்டிரா டிரஸ்ட் நிறுவனம்**

ஜன்ம பூமி, குஜ்மித்ரா ஆகிய இதழ்களை வெளியிடுகிறது. பூனாவிலுள்ள கேசரி மகாராட்ட டிரஸ்ட் திலகரால் ஆரம்பிக்கப் பட்டது. கேசரி (ஆங்கிலம்), மராட்டா, (மராத்தி), சாகியத்ரி ஆகிய இதழ்கள் இந் நிறுவனத்தைச் சார்ந்த இதழ்களாகும். கர்நாடக மாநில ஹுப்ளியில் உள்ள லோக சிக்கன்ன டிரஸ்ட் சம்யுக்த கர்னாடகா, கர்மவீரா, கஸ்தூரி ஆகிய இதழ்களையும்; சென்னையில் உள்ள தினத்தந்தி டிரஸ்ட் தினத்தந்தி நாளிதழோடு, வாராந்தரி ராணி, ராணி முத்து முதலிய இதழ்களை வெளியிடுகின்றது. தினத்தந்தி மதுரை, திருச்சி, கோவை, வேலூர், நெல்லை, சென்னை, தஞ்சை ஆகிய இடங்களிலிருந்து வெளிவருகின்றது.

1948, ஜனவரி 31-ஆம் நாளின் இந்திய இதழ்கள் அனைத்தும் கறுப்புக் கட்டமிட்டுக் கண்ணீர்க் கதை ஒன்றை வெளியிட்டன. அதுவே காந்தியாரின் மறைவுச் செய்தியாகும். மாலைச் செய்தித்தாளான மெட்ராஸ் மெயில் தான் இத்துயரச் செய்தியை முதலில் வெளியிட்டது. இந்தியர்களின் ஒப்பற்ற தலைவர் காந்தியாரின் எதிர்பாராத மறைவு பற்றிய செய்தித் தொகுப்புக்களும், தலையங்கங்களும் இந்திய இதழியல் வரலாற்றின் இன்றியமையாத பகுதிகளாக அமைந்திருந்தன. 1949-ஆம் ஆண்டு இராய்டரின் ஒப்பந்தத்துடன் இந்தியாவின் மிகப் பெரிய செய்தி நிறுவனம் பிரஸ் டிரஸ்ட் ஆப் இந்தியா (P. T. I) தொடக்கப்பட்டவுடன் செய்திப் போக்குவரத்துகள் விரைவாகிக்

கால விரயங்கள் தவிர்க்கப்பட்டன. இதே ஆண்டில் உலக அரங்கிலும் இந்திய இதழ்கள் தனித்ததொரு இடத்தைப் பெற்றன. சுவிட்சர்லாந்தில் உள்ள உலக நாடுகள் செய்தித் தாள் நிறுவனம் (International Press Institute (I. P. I.) என்ற அமைப்பில் இந்தியாவும் உறுப்பு நாடாகப் பதிவு செய்து கொண்டது. எல்லா நாடுகளுக்கிடையிலும் செய்தி, செய்தி யாளர்கள் பரிமாற்றத்திற்கு இந்த நிறுவனம வேண்டிய உதவி களைச் செய்தது. இந்நிறுவனத்தின் இந்தியக் கிளைக்கு இந்து நாளிதழ் ஜி. நரசிம்மன் தலைவராகப் பணியாற்றினார். இந்தியாவின் முன்னணி இதழ்கள் வெளிநாடுகளில் சிறப்புச் செய்தியாளர்களை அமர்த்தின. நம் நாட்டிற்கும் பிற நாட்டுச் செய்தியாளர்கள் வந்து குவிந்தனர். இதற்குப்பின் இந்திய இதழ்கள் உலகளவுச் செல்வாக்கில் கொடிகட்டிப் பறந்தன.

1950, சனவரி 26-ஆம் நாள் இந்தியா மிகப் பெரிய குடியாட்சி நாடாக மறுமலர்ச்சி பெற்றது. அப்போது இயற் றப்பட்ட இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 13, 19— ஆம் பிரிவுகள இதழகளின் சுதந்திரத்திற்குப் பாதுகாபபு அளிப்பதாக அமைந்திருந்தன. எத்தகைய குடியாட்சி நாடாக இருந்தாலும் இதழ்களின்மீது அரசின் கண்ணோட்டம இருப்பது இயல்பே. நம் குடியரசு நாட்டிலும் இதழ்களை வேண்டிய போது ஒடுக்கி வைககும் 'இதழகள (சட்ட விரோதச் செய்தி கள்) சட்டம்' ஒன்று 1951-ஆம் ஆணடில் நடை முறைககு வந்தது.* இச்சட்டந்தான் இன்றைய இதழகளை வேண்டிய பொழுதெலலாம் தன் கோரப் பற்களைக காட்டி அச்சுறுததிக கொண்டிருக்கிறது. இதழ்களின் சுதந்திரம பற்றிய அரசியல சட்டத்தின் 19-ஆம் பிரிவு திருததப்பட்டுச் சில கட்டுப்பாடு கள் சேர்க்கப்பட்டன. அனைத்து இந்தியச் செய்துத்தாள ஆசிரியர்கள் அமைப்பு (All India Newspaper Editor's conference), இந்திய உழைக்கும் பத்திரிக்கையாளர்கள் கழகம் (Indian Federation of working Journalists) இரணடும அரசின் குழப்ப நிலைகளைச் சுட்டிக் காட்டிய போது, இந்திய

* சட்டத்திற்குப் புறம்பான செய்தியாகக் கருதப்பட்டால் இரண்டாயிரம் ரூபாய் தண்டமும், ஆறுமாதச் சிறைத் தண்டனையும் அளிக்க இச்சட்டம் வகை செய்கிறது. உள் துறை அமைச்சராக இருந்த இராஜாஜி அவர்களால் இச் சட்டம் நாடாளுமன்றத்தில் கொண்டுவரப்பட்டது.



அரசு 1952 - இல் இதழ்கள் பற்றிய விசாரணைக் குழு (Press Commission of India) ஒன்றைப் பம்பாய் உயர்நீதிமன்ற நீதிபதி ஜி. எஸ். இராஜா தியாக்ஷா தலைமையில் அமைத்தது. சி. பி. இராமசாமி ஐயர், வி. கே. ஆர். வி.ராவ், ஆச்சார்ய நரேந்திரதேவ், ஜாகிர் உசேன், பி. எச். பட்வர்த்தன், டி.என்.சிங்.ஜெய்பால் சிங்,ஏ. ஆர். பட், எம்.சலபதி ராவ், ஏ டி. மணி, ஜே. நடராஜன் ஆகியோர் இக்குழுவின் உறுப்பினர்களாவர். 1954-ல் இக்குழு தன் அறிக்கையை வெளியிட்டது. குழுவின் ஆலோசனைப்படி இதழியல் துறையில் பணியாற்றுவோருக்குக் குறைந்த அளவு ஊதியத்தை நிர்ணயிக்கும் சட்டத்தை அரசு இயற்றியது. செய்தித்தாள் பதிவாளர் அலுவலகம் (Institution of the Press Registrar) தில்லியில் நிறுவப்பட்டது. இந்திய இதழ்கள் பற்றிய எல்லாத் தொடர்புகளையும் வைத்திருக்கும் இவ்வமைப்பு ஆண்டுதோறும் இந்தியாவில் நடத்தப்படும் எல்லாவகையான இதழ்களின் புள்ளி விவரங்களைப் புத்தகமாக வெளியிட்டுக்கொண்டிருக்கிறது.

உலகப் போருக்குப்பின்பு வெளிநாட்டுப் பொருள்களும் பொறிகளும் அதிக அளவில் இறக்குமதியாகின. அவற்றிற்கிடையே உண்டான வணிகப் போட்டியில் விளம்பரங்கள் இதழ்களில் வெகுவாக இடம் பெற்றன. இதனால் நாள், வார இதழ்களின் விற்பனை கூடிய போது தாள் தட்டுப்பாட்டினையும் சந்திக்க வேண்டியதிருந்தது. நாக்பூர் அருகில் 1956-இல் அமைக்கப்பட்ட நேபா தாள் தொழிற்சாலை பற்றாக்குறையைப் போக்குவதற்காக உற்பத்தியைக் கூட்டியது. சில நாளிதழ்கள் சொந்தமாகவே தாள் தயாரிப்பிலும் ஈடுபட்டன.* இதழ்களில் சிறப்புப் பகுதிகள், பொழுது போக்குப் பகுதிகள், அறிவுப் போட்டிகள், பெண்கள் பகுதி, வீட்டுக் குறிப்புகள், திரைப்படம், விளையாட்டுத் துறைகள், அறிவியல் பகுதிகள் போன்ற பிரிவுகள் தொடங்கப்பட்டன. இதழ்களின் விற்பனை கூடுதலுக்கு இவையும் காரணமாக அமைந்தன. இந்தியாவின் தலைசிறந்த இதழாசிரியர்கள், எழுத்தாளர்கள் இதழ்களில் தொடர்பு கொண்டனர். ஜி. சுப்பிரமணிய ஐயர், காசா சுப்பாராவ், போத்தன் ஜோசப், பி. சிவராவ், துர்க்காதாஸ்,

* தினத்தந்தி நிறுவனம் நெல்லை மாவட்டத்தில் அரியநாயகபுரத்தில் 'சன் தாள் தொழிற்சாலை'யை 1962-இல் அமைத்திருக்கிறது.

எம். சலபதிராவ், என். இரகுநாத ஐயர், பிராங் மோரியசு, டி. எஸ். சொக்கலிங்கம், ஏ. என். சிவராமன், ஆதித்தனார் முதலியோர் இதழியல் துறையின் புகழ் ஏணியில் ஏறி நின்றவர்களாவர்.

இந்தியாவின் முதல் தேர்தல் 1952-இல் தொடங்கியபோது இதழ்களுக்குப் பெரும் பங்கிருந்தது. தேர்தலை முதன் முறையாகச் சந்திந்த பெரும்பான்மைக் கல்வியறிவில்லா இந்திய மக்களுக்குக் குடியரசு நாட்டின் தேர்தல் முறைகள், வாக்களிக்கும் முறைகள், வாக்குச் சீட்டுக்களைப் பயன்படுத்தும் முறை, தொகுதிகள் பற்றிய விளக்கம் இவற்றை இதழ்களே கற்றுக் கொடுத்தன. படித்த அறிஞர்களுக்கும் பாமர மக்களுக்கும் இதழ்களின் பணி இன்றியமையாத ஒன்றாக அமைந்தது. 1957-இல் இரண்டாவது தேர்தல் முடிவுகளை முன்னைவிட விரைவாக நாடுமுழுவதும் இதழ்கள் அறிவித்தன. தேசிய இதழ்களும், வட்டார இதழ்களும் அரசியற் செய்திகளையும் தேர்தல் செய்திகளையும் கதை வடிவில் சுவையோடு தந்தன. அடுத்து வந்த தேர்தல்களில் வாக்காளர், வேட்பாளர், கட்சிகள் இவற்றின் எண்ணிக்கை கூடியிருந்தமையால் இதழ்கள் கவனமாகப் பொறுப்புடன் செயல்பட வேண்டியிருந்தது. முடிவுகளைத் தரும்போது வாக்குகளின் எண்ணிக்கை, வாக்குகள் வேறுபாடு, தொகுதிவாரியான வாக்குகள், வேட்பாளர் பற்றிய அறிமுகங்கள் இவற்றையெல்லாம் தொகுத்துத் தந்தன. அத்துடன் அமைச்சரவை அமைப்புச் செய்திகளைப் படங்களுடன் தெளிவாக வெளியிட்டன. நடந்து முடிந்த இந்திய நாட்டுத் தேர்தல்களில் ஜனநாயகத்தை நிலைப்படுத்துவதிலும், பொதுமக்கள் கருத்தை உருவாக்குவதிலும், அரசியல் பாடங்களைக் கற்றுக் கொடுப்பதிலும் இதழ்கள் பெரும்பங்கு பெற்றுச் சிறந்தன.

விடுதலைக் காலத்தில் காந்தியடிகள் இதழ்களின் வளர்ச்சியில் பங்கு கொண்டிருந்தபோது அவரிடம் பயிற்சி பெற்ற நேரு பெருமகனார், விடுதலை பெற்ற இந்திய நாட்டின் இதழ்கள் வளர்ச்சியில் பெரிதும் அக்கறை கொண்டிருந்தார். தேவை ஏற்படும் போதுகூட இந்தியப் பாதுகாப்புச் சட்டம் இதழ்களின்மீது பாய்ந்து கடித்துக் குதறக் கூடாது என்று அவர் எண்ணினார். பத்திரிக்கைச் சுதந்திரம் கூடும் போது இதழ்களின் பொறுப்புக்களும் கூடுகின்றன என்பது அவர் கருத்

தாகும். அரசை விமர்சனம் செய்யும் இதழ்களே ஒரு நாட்டின் உண்மையான எதிர்க்கட்சி என்றும் நேரு வெளிப்படையாகக் கூறினார். என்றாலும் அவ்விமர்சனத்தில் பெருந்தன்மையும், உண்மைகளும் பொருந்தியிருக்க வேண்டுமென்று வற்புறுத்தினார். இதழ்கள் அரசின்கட்டுப்பாட்டுக்குள் அடங்யிருப்பதை விட அவை சுயகட்டுப்பாட்டினுள் அடங்கியிருக்க வேண்டுமென்றும் தன்காலத்து இதழ்களுக்கு நேரு அறிவுறுத்தி வந்தார்.

# நெருக்கடி நிலையும் இதழ்களும்

1975 - ஆம் ஆண்டு ஜுன் திங்கள் 25-ஆம் நாள்இரவு மணி 11-45. நாட்டின் நெருக்கடிநிலைச் சட்டமான உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்புச் சட்டத்தில் (Maintenance of Internal Security Act) இந்தியக் குடியரசுத் தலைவர் கையொப்ப மிட்டார். இதழியல் துறையில் ஈடுபாடுடைய நேரு பெருமக னாரின் அருந்தவப்புதல்வி இந்திராகாந்தி இந்திய நாட்டின் தலைமை அமைச்சராக இருந்தார். இச்சட்டத்தின் முதல் குறிக்கோள் இதழ்களைக் கண்காணிப்பதாக அமைந்திருந்தது. இதழ்களின் மீது இச்சட்டம் ஏவி விடப்பட்டபோது, அது என்ன வெல்லாம் செய்து முடித்தது என்பதைக் காணும் வாய்ப்பினை நாம் பெற்றிருந்தோம்.

டெல்லி, பஞ்சாப், மத்தியப்பிரதேசம் ஆகிய இடங்களி லிந்து ஜுன் 26-ஆம் நாள் செய்தித்தாள்கள் எதுவும் வெளியாகவில்லை. இவற்றின் அலுவலக மின் தொடர்புகள் துண்டிக்கப்பட்டதே இதற்குக்காரணமாகும். இதழ்கள் தணிக்கை முறை உடனடியாக அமுலுக்கு வந்தது. எல்லாச் செய்திகளை யும் முன் தணிக்கைக்காக ஒப்படைக்குமாறு அரசு ஆணை யிட்டது. தணிக்கை விதிமுறை நகல்களை எல்லா இதழ்களுக்கும் வழங்கிய அரசு, எவற்றையெல்லாம் வெளியிடக்கூடாதென்றும் வரையறை செய்திருந்தது. முக்கிய இதழ்களின் அலுவலகங் களை மத்தியப் புலனாய்வுத் துறையினர் கண்காணித்து வந்தனர். அதிகாரத்திலுள்ள சிலரின் நிழற்படங்களைச் சரியான முறையில் வெளியிடவில்லை என்ற காரணத்தால் ஸ்டேட்ஸ்மேன் இதழுக்குத் தணிக்கை செய்த செய்திகளைக் காலந் தாழ்த்தித் தந்தனர். கைது செய்யப்பட்ட தலைவர்களின் படங்களையும், செய்திகளையும் இவ்விதழிலிருந்து முற்றிலுமாக நீக்கிவிட்டனர். இந்துஸ்தான் டைம்ஸ் இதழ் இந்த காரணத்திற்காக விற்பனை யிடங்களிலிருந்து பறிமுதல் செய்யப்பட்டது. செயப்பிரகாசர் நடத்திய எவ்ரிமேன், பிரஜாநிதி, பிலுமோடியின் மார்ச் ஆப் இந்தியா ஆகிய இதழ்கள் சட்டத் தாக்குதல்களால் நின்று விட்டன. மதர்லேண்ட், ஆர்க்கனைசர் ஆகிய ஜனசங்க இதழ்கள் தடை செய்யப்பட்டன. முன்தணிக்கை முறையை எதிர்க்கும் நினைப்பில் தலையங்கத்திற்குரிய இடங்களைச் சில இதழ்கள்

வெற்றிடமாக விட்டுக்கொண்டிருந்தன. இதையும் குற்றமாகக் கருதி அரசு எச்சரிக்கை செய்தது. முரசொலி இதழ் வேண்டுமென்றே 'விளக்கெண்ணெயும் வெண்டைக்காயும்' என்று தலைப்பிட்டு, வெண்டைக்காயை விளக்கெண்ணெயில் சமைப்பது எப்படி என்பது பற்றித் தலையங்கம் எழுதியிருந்தது. பாதிக்கப்பட்ட இதழ்களுக்குச் சட்டபூர்வ உதவியளிக்க வழக்கறிஞர்கள் அஞ்சினர். உதவுகின்றவர்களைத் தடுப்புக் காவல் சட்டத்தின்படி கைது செய்தார்கள்.

அரசினரை விமர்சனம் செய்த வெளிநாட்டு இதழ்கள் நாட்டிற்குள் அனுமதிக்கப்படவில்லை. இலண்டன் டைம்ஸ், நியூஸ்விக், இலண்டன் டெய்லி டெலிகிராப் ஆகிய வெளிநாட்டு இதழ்களின் செய்தியாளர்களை இந்திய அரசு வெளியேற்றிய போது பிறநாடுகளில் இச்சட்டத்தின் கடுமை உணரப்பட்டது. 'அனைத்துலகச் செய்தித்தாள் நிறுவனம்' (International Press Institute) தணிக்கை முறையை நீக்குமாறு இந்திய அரசைக் கேட்டுக் கொண்டது ஆனால் அதைக் காதில் போட்டுக் கொள்ளாத அரசு, ஆங்கிலேயர் ஆட்சியில் நடைமுறையிலிருந்த அரசுக்குப் புறம்பான செய்திகளைத் தடை செய்யும் சட்டத்தை (Prevention of Publication objectionable Matter Act) மீண்டும் கொண்டுவந்தது. அரசினரை ஆதரிக்காத இந்தியன் எக்ஸ்பிரஸ் போன்ற நாளிதழ்கள் அரசு விளம்பரங்களைப் பெறமுடியவில்லை. பி.டி.ஐ; யு.என்.ஐ; இந்துஸ்தான் சமாச்சார்; சமாச்சார் பாரதி ஆகிய நான்கு செய்தி நிறுவனங்களும் இணைக்கப்பட்டுச் 'சமாச்சார்' என்று பெயர் சூட்டப்பட்டது. இவ்வமைப்பிற்குத் தலைவர் ஒருவருடன், பதினைந்து உறுப்பினர்களையும் குடியரசுத் தலைவர் அமர்த்தினார். பதினெட்டு மாதங்கள் இந்திய இதழ்களின் தேசிய கீதமாக இருபது அம்சத்திட்டம் (20 Points Programme) ஒன்றுதான் இசைக்கப்பட்டது.

இந்திய நாடு ஜனநாயக மரபுடையது என்பதை மறக்காமலிருக்கப் பொதுத் தேர்தல் அறிவிப்பு 1977-இல் வெளியானது. நெருக்கடிகால நிகழ்ச்சியையும், இதழ்கள் அடக்கி ஒடுக்கப்பட்டிருந்ததையும் மக்கள் மறக்கவில்லை என்பதைத் தேர்தல் முடிவுகள் எடுத்துக் காட்டின. நடுவணரசில் ஏற்பட்ட மாற்றம் இடையில் வந்த நெருக்கடிகளை உடனடியாகத் தீர்த்து வைத்தது. இதழ்கள் முழு உரிமை பெற்று மீண்டும்

பேசத்தொடங்கின. ஒன்றாக இணைக்கப்பட்ட இந்தியச் செய்தி நிறுவனங்கள் மீண்டும் பிரிந்து செயல்படத் தொடங்கின. 1977, மார்ச்சுத் திங்களில் மொரார்ஜி தேசாயின் அமைச்சரவை பொறுப்பேற்ற பின்பு தகவல் தொடர்புச் சாதனங்களின் மீது தனிக்கவனம் செலுத்தியது. தங்கள் எதிர்காலம் என்னவாகுமோ, என ஏங்கிக்கொண்டிருந்த இந்திய இதழ்களுக்கு மீண்டும் சலுகைகளும் உரிமைகளும் கிட்டின. அவற்றை இதழ்கள் எப்படியெல்லாம் அனுபவித்துக் கொண்டிருந்தன என்பதை அமைச்சரவையின் வீழ்ச்சிக் காலத்தில் அறிந்து கொள்ள முடிந்தது.

இந்திய அரசியலில் ஏற்பட்ட மாற்றங்களைவிட இதழ்களின் செய்திகளே குழப்பங்களை அதிகரிக்கச் செய்தன. நடுநிலைமை தவறி நாளுக்கு ஒரு செய்தியும் பொழுதுக்கு இரண்டு குழப்பமுமாக நாளிதழ்கள் வெளிவந்தன. இதழ்கள் எரிகிற வீட்டில் எடுப்பதை ஆதாயமாகக் கொள்ளாமல் தெளிவிலே பிறந்து சிறக்கவேண்டும். அப்போதுதான் இந்திய இதழ்கள் தொடர்ந்து வரலாறு படைக்க முடியும்.

பகுதி 2

# இந்தியமொழி இதழ்கள்

## (JOURNALISM IN INDIAN LANGUAGES)

இந்திய மக்களின் அரசியல் வாழ்க்கை, சமுதாயச் சீர்திருத்தம், பொருளியல் மேம்பாடு இவையெல்லாம் தாய்மொழிச் சிந்தனைக்குப் பின்பே வடிவம் பெற்றவை. தாய்மொழிச் சிந்தனையைத் தூண்டும் வலுவான வாயில்களாக இந்தியமொழி இதழ்கள் அமைந்திருந்தன. இதுபோன்றே இந்தியப் பண்பாட்டை வரையறை செய்யும் போதும் மொழி இதழ்களை மறந்து விட்டு அக்கணக்கை முடித்து விட முடியாது. நாடு தழுவிய கொள்கைகளிலும், போராட்டங்களிலும் நாட்டு மக்கள் அனைவரையும் ஒருமித்த பாதையில் இந்திய மொழி இதழ்கள் செலுத்தின. இந்திய விடுதலைப் போராட்டத்தின் போது இழுத்துக் கட்டப்பட்ட தேசிய ஒற்றுமையில் கட்டுக்கயிறாக அமைந்திருந்தவை இந்தியமொழி இதழ்களேயாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மெதுவாகப் பயணத்தைத் தொடங்கிய இந்தியமொழி இதழ்கள் விடுதலைக்குப் பின்பு எழுச்சி நடை போடுகின்றன. ஆங்கில அரசுப் பிரதிநிதிகள் வில்லியம் பெண்டிங்க், சார்லஸ் மெக்கால்ஃப் ஆகிய இருவரும் இந்திய இதழியல் கொடி பற்றிப் படரப் பாரியின் தேராய் முற்றிலும் ஒத்துழைத்தனர். இந்த ஆங்கிலப் பாட்டன்கள் அரவணைப்பில்தான் இந்திய இதழ்களின் தந்தையார் இராஜாராம் மோகன்ராய் போன்றவர்கள் தோன்ற முடிந்தது.

# வங்கமொழி இதழ்கள்

இந்தியாவில் இதழியலுக்கு வித்து ஊன்றிய இடம் வங்காளம். பெர்சியன், உருது, வங்காளம் ஆகிய மொழிகளின் முதல் இதழ்கள் தோன்றிய இடமும் வங்காளமே ஆகும். வங்காளத்திற்கு அருகில் உள்ள செராம்பூரிலிருந்து சமாச்சார் தர்பன் (1818)* முதல் வங்காள இதழாக வெளி வந்தது. இந்து சமயக் கொள்கைகளைப் பரப்ப இராசாராம் மோகன்ராய் சம்பாத் கௌமதி (1821) என்ற இதழைத் தொடங்கினார். பத்து ஆண்டுகளுக்குப் பிறகு ஈஸ்வர் சந்திர குப்தாவின் வங்க நாளிதழ் சம்பாத் பிரபாகர் தோன்றியது. பின்பு அட்சய குமார் தத்தாவின் தத்துவப் போதினி (1843); இராஜேந்திரலால் மித்ரா வின் விவிதார்த்த சங்கிராக் (1851); ஜோகீந்திர வித்யா பூசனின் சோம் பிரகாஸ் (1851); பியரிசந்மித்ராவின் மாசிக் பத்ரா (1854) ஆகிய இதழ்கள் வெளியாகின. பிரம சமாஜப் பற்றாளர் கேஸப் சந்திரசென் தொடங்கிய சுலவசமாச்சார் (1870) எனும் வார இதழ் பாமர மக்களின் அறிவுத்தேவையாக வெளி வந்தது. இந்தியாவின் தலைசிறந்த ஆங்கிலச் செய்தித்தாளாக விளங்கும் அமிர்த பஜார் பத்ரிகா 1872-இல் வங்க மொழியில்தான் தொடங்கப்பட்டது 1878-ஆம் ஆண்டுத் தாய்மொழி இதழ்கள் சட்டத்தில் தப்பிப் பிழைக்கவே அது ஆங்கிலமொழி நாளிதழாக மாற்றம்பெற்றது. ஜுகாந்தர் (1937), அமிர்தபஜார் பத்ரிகா வின் சார்பு இதழாக வங்க மொழியில் வெளிவருகிறது, பாலக் பந்து (1878) சிறுவர்களின் இதழாக வெளிப்பட்டது. இந்தியா வின் எழுச்சிக்கவிஞர் இரவீந்திரநாத் தாகூர்ஹிட்டாபாடி (1890) வார இதழின் நிறுவனராக இருந்திருக்கிறார். கவிஞர் குடும்பத் தாரின் பொறுப்பில் பாலக், சாதனா, தத்வபோதினி இதழ் களும் வெளிவந்தன. வங்க மொழியின் முதல் புரட்சியிதழ் பெங்காலி (1879) சுரேந்திர நாத் பானர்ஜியின் விடுதலை உணர் வின் வெளிப் பாடாய் அமைந்திருந்தது. வழக்கு ஒன்றில் இந்துக் கடவுளர் சிலைகளை வழக்குமன்றம் கொணரக் கட்டளையிட்ட நீதிபதியின் ஆணையைக் கண்டித்து எழுதிய பானர்ஜி இரண்டு

---

* இதழ்களின் பெயர்களை அடுத்து, அடைப்புக் குறிக்குள் உள்ள ஆண்டுகள் அவை தொடங்கப்பட்ட காலத்தைக் குறிப்பன.

திங்கள் சிறைத்தண்டனை பெற்றார் பெங்காலியின் புகழ் அதிகமாகி நாளிதழாக (1900) வெளிவரத் தொடங்கியது. மகரிஷி தேவேந்திரநாத் தாகூர் வங்கமொழியில் தத்துவ போதினி பத்ரிகா (1843) என்ற அறிவியல் இதழை நடத்தினார். தேசிய உணர்வூட்டிய இதழான வந்தேமாதரம் (1906), சுபாஷ் சந்திர முள்ளிக், சித்தரஞ்சன்தாஸ், விபின் சந்திர பால் ஆகிய தேசியவாதிகள் முயற்சியின் பயனாகும். அரவிந்தரின் தேசியத் தலையங்கங்களையும் தெவிட்டாத தத்துவங்களையும் வங்க மக்களின் செவிகளில் தேனாய்ப் பாய்ச்சியது வந்தேமாதரம். நாயக் (1908) இவ்விதழின் சார்பு இதழாகும். வங்காளத்தின் புகழ் பெற்ற இதழாளர் ஹேமேந்திர பிரசாத்கோஷின் இதழியல் துறையின் திறமைகளெல்லாம் பாசுமதி என்ற (1914) நாளிதழாக உருவாகி இன்றும் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது. இன்றைய வங்க மக்களின் தங்கநிகர் நாளிதழ் ஆனந்த பஜார் பத்ரிகா (1922), மிருணாள் காந்தி கோஷ், பிரபுல்ல குமார்சர்க்கார் சுரேஷ் சந்திர மசூம்தார் ஆகியோரால் தொடங்கப்பட்டதாகும். தேஜ் (1933) வார இதழ் இவ்விதழின் சார்பு இதழாகும்.

வங்கப் பிரிவினையின்போது வங்கமொழி இதழ்கள் சிறிய தொரு சரிவைச் சந்தித்தன என்றாலும் அது பெரும் பிளவாக மாறவில்லை. ஏற்கனவே இருந்த இதழ்களில் சில மறைந்துவிட எஞ்சியவைகளுடன் ஜனசேவக், லோகசேவக் (1948) அல்தோ ‘ரத், சினிமா ஜகத், தீபக், ஜகன், மகாகாளி பத்ரிகா போன்ற நாளிதழ்களும் தோன்றின இவற்றுடன் கலை, இலக்கியம், சமயத்துறைகளில் பணியாற்றும் வங்கமொழிப் பருவஇதழ்களும் தோன்றின. புகழ்பெற்ற கவிஞர் நஸ்ருல் இஸ்லாமின் பெங் கால்; பி. சி. இராயின் சசித்திர பாரத்; அமிர்த பஜார் பத்திரி காவின் அமிர்தா இவை வங்காளத்தின் வார இதழ்களாகும். இராமானந் சட்டர்ஜியின் பிரபாசி; எஸ் கே. ஹால்டாரின் நர னாரி; பி.முகர்ஜியின் பாரதவர்ஷா இவை மாத இதழ்கள். பாசுமதி நாளிதழ் நிறுவனம் பாசுமதி என்ற பெயரிலேயே வெளியிடும் வார, மாதஇதழ்கள் விற்பனையில் சிறந்துள்ளன.

# குஜராத்திமொழி இதழ்கள்

மொழி இதழ்களின் வளர்ச்சி சுற்றுப்புறச் சூழல்களுக்கு ஏற்ப அமைய வாய்ப்பிருக்கிறது என்பதற்குக் குஜராத்தி மொழி இதழ்களே சான்றாகும். குஜராத்தி மொழி இதழ்களைப் படிப்பவர்களில் பெரும்பாலோர் நேரிடையாகவோ, வேறு வகையிலோ வணிகம், தொழில் துறைகளோடு தொடர்புடைய வர்கள். வணிகச் செய்திகள், தொழிற் குறிப்புகள், அங்காடி நிலவரங்கள் போன்றவை பம்பாய் இதழ்களின் தனிச் சிறப்பு. பெரும் பணத்தை மூலதனமாக முடக்கிவைத்திருப்பதால் மாநிலத்தின் தொழில்துறைப் புள்ளிகள் பட்டியலில் குஜராத்தி மொழி இதழ்களும் இடம்பெறுவதுண்டு. நாளொரு விளம்பர மும் பொழுதொரு புதுப் பொறியுமாக வளர்ந்து கொண்டிருக் கிறது குஜராத்தி இதழ்கள். அகமதாபாத், பம்பாய், பரோடா, சூரத், இராஜ்கோட். கட்ஜ் ஆகிய நகரங்கள் குஜராத்தி மொழி இதழ்கள் வெளிவரும் மையங்களாகும். குஜராத்தி மொழியின் முதல்இதழ் மும்பாய் - னா - சமாச்சார் (1822) எழுத்துக்களைக் கட்டையில் செதுக்கி அச்செடுக்கப்பட்டது. இவ்வார இதழை வெளியிட்ட பர்தூன்ஜிமர்ஷபன் தன் குடும்பத் தாருடன் தாமும் அமர்ந்து கட்டையில் அச்சுக்களைச் செதுக்கினாராம். வணிகச் செய்திகளைத் தெரிவிப்பதுதான் இவ்விதழின் நோக்கமாக இருந்தது. 1932 முதல் இவ்விதழ் பம்பாய் சமாச்சார் * என்ற பெயரில் வெளியிடப்படுகிறது. இந்தியாவின் மிகப் பழமையான நாளிதழ் என்ற இடத்தை இவ்விதழ் பிடித்து வைத்திருக்கிறது. மும்பாய்னா வர்தமான் (1830) முப்பது ஆண்டுகள் நடைபெற்ற மற்றொரு இதழா கும். பெஸ்டான்ஜி மாணிக்ஜி மோதிவாலா தொடங்கிய குஜராத் மொழியின் புகழ் பெற்ற ஜாம்-இ-ஜாம்ஷெட் வார இதழ் பின்பு நாளிதழாகி (1853) பார்ஸி இனத்தின் வரவேற் பைப் பெற்றது. 1854 வரை தூர்ப்பின், மும்பாய்னா காசுட்,

---

* புகழ்பெற்ற ஆங்கில நாளிதழ் பம்பாய் கிரானிகள் இதன் சார்பு இதழ். தொடர்ந்து வெளிவரும் இவ்விதழின் அலுவ லகம் அமைந்துள்ள வீதி 'பாம்பே சமாச்சார் வீதி' என்று பெயரிடப்பட்டுள்ளது.

சமாச்சார் தர்பன், சித்ரஞ்சன் தர்பன் போன்ற செய்தி இதழ்கள் வரத் தொடங்கின. சித்ரஞ்சன் தர்பன் இதழில் முகமது நபியைக் குறித்து வெளியிட்ட படம் ஒன்று முகமதியர், பார்ஸி கலவரத் திற்குக் காரணமாயிற்று. பார்ஸிகள் தாக்கப்பட்டனர். இவர்க ளின் எதிர்ப்புக் குரலை ஒலிப்பதற்காகவே ராஷ்ட் காஃடர் (1851) தொடங்கப்பட்டது. தாதாபாய் நவ்ரோஜி இவ்விதழின் ஆசிரியரானார். 1858-இல் இதனை இந்தியர்களுக்குரிய இதழாக நவ்ரோஜி அறிவித்தார். ஹிதேச்சு (1860) குஜராத்தி மொழி முதல் நாளிதழாக நாற்பது ஆண்டுகள் வெளிவந்து கொண்டிருந்தது. ஹிதா வர்தமான் (1861) வார இதழ் 1961-ஆம் ஆண்டு நூற்றாண்டு விழாவைக் கொண்டாடியுள்ளது. சூரத் மித்ரா (1861) குஜராத் மித்ரா என மாறியது. குஜராத்தி (1880) வார இதழ் 1950 வரை நடைபெற்றது. சஞ்வர்தமான் (1902) குஜராத்தி மொழியின் முதல் மாலை நாளிதழாகும்.

அகமதாபாத்திலிருந்து மாத இதழாக வெளிவந்து கொண் டிருந்த நவஜீவன் காந்தியார் கைக்கு வந்தபின்பு வார இதழாயிற்று. அதன் விற்பனை எண்ணிக்கை இருபதினாயிர மாக இருந்தது. 1932-இல் நவஜீவன் ஹரிஜன பந்து என்ற பெயரில் மாறியது. அகமதாபாத்திலிருந்து வெளியான நாளிதழ் சுவராஜ்யா. சூரத்திலிருந்து குஜராத்தி (1921) நாளிதழ் வெளியானது. பரோடாவிலிருந்து உஜ்தான் பிரபாத் (1930) வெளிவந்தது அம்ரித்லால் சேத் தொடங்கிய ஜன்மபூமி (1943) குஜராத்தின் புகழ்பெற்ற நாளிதழ். அகமதாபாத்திலிருந்து வெளி வந்த குஜராத் சமாச்சார் (1932) நாளிதழுக்குக் கே.எம். மேத்தா ஆசிரியராக இருந்தார். பிரஜாபந்து இதன் வார வெளியீடு. இராஜ்கோட்டிலிருந்து வெளிவந்த ஜெய்ஹிந்த் இதழ் (1948) பரவலாக விற்பனையாயிற்று, லோகவாணி பாரத், (சூரத்), ஜனசக்தி, லோகதந்ரா தஸ்தார் (பம்பாய்), லோக சாட்டா, கர்ஜன், நவபாரத், குஜராத் கேசரி (பரோடா), ஜன்தந்ரா, நவகுஜராத், சந்தேஷ்சேவக், பிரபாத் (அகமதாபாத்து), கட்ஜ் மித்ரா (கட்ஜ்) இவை குஜராத்தி மொழியின் குறிப்பிடத்தக்க இதழ்களாகும்.

# மராத்தி மொழி இதழ்கள்

இந்தியக் கிருத்துவ இயக்கம் மராத்தி மொழியில் அச்சு எழுத்துக்களை உருவாக்கி 'மகாராட்டிர மொழி இலக்கணம்' (The Grammar of the Mahratta Language) என்ற புத்தகத்தை *1805*- இல் வெளியிட்டது. இதனைத் தொடர்ந்து பஞ்சதந்திரம் (*1815*)' கிதோபதேசம் (*1815*), ஹோலி பைபிள் (*1818*) ஆகிய நூல்களும் அச்சேறின. பம்பாய் மாநிலத்தில் கல்வித்துறையின் முன்னேற்றமே ஆங்கிலேயர் காலத்தில் முதன்மை பெற்றிருந்தது. எனவே அச்சுக்கலையின் ஆரம்பகால வெளியீடாக கணக்கியல், மருத்துவம், நிலவியல், அறிவியல் நூல்கள் வெளிவந்தன. பம்பாய் எல்பின்ஸ்டோன் கல்லூரிப் பேராசிரியர் பால் சாஸ்திரி ஜம்பேகார் சிந்தனையில்தான் பம்பாய் இதழியல் தொடக்கம் பெற்றது. மாதமிரு முறையாக இவரால் தொடங்கப்பட்ட பம்பாய் தர்பன் (*1832*) பின்பு வார இதழாயிற்று. ஜம்பேகார் கல்வித்துறை அறிஞரானபடியால் செல்வாக்குடன் தர்பன் வளர்ந்தது ஆங்கில-மராத்தி இருமொழி இதழான தர்பனில் இந்து விதவைகளின் மறுமணம் போன்ற சமுதாயச் செய்திகளெல்லாம் விவாதிக்கப்பட்டன. ஜம்பேகார் சொந்தமாக தீக் தர்ஷன் (*1840*) மாத இதழை மராத்தி மொழியில் தொடங்கினார். செய்திகளுடன் வரலாறு, நிலவியல், தருக்கவியல் கட்டுரைகளையும் இவ்விதழ் வெளியிட்டது. மராத்தி மொழி இதழ்களின் தந்தை பேராசிரியர் ஜம்பேகார் இதழியல் துறையில் உருவாக்கிய வழித்தோன்றல்களில் ஒருவரான கோவிந்தவிதல் குந்தே பிரபாகர் (*1841*), தூமகேது என்ற இரு வார இதழ்களையும், உபதேஷ் சந்திரிகா என்ற மாத இதழையும் தொடங்கியதோடு தீக்தர்ஷனையும் வெளியிட்டுக் கொண்டிருந்தார். செராம்பூர் கிருத்துவ இயக்கத்தின் இந்து சமயத் தாக்குதல்களுக்கு உபதேஷ் சந்திரிகா பதிலடி கொடுத்துக்கொண்டிருந்தது. குந்தே மேனாட்டுக்கல்வி ஆர்வலராகவும், முன்னேற்றக் கருத்துக்களை உடையவராகவும் இருந்தமையால் அறிவியலைப் பாராட்டிச் சமுதாயத்தின் குருட்டுக் கொள்கைகளைத் தம் இதழ்களில் சாடினார். இதே காலத்தில் முகுந்தராவ் பட்டீல் தொடங்கிய தீனபந்து புகழ் பெற்றிருந்தது. சூர்யாஜி கிருஷ்ணாஜியின் மும்பாய் அக்பர் தோன்றி மறைந்தது. தின்யான் பிரகாஷ்

(1849) என்ற வார இதழை 1904ல் மராத்தி நாவலாசிரியர் ஹரி நாராயணன் ஆப்டே ஏற்றுக் கொண்டு நாளிதழாக மாற்றினார். பம்பாயின் வர்தமன் தீபிகா பூனாவின் விசாரலாஹரி (1852), தூமகேது மூன்றும் குறிப்பிடத்தக்க நாளிதழ்களாகும். மகாதேவ் கோவிந்த ரானடே தொடங்கிய இந்துபிரகாஷ் (1862) 1924-ஆம் ஆண்டுவரை வெளிவந்து கொண்டிருந்தது.

மகாராட்டிர அரசியல் அரிமாவான திலகர் இதழியல் துறையில் நுழைந்த பின்பு மராத்திய இதழ்களில் புரட்சிப் புனல் பெருக்கெடுத்தது. கேசரி (1880), மராட்டா (1881) இரண்டும் திலகரின் மராத்திமொழி வார இதழ்கள். அரசியலில் இவை இரண்டும் மகாராட்டிரத்தின் இரட்டைக்குழல் துப்பாக்கிகளாம். இதழாசிரியர்களைத் தூக்கிச் சிறையில் போடும் இந்திய அரசியல் சட்டத்தின் 124-ஏ பிரிவை ஏற்படுத்தவும், திலகருக்குச் சிறைத் தண்டனையைப் பெற்றுத் தரவும் கேசரி காரணமாக இருந்தது. ஆங்கில அதிகாரி ராண்ட் என்பவரைச் சுட்டுக் கொன்று தூக்குத் தண்டனை பெற்ற தாமோதர் என்பவர் திலகரின் எழுத்துக்களே தம் செயலுக்குக்காரணமெனக் கூறினார். வங்கப் பிரிவினையின் போது திலகரின் தீவிரமான எழுத்துக்களுக்காக 1908-இல் தீவாந்தரத்தண்டனை வழங்கப்பட்டு அந்தமானுக்கு அனுப்பப்பட்டார். நாக்பூரில் மராத்திமொழியில் தோன்றிய ஹிதவாடா (1882) வார இதழ் இந்திய இதழாளர்களில் ஒருவரான ஏ.டி. மணியால் 1943-இல் ஆங்கில நாளிதழாக மாற்றப்பட்டு வெளிவருகிறது. விடுதலைப்போராட்டத் தீவிரவாதிகளின் கொள்கைகளைப் பரப்பிய ராஷ்ட்ரமாத் 1910-ஆம் ஆண்டின் இதழ்கள் சட்டத்தால் நசுக்கப்பட்டுவிட்டது. பொதுமக்கள் கருத்துப் புரட்சிக்குப் பின்பு சமுதாயத்தின் எல்லா நிலையினருக்கும் மராத்திய இதழ்கள் உரித்தாயிற்று. வட்டார இதழ்கள் தோன்றிப் புகழ் பெற்றன. தாழ்த்தப்பட்டவர்களுக்காக பி. ஆர். அம்பேத்கார் பாஷ்கிராத் பாரத், சமதா ஆகிய இதழ்களை ஆரம்பித்தார். ஏ.பி. கோல்ஹாட்கார் தொடங்கிய சந்தேஷ் செய்திகளைத் தவிரச் சுவையான பிற பகுதிகளையும் தரத் தொடங்கியது. விளையாட்டுத் துறையை இதழியலில் புகுத்திய இவ்விதழ் மகாராட்டிரத்தில் மட்டைப் பந்தாட்டம் (cricket) புகழ்பெறக் காரணமாயிருந்தது. திலகரின் பற்றாளர் கே. பி. காடில்கார் தொடங்கிய லோகமான்யா தொடங்கிய ஒரே ஆண்டில் பதினெட்டாயிரம் படிகள் விற்பனையாகியுள்ளது. காடில்கார்

தொடங்கிய மற்றொரு நாளிதழ் நவகல் (1923) மராத்தி மொழியில் பழமையும் சிறப்பும் பெற்றுத் திகழ்கிறது. பம்பாயில் பி.எம்.பகவத் தொடங்கிய பிரபாத் நாளிதழ் ஒரு பைசாவில் விற்பனைப் புரட்சி செய்தது. இதே காலத்தில் புனாவிலிருந்து லோகசங்கிரஹா, பூனா சமாச்சார் என்ற இதழ்கள் வந்து போயின. சோலாபூர் சமாச்சார், விஜயா என்ற வட்டார இதழ்கள் சோலாப் பூரிலிருந்து வெளியிடப்பட்டன.

மராத்தி மொழியில் இன்றும் சிறப்பாக நடைபெறும் நாளிதழ்கள் சாகல் (1931), லோகசாட்டா (1948), மகாராஷ்டிர டைம்ஸ் (1962) ஆகியவைகளாகும். லோக சாட்டா பம்பாய் இந்தியன் எக்ஸ்பிரஸ் நிறுவனத்தாரால் நடத்தப்படுகிறது. இவற்றைத் தவிர இளைஞர்களுக்கென சந்தோபா, பெண்களுக்கான ஸ்திரி போன்ற இதழ்களுடன் ஏராளமான திரைப்பட இதழ்களும் மராத்தி மொழியை வளைத்துப் பிடித்திருக்கின்றன.

# உருதுமொழி இதழ்கள்

உருது என்ற துருக்கியச் சொல்லுக்குப் படைவீரர்கள் முகாம் என்பது பொருள். தில்லியின் சுற்றுப்புறங்களில் வாழும் முகமதியர்களோடு வேறு பகுதியில் வாழும் சீக்கியர், பார்சிகள், ஜெயினர்களிடமும் உருது, பேச்சுவழக்கு மொழியாக உள்ளது. முகமதியர் ஆட்சியில் அரசு மொழியாக ஆதிக்கம் செலுத்தி அரேபியம், துருக்கி, பெர்சியன் மொழிச் சொற்களைக் கொண்டிருந்த உருதுமொழி பிற்காலத்தில் இந்தி, ஆங்கிலச் சொற்களையும் ஏற்றுக் கொண்டது. மொழிச்சிறுபான்மை, அச்சுவகைத் தட்டுப்பாடு, குறைவான 'விற்பனை இவை உருதுமொழியின் தொடக்ககால இதழ்கள் சந்தித்த தடைகளாகும். காலப் போக்கில் இத்தடைகளைக் கடந்து விட்ட உருதுமொழியில் இப்போது மிகச்சிறந்த இதழ்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

இன்றைய உத்திரப்பிரதேசம் வடமேற்கு மாகாணங்கள் என்ற பெயரில் வழங்கி வந்தபோது இந்துக்களும் முகமதியர்களும் பெரும்பான்மையினராய் இருந்தனர். உருது, பெர்சியன் மொழிகள் செல்வாக்குப் பெற்றிருந்தன. இப்பகுதியிலிருந்து ஜுப்தத்-அல்- அக்பர் *(1833)* என்ற இதழ் பெர்சியன் மொழியில் வெளிவந்தது. முன்சி வாஜித் அலிகான் இவ்விதழைத் தொடங்கினார். இதைத் தொடர்ந்து சுல்தான்-அல்-அக்பர், மாஹ்-இ-முனிர், மாஹ்-இ-ஆலம், அஃப்ரோஜ் போன்ற இதழ்களும் பெர்சியன் மொழியில் வெளிவந்து ஓரளவு செல்வாக்கும் பெற்றன. உருதுமொழி இதழ்களில் சிறப்பான இடம் பெறும் ஜாம்-இ-ஜான்நியூமா *(1822)* பெர்சியன் மொழியில் முதலில் தொடங்கப்பட்டதாகும். ஆக்ரா கல்லூரியைச் சேர்ந்த சிலர் பங்குத்தொகை சேர்த்துச் சுத்தர்-அல்-அக்பர் *(1846)* வாரமிருமுறை இதழைத் தொடங்கி நடத்தினர். தொடக்க கால இவ்விதழ்கள் ஆக்ராவிலிருந்து வெளியாயின. தில்லியிலிருந்து உருது-அக்பர் *(1836)* ஓராண்டிற்கு முன்பாகத் தோன்றியிருந்தாலும் சையத்-அல்-அக்பர் *(1837)* இதழே இந்தியாவின் முதல் உருதுமொழி இதழாகக் கருதப்படுகிறது. அலிகார் முதலீம் பல்கலைக்கழக நிறுவனர் சையது அகமது

கான் துணையுடன் இவ்வார இதழ் உருவானது. ⊗ டெல்லி உருது அக்பர், மதார்-அல் - அஹ், குரான் - அல் - சாதைன், ஷேக்-அல்-அக்பர், பேவைத் - அல்-நஜ்ரீன் போன்ற போட்டி இதழ்களும் இக்காலத்தில் வெளிவந்தன. 1845 - இல் வளர்ச்சி பெறத் தொடங்கிய உருது இதழ்கள் காசி, இந்தூர், சிம்லா, இலாகூர், இலக்னோ, மீரட், ஆக்ரா, கல்கத்தா, அலிகார் ஆகிய நகரங்களிலிருந்து வெளிவரத் தொடங்கின; என்றாலும் கடந்த நூற்றாண்டு உருது இதழ்கள் மூலதனத்திலும், வருவாயிலும் நொண்டிப் பக்கிரியாகவே காட்சியளித்தன. இந்தியாவில் அரசியல், விடுதலை உணர்வுகள் தோன்றிய காலத்தில் முகமதியர்கள் முழுமையாகத் தங்கள் உள்ளுணர்வுகளை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. முகமதியர்களுள் படித்த பலர் ஆங்கிலக் கவர்ச்சிக்கே அடிமைப்பட்டிருந்தனர். இந்திய தேசிய காங்கிரசுக்கு எதிர் அமைப்பாக இந்திய நாட்டுப் பற்றாளர் கழகம் (Indian Patriotic Association) சர். சையத் அகமது தலைமையில் தொடங்கப்பட்டது. முகமதியர்களுக்கான தனி நாட்டுக் கொள்கையும் தளிர்விடத் தொடங்கியது. இந்திய மக்கள் என்ற நிலையிலிருந்து தாங்களாகவே தனித்துப் பார்ப்பதில் முகமதியர்கள் விருப்பங்கொண்டனர். இவையெல்லாம் சில உருதுமொழி இதழ்களில் எதிரொலித்தன. முகமதியர்களிடையே காணப்பட்ட நாட்டுப் பிரிவினை எண்ணம், அரசியற் பிற்போக்குச் சக்திகள், வகுப்பு வாதம் இவற்றைக் களைவதற்காகத் தேசியத் தலைவர் அபுல்கலாம் ஆசாத், அல் ஹிலால் (1912) எனும் உருது இதழை கல்கத்தாவில் தொடங்கினார். முகமதியச் சகோதரர்களிடையே தேசிய விழிப்புணர்ச்சியை இவ்விதழ் உண்டாக்கியது. இதற்குப் பின்பு வெளிவந்த உருது இதழ்களில் அரசியல், வரலாறு, கல்வி போன்ற முன்னேற்றத்துறைச் செய்திகள் வெளியாகின. 1905-இல் நிறுவப்பட்ட இந்திய முகமதியர் கழகம் (Indian Muslim League) உருதுமொழி இதழ்களின் வளர்ச்சியில் பங்கு பெற்றது. பிரித்தாளும் சூழ்ச்சியில் தோல்வி கண்ட ஆங்கில அரசு அல்-ஹிலால்

---

⊗ சையது அகமதுகான் இவ்விதழின் ஆசிரியர் என சலபதிராவ் குறிப்பிட்டுள்ளார். — *The Press*

கானின் மூத்த சகோதரர் சையது கான் முகமது இதன் ஆசிரியர் என்பது நாடிக் கிருஷ்ணமூர்த்தியின் கருத்து.

— *The Indian Journalism.*

இதழுக்கு இரண்டாயிரம் உருபா பொறுப்புத் தொகை வேண்டியது. அதன் அலுவலகம் பரிசோதனைக்குட்பட்டது, பொறிகள் பறிமுதல் செய்யப்பட்டன. மௌலானா அப்துல்பாரி இலக்னோவில் தொடங்கிய ஹம்தம் (1915) மௌலானா முகமது அலியின் ஹம் தார்டு ஆகிய இரு இதழ்களும் தேசிய உணர்வு ஊற்றுக்களாய் வெளிப்பட்டன. இந்து சமயத்தைச் சார்ந்தவர்களும் உருதுமொழி இதழ்களை வெளியிட்டார்கள். உருது மொழியின் முன்னணி இதழாக தில்லி, ஜலந்தர் ஆகிய இரு இடங்களில் வெளியாகும் பிரதாப் (1919) ஆர்ய சமாஜத்தைச் சார்ந்த மகேஷிகிருஷன் இலாகூரில் தொடங்கி வெளியிட்டதாகும். காந்தியாரின் கொள்கைகளை வெளியிட்டு இந்திய விடுதலையை வேண்டி நின்ற இத்தேசிய இதழுக்கு ஆங்கிலேயர் அளித்த தொல்லைகள் பலவாகும். மௌலானா ஜாபர் அலிகான் தொடங்கிய ஜமீந்தார் இதழும் தேசிய கொள்கை இதழாயிருந்தது. இந்தியாவின் புகழ் பெற்ற உருது இதழாக விளங்கும் மிலாப் (1923) இதழும் இந்து சமயத்தைச் சார்ந்தவரான மகேஷி குஸசல்சந் என்பவரால் தொடங்கப் பட்டதேயாகும். ஆங்கிலேயரின் கடுமையான தொந்தரவுக் கிடையில் எதிர்நீச்சலிட்டு இலக்னோவைக் கடந்து தில்லி வந்து சேர்ந்தது மிலாப். இப்போது ஜலந்தர், ஐதரா பாத்து, தில்லி ஆகிய இடங்களிலிருந்து மிலாப் வெளிவந்து கொண்டிருக்கிறது. உருது மொழிப் பயிற்சியுடைய சீக்கியர்களிடையே இவ்விதழ் அதிகமாக விற்பனையாகிறது. உத்திரப்பிரதேசம், பஞ்சாப், இராசஸ்தான், தில்லி ஆகிய இடங்களில் விற்றுக் கொண்டிருக்கும் தேஜ் (1923) சுவாமி சாரதானந்தா தொடங்கிய உருதுமொழி இதழாகும். தேசபந்து குப்தாவிற்குப் பின்பு விஸ்வபந்து குப்தா இவ்விதழின் ஆசிரியரானார். உருதுமொழி இதழியலுக்கு இந்து சமயத்தாரின் தொண்டு பாராட்டத்தக்கதாக அமைந்திருப்பதை மேற்கூறிய நாளிதழ்கள் சுட்டிக் காட்டுகின்றன. பம்பாயிலிருந்து கிலாபாத் என்ற உருதுமொழி நாளிதழ் வெளிவந்து கொண்டிருக்கிறது. இந்துஸ்தான், இன்குலாப் (1939) இரண்டும் விற்பனை எண்ணிக்கையில் புகழ்பெற்ற உருது நாளிதழ்களாக அமைந்திருக்கின்றன. உருதுமொழியில் ஏராளமான வார, மாத இதழ்கள் வெளிவந்துகொண்டிருக்கின்றன. சுப்உம்மித் வெள்ளிவிழாக் கொண்டாடிய மாத இதழாகும்.

# இந்திமொழி இதழ்கள்

இந்திமொழி கிளைமொழிகள் பலவற்றைக் கொண்டிருப்பதால் இந்தியாவில் பலரின் பேச்சு மொழியாக அமைந்திருக்கிறது. இம்மொழியின் இதழ்கள் எண்ணிக்கையிலும், வகையிலும் பல்வேறாகக் கிளைத்துள்ளன. தொடக்க காலத்தில் மெதுவாக வளர்ந்து கொண்டிருந்த இந்திமொழி இதழ்கள் விடுதலைப் போராட்ட காலத்தில் புதிய வேகத்தைப் பெற்றன. முதல் இந்திமொழி இதழ் ஊதந்த்மார்டண்டு (1826) தோன்றிய இடம் கல்கத்தா. ஜுஹல் கிஷோர் சூகூல் தொடங்கிய இவ்விதழ் தேவநாகரி எழுத்துக்களைக் கொண்டிருந்தது. இராஜ சிவபிரசாத் தொடங்கிய பனாரஸ் அக்பர் (1844) முதல் இந்தி இதழ் என்ற கருத்தும் உண்டு. இராஜாராம் மோகன்ராய், துவாரக பிரசாத் தாகூர், பிரசன்னகுமார் தாகூர் ஆகிய மூவர் சேர்ந்து தொடங்கிய பங்கதூத் (1829) ஆங்கிலம், வங்காளம், பெர்சியன், இந்தி, ஆகிய நான்கு மொழிகளில் வெளிவந்தது. கல்கத்தாவிலிருந்து வெளிவந்த சமாச்சார் சுதவர்ஷன் (1854) செய்தித்தாளில் ஆசிரியருடைய செய்திகள் வங்க மொழியிலும் கப்பற்போக்குவரத்து, வணிகச் செய்திகள் இந்தியிலும் அமைந்திருந்தன. 1850-1867 இடைப்பட்ட காலத்தில் சுதாகர், தத்துவ போதினி பத்ரிகா, சத்யா ஆகிய இந்தி மொழிச் செய்தியிதழ்கள் தோன்றின. சில உருதுமொழி இதழ்களும் இந்தி மொழி பெயர்ப்பில் வெளிவந்தன, சுதாகர் (1850) என்ற செய்தி இதழ தேவநாகரி எழுத்தைவிடுத்துச் சமஸ்கிருத எழுத்தைப்பின்பற்றிய முதல் இந்தி இதழாகும். இதையே எல்லா வகையிலும் முழுமை பெற்ற முதல் இந்திமொழிச் செய்தித்தாள் என்று கருதலாம். இதைத் தொடர்ந்து ஆக்ராவில் வெளிவந்த புத்தி பிரகாசிகா, சர்வோபகாரக் (1865), கியான் பிரகாஷ் (1861) ஆகிய செய்தித்தாள்கள் முழுமையாக இந்திமொழியிலேயே அமைந்திருந்தன.

இந்திமொழி அரசியல் இதழ்களின் தந்தையாகக் கருதப்படும் பாலகிருஷ்ணபட் ஹிந்தி பிரதிப் என்ற மாத இதழைத் தொடங்கினார். இவ்விதழ் 1910-ஆம் ஆண்டுவரை தொடர்ந்து வெளிவந்தது. இக்கால கட்டத்தையொட்டி இந்திமொழி இதழ்களின் எண்ணிக்கை ஐம்பதாக இருந்தும் அவற்றில் பல சிறிது காலமே வாழ்ந்தன. கவிவாசன்சுதா (1867) இந்துஸ்தான் (1883)

என்ற இந்திச் செய்தி இதழ்கள் அவற்றுள் குறிப்பிடத் தக்கவை களாகும். உத்திரப் பிரதேசம், பீகார் மாநிலங்களைப் பிடித்து ஆட்டிக் கொண்டிருந்த உருது மொழியின் ஆதிக்கத்தை இவ் விரண்டு தாள்களும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்தன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்திமொழி இதழியலில் பல் வேறு துறைகளைக் கொண்ட இதழ்கள் வெளிவந்தன. சரஸ்வதி (1820) இதழை பண்டிதர் மகாவீரர் பிரசாத் திவேதி தொடங் கிய போது அதில் இலக்கிய நடையில் கருத்துக்கள் இடம் பெற் றன. இதற்குப் பின்பே கல்வி, உழவுத்தொழில், வணிகம், இளைஞர் எழுச்சி, சிறுவர் படிப்பினை பற்றிய செய்திகள் இதழ்களில் இடம்பெறத் தொடங்கின. இத்துறைகளில் பதினைந்து இதழ்கள் தோன்றிப் புரட்சி செய்தன. திலகரின் இந்தி கேசரியில் (1914) அரசியல் கருத்துக்கள் இடம்பெற்றன. அம்பிகாசரண் வாஜ்பாய் தொடங்கிய சுதந்ரா (1920) ஒத்துழையாமை இயக்கச் செய்திகளைத் தீவிரமாகப் பரப்பும் இதழாக விளங்கியது. இன்றைய இந்திமொழி முன்னணி இதழான அஜ் (1920) காசியில் தொடங்கப்பட்டது. இந்தியச் செய்திகளுடன் உலகச் செய்திகளையும் வழங்கிய அஜ் விடுதலைப் போராட்டத்தில் பெரும் பங்கு கொண்டிருந்தது. மற்றொரு புகழ்பெற்ற இந்தி நாளிதழ் இந்துஸ்தான் (1936) இன்றும் செல்வாக்கில் கொடிகட்டிப் பறக்கின்றது. 1947-ஆம் ஆண்டுவரை தோன்றிய இந்திமொழி இதழ்களான விஸ்வா மித்ரா (கல்கத்தா), சைனிக் (ஆக்ரா), நவராஷ்டிரா (பம்பாய்) அதிகார் (லக்னோ) சக்தி (லாகூர்), லோக்மித்தரா (கல்கத்தா), பிரதாப் (கான்பூர்), நவயோக் (தில்லி), பாரத் (அலகாபாத்து) ஆரியவர்த் (பாட்னா), லோக்மாத் (நாக்பூர்) இந்தூர்சமாச்சார் (இந்தூர்), இந்தி மிலாப் (லாகூர்), ஜெய்ஹிந் (ஜெய்பூர்), சன்மார்க் (காசி), இந்து சன்மார்க் (திலலி), நவபாரத் (சபலபூர்) ஆகியவை விடுதலை வேட்கையைத் தூண்டும் தேசிய இதழ்களாக வெளிவந்தன. இவ்விதழகளைத் தேசியப் பாதை யில் செலுத்திய பெருமை காந்தியாரின் நவஜீவன் (1934) ஹரிஜன் சேவக் ஆகிய இதழ்களைச் சார்ந்திருந்தது. விஸ்வா மித்திரா (கல்கத்தா, பம்பாய, பாட்னா, கான்பூர்), அஜ் (காசி), இந்துஸ்தான் (தில்லி), நவபாரத் டைம்ஸ் (1950· பம்பாய், தில்லி) ஆகிப இந்தி நாளிதழ்கள் எல்லாச் சிறப்பு களுடனும் வெளியாகி இலட்சக் கணக்கில் விற்பனையா கின்றன. இவற்றில் நவபாரத் டைம்ஸ் நாளிதழ் டைம்ஸ்

ஆப் இந்தியா நிறுவனத்தால் நடத்தப்படுகிறது. தர்மயுக் (வார இதழ்), பாரக் (சிறுவர் இதழ்), சாரிகா (மாத இதழ்) மாதுரி (திரைப்பட இதழ்) ஆகியவை நவபாரத் டைம்ஸ் வெளியிடும் சார்பு இதழ்களாகும். புகழ்பெற்ற இந்துஸ்தான் டைம்ஸ் வெளியிடும் இந்தி நாளிதழ் இந்துஸ்தான் ஆகும். வடக்கே பெரும் புகழ்பெற்றுள்ள இந்துஸ்தான் புதுமையான அமைப்பு முறைகளைக் கொண்டு வெளிவருகிறது. இதன் ஞாயிற்றுக்கிழமைப் பதிப்பு இந்துஸ்தான் சப்தாகிக் அமெரிக்கா, இங்கிலாந்து இதழ்களுக்கு அறைகூவல் விடுப்பது போன்று அமைந்துள்ளது. இந்தியில் வெளிவரும் ஜனசக்தி இந்தியாவில் அதிகமாக விற்பனையாகும் அரசியல் இதழாகும்.

# பஞ்சாபி - ஒரியா - அசாமிமொழி இதழ்கள்

பஞ்சாபியரில் பெரும்பான்மையோர் தில்லி, பாகிஸ்தான் ஆகிய இடங்களிலும் சென்று வாழ்வதால் பஞ்சாபிமொழி இதழ்கள் மற்ற மொழியிதழ்களைப் போன்று சிறப்பான இடத்தைப் பெறமுடியாமற் போயிற்று. பஞ்சாப் பிரிவினை யின் போது அம்மாநிலத்தில் பின்தங்கிவிட்ட துறைகளில் இதழியல் துறையும் ஒன்றாக இருந்தது. பஞ்சாபி இதழ்களின் தலைமையிடமாக இருந்த இலாகூர் பிரிவினைக்குப் பின்பு பாகிஸ்தானுடன் சேர்க்கப்பட்டதால் இதழியல் வளர்ச்சித் தடைக்கு இதுவும் ஒரு காரணமாகிவிட்டது; என்றாலும் இன்றைய பஞ்சாபில் எண்ணிக்கைக் குறைவாக இருந்தாலும் இதழ்கள் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளன.

கிருத்துவ இயக்கத்தார் 1809-இல் லூதியானாவில் முதல் அச்சகத்தை அமைத்தனர். வழக்கமான சமயப் பரப்புதல் நோக்கிலேயே பஞ்சாபின் முதல் செய்தித்தாள் குர்முகி மொழி யில் உருவாகியது. மன்னர் இரஞ்சித்சிங் பஞ்சாபி மொழி இதழ் கள் வளர்ச்சியில் ஆங்கிலப் பாதிரிமார்களுக்குத் துணைசெய் தார். முன்சி ஹரிநாராயண் என்பவர் அக்பர் தர்பார் சாகிப் (1867) என்ற பஞ்சாபி மொழி இதழை அமிர்தசரஸ் நகரத்தி லிருந்து வெளியிட்டார். ஆங்கில அரசு அரவணைப்பில் விளம்பரங்களைப் பெற்று வெளிவந்தது இவ்விதழ். 1873-ஆம் ஆண்டில் சீக்கியர் சபை தோன்றிய பின்பு இதழியல் துறை சமயத்துறையினையும் எட்டிப் பார்த்தது. அமிர்தசரசிலும், இலாகூரிலும் அச்சகங்கள் அமைக்கப்பட்டன. சுகாவ்ய சம் போதினி (1875), கவி சந்ரோதயா (1876) என்ற இதழ்கள் குர்முகி எழுத்துக்களில் அச்சாயின. இலாகூர் ஓரியண்டல் கல்லூரிப் பேராசிரியர் குர்முக்த்சிங் பஞ்சாபி இதழியல் துறை வளர்ச்சிக்குப் பாடுபட்டவராவார். குர்முகி அக்பர், (1880), கால்சா அக்பர், (1885) ஆகிய இதழ்களைச் சீக்கியர் சபைச் சார்பில் இவர் தொடங்கினார். இதற்குப் பின்பு பத்துப் பஞ்சாபி மொழி இதழ்கள் தோன்றின. இருபதாம் நூற்றாண் டின் தொடக்கத்தில் பஞ்சாபி மொழியில் அச்சுக்களும் அச்சுப் பொறிகளும் வந்த பின்பு மேலும் பல இதழ்கள் வெளிவந்தன. குருமத் - பர் - சார் (1902), கால்சா சேவக் (1903) அமிர்தசார்

பத்ரிகா (1905) இவை குறிப்பிடத்தக்கவை. சமயச் சார்பில் வெளியான பஞ்சாபி இதழ்கள் 1905-இல் அரசியல் சார்பையும் பெற்றன. பஞ்சாபி கேசரி, சிவில் அண்டு மிலிடேரி அக்பர், பஞ்சாபி பிரேமி போன்ற செய்தித்தாள்கள் தேசியப் பற்றுடன் அரசியல் செய்திகளைத் தந்தன. பஞ்சாப் படுகொலை இதழ்களின் அரசியல் தீவிரத்திற்கு அடிப்படையாயிற்று. பஞ்சாபி மொழியின் தேசியத் தீவிர இதழ்கள் அகாலி ரஞ்சித் (1946) பரதேசி ஆகியவை அகாலிகள் இயக்கத்தாரால் வெளியிடப் பட்டன. ஆகஸ்டுப் புரட்சிக்குப் பின்பு ஆஜாப்ஹிந்து கான்வால் ஆகிய இதழ்களும் தோன்றின. அகாலி பத்ரிகா (1942) பஞ்சாபின் இன்றைய முன்னணி இதழாகும். பிரதாப்சிங் கெய்ரான் இதன் வளர்ச்சிக்குக் காரணமாயிருந்தார்

பஞ்சாப் தனிமாநிலமாக உருவாகிய பின்பு அகாலிபத்ரிகா (ஜலந்தர். அமிர்தசாஸ்). அஜித் பத்ரிகா (ஜலந்தர்) கால்சா சேவக் (தில்லி), ரஞ்சித் (பாட்டியாலா), அகாவி (ஜலந்தர்) ஆகிய நாளிதழ்கள் இதழியல் செல்வாக்குப் பெற்றுள்ளன. பல வார, மாத இதழ்களும் வெளிவருகின்றன. ப்ரீத்லாரி அதிக விற்பனையாகும் பஞ்சாபி மொழி மாத இதழ்.

## ஒரியா இதழ்கள்

சிதறிக்கிடந்த ஒரிசாப் பகுதிகளை ஒன்று கூட்டும் இயக்கத்தில் ஒரியா இதழியல் உருவாகியது. ஒரியா மக்களின் இந்த உணர்வு ஆஷா (1928) சமாஜ் (1928) என்ற வார இதழ்களில் ஒலிக்கத் தொடங்கியது. காந்தியாரின் அரசியல் போராட்டங்களுக்குப் பின்பு உத்தல் தீபிகா, சுவராஜ். பிரதாப் ஆகிய செய்தித்தாள்கள் 1932-இல் வெளிவந்தன. நவபாரத் (1942). ஆகஸ்டுப் புரட்சியில் தோன்றி இரண்டு ஆண்டுகள் தொடர்ந்திருந்தது. விடுதலைக்குப் பின்பு மாத்ருபூமி (1947), சுனதந்ரா (1957), கலிங்கா (1960) ஆகிய நாளிதழ்கள் வெளிவருகின்றன. உத்கல் பிரசங்காமண்டலி மாத இதழ்களில் அதிகமாக விற்பனையாகிறது. பின்தங்கிய மாநிலமாக விளங்கிய ஒரிசாவில் இதழியல் வளர்ச்சி பிற மாநிலங்களுடன் ஒப்பிடும்போது சற்று மந்தமாகவே அமைந்திருந்தது.

## அசாமி இதழ்கள்

விடுதலைக்கு முன்னர் அசாமி மொழி போதிய வளர்ச்சி பெற்றிருக்கவில்லை, ஆட்சி மொழியாக வங்க மொழியே இடம்

பெற்றிருந்தது. அத்துடன் அதிகமாக மக்கள் வசிக்கும் பெரிய நகரங்களும் அங்கு இல்லை. இதன்காரணமாக அசாம்மொழி இதழ்களின் வளர்ச்சி பின் தங்கியே இருந்தது. மேலும் கிருத்துவப் பாதிரிமார்களிடம் தொடக்கால இதழில் அடகு வைக்கப் பட்டிருந்த அடிமைநிலை நீங்குவதற்கும் அசாமி மக்கள் நீண்டகாலம் காத்திருக்க வேண்டியதிருந்தது.

அமெரிக்கக் கிருத்துவப் பாதிரியார் ஒருவர் 1936 இல்-சிப்சாகர் என்ற இடத்தில் தொடங்கிய அச்சகத்தில் விவிலியக் கதைகளை வெளியிட்டுக் கொண்டிருந்தார். சமயக் கவர்ச்சி காட்ட விரும்பிய கிருத்தவ இயக்கம் அருணோதயா (1846) என்ற இதழை வெளியிடத் தொடங்கியது. இருபத்தாறு ஆண்டு கள் ஆங்கில அருணோதயத்தை அசாமிய மக்கள் கண்டார் களேயன்றி அசாமிய இதழியல் இருளில் மூழ்கியே கிடந்தது. இதற்குப் பின்பே அஸ்ஸாம் மிகிர் (1872) என்ற அசாம் மொழி இதழ் ஒன்று கௌகாத்தியில் வெளிப்பட்டது. இதைத் தொடர்ந்து அஸ்ஸாம் பிலாசினி, அஸ்ஸாம் தர்பன், சந்தி ரோதயா, அஸ்ஸாம் தீபக் ஆகிய இதழ்கள் தோன்றி மறைந்தன, அருணோதயா இதழியல் பணியாற்றிக் கொண்டிருந்த ஹேம் சந்திர பருவா அசாம் மொழி இதழியல் பற்றித் தீவிரமாகச் சிந்தித்தார். அஸ்ஸாம் நியூஸ் என்ற வார இதழ் ஆங்கிலம், அசாம் மொழிகளில் பருவாவால் வெளியிடப்பட்டது. 1885-ஆம் ஆண்டு வரை இந்த இதழ் வெளிவந்து கொண்டிருந்தது. அசாமின் மூன்றாவது வார இதழ் அஸ்ஸாம் (1894) ஆகும். இதன் தலை விதியும் ஆங்கிலத்தோடு தான் சேர்ந்திருந்தது.

1885—ஆம் ஆண்டில் இதழியல் துறை தனிச் சிறப் போடு அசாமில் எழுந்து நின்றது. அஸ்ஸாம் நியூஸ் என்ற இதழ் செய்திகளுடன், மக்கள் கருத்து, விமர்சனங்கள் இவற் றையும் தொகுத்து வெளியிட்டது. இதுவே அசாமின் எல்லா வகையிலும் முழுமை பெற்ற செய்தித்தாளாக அமைந்திருந்தது. 1944-ஆம் ஆண்டு இவ்விதழ் சற்று ஓய்வு பெற்று(இதழ் நின்றதை நாகரிகமாகச் சொல்வது) மூன்றாண்டுகட்குப் பின்பு மீண்டும் தோன்றியது. ஜீவன் ராம்பூகன் இதன் ஆசிரியராயிருந்தார். அந்தோ! அசாம் 1950-ஆம் ஆண்டில் எங்கிருந்து வந்ததோ, வெள்ளப் பெருக்கு! அதில் சிக்கி ஜீவன்ராம்பூகன் ஜீவனை இழந் தார். அசாம் நியூஸிற்கும் அதே கதி! இவ்விதழ் அகால மறைவு

அடைந்தாலும் அசாம் இதழியல் துறையில் வேகத்தைத் தோற்றுவித்துச் சென்றது. பின்பே அஸ்ஸாம் பந்து, லோக பந்து, அஸ்ஸாம் தோரா ஆகிய மாத இதழ்கள் தோன்றின. அஸ்ஸாம் பந்தி. பிஜுலி, அலோசனி, அஸ்ஸாம் பந்தாப், கவித லதா ஆகிய செய்தித்தாள்களும் தோன்றின. அசாம் பந்தி கருத்துப் படங்களை முதலில் வெளியிட்டது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரதா, ரானார் படாரி, இஸ்லாம்மிக் அக்பர் ஆகிய இதழ்கள் அசாமியரின் செல்வாக்கைப் பெற்றிருந்தன. அசாம்மொழிக் கவிஞர்சந்திர குமார் அகர்வால் தொடங்கிய அஸ்ஸாமியா (1918) மிகச்சிறந்த செய்தி இதழாக நாற்பது ஆண்டுகள் நடைபெற்றது. 1935-40 - ஆம் ஆண்டின் இடைப்பட்ட காலத்தில் அஸ்ஸாம் சேவக், சமாஜ் சேவக், ஹாதம் ஆகிய வாரச் செய்தித்தாள்கள் புகழ் பெற்றிருந்தன. அசாம் மொழியின் முன்னணிச் செய்தித் தாளாக நூதன் அஸ்ஸாமியா (1949) கௌகத்தியிலிருந்து வெளிவந்து கொண்டிருக்கிறது. வார இதழ்களும் அசாம் மொழியில் அதிகமாக வெளியாகின்றன.

# கன்னடமொழி இதழ்கள்

அன்றைய சென்னை மாநிலத்திலிருந்த பெல்லாரியில்தான் கன்னடமொழியின் முதல் இதழ் தொடங்கப்பட்டது செர் மானிய நாட்டுக் கிருத்தவ இயக்கத்தார் கன்னட சமாச்சார் (1812) இதழைப் பெல்லாரியில் தொடங்கிப் பின்னர் மங்களூருக்கு மாற்றினர். ⊗ 1842-ஆம் ஆண்டிற்குப் பின்பு இவ்விதழ் கர்நாடக பத்ரிகா, பாலபத்ரா, சத்திய தீபிகா என்ற பெயர்களில் வெளிவந்தது.

கன்னடர்களின் வார இதழ் கர்னாடக பிரகாசிகா (1865) கன்னடமொழிப் புலவர்கள் சிலரால் தொடங்கப்பட்டு 1874-இல் நின்று போனது. பின்பு இதே இதழை வடமொழிப் புலவர்கள் டி.சி. ஸ்ரீநிவாச்சார், பாஷ்யம் திருமலாச்சார் ஆகிய இருவரும் பொறுப்பேற்று 1898-ஆம் ஆண்டுவரை நடத்தினர். கன்னடமும் ஆங்கிலமும் இவ்விதழில் கலந்திருந்தன. 1880-1908 இடைப்பட்ட காலத்தில் கன்னடமொழி இதழ்களின் மிகப் பெரிய வளர்ச்சியைக் காணமுடிகிறது. கர்னாடக கேசரி (1888) திலகரின் செல்வாக்கில் தோன்றியது. சவிநுதி (1900) சம்பங்கி ராமையா தொடங்கிய வார இதழ். ஒக்கலிகா பத்ரிகா (1907)பி.புட்டய்யா தொடங்கிய இதழாகும். கன்னட மொழியின் முதல் மாத இதழ் ஹிட்டா போதினி (1881) மைசூரிலிருந்து வெளிவந்தது. இதனைத் தொடர்ந்து காவிய மஞ்சரி, கிரந்தமாலா ஆகிய மாத இதழ்களும் வெளிப்பட்டன. கன்னட மொழியின் முதல் நாளிதழ் என்ற பெருமையை சூர்யோதய பிரகாசிகா (1888) தட்டிக் கொள்கிறது. மைசூர் வெஸ்லியன் மிஷினைச் சார்ந்தவர்கள் விருத்தாந்த பத்ரிகா (1887) என்ற வார இதழைத் தொடங்கினர். 1942-ஆம் ஆண்டுவரை தன் நீண்ட பணியை இவ்விதழ் செய்து முடித்தது. பிராமணர் அல்லாதார் இயக்கம் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே மைசூரில் வேரூன்றிப் பின்தங்கிய மக்களைக் கல்வி, பண்பாட்டுப் புரட்சியில் செலுத்தியது. இந்த இயக்கத்திற்காகவே யஜமான் வீரபாசப்பா என்பவர் மைசூர் ஸ்டார் (1900) வார

---

⊗ இதற்குச் சற்று முன்னர் மூன்றாம் கிருஷ்ணராஜ உடையார் ஆதரவில் மைசூர் விருத்த போதினி என்ற இதழ் வெளிவந்திருப்பதாகவும் கூறுவர்.

இதழைத் தொடங்கி நடத்தினார். மைசூரில் பின்தங்கிய நிலையிலிருந்த லிங்காயத்து இனத்தாரின் உரிமைக் குரலை ஒலித்துப் புரட்சி செய்த மைசூர் ஸ்டார் வழக்கு மன்றத்தின் படிக்கட்டுகளில் பலமுறை ஏறி இறங்கியுள்ளது. 1881-இல் தொடங்கிய மைசூர் மன்னர் ஆட்சி இதழியல் துறையில் ஆர்வம் மிக்க சிலரை ஊக்கப்படுத்தியது. மைசூர் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டு 'தாத்தையா' என அழைக்கப்பட்ட பெரியவர் வெங்கடகிருஷ்ணையா 'கன்னடமொழி இதழ்களின் தந்தை' என்ற பட்டத்தைப் பெற்றுள்ளார். இவரே கன்னட மொழி இதழ்களின் வளர்ச்சியில் புதுமைகளையும் நல்உணர்ச்சிகளையும் புகுத்தி, அறிவுபூர்வமாகச் செயல்பட வைத்துக் கட்டுப்பாடுகளை விட்டுக்கொடுக்காமல் கன்னட இதழ்கள் வெளிவரப் பயிற்சி கொடுத்தவராவார். இவ்வளவு சிறப்புக்களைப் பெற்றிருந்தும் தான் ஆசிரியராகவிருந்த இதழ்களில் தன் பெயரைப் போட்டுக்கொள்ளாத அடக்கமானவர் இவர்.* வெங்கடகிருஷ்ணையாவின் விருத்தாந்த சிந்தாமணி (1885) வெளியிட்ட தலையங்கங்கள் தனிச்சிறப்புடையன. இந்த இதழைத் தொடர்ந்து இவரே பத்து இதழ்களை ஆங்கிலத்திலும், கன்னடத்திலும் தொடங்கினார். வேதாந்த சிந்தாமணி, ஹிட்டா போதினி, சம்பதபோதயா, சாத்வி, பௌரா சமாஜிகா பத்ரிகா என்பவை இவருடைய கன்னடமொழி இதழ்களாகும். வெங்கட கிருஷ்ணையாவிடம் இதழியல் பயிற்சி பெற்ற எம். கோபால ஐயங்கார், எம். சீனிவாச ஐயங்கார் என்ற இரு சகோதரர்கள் பெங்களூரில் கன்னட நாடஹன்னாடி (1895) இதழைத் தொடங்கிப் பெரும் புகழ் பெற்றனர். 1908- ஆம் ஆண்டு இதழியல் சட்டத்தால் இவ்விதழ் நசுக்கப்பட்டதோடு ஆசிரியர்களும் மாநிலத்தை விட்டு வெளியேற்றப்பட்டனர். இதே சட்டத்தால் பாரதி(1907) நாளிதழும் ஒடுக்கப்பட்டது.

1912-இல் விசுவேசுவரய்யா திவான் பொறுப்பேற்ற பின்பு இதழியல் துறை மேலும் பொலிவு பெற்றது; பல புதிய

---

* மைசூர்ப் பல்கலைக் கழகத்தின் இதழியல் படிப்பில் முதன்மை பெறும் மாணவருக்குப் பரிசு வழங்க, இரண்டாயிரம் ரூபாயை இதழியல் துறை தொடங்கும் முன்பே வழங்கியுள்ளார் வெங்கடகிருஷ்ணையா. 1951-இல் இதழியல் தொடங்கிய பின்பு இப்பரிசு வெங்கடகிருஷ்ணையா அறக்கட்டளைச் சார்பில் வழங்கப்பட்டு வருகிறது.

இதழ்களும் வெளிவந்தன. பன்மொழிப் புலவரான டி. வி. குண்டப்பா கன்னடமொழி இதழியலில் நல்லதொரு இடம் பெற்றிருப்பவர். சமாச்சார் சங்கிராக் (1907) செய்தித்தாளுடன் சுமதி (1909) வார இதழையும் தொடங்கிப் பேனாவினால் புரட்சித் தொண்டாற்றியவர் குண்டப்பா. திருமல தாத்தாச் சார்ய சர்மா தொடங்கிய நாளிதழ் விஸ்வ கர்னாடகா (1921) தேசியச் செய்தித்தாளாக அமைந்திருந்தது. 'வெள்ளையனே வெளியேறு' போராட்டத்தில் முன்னின்று எதிர்ப்புக் குரல் எழுப்பிய விஸ்வகர்னாடகா 1944-இல் தடை செய்யப்பட்டது. வெங்கடகிருஷ்ணையாவின் மற்றொரு மாணவர் பி. ஆர். இராமையா தொடங்கிய தாய்நாடு (1926) பெங்களூரிலிருந்து சிறப்பாக வெளிவருகிறது. சுதந்திரப் போராட்டத்தில் முனைந்து செயலாற்றிய தாய்நாடு 1952-ஆம் ஆண்டில் வெள்ளி விழாக் கொண்டாடியுள்ளது. மைசூர் மாநில முதன் முதலமைச்சராயிருந்த கே. சி. ரெட்டி ஆசிரியராகப் பணியாற்றிய ஜனவாணி (1934) தேசியப் போராட்ட இதழ்களின் வரிசையில் இடம் பெற்றிருந்தது. கன்னடத்தில் முன்னணிச் செய்தித்தாளாக இவ்விதழ் வெளிவந்து கொண்டிருக்கிறது. அதிக விற்பனையாகி மக்கள் செல்வாக்குப் பெற்றுள்ள பிரஜாமாதா (1931) சுதந்திரப் போராட்ட காலத்தில் மைசூருக்கும் ஹுப்ளிக்குமாக ஆங்கிலேயரோடு ஓடிப்பிடித்து விளையாடியது. நடுவணரசு அமைச்சராகவிருந்த எம். எஸ். குருபாதசாமி இதன் ஆசிரியராகப் பணியாற்றியிருக்கிறார். 'பம்பாய்க் கர்னாடகம்' என அழைக்கப்படும் தார்வார், பெல்காம், கார்வார், பிஜப்பூர் ஆகிய இடங்களிலிருந்தும் ஹுப்ளியிலிருந்தும் கன்னட இதழ்கள் வெளியாயின.* சப்தகி பிரகாஷா (1849-பெல்காம்), ஹிதேசு (1870-ஹுப்ளி). கன்னடகேசரி, சசித்ர பாரதா (ஹுப்ளி), சுபோதயா (தார்வார்), கர்னாடக வைபவா (1892-பிஜப்பூர்), கர்மவீரா (1921-தார்வார்), சம்யுக்த கர்னாடகா (1929-பெல்காம்) ஆகிய இதழ்கள் இப்பகுதிகளில் வெளியாகிப் புகழ்பெற்றவை. மங்களூரிலிருந்து நவபாரதா (1941) என்ற இதழைத் தொடர்ந்து சில இதழ்கள் வெளியாகின. கூர்க் பகுதியிலிருந்து குடகு, குடகு விருத்தாந்தா என்ற செய்தித் தாள்கள் வெளிவந்தன. பெங்க

---

* 1956-இல் கன்னடர்களின் போராட்டத்திற்குப் பின்பு இப் பகுதிகள் பம்பாய் மாநிலத்திலிருந்து விடுபட்டுக் கன்னடத் தோடு இணைந்தன.

ளூரிலிருந்து வெளியான மஹா கர்னாடகா (1959) வார இதழ் தனித்த புகழைப் பெற்றிருந்தது.

லோக சிக்கன்னா அறக்கட்டளை நிறுவனம் கன்னட இதழியல் துறையில் சிறப்பாகத் தொண்டாற்றி வருகிறது. இதன் சார்பில் சம்யுக்த கர்னாடகா ஹுப்ளி, பெங்களூர் ஆகிய இரு இடங்களிலிருந்தும் சிறப்பாக வெளிவருகிறது. பிரஜாவானி (1948) ஆங்கில நாளிதழ் டெக்கான் ஹெரால்டின் சார்பு இதழாகப் பெங்களூரில் செல்வாக்குடன் நடை போடுகிறது. புகழ்பெற்ற இதழாளர் டி. எஸ். இராமச்சந்திர ராவின் சிறப்புப் பகுதிகளும், விளையாட்டுத்துறைப் பகுதிகளும் பிரஜாவானி யில் வரவேற்பைப் பெறுவன விஸ்வவானி (1959) ஹுப்ளியி லிருந்து வெளியாகி அதிகமாக விற்பனையாகிறது. மைசூர்ப் பல்கலைக்கழகப் பதிப்பகமான 'பிரசாரங்கா' வின் சார்பில் வெளியாகும் பிரபுத்த கர்னாடகா என்ற காலாண்டு இதழ் இலக்கியம், அறிவியல் இவற்றில் ஆய்விதழாக வெளிவருகிறது.

## தெலுங்கு மொழி இதழ்கள்

இந்திய இதழியல் துறையில் ஆந்திரமாநிலம் குறிப்பிட்ட தொரு சிறப்பைப் பெற்றிருக்கிறது. எல்லா மாநில இதழ்களி லும் பணியாற்றியதோடு உலகளவுச் செல்வாக்கும் பெற்றுள்ள இதழாளர்கள் சி.ஒய். சிந்தாமணி, அனுமந்தராவ், டி. பிரகாசம், எஸ். நடராசன், காமாட்சி நடராசன், பட்டாபி சீதாராமையா, ஜே. நடராசன், சலபதி ராவ், பி. வரதராசுலு நாயுடு, காசா சுப்பாராவ், கே. இராமகோட்டீஸ்வர ராவ், ஜி. வி. கிருபாநிதி முதலிய புகழ்பெற்ற இதழாளர்கள் பலரை ஆந்திர மாநிலம் அளித்திருக்கிறது.

ஆந்திர மாநிலத்தில் அச்சுக்கலை வளராத காலத்தில் சென்னையிலிருந்தே தெலுங்கு மொழி இதழ்கள் வெளிவந்தன. பெல்லாரிக் கிறித்தவக் கழகத்தார் சத்திபநூதன் (1835) மாத இதழை எளிய தெலுங்கு நடையில் அச்சேற்றிச் சென்னையி லிருந்து வெளியிட்டனர். தெலுங்கிற்கு இதுவே முதல் இதழ். இதைத்தொடர்ந்து விர்த்தாந்தினி (1840) வர்த்தமான தரங்கினி (1842) ஆகிய இதழ்களும் சென்னையிலிருந்தே வெளிவந்தன.

அச்சில் கொண்டு வருவதற்குத் தெலுங்குமொழி எழுத்துக்கள் சற்றுச் சிரமமானவைகளாக இருக்கவே தொடக்க காலத் தெலுங்குமொழி இதழ்கள் மொழித் தூய்மையில் முழுமை பெற முடியவில்லை. தினவர்த்தமானி (1861) என்ற வார இதழ் தெலுங்குப் பேச்சு மொழியைப் பின்பற்றியிருந்தது இந்திய தேசியக் காங்கிரசு இயக்கம் தொடங்கிய பின்பு ஏ.பி. பார்த்த சாரதி சென்னையிலிருந்து வெளியிட்ட ஆந்திரபிரகாசிகா (1886) வார இதழ் காங்கிரசு இயக்கத்தைச் சார்ந்திருந்தது. சென்னை யிலிருந்து சூரியலோகம், விருத்தாந்த மஞ்சரி, தத்துவ போதினி ஆகிய தெலுங்கு வார இதழ்களும் வெளிவந்திருக்கின்றன.

1885-ஆம் ஆண்டில்தான் இராஜமுந்திரியில் தெலுங்கு மொழியின் முதல் செய்தித்தாள் வெளிவந்தது. ஆந்திர நாட்டுச் சமுதாயச் சிற்பியாகத் தொண்டாற்றிய வீரேசலிங்கம் பந்துலு ஆந்திரமொழி, இனச் சீர்திருத்தத்தை முழுமூச்சாகக் கொண்டு விவேகவர்த்தினி (1885) என்ற இதழை வெளியிட்டார். பள்ளி ஆசிரியராகப் பணியாற்றிய பந்துலுவின் கேஷ்யவர்த்தினி இதழ் சிரிப்பூட்டிச் சிந்திக்க வைத்தது. சதிஹிடாபோதினி பெண்டிர் சீர்திருத்தம் பேசியது. சத்தியவதனி அறக்கோட்பாடுகளை அறிவுறுத்தியது. கண்மூடிப் பழக்கங்களெல்லாம் மண்மூடிப் போகுமாறு தம் இதழ்களில் சமுதாயத்திற்குச் சாட்டையடி கொடுத்தார் வீரேசலிங்கம். அரசின் ஊழல்களை வெளிப்படுத்தி. அதிகாரிகளின் கையூட்டினையும் அன்றைக்கே கண்டித்து எழுதி யவர் இந்தப் பள்ளியாசிரியர். இராஜமுந்திரியிலிருந்து ஆந்திர கேசரி, கோதாவரி என்ற இதழ்களும் வெளிவந்தன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளியான சமதர்சனி சமுதாய ஏற்றத் தாழ்வுகளை எள்ளி நகையாடும் பிராமணர் அல்லா தார் இயக்க இதழாகப் பணியாற்றியது. மக்கள் பேச்சு வழக்கிலுள்ள எளிய தெலுங்கு நடையை இதழ்களில் புகுத்த விரும்பிய இயக்கம் ஒன்று ஆந்திராவில் தோன்றிய காலத்தில் அதைச் செயல்படுத்தும் முறையில் ஆந்திர சாகித்ய பரீஷத் பத்ரிகா (1911) ஒன்றும் வெளிவந்தது.

இதழியலுக்கும் தலைவலிக்கும் ஒரு தொடர்பு உள்ளது! அது ஒரு சுவையான வரலாறு! ஆந்திர மாநிலத்தைச் சேர்ந் தவர் பி. நாகேஸ்வரராவ் பந்துலு. பம்பாயில் இவர் தொடங்கிய அமிர்தாஞ்சன் தலைவலி மருந்து வணிகம் மிகப் பெரிய தொழில்

நிறுவனமாகியது. இதழியலில் இயல்பாகவே ஆர்வங் கொண்டிருந்த அமிர்தாஞ்சனராவ் (இவரை இப்படியும் அழைப்பதுண்டாம்) ஆந்திர பத்ரிகா(1908) என்ற தெலுங்கு வார இதழைப் பம்பாயில் தோற்றுவித்தார். தெலுங்கு மொழி பேசுவோரிடையே பரந்த செல்வாக்கைப் பெற்று விட்ட இவ்விதழ் 1914-இல் சென்னைக்கு மாற்றப்பட்டு வெளிவந்தது. விடுதலைப் போராட்டக் காலத்தில் எழுச்சியூட்டும் தலையங்கங்களை எழுதிச் சிறைக்குச் சென்றவர் நாகேஸ்வரராவ். 1964-ஆம் ஆண்டு ஆந்திர பத்ரிகா பொன்விழாக் கொண்டாடியுள்ளது. இவ்விதழ் உண்டாக்கிய இதழியல்புரட்சியின் அடிப்படையில் இளைஞர்கள் சிலர் இதழியல் துறையில் அடியெடுத்து வைத்தனர். ஆந்திர பாரதி, ஆந்திரவர்தா, ஆந்திர பிரஜா, சசிரேகா, ஜனவானி, தேசாபிமானி, ஆகிய இதழ்கள் தோன்றிப் பிள்ளைப் பிராயத்திலேயே மறைந்து போயின.

தெலுங்கானா பகுதியிலிருந்து ஹிடாபோதினி (1913) என்ற இதழ் சீனிவாச சர்மாவின் ஆசிரியப் பொறுப்பில் வெளிவந்தது. ஆந்திரப்பிரகாசிகாவின் விற்பனைப் போட்டியிதழாக ஆந்திர பிரபா (1938) சென்னையிலிருந்து வெளிவந்து புகழ் பெற்றது. எக்ஸ்பிரஸ் நிறுவனத்தார் வெளியிடும் ஆந்திர பிரபா விஜயவாடா, சித்தூர் ஆகிய இரு இடங்களிலும் ஒரே நேரத்தில் வெளிவரும் நாளிதழ். காசா சுப்பாராவின் கைவண்ணத்தால் செல்வாக்குப் பெற்றுச் சிறந்த இவ்விதழ்விற்பனையில் இலட்சங்களில் நின்றுகொண்டிருக்கிறது. 1953-இல் ஆந்திரப் பிரிவினைக்குப் பின்பு ஆந்திர ஜனதா (ஹைதராபாத்து) விசால ஆந்திரா (1952-விஜயவாடா) இராஜமுந்திரி சமாச்சாரம் (1956), ஆந்திர பூமி (1960)ஆகிய நான்கு இதழ்கள் தொடங்கப்பட்டுள்ளன. ஆந்திர ஜோதி (1960) நாளிதழும் செல்வாக்குடன் திகழ்கிறது.

ஆந்திராவில் நாளிதழ்களைவிட வார இதழ்கள் சீரான வளர்ச்சியுடன் பல்கிப் பெருகியுள்ளன. ஆந்திர சசித்ர வார பத்திரிகா, ஆந்திர கேசரி (மசூலிப்பட்டினம்), தேசபந்து (நரசபுரம்), மகாத்மா (விஜயவாடா), பிரஜாமாதா (கடப்பை), தெலுங்கு தேசம் (ஹைதராபாத்து), வனிதவிஹார் (இராஜமுந்திரி) ஆகியன புகழடைந்துள்ள வார இதழ்களாகும்.

# மலையாளமொழி இதழ்கள்

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் கிருத்தவம் பரப்பும் கருவியாக அச்சுப்பொறி கேரளத்தில் வந்திறங்கியது. என்றாலும் மலையாள மொழியின் முதல் புத்தகம் 1772-இல் உரோமில்தான் அச்சாகியிருக்கிறது. இதே காலத்தில் வளர்ச்சியினைத் தொடங்கியிருந்த தமிழ்மொழி இதழியலைச் சற்று எட்டிப் பார்த்துக்கொண்ட மலையாள மொழியின் முதல் செய்தித்தாள் 1840-இல் வெளிவந்தது. கோட்டயததிலிருந்து வெளிவந்த இவ்விதழின் பெயர் விக்ஞான நிக்ஷேபம். இரண்டாவது செய்தித்தாள் பாஸ்சீமா தாரிகா (1862) வெளிவந்த பின்பு இடைவெளி ஒன்றைக் கடந்து சத்திய நாதம் (1876) மாதமிருமுறை இதழ எர்ணாகுளத்திலிருந்து வெளியானது. கேரளபத்திரிகா (1884) செய்தித்தாள் மலையாளமொழியின் அரசியல் இதழாக வெளிவந்தபின்பு தேசியப் பற்றுடைய தீவிர எழுத்தாளர்கள் இதழ்களைத் தொடங்கினர். இலககியம், அரசியல் இரண்டிலும் சிறந்திருந்த கே. இராமகிருஷ்ண பிள்ளை தொடங்கிய கேரளா (மாத இதழ்) மலையாளி (வார இதழ்) சுதேசாபிமானி ஆகிய இதழ்களின் அரசியல செய்திகள் ஆங்கில அரசைக் கலக்கின. 1910-ஆம் ஆண்டு இராமகிருஷ்ண பிள்ளை நாடு கடத்தப்பட்டார். கோழிக்கோட்டிலிருந்து கேரள சஞ்சாரி, மனோரமா ஆகிய இதழ்களும் இக்காலத்தில வெளிவந்திருக்கின்றன. மலையாள மொழியில மிகச் சிறந்த இடம் பெற்றுள்ள மலையாள மனோரமா (1888) நாளிதழை மாப்பிள்ளை வாகீஸ் கோட்டயத்திலிருந்து தொடங்கினார். கேரள வர்மா, வள்ளத்தோள் போன்ற இலக்கியவாதிகள் இந்த இதழ்ல் அறிமுகமானார்கள். பரமேசுவர பிள்ளையின் மலையாள இராஜ்யம் (1888) வார இதழ் புதினங்களை வெளிடத் தொடங்கியது.

தேசியப் போராட்டக் காலத்தில் வலியகோயில் தம்புரான், அவர் மருமான் இராஜராஜ வர்மகோயில தம்புரான் ஆகிய இருவரும் புரட்சி எழுத்தாளர்களாக விளங்கினர். மலையாள மொழியில் நிறைவான செய்தித்தாள்கள் இக்காலத்திலதான் தோன்றியுள்ளன. கேரள கௌமதி (1910) நாளிதழ மட்டும்

அரசினரை ஆதரித்துக் கொண்டிருந்தது. கேரள கேசரி இதழ் தீவிரவாதிகளின் செயலகமாகப் பயன்பட்டது. விடுதலை உணர்வை வேகப்படுத்திய இதழ்களின் வரிசையிலே இன்றிய மையாத இடத்தைப் பெற்றிருக்கிறது மாத்ருபூமி (1923). மாநில மக்களின் செல்வாக்கினைப் பெற்றிருந்த கே. மாதவன் நாயர், பி. அச்சுதன், கே,என். நம்பூதிரிபாட், அம்பலக்காடு கருணாகரமேனன், டி.வி. கேசவமேனன் ஆகியோர் முயற்சியில் மாத்ருபூமி உருவானது. இந்த இதழ்தான் அச்சுக் கலையில் புதுமைப் பொறிகளை முதன்முதலாகக் கேரள இதழியலில் புகுத்திப் பெருமை பெற்றது. சுவராஜ் (1922-கொல்லம்) என்ற இதழின் தலையங்கங்கள் தேசியச் சிந்தனையைத் தூண்டிய காலத்தில் அல்அமீன் (கொச்சி) தீனபந்து (எர்ணாகுளம்), கேரள கௌமதி (திருவனந்தபுரம்) ஆகிய இதழ்களும் தேசியம் பரப்பும் தீவிர ஏடுகளாய் வெளிவந்தன. இந்திய முகமதியர் அமைப்பின் சார்பில் கோழிக்கோட்டிலிருந்து வெளியான சந்திரிகா (1946) நாளிதழ் மலையாள மொழி பேசும் முகமதி யர்களிடையே அதிகமாக விற்பனையாகிக் கொண்டிருக்கிறது. ஜனயுகம் (1953), தீபிகா, தினப்பிரபா ஆகியவை மலையாள மொழியின் புகழ்பெற்ற நாளிதழ்கள். கேரள மக்களின் பொது வாழ்க்கை ஈடுபாட்டை முறைப்படுத்திக் கொடுக்கும் சமுதாயப் பண்பாட்டுப் புரட்சி இதழாகத் தலைநகரிலிருந்து கேரள ஜனதா (1957) என்ற நாளிதழ் தொண்டாற்றத் தொடங்கியது. அரசியல் தலைவரான பட்டம்தாணுப் பிள்ளை இவ்விதழின் ஆசிரியராக இருந்திருக்கிறார். கோழிக்கோட்டிலிருந்து வெளி யான தேசாபிமானி (1957) இந்தியப் பொதுவுடைமைக் கட்சி யின் கொள்கைகளைப் பரப்பியது. கேரள பூஜனம், தொழி லாளி, நவகேரளா, ஜனயுகம், கேரள பிரகாசம், நவஜீவனம் ஆகிய மலையாள மொழி நாளிதழ்கள் நாள்தோறும் இச்சிறிய மாநிலத்தில் பதினையாயிரத்திற்கு மேல் விற்பனை எண்ணிக் கையைப் பெற்றவைகளாம்.

மலையாள மனோரமா, மாத்ருபூமி, கேரள கௌமதி ஆகிய நாளிதழ்கள் இலட்சக் கணக்கில் விற்பனையைப் பெற்றுள்ளன. இந்தியச் செய்தித் தாள்கள் விற்பனையில் மனோரமா இரண் டாம் இடத்தைப் பிடித்திருந்தது. வேறு எந்த மாநிலத்திலும் தாய்மொழி இதழ்கள் இதுபோன்ற பெருத்த ஆதரவைப் பெற்றிருக்கவில்லை. மலையாள மனோரமா வார இதழும்

பெருத்த அளவில் வரவேற்பைப் பெற்றிருக்கிறது. மாத்ருபூமி (வார இதழ்), பூமாலா, விஜய கேரளம், தட்சண பாரதி, கேரள பிரபா. பிரகாசம், சித்திரதேசம் ஆகிய இதழ்களும் புகழ்பெற்ற வைகளாகும். எழுபது விழுக்காடு படித்தவர்களாக உள்ள கேரள மாநிலத்தில் இதழியல் மக்களின் பெருத்த நம்பிக்கை யைப் பெற்றுள்ளது. கேரளாவில் வெளிவரும் ஐம்பத்தியிரண்டு நாளிதழ்களில் நாற்பத்தெட்டு இதழ்கள் மலையாள மொழியில் வெளிவருகின்றன. இத்துடன் எழுபத்தோரு வார இதழ்களும் இருநூற்றைம்பது மாத இதழ்களும் வெளிவருகின்றன.

## தமிழ்மொழி இதழ்கள்

இந்திய விடுதலைப் போராட்டக் காலத்திற்கு முன்புவரை தமிழ் இதழ்கள் இலக்கியம், சமயம், சமூகம்] இவற்றையே சிந் தனைக்களமாகக் கொண்டிருந்தன. வடக்கே தோன்றிய தேசியத் தலைமையும், அங்கிருந்த இதழ்களின் வலிமையும் தெற்கே இல்லாத காரணத்தால் விடுதலை உணர்வு வேகமாகப் பரவ வில்லை. ஆனால், குறைந்த கால எல்லைக்குள் இக்குறையை மாற்றி மற்ற மாநிலத்திற்கேற்பத் தமிழகத்தையும் சமநிலைப் படுத்திய பெருமை தமிழ் இதழ்களையே சாரும். விடுதலைக்குப் பின்பு பல்வேறு துறைகளில் இதழ்கள் தோன்றி வளர்வதற்குத் தமிழகம் இடங்கொடுத்தது. அரசியல் இயக்கங்களின் பெருக்கம், இன உணர்வு, மொழிப்பற்று, தனித்தமிழ் ஆர்வம், பகுத்தறிவுக் கொள்கை, கவிதை முனைப்பு, சமுதாயச் சிக்கல், பொது வுடைமை உணர்வுகள், தொழில்துறை வளர்ச்சி, அறிவியல் மாற்றம், திரைப்படத்தாக்கம் முதலியவை தமிழ் இதழ்களின் வளர்ச்சிக்கு உரமாயின. கால மாற்றமும் சமுதாய மாற்றமும் கைகோர்த்துக் கொண்டபோது தமிழ்மொழி இதழ்கள் இந்திய நாட்டு இதழியலில் இன்றியமையாத இடத்தைப் பெற்றன.

### சமய இதழ்கள்

இந்திய மொழிகளில் முதன்முதலாக வார்க்கப்பட்ட அச் செழுத்துக்கள் தமிழ்மொழி எழுத்துக்களேயாகும். செர்மனியில் வார்க்கப்பட்ட இவ்வச்செழுத்துக்களைக் கொண்டு வைப்புக் கோட்டையில் 1677-ஆம் ஆண்டு கிருத்தவ வேதப்புத்தகம் ஒன்று வெளியாகியது. அடுத்த ஆண்டில் நெல்லை மாவட்டம்

புன்னைக் காயலில் அச்சகம் தோன்றியது. தமிழ்-போர்ச்சுக்கல் மொழி அகராதி ஒன்றும் 1679 - ஆம் ஆண்டில் கேரளத்து அம்பலக்காடு என்ற இடத்திலிருந்து வெளிவந்தது. தமிழ் அச்செழுத்துக்களைக் கிருத்தவப் பாதிரியார்கள் செர்மனியிலிருந்து தருவித்துச் சமயப் பரப்பு வெளியீடுகளுக்குப் பயன்படுத்திக் கொண்டிருந்தனர். தரங்கம்பாடி அச்சகத்திலிருந்து விவிலியத்தின் புதிய ஏற்பாடு 1714 - இல் தமிழ் மொழியில் அச்சாகியது. தமிழ் மொழியின் அச்சுக்கதை இப்படித்தான் கிருத்தவசமயத்தைக் கருவாகக் கொண்டு தொடங்குகிறது. தமிழ் அச்சுக் குழவிக்குக் கிருத்தவச் செவிலித் தாயர் வேத போதகங்களைக் கற்றுக்கொடுத்துச் சமயப்பரப்பு மொழிகளைப் பேச வைத்துக் கொண்டிருந்தனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலம்வரை தமிழ் இதழ்களில் சமயம் தாண்டிய பிற செய்திகளைக் காணமுடியவில்லை. 1831 - ஆம் ஆண்டு தமிழ்மேகசின் என்ற திங்களிதழைச் சென்னைக் கிருத்தவ சமயப் பரப்புக் கழகத்தார் வெளியிட்டபோது சமய மாற்றச் செய்திகளே அதில் இடம் பெற்றிருந்தன. தமிழ்மொழியில் தோன்றிய முதல்இதழ் என்ற சிலரது கணிப்பில் இடம் பெற்ற இவ்விதழ், இரண்டு ஆண்டுகள் அரசினர் அரவணைப்போடு உயிர் வாழ்ந்திருக்கிறது.* இதனை அடுத்து வெளியான ஜநசினேகன் (1841) மாத மிருமுறையாக வளர்ச்சி பெற்றிருந்தாலும் வார இதழ் தினவர்த்தமானி (1855) செய்தி, இலக்கியம், அறிவியல் இவற்றை இணைத்து வெளியிட்டு முழுமை பெற்ற இதழாக மலர்ந்தது. பெர்சிவல் பாதிரியார் ஆசிரியப் பொறுப்பில் வியாழக்கிழமை தோறும் தினவர்த்தமானி வெளிவந்தது. தமிழறிஞர். சி. வை. தாமோதரம் பிள்ளையும் இவ்விதழில் சில காலம் ஆசிரியப் பொறுப்பிலிருந்தார். அரசு மாதந்தோறும் இருநூறு ரூபாய் மானியம் அளிக்க, இரண்டணா விலையில் ஆயிரம் படிகள் வரை இவ்விதழ் விற்பனையாகியது. அரசுச் சார்புடைய மற்றொரு இதழ் ஜநவிநோதினி வரலாறு, சமூகம், அறிவியல் கட்டுரைகளை ஆங்கிலத் தாள்களிலிருந்து மொழி பெயர்த்துத் தந்ததோடு இராமாயணத் தொடரை முதலில் அச்சேற்றியதாகவும் அறி

---

* 1812 - இல் மாசத்தினச்சரிதை என்ற இதழ் வெளிவந்துள்ளதைச் சுட்டிக் காட்டும் சிலர் அதுவே தமிழில் வந்த முதல் இதழ் என்றும் கூறுவர்,

கிறோம். இதற்குப் பின்பு வெளியான பால்யநேசன் (1859), தேசோபகாரி (1860) ஆகிய இதழ்களில் இந்து சமயக் கோட்பாடுகளும் வெளியாகத் தொடங்கின. கிருத்தவ இதழகளுக்குப் பதில் கூறுவதாகத் தத்துவபோதினி (1864) என்னும் இந்து சமய இதழ் தொடங்கப்பட்டபொழுது, சேதுபதி மன்னர்கள் மரபைச் சார்ந்த பொன்னுச்சாமித் தேவர் ஆயிரம் ரூபாய் நன்கொடை அளித்துள்ளார். இந்து சமயப் பற்றுடையோர் சிலர் கூடித் தொடங்கிய விவேகவிலாசம் (1865) என்ற இதழ இந்துசமய இதழ்களின் தோற்றத்திற்குக் காரணமாய் அமைந்தது. வடக்கே இந்து சமயக் கொள்கைகளைப் பரப்புவதற்காக இதழ் களைத் தொடங்கியிருந்த பிரம்ம சமாஜக் கிளைகள் 1870-இல் தமிழகத்தில் பரவிய போது இங்கேயும் இதழ்கள் சமயம் பரப் பும் கருவிகளாயின. பிரமதீபிகை, பிரமவாதிகன், பிரம வித்யா பத்திரிகை, பிரமவித்யா, பிரமஞான போதினி, தமிழ தியாசாபி கல் புல்லட்டீன், பூர்ணசந்ரோதயம் முதலியன பிரம்ம சமாஜ இயக்க இதழ்களாகும். வள்ளலார் இராமலிங்க சுவாமிகளின் சன் மார்க்க இபக்கக் கொள்கைகளைத் தாங்கிச் சன்மார்க்க போதினி (1888), வள்ளலார் (1963) அருட்பிரகாசம், அருட் பெருஞ் சோதி, சமரச சன்மார்க்கம், சன்மார்க்கப்பாதை, சுத்த சன மார்க்கம், தனிப் பெருங் கருணை, அருட்பா முரசு, சன்மார்க்க விவேக விருத்தி, சமரச மார்க்கம் முதலிய இதழ்கள் வெளி வந்துள்ளன. இரமணர் வழியில் ரமணப் பிரகாசம், ரமண நெறி முதலிய இதழ்கள் வெளிவந்துள்ளன. மெய்வழி அனந்தர் இயக் கத்தார் சாகாக்கலை என்ற இதழை வெளியிட்டுள்ளனர். இராமகிருட்டிணர், விவேகாநந்தர் இருவரின் சமய வழியில் பரமஹம்ச பிரகாசினி, இராமகிருஷ்ண விஜயம், விவேகாநந்தன் முதலிய இதழ்கள் வந்துள்ளன. கிருபானந்த வாரியார் திருப் புகழமிர்தம் (1936) என்ற இதழை நீண்ட காலம் வெளியிட் டுள்ளார். கிருத்தவம் இந்து சமயப் போட்டியில் எண்ணற்ற இதழ்கள் தமிழ் மொழியில் வெளிவந்தன. சமய ஆதிக்கத்தில் விளைந்த புதுப்புரட்சி யுகத்தினைத் தமிழகம் இதழ்களாகத் தான் தொடர்ந்திருக்கிறது. இருபதாம் நூற்றாண்டுத் தொடக் கத்தில் இசுலாமியமும் இதில் இணைந்து கொண்டது.

### கிருத்தவ சமய இதழ்கள்

தமிழ் மேகசின் (1831); சுவிசேஷ பிரபாவ விளக்கம்; சிறுபிள்ளையின் நேசத் தோழன்; ஜநசினேகன் (1841); உதய

தாரகை (1845) நற்போதகம் (1849) ; தினவர்த்தமானி (1855); தேசோபகாரி (1860); சத்திய வேதக் கொடி (1862); அருணோதயம் (1863) ; சென்னை திருச்சபைப் பத்திரிகை (1863); கற்பகவிருட்சம் (1864) ; தேசாபிமானி (1867) ; சத்தியவர்த்தமானி (1870) ; சினேக போதன் (1875) இராஜவிருத்தி போதினி (1883) தீர்க்க தரிசன வர்த்தமானி (1884) ; சத்திய வேதானுசாரம் (1884) ; சத்தியதூதன் (1887) ; இயேசுநாதருடைய திரு இருதய தூதன் (1887) ; தீர்க்கதரிசன சுப்பிர தீபிகை (1889) கிறிஸ்துவன் (1890) ; வேத விளக்கன் (1890); சத்திய போதினி (1910) ; தமிழ்ச்சபைத் தீபிகை (1915) ; குருசடியின் குரல் (1928) ; ஞானதூதன் (1928) ; வேதபோத மாததோழி (1929) ; தென் ஒலி (1939) ; கத்தோலிக்க சபை (1940) புத்துயிர் (1950) ; உயிர் மீட்சி (1950) ; வருகையின் தூதன் (1953) ஜெப கிருஸ்து (1955) ; இல்லறத் துறவி (1955) வேளாங்கண்ணி குரலொலி (1958) ; விழித்தெழு (1960) சத்தியம் (1961) ; சுவிசேஷ பூரிகை (1963) ; சுக நம்பிக்கை (1964) ; மீட்பின் தூதன் (1964) கடைசி எக்காலம் (1965) சதங்கை ஒலி இவற்றில் பல இப்போது நின்றுவிட்டாலும் கிருத்துவ சமய இதழ்களே அதிகமாக வெளிவந்துள்ளன. மொத்தம் 307 கிருத்தவ இதழ்கள் வெளிவந்துள்ளதாக 1984-ஆம் ஆண்டு அறிக்கை ஒன்று குறிப்பிட்டுள்ளது.

### இந்து சமய இதழ்கள்

தத்துவ போதினி (1864) ; விவேக விளக்கம் (1865); அமிர்தவசனி (1865) பிரமதீபிகை (1871) ; சித்தாந்த ரத்நாகரம் (1880) ; சைவ உதயபானு (1882) ; தத்துவ விவேசினி (1882) ; ஞானாமிர்தம் (1883) ; இந்துமத சீர்திருத்தவாதி (1883) ; சன்மார்க்க போதினி (1885) ; எம்பதம் ஆண்டவன் (1887) சிவபக்தி பத்திரிகை (1890) ; விசயத்துவம் (1893); ஞானபானு (1894) ஞானபோதினி (1897) ; சித்தாந்த தீபிகை (1897) ; சைவ போதினி (1901) ஞானசாகரம் (1902) ; திருநாவுக்கரசு (1904) ; ஞானசித்தி (1908) ; இந்து பால போதினி (1908) ; பகவத் கீதை (911) ; சித்தாந்தம் (1912); திராவிட பாகவதன் (1914) ; சைவம் (1914); இராமானுஜன் (1918) பரமஹம்ஸ ப்ரகாசினி (1919) ; சைவ பரிபாலனம் (1922); ஹரி சமய திவாகரம் (1924); வைஷ்ணவம் (1925) ; சமரச சன்மார்க்கம் (1927); சமய ஞானம் (1927); சிவநேசன் (1927)

மாதவமித்திரன் (1929); மணிவாசகம் (1929); வைதீக தீபிகை (1933) ; இந்துதர்மம் (1935) ; ஸ்ரீராமாநுஜ சித்தாந்த வைஜயந்தி (1936) ; ஞானசம்பந்தம் (1941); வைதீக தர்மவர்த்தினி (1941); காமகோடி (1942); தார்மீக ஹிந்து (1946); அருட்பெருஞ்சோதி (1947); ஸ்ரீஇராமாநுஜன் (1948); தெய்வீக வாழ்க்கை (1948); பக்தன் (1951); ஸ்ரீஇராமகிருஷ்ண விஜயம் (1958); திருக்கோயில் (1958); ஸ்ரீகாமகோடி ப்ரதீபம் (1959); குமரகுருபரன் (1959); சைவம் (1961); ஞான ஒளி (1961); வள்ளவார் (1963)ஸ்ரீஇராமஜெயம், நந்தி (1964);பாகவத தர்மம் (1965); ஸ்ரீபுவனேஸ்வரி (1966); அருள் (1966).

திருப்பதி ஆலய நிருவாகம் சப்தகிரி என்ற இதழை வெளியிடுகிறது. தொடர்ந்து மெய்கண்டன், ஜெகத்குரு, வைணவன், அருணகிரி, தேவி மகாத்மியம், தர்மச்சக்கரம், விஜயபாரதம்; தர்மச்சுடர், ஞானவழி, ஞானச்சுடர், ஞானதீபம், ஓம்சக்தி, இந்துமதம் அழைக்கிறது, ஸ்ரீஐயப்பன், அருள், ஆதிபராசக்தி என்றவரிசையில் இந்துசமய இதழ்கள் வளர்ந்து வருகின்றன.

## முசுலீம் சமய இதழ்கள்

முசுலிம் சமயத்தின் முதல் இதழ் முஸ்லீம் நேசன் 1882-இல் இலங்கையிலிருந்து வெளிவந்துள்ளது. காயல்பட்டினத்தைச் சார்ந்த சித்திக் லெப்பை மரைக்காயர் என்ற வழக்கறிஞர் இந்த இதழை வெளியிட்டுள்ளார். தமிழறிஞர் நாகபட்டினம் குலாம் காதிறு நாவலர் வித்யா விசாரினி (1888) என்ற இதழை வெளியிட்டுள்ளார். பினாங்கிலிருந்து ஞானாசிரியன் (1888); சிங்கப்பூரிலிருந்து றபீகுல் இஸ்லாம் (1905) என்ற முசுலிம் இதழ்களும் வெளிவந்துள்ளன. முசுலிம் பெண்களுக்கான இதழ் நர்கீஸ் என்ற பெயரில் திருச்சியிலிருந்து வெளிவருகின்றது. மணிச்சுடர் என்ற நாளிதழ் சென்னையிலிருந்து வெளிவருகிறது.

முஸ்லிம்தூதன் (1906) இஸ்லாம் நேசன் (1909) சைபுல் இஸ்லாம் (1916) தொண்டன் (1918) தாருல் இஸ்லாம் (1920) தத்துவ இஸ்லாம் (1921) முசல்மான் (1926) இஸ்லாம் (1927) சத்திய இஸ்லாம் (1935) நூருல் இஸ்லாம் (1939) நூருல் ஹக், முஸ்லீம் முரசு (1948) தாசுல் இஸ்லாம் (1951) தீனுல் இஸ்லாம் (1957) குர்ஆனின் குரல் (1958) முழக்கம் (1960)ரஹ்மத் (1961) ஒளிச்சுடர் (1963) ஒளிவகம் (1965) அல் இஸ்லாம் (1966)

அறமுரசு (1971) முஸ்லீம், பிறை, முபாரக், பாத்திமா, பரீதா, உரிமைக்குரல், முஸ்லீம் குரல், இஸ்லாம் மித்திரன், இளம் பிறை, மறுமலர்ச்சி, மதீனா.

## சைன சமய இதழ்கள்

தரும சீலன் (1918), முக்குடை, நல்லறம், மார்க்கபந்து, அணுவிரதம், ஆத்மதர்மம்.

## இலக்கிய இதழ்கள்

சமயங்களின் அடிப்படையில் இதழ்கள் புதுவடிவம் பெற்று முடித்த பின்பு இலக்கிய இதழ்கள் சங்க இலக்கியப் பிழிவுத் தேறலாய்ச் சுவையூட்டத் தொடங்கின. இலக்கணம், இலக்கியம் ஆராய்ச்சி, புலவர்களின் கருத்து மோதல்கள், மரபுக் கவிதைகள், கல்வெட்டு ஆராய்ச்சி போன்ற அழுத்தமான இலக்கிய வகைகளை அக்கால இலக்கிய இதழ்கள் நமக்குப் படைத்துக் கொடுத்திருக்கின்றன. 'ஒரு நல்ல இலக்கியப் பத்திரிக்கை பல்லாயிரம் பேருக்குக் கற்பிக்கும் பேராசிரியனைப் போன்றது* என்பதற்கேற்ப இவ்விதழ்கள் அனைத்தும் கருத்துப் பெட்டகங்களாய்க் காட்சியளித்தன. மறைமலையடிகளாரின் அறிவுக்கடல் (1902); மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் செந்தமிழ் (1902); சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் செந்தமிழ்ச் செல்வி (1923); கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் தமிழ்ப் பொழில் (1925) ஆகிய இலக்கிய இதழ்கள் தமிழ் வளர்ச்சிக்கும் சமய வளர்ச்சிக்கும் பெரிதும் உதவின. பாமரமக்களைத் தொடர்புபடுத்திக் கொள்ளாத பண்டித இலக்கியங்களாய் அமைந்திருந்தாலும் இவற்றின் உயர்ந்த நோக்கமும், சிறந்த முயற்சியும் பாராட்டத் தக்கவையே. 'இத்தகைய இலக்கியப் பத்திரிக்கைகள் மொழிக்கு விதைநெல்லைப் போன்றவை. நாளைய இலக்கிய முயற்சிகளைப் பயிர் செய்ய இவை உதவுவதைப் போல வேறெவையும் உதவ மாட்டா'. •இவ்விலக்கிய இதழ்கள் புலமை நிலையைத் தாண்டிப் புதுமை நிலைக்கு வர்துசேர அரை நூற்றாண்டு காலம் இடையில் ஓடியிருக்கிறது. செந்தமிழ் (1902) தொடங்கித் தீபம் (1965) முடிய இலக்கிய இதழ்களின் கால கட்டத்தைக் கணிக்கும் போது இந்தக் கருத்தே எஞ்சி நிற்கிறது.

---

* நா. பார்த்தசாரதி—இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரை.

• மேற்படி கட்டுரை.

இலக்கிய இதழ்களின் எழுச்சிக் காலத்தை 'மணிக்கொடி காலம்' என்று சிலர் கருதுவதுண்டு. புதினம், சிறுகதை, திற னாய்வு இவற்றை இதழ்களில் புகுத்திய மணிக்கொடி (1933) இதழைத் தொடர்ந்து சூறாவளி (1934); சக்தி (1939); கிராம ஊழியன் (1943); கலா மோகினி 1945); சிந்தனை (1947); தேனி காதம்பரி (1948) போன்ற இலக்கிய இதழ்களும் புதுமை களைப் புகுத்தும் போக்கில் வெளிவந்தன. என்றாலும் மணிக் கொடி இதழ்களுக்குச் சற்று முன்பு தோன்றிய கலைமகள் (1932) இலக்கியங்களை எளிமைப்படுத்திச் சிறப்போடு வெளி யிட்டிருக்கிறது. மேல்நாட்டு இலக்கிய வடிவங்களை வ. வே. சு. ஐயர், மாதவையா, வடுவூர்த் துரைச்சாமி, வேதநாயகம்பிள்ளை போன்றவர்கள் தொட்டுக் காட்டிய பின்பு புதினங்களும் தொடர்கதைகளும் இலக்கிய இதழ்களில் இடம் பெற்றன. இதற்குப் பின்புதான் உலக இலக்கியப் போக்குகளைத் தமிழ இலக்கிய இதழ்களோடு ஒப்பிட்டுக் காண முடிந்தது. இலக்கி யத்தை உள்ளடக்கிக் கொண்டு பொழுதுபோக்குப் படைப்புக் களையும் ஏற்றுக்கொண்ட ஹனுமான், பிரசண்ட விகடன், சுதேசமித்திரன் - வாரப் பதிப்பு பொன்னி, குமரி மலர் போன்ற இதழ்கள் இலக்கிய இதழ்களுக்கு இன்னுமொரு பாதையை வகுத்துத் தந்தன. பாரதியார் மரபுக் கவிதைகளை எளிமை யாக்கி வசன கவிதைகளையும் படைத்துக் கொடுத்த பின்பு கவிதைத் துறையும் இலக்கிய இதழ்களில் குடிபுகுந்தன. பாரதி தாசன், வாணிதாசன், சுரதா, முடியரசன் கொத்தமங்கலம் சுப்பு போன்றவர்கள் பாட்டுக்கலன்களை இதழ்களுக்குப் பூட்டிக் களித்தனர். இந்த மாற்றங்களுக்குப் பிறகு இலக்கிய இதழ்கள் பண்டிதர்களின் ஒற்றையடிப் பாதையிலிருந்து விலகிப் பொது மக்களின் பெரும் பாட்டைக்கு வந்து சேர்ந்தன.

நாகை நீலலோசனி (1890); செந்தமிழ் (1902); ஞான சாகரம் (1902); தமிழகம் (1905); செந்தமிழ்ச் செல்வம் (1911); தமிழன் (1912); வித்யாபாநு (1914); விவேக போதினி; விநோதரச மஞ்சரி; ஞானபோதினி; ஆனந்த போதினி (1915); செந்தமிழ்ச்செல்வி (1923); நச்சினார்க்கினியன் (1923); கம்ப நாடர் (1924); தமிழ்ப்பொழில் (1925); சித்தாந்தம் (1927); கலா நிலையம் (1928); சண்டமாருதம் (1932); திருப்புக ழமிர்தம் (1936); புலவர் உலகம் (1941); தமிழர் நாடு (1943); பொன்னி (1947); கபிலர் (1967); முப்பால் ஒளி; நித்திலக்

குவியல்; குயில்; வானம்பாடி; குறள் நெறி; முத்தாரம்; முல்லை; கண்ணதாசன்; கொங்கு; புலமை; ஆராய்ச்சி, தமிழ்ப்பாவை, அன்னம் விடுதூது.

## மறுமலர்ச்சி - முற்போக்கு இயக்க இதழ்கள்

மேலைநாட்டு இதழியலின் தாக்கம் தமிழ் இதழ்களைப் பற்றிய பின்பு, இதழ்களின் இலக்கிய எல்லை இன்னுஞ் சுருங்கியது. இலக்கியத் திறன்கள் (Literary talents) சுருங்கி இதழியல் திறன்கள் (Journalistic talents) விரிவடைந்தன. இலக்கிய இலட்சியங்களைவிட எண்ணிக்கை இலட்சங்களையே இதழ்கள் பெருமையாகக் கருதின. இந்தச் சூழலில்தான் மக்கட் செல்வாக்கு இதழியல் (Popular Journalism) புதுத் துறையாக உருவாகியது. இலக்கிய இதழ்கள் என்ற பெயர் பெற்றிருந்த 'கலைமகள்' மஞ்சரி, கலைக்கதிர், தாமரை போன்ற இதழ்களெல்லாம் மாற்றம் பெற்றன. இலக்கிய வட்ட இதழ்கள் நின்றுவிட்டன. 1965-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட தீபம், கணையாழி இதழ்கள் இலக்கிய விவாதங்களையும், ஆராய்ச்சிகளையும் மேலைநாட்டு நுணுக்க முறையில் வெளியிட்டதோடு பிறமொழிச் சிறுகதைகளையும் மொழிபெயர்த்து வெளியிட்டன. இதே வரிசையில் எழுத்து *(1959)*; ஞானரதம் *(1970)*; சதங்கை *(1971)*; விழிகள் *(1974)* போன்ற மறுமலர்ச்சி இதழ்கள் வெளிவந்தன.

இந்த நூற்றாண்டின் இடைப் பகுதியில் எழுத்துத் துறையில் புகுந்த முற்போக்கு எழுத்தாளர்கள் சமுதாய முற்போக்கு, கலை, இலக்கியச் சிந்தனைகளை இதழ்களாக்கித் தந்தனர். இலக்கியச் செல்வர் ஜீவானந்தம் முற்போக்கு எழுத்தாளர் கூட்டத்தில் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தார். ரகுநாதன் சாந்தி *(1945)*; இதழை வெளியிட்டார். முல்லை *(1949)* இக்கூட்டத்தில் இடம் பெற்றிருந்தது. பொருளாதார ஏற்றத்தாழ்வு, வர்க்கப் போராட்டம் ஆகியவை முற்போக்கு இதழ்களின் படைப்புக்களாயின.

மணிக்கொடி *(1933)*; சூறாவளி *(1934)*; சக்தி *(1940)*; கலாமோகினி *(1945)*; சிந்தனை *(1947)*; தேனி *(1948)*; காதம்பரி *(1948)*; சரஸ்வதி *(1955)*; தாமரை *(1958)*; எழுத்து *(1959)*; தீபம் *(1965)*; கணையாழி *(1965)*; நடை *(1968)*; ஞானரதம் *(1970)*; கசடதபற *(1970)*; சதங்கை *(1971)*; அஃக் *(1972)*; வாசகன் *(1973)*; நீலக்குயில் *(1974)*; விழிகள் *(1974)*.

## சமூக இதழ்கள்

சமய இதழ்களைப் பின்பற்றிச் சமூக இதழ்களும் தமிழில் தோன்றின. சமூக இதழ்களின் தோற்றத்திற்கு அடிப்படையான காரணம் ஒன்று இருந்தது. ஆங்கிலேயர் எல்லா நிலைகளிலும் பிரித்தாளும் சூழ்ச்சியை மேற்கொண்டதைப் போன்று சமூகங்களிடையேயும் அதைப் புகுத்தினர். ஆங்கில அரசில் முன்னுரிமை, பதவி இவற்றில் செல்வாக்குப் பெறச் சமூகங்கள் தங்களை உயர்த்திக்காட்ட விரும்பின. மேலும், உடன் சமூகங்களிடையே போட்டியிட்டு வளரவும் வரிந்து கட்டின. இந்த நேரத்தில் இதழ்களை இவ்வெண்ணத்தை நிறைவேற்றும் கருவியாகக் கருதவே சமூக இதழ்கள் தமிழ் மொழியில் நிறைந்தன. வேறு எந்த மொழியிலும் இல்லாத இதழியல் துறையின் பிரிவாக சமூக இதழ்கள் அமைந்தன. சாதி உணர்வுகள் தமிழகத்தில் தலைதூக்கும் நிலை ஒன்று உருவானாலும் அரசியல் விழிப்புணர்ச் சிக்குச் சில நிலைகளில் இவை அடிகோலின. சமூக இதழ்கள் இலக்கியத்தையும் தொட்டுப் பார்த்தன; சில சமூக இதழ்கள் அதிக விற்பனை எண்ணிக்கைகளைப் பெறாவிட்டாலும் இதழியல்துறையை விட்டு நீங்கி விடாமல், இன்றும் ஒட்டிக் கொண்டிருக்கின்றன. மஹாஜனம், சௌராஷ்டிரஜோதி, யாதவ மித்திரன், நமது யாதவம், செங்குந்த மித்திரன், வணிகமித்திரன் போன்ற சமூக இதழ்கள் அந்தந்த இனத்தின் நன்மை தீமைகளைச் செய்திகளாக்கித் தருகின்றன. ஆதித் தமிழன் *(1869)* என்ற இதழ் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தின் மேம்பாட்டிற்காக வெளிவந் துள்ளது. இதே வரிசையில் பஞ்சமன் *(1871)*, திராவிட மித்திரன், திராவிடப்பாண்டியன் (1885), பறையன் *(1893)* தமிழன், திராவிட கோகிலம் (1907), ஆதித்திராவிடன் *(1919)* அம்பேத் கார் *(1962)*, நீலக்கொடி முதலிய இதழ்கள் வெளி வந்துள்ளன.

சான்றோர்குல விவேக போதினி *(1909)*; வன்னியகுல க்ஷத்திரிய தீபம் *(1912)*; விஸ்வகர்மன் *(1913)*; நாட்டுக் கோட்டை வைசியம் *(1914)*; தன வைசிய ஊழியன்; வைசிய மித்ரன்; பரத போதினி *(1918)*; செங்குந்தன் *(1921)*; குல வேளாளர் *(1922)*; மறவர்குல தூதன் *(1923)*; வைசியன் *(1923)*; இந்திரகுல போதினி *(1924)*; வணிக மித்திரன் *(1924)* தீனபந்து *(1924)*; கருணீக மித்திரன் *(1924)*; ப்ராமணன் *(1925)*; செங்குந்த மித்திரன் *(1928)*; கள்ளர்கோமான் *(1928)*

வேளாளமித்திரன் (1928); யாதவமித்திரன் (1929); யாதவ மணி; ரெட்டிகுல ராணி (1929); அகம்படியார் குலசேகரன் (1930); குலாலமித்திரன் (1931); தனவணிகன் (1931); ஆயிர வைசியன் (1943); வேளாளன் (1947); மஹாஜனம் (1948); சௌராஷ்டிர மணி (1952); சௌராஷ்டிர ஜோதி; ஆயிர வைசியன் (1955); ஏர்முனை (ரெட்டி குலம்) (1963); வன்னிய மன்றம் (1966); கண்ணகிச் செல்வி (1966); வேளாளர் நல வாழ்வு; (நாயுடு சமுதாயம்;) கோகுல மித்திரன்; யாதவச் சுடர், செட்டிநாடு, நகரத்தார் குரல், சேனையர் முரசு, கம்மவார் ஊழியன், நாயுடு சமுதாயம், முத்தரையர் முழக்கம், வேட்டுவர் குரல், மீனவர் ஓசை, தேவர் ஓசை, சலவைத் தொழிலாளி, வெளுப்பு, செங்குந்தர் முரசு, சாலியர் குரல், நாடார் குலம், நாடார் நண்பன் என்ற வரிசையில் சமூக இதழ்கள் பெருகி யுள்ளன.

## தேசிய இயக்க இதழ்கள்

திலகரின் காலமே தேசியம் தெற்கே நோக்கிவந்த கால மாகும். காந்தியார் காலத்திலேதான் அது உச்சத்தை எட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பியது. திலகரின் கேசரி இதழ் தெற்கே தேசிய இதழ்களுக்கு அடிப்படையாய் அமைந்தது. பாரதியார் இந்தியா இதழில் கேசரியின் கட்டுரைகளை மொழிபெயர்த்து வெளியிட்ட போதுதான் விடுதலைப் போராட்டத்தின் வேகத் தைத் தமிழகம் கண்டது. இதற்குப் பின்பு சங்கு (1930) காலணா விலையில் தோன்றிப் பெரும் புரட்சி செய்யத் தொடங்கியது.

தேசியம் பரப்பிய தமிழ் நாளிதழ் என்ற முறையில் முதலிடம் பெறுவது சுதேசமித்திரன் (1882); அதுவரை ஆங்கில நாளிதழ் இந்து தான் அந்த இடத்தைப் பெற்றிருந்தது. ஆங்கிலம் அறிந்தவர்கள் அல்லாமல் சாதாரண மக்களும் தேசிய உணர் விற்கு வரவேண்டும் என்ற எண்ணத்தில் இந்து ஆங்கில இதழின் பொறுப்பேற்றிருந்த ஜி. சுப்பிரமணிய ஐயர் சுதேசமித்திர னைத் தொடங்கினார். தமிழில் வெளியான முதல் செய்தித் தாளான சுதேசமித்திரன் தமிழ் மக்களின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்தும் ஒரே நாளிதழாக இருபது ஆண்டுகள் தன் னாட்சி செலுத்தியது. பாரதியார் தம் கவிதைச் சிறகுகளைச் சுதந்திரமாக விரித்துப் பறக்க முடியாத கூண்டுப் பறவை

நிலையில் ஒன்றரை ஆண்டுக் காலம் சுதேசமித்திரனில் உதவி ஆசிரியர் என்ற பெயரில் வறுமைப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தார். சுதேசமித்திரனில் அவருக்குச் சம்பளம் பதினேழரை ரூபாய்தான். இங்கிருந்து வெளியேறிய பாரதியார் சக்கரவர்த்தினி, கர்மயோகி, இந்தியா, விஜயா ஆகிய இதழ்களைத் தொடங்கி நடத்தினார்.

பாரதியாரின் இந்தியா (1906) மாத இதழ் தேசிய இயக்கத்தின் புரட்சி ஏடாய் வெளிவந்தது. மூன்றாண்டுகள் இந்தியா சென்னைக்கும், புதுவைக்கும் பாரதியாரைப் பின்தொடர்ந்தே சென்றுகொண்டிருந்தது. லோகோபகாரி (1896) இதழை நடத்திக்கொண்டிருந்த பரலி நெல்லையப்பர், ஞானபானு நடத்திய சுப்பிரமணிய சிவா ஆகியோரும் தேசிய எழுச்சியூட்டும் எழுத்துக்களை இந்தியாவில் படைத்துக்கொண்டிருந்தனர். 1914-ஆம் ஆண்டிற்குப் பின்பு தமிழகத்தில் தேசிய உணர்ச்சி மிகுதியும் வெளிப்பட இந்தியா காரணமாக இருந்தது. பாரதியார்தாம் முதன் முதலில் அரசியல் பற்றிய கருத்துப் படங்களை முன் பக்கத்தில் போட்டுப் புரட்சி செய்தார். ஜஸ்டிஸ் கட்சி வகுப்பு வாதத்தில் ஈடுபடுவதைத் தடுக்க விரும்பிய சுப்புராய காமத், குமாரசாமி ரெட்டியார் ஆகிய இருவரும் இதழ் ஒன்றைத் தொடங்க விரும்பினர் திரு. வி. க. இவர்களுடன் இணைந்தார். தேசபக்தன் (1917) தொடங்கப்பட்டது. கிலாபத் இயக்கம், சத்தியாக்கிரகப் போராட்டம், பஞ்சாப் படுகொலை முதலிய போராட்டக் காலங்களில் தேசபக்தன் தமிழ் மொழித் தேசிய இதழாகச் செயல்பட்டது. பிறமொழி ஆதிக்கச் சொற்களை நாளிதழ்களிலிருந்து விரட்டியடித்தவர் திரு. வி. க. அரசியல் செய்திகளை நல்ல தமிழில் எழுதும் பிற்கால நாளிதழ்களுக்கு வழி வகுத்துக் கொடுத்ததும் தேச பக்தனேயாகும். வெ. சாமிநாத சர்மா, கல்கி, வ. வே. சு. ஐயர் ஆகியோர் தேசபக்தனில் பணியாற்றினர். இவ்விதழை விட்டு வெளியேறிய திரு. வி. க. நவசக்தி (1920) வார இதழைத் தொடங்கிப் பதின்மூன்று ஆண்டுகள் ஆசிரியராக இருந்தார். இவ்விதழில்தான் திரு வி. க. வின் ஆற்றொழுக்கு நடை தோற்றம் பெற்றது. நவசக்தி மூடப்பட்ட பின்பு அதன் இடத்தைத் தமிழ்நாடு (1926) பெற்றது. இதழியல் துறையில் பட்டறிவுடைய டாக்டர் வரதராசுலு நாயுடு தொடங்கிய நாளிதழ் இது. டி. எஸ். சொக்கலிங்கம் இவ்விதழின் துணையாசிரியராக

இருந்தார். காந்தியாரின் போராட்டங்களை ஆதரித்து எழு தாத காரணத்தால் மக்கள் செல்வாக்குக் குறைந்து நான்கே ஆண்டுகளில் தமிழ்நாடு மறைந்தது.

தமிழ் நாளிதழ்களில் புரட்சியும், புதுமையும் புகுத்திய சுதந்திரச் சங்கு (1930) வாரம் மும்முறை வெளிவந்த தீவிரத் தேசிய இதழாகும். சுதந்திரம் பற்றிய சூடான செய்திகளைச் சங்க நாதமாக முழக்கிய சங்கு, தமிழ் நாட்டில் அதிக விற்பனையை எட்டிப் பிடித்திருந்தது. அந்தக் காலத்திலேயே 75,000 படிகள் விற்பனையாயின. மதுரையில் மட்டும் 10,000 படிகள் விற் றுள்ளன. செய்தித்தாள்களுக்கு முகவர்களை அமர்த்தும் முறையை முதன்முதலாகச் சங்குதான் புகுத்தியது. தினமணி (1933) சதானந் தத்தால் முதலில் தொடங்கப்பட்டதாகும். இதன் ஆசிரியராக டி. எஸ் சொக்கலிங்கம் பொறுப்பேற்ற பின்பு தேசியம் பரப் பும் நாளிதழாயிற்று. ஏ. என். சிவராமன், ஏ. ஜி. வெங்கடாச் சாரி, புதுமைப்பித்தன் முதலியோர் துணையாசிரியர்களாயிருந் தனர். ஏ. என். சிவராமன் ஆசிரியப் பொறுப்பேற்கும் முன்பு காந்தி (1932) என்ற இதழின் ஆசிரியராக இருந்தார். தின மணி ஆசிரியரான பின்பு அதைத் தமிழகத்தின் தலைசிறந்த நாளிதழாக மாற்றிய பெருமை அவரையே சாரும். தினமணியி லிருந்து வெளியேறிய பின்பு டி. எஸ். சொக்கலிங்கம் தினசரி (1944) நாளிதழைத் தொடங்கினார். இது சில ஆண்டுகளே நடைபெற்றது. சென்னையிலிருந்து வெளியான ஊழியன் (1934); ஜெய பாரதி (1936); பாரததேவி (1938) போன்ற நாளிதழ்களும் தேசியம் பரப்பும் கொள்கையில் வெளிவந்தவைக ளாகும். பல்கலைச் செல்வர் தெ. பொ. மீ தமையனார் அஷ்டாவதானம் தெ. பொ. கிருஷ்ணசாமிப் பாவலர் தேச பந்து (1946), பாரதி, இன்றைய சமாச்சாரம் என்ற இதழ்களை நடத்தினார்.

சுதேசமித்திரன் (1882); லோகோபகாரி (1896); சர்வ ஜனமித்திரன் (1901); இந்தியா (1907); தேசபக்தன் (1917); நவசக்தி (1920); சுயராஜ்யா (1922); தாருல் இஸ்லாம் (1922); குமரன் (1923) தேச ஊழியன், (1925); தேசபந்து (1926); தமிழ்நாடு (1926); சுதந்திரச் சங்கு (1930) சுதந்திரவீரன் (1931) காந்தி (1932); தினமணி (1933); ஊழியன் (1934); ஜெயபாரதி (1936); பாரததேவி (1938); தினசரி (1944); ஜெயக் கொடி; தேசபந்து; தினச்செய்தி; ஜெய பேரிகை குமரன்.

## நாளிதழ்கள்

தொடக்கத்தில் வார இதழாக வெளிவந்து கொண்டிருந்த சுதேசமித்திரன் 1890 - ஆம் ஆண்டிலிருந்து நாளிதழாக வெளி வந்தது. தினமணி வெளிவரும் வரை சுதேசமித்திரனே தமிழகத்தின் தனிப்பெரும் நாளிதழாக இருந்தது. இடையில் நீதிக் கட்சியின் சார்பில் திராவிடன் (1916) வெளியிடப்பட்டது. ஆட்சியினரை அரவணைத்துச் சென்றதால் திராவிடன் மக்களிடம் தொடர்ந்து செல்வாக்குப் பெறவில்லை. சேலத்தில் தொடங்கப்பட்டுச் சென்னையிலிருந்து வெளியான தமிழ்நாடு நல்ல தமிழ் ஏடாக இருந்தும் இடையில் நின்றுவிட்டது. பிராமணர் அல்லாதார் இயக்கம் கண்ட பின்பு பெரியார் விடுதலை (1936) நாளிதழைத் தொடங்கினார். பகுத்தறிவு இயக்கத்தின் ஒப்பற்ற நாளிதழாக விடுதலை இன்றும் வெளி வருகிறது. இன்றைய பொதுவுடைமை இயக்கத்தின் தலைசிறந்த நாளிதழ் ஜனசக்தி (1937) அமரர் ஜீவாவின் இலக்கியக் குரலை ஒலித்த நாளிதழாகும். 1936 - ஆம் ஆண்டில் வெளியான ஜெயபாரதி நாளிதழ் சுதேசமித்திரன் விற்பனை அலையில் அடித்துச் செல்லப்பட்டது. பாரததேவி கொஞ்ச காலம் தாக்குப் பிடித்து மறைந்தது. சாதாரண மக்களிடையே செய்தி அறிவொளி பரப்பும் நாளிதழ் ஞாயிறாகத் தினத்தந்தி (1942) மதுரையில் எழுச்சி கண்டது. நாளிதழ்களில் வேகமான வளர்ச்சியும் விறுவிறுப்பான விற்பனையும் பரபரப்பான செய்திகளையும் கொண்டது தினத்தந்தி. தமிழகத்தின் முக்கியமான மாவட்டத் தலைநகர் தோறும் தினத்தந்தி வெளியாகிக் கொண்டிருக்கிறது. தினசரி நாளிதழ் டி. எஸ். சொக்கலிங்கத்தால் தொடங்கப்பட்டு 1953 - ஆம் ஆண்டுவரை தொடர்ந்தது. நவஇந்தியா (1947) கோவையிலிருந்து வெளியாகி ஓரளவிற்குச் செல்வாக்குப் பெற்றது. நாள்தோறும் நல்ல தமிழைப் பரப்பிய தமிழ்நாடு (1951) நாளிதழ் மதுரையில் தமிழ்ப்பற்றுடைய கருமுத்து தியாகராசரால் தொடங்கப்பட்டது. தனித்தமிழைத் தமிழர்கள் செரிக்க முடியாத காரணத்தால் தமிழ்நாடு நாளிதழ் நிறுத்தப்பட்டது. நெல்லையிலிருந்து வெளியாகும் தினமலர் (1951) தொடக்கத்தில் திருவனந்தபுரத்திலிருந்து வெளியான

நாளிதழாகும். அண்மைக் காலத்தில் சிறப்பான வளர்ச்சி பெற்றுள்ள தினமலர் இப்பொழுது மதுரை, நெல்லை, திருச்சி, சென்னை, ஈரோடு ஆகிய இடங்களிலிருந்து வெளியாகிறது. தி.மு க வின் கொள்கை பரப்பும் முரசொலி (1954) கலைஞர் கருணாநிதியின் கைவண்ணத்தில் நாள்தோறும் மெருகேறிக் கொண்டிருக்கிறது. இதழியல் தொழிலாளர்கள் ஒன்றுகூடி நவமணி (1959) என்ற நாளிதழைத் தொடங்கி நடத்தினர். பொருள் தட்டுப்பாடு காரணமாக நவமணி நிமிர்ந்து நிற்க இயலவில்லை. நவசக்தி, மக்கள் குரல் (1959) இரண்டும் சென்னையிலிருந்து வெளியான நாளிதழ்களாகும். நவசக்தி நின்றுவிட, மக்கள்குரல் சென்னையிலிருந்து வெளியாகின்றது. சென்னை, மதுரை, சேலம், திருச்சி, கோவை ஆகிய இடங்களி லிருந்து தினகரன் (1977); சென்னை, மதுரை ஆகிய இடங் களிலிருந்து தினசரி (1984) நாளிதழ்கள் சிறப்பாக வெளிக் வருகின்றன. மாலையில் வெளியாகும் நாளிதழ்களில் மாலை முரசு, மாலை மலர் மாவட்டத் தலைநகர் தோறும் வெளியாகி கொண்டிருக் கின்றன. மதுரையிலிருந்து தமிழ்முரசு (1972) என்ற மாலைச் செய்தித்தாள் வெளியிடப்பட்டது. நன்கு செயல்பட்டும் விற்பனைக் குறைவினால் இவ்விதழ் நிறுத்தப் பட்டுள்ளது.

ஆங்கில நாடுகளில் வெளிவரும் அளவில் சிறிதான செய்தித்தாள்கள் (Tabloid Newspaper) அமைப்போடு மதுரையி லிருந்து மாலையில் வெளிவந்த மதுரைமணி இப்போது பெரிய அளவுடன் வெளிவருகின்றது.

சுதேசமித்திரன் (1883); திராவிடன் (1916); தமிழ்நாடு (சென்னை—1926) ; தினமணி (1933); விடுதலை (1935) பாரத தேவி (1938) ; தினத்தந்தி (1942); தமிழ்நாடு (மதுரை - 1951); தினமலர் (1951) ; முரசொலி (1954) ; நாத்திகம் (1958) ; இனமணி (1958); நவசக்தி, நவமணி (1959); நவஇந்தியா; மக்கள்குரல்(1959) ; மாலை முரசு (1961); தினச்சுடர் (1964–பெங்களூர்); தினக்கதிர் (1965) ; அலைஓசை ; தமிழ் முரசு; அறமுரசு (1971), தீக்கதிர், அன்னை நாடு; செய்தி; சமநீதி; மதுரைமணி; மக்கள்குரல் என்ற வரிசையில் நாளிதழ்கள் வெளிவந்துள்ளன.

# இயக்க இதழ்கள்

பகுத்தறிவு: காங்கிரசு இயக்கத்தில் உயர்ந்த வகுப்பார் களின் ஆதிக்கம் அதிகமாகிய போது வெறுப்படைந்தவர்கள் ஒன்றுகூடித் தென்னிந்திய நலஉரிமைச் சங்கத்தைத் தொடங்கினர். இதன் சார்பில் வெளியான திராவிடன் (1916) என்ற இதழுக்குப் பக்தவத்சலம் என்பவர் ஆசிரியப் பொறுப் பேற்றிருந்தார். தமிழகத்தில் தொடங்கப்பட்ட இரண்டாவது நாளிதழ் திராவிடன். 1928 - இல் பெரியார் இதன் நிருவாகப் பொறுப்பேற்றார். பெரியார் 1924-இல் குடியரசு இதழை வார இதழாகத் தொடங்கினார். அவ்விதழ தேசிய இதழ்களைப் போன்று காந்தீய நெறியில் செயல்பட்டது. 1925-இல் பெரியார் காங்கிரசு இயக்கத்திலிருந்து வெளியேறி, சுயமரியாதை இயக்கம் தொடங்கிய போது குடியரசு நாளித ழாக மாற்றம் கண்டது. தொடர்ந்து பகுத்தறிவு என்ற இதழை யும் பெரியார் தொடங்கினார். சமுதாயத்தின் கண்மூடிப் பழக்கங்களைக் கண்டித்தல், பெண்ணுரிமை, பெண் கல்வியினை வலியுறுத்துதல், மதம், மறைகள், புராணம் முதலியவற்றை ஒழித்தல் இவை போன்ற பகுத்தறிவுக் கொள்கைகளைத் தாங்கி விடுதலை (1935) தொடங்கப்பட்டது. பண்டித முத்துசாமி பிள்ளை, சாமி சிதம்பரனார், அண்ணா, குத்தூசிக் குருசாமி ஆகியோரின் மிடுக்குநடையும், அடுக்குச் சொற்களும் விடுதலை யில் இடம்பெற்றன. அண்ணாவின் அரசியல் அறிவு விடுதலை யில்தான் கூராக்கப்பட்டது. விடுதலையைத் தொடர்ந்து திரா விட நாடு; புரட்சி, தமிழ்உலகம் போன்ற இதழ்களும் பகுத்தறிவுக் கொள்கைகளைத் தாங்கி வெளிவந்தன பெரியாரிசம் (1960) சேலத்திலிருந்து வெளிப்பட்டுப் பகுத்தறிவைப் பரப்பியது.

குடியரசு (1925); சண்டமாருதம் (1931) விடுதலை (1935); பகுத்தறிவு (1951) ஈரோட்டுப் பாதை; பெரியார் குரல் (1954); திராவிடன் குரல் (1955); திராவிட ஏடு (1957); பெரியாரிசம் (1960) உண்மை (1970).

தனித்தமிழ்: பகுத்தறிவு இயக்கக் காலத்தை ஒட்டியே மொழி காக்கும் தனித்தமிழ் இயக்கமும் தோற்றம் பெற்றது. உலகமொழிகளிலெல்லாம் காலத்தால் முந்தியதும் கருத்தால்

செறிந்ததும் தமிழ்மொழியே எனக்கூறும் தனித் தமிழ் இயக்கம், இதழ்களில் மொழித் தூய்மையை வேண்டி நின்றது. மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர், திரு.வி.க., புலவர் குழந்தை, இலக்குவனார், பாரதிதாசன், பெருஞ்சித்திரனார் போன்றவர்கள் இதழ்களில் தனித் தமிழ் பரப்பினர். கால்டுவெல், மறைமலையடிகளார், வீரமாமுனிவர் ஆகியோர் வழியிலே தனித் தமிழ் பரப்பும் தென்மொழி (1962)-திங்களிதழ், கொண்ட கொள்கையில் உறுதியாக இன்றளவும் நின்றுகொண் டிருக்கிறது. இந்திமொழி எதிர்ப்பிலே தனித்தமிழ் இயக்கம் மேலும் சிறப்புற்று இதழ்கள் பலவற்றைப் பெற்றெடுத்துக் கொண்டிருக்கிறது.

தென்மொழி *(1962)*; தமிழ்ச் சிட்டு *(1966)*; முல்லை *(1970)* முதன்மொழி; மாணாக்கன்; செம்பரிதி; எழுச்சி; அறிவு; கைகாட்டி; தமிழ்ப்பணி; தமிழகம்; பூஞ்சோலை; பாவை; வலம்புரி; வேந்தம்; தீச்சுடர்.

கவிதை: கனகசுப்புரத்தினம் பாரதிக்குத் தாசனாகிய பின்பு கவிதை இதழ்கள் தோன்றின ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதாமண்டலம் (1935) என்ற கவிதை இதழுக்குப் பாரதிதாசன் ஆசிரியராக இருந்தார். ஐந்தாண்டுகள் கழித்துக் குயில் கவிதை இதழை அவரே தொடங்கினார். கவிஞர் தெசினியின் கவிதை *(1964)*; பொன்னடியானின் முல்லைச் சரம் (1966) இதழ்கள் நல்ல வரவேற்பைப் பெற்றன. பாரதிதாசனுக்குத் தாசனாகிய சுரதா, சுரதா *(1966)* என்ற கவிதை இதழை நடத்தினார், இவற்றுடன் உலா *(1967)*; எழிலோவியம்; பாரதிதாசன் குயில் *(1969)* போன்ற இதழ்களும் மரபுக் கவிதைக்கு உயிரூட்டிக் கொண்டிருந்தன. புதுக் கவிதை இயக்கம் தோன்றிய பின்பு இலக்கிய இதழ்கள் வரவேற்று இடம் அளித்தன. புதுக் கவிதை இதழ்கள் சிலவும் தோன்றலாயின. நோக்கு *(1964)*; கவிஞன் *(1965)*; வண்ணங்கள் *(1972)*; வானம்பாடி *(1972)*; 'ஐ' *(1973)*; பனித் துளிகள் *(1973)*; தெருக்கூத்து *(1974)* போன்ற புதுக்கவிதை இதழ்கள் குறிப்பிடத்தக்கன.

# அரசியல் இதழ்கள்

இதழ் படிப்பவர்களின் எண்ணிக்கையைப் பெருக்கிச் சுவை கூட்டிச் சொற்களைப் புனைந்தவை அரசியல் இதழ்கள். அரசியல் இயக்கங்கள் இதழியல் துறையை முழுமையாகப் பயன் படுத்திக் கொண்டன. அரசியல் கட்சிகளின் எண்ணிக்கைப் பெருக்கமும் அவை ஒவ்வொன்றும் உடைந்து இரண்டான நிலையும் அரசியல் இதழ்களுக்கு அதிக இடங்கொடுத்திருக் கின்றன. இன்றைய அரசியல் இதழ் ஜனசக்தி 1937 - இல் தொடங்கப்பட்ட பொதுவுடைமை இயக்க இதழாகும். விவசாயி களின் நலனை அறுவடை செய்யும் அரிவாளாகவும், தொழி லாளர் சிக்கலை ஓங்கியடித்து உடைக்கும் சுத்தியலாகவும் ஜன சக்தி வளர்ந்திருக்கிறது. மற்றொரு இதழ் தீக்கதிர் நாளிதழாக வெளிவந்துகொண் டிருக்கிறது. இதழ்களைக் கருவியாகப் பயன் படுத்தித் திராவிட முன்னேற்றக் கழகம் தமிழகத்தின் மிகப் பெரிய இயக்கமாக வளர்ந்தது. மக்கள் நெஞ்சத்தில் நேரிடை யாகப் புகுந்து கொள்ள இந்த இயக்கத் தலைவர்கள் எல்லோரு மே இதழ்களைத் தொடங்கினர். அவை எண்ணிக்கையில் கூடிய போதும் விற்பனையில் குறைந்திருக்கவில்லை. அரசியலோடு இலக்கியத்தைக் கலந்து இந்தப் புதுமைக் கலப்பிலே இதழ் களையே மேடைகளாக்கினர். இதற்குப்பின்பு எல்லாக் கட்சியி னரும் இந்தக் கலையைக் கையாளத் தொடங்கினர். திராவிடன் *(1946)*; போர்வாள் *(1947)* மாலைமணி *(1949)* போன்ற தி. மு. க. இதழ்களைத் தொடர்ந்து அண்ணாவின் திராவிடநாடு அரியதொரு கருத்துப் பெட்டகமாக வெளிவந்தது. கடைகளில் காத்துக்கிடந்தும், வரிசையில் நின்றும் திராவிட நாடு இதழை வாங்கியுள்ளனர். கலைஞரின் முரசொலி *(1954)* இலக்கிய நடை யில் ஏறுபோல் பீடுநடை போடும் அரசியல் இதழாகும். தி. மு. க. கட்சியின் அதிகார பூர்வ ஏடாக நம்நாடு, கழகக் குரல் ஆகியவை மிகச் சிறப்பாக வெளிவந்தன. செங்கோல் *(1949)* இதழில் ம. பொ. சிவஞானம் இலக்கியத் தென்றலையும், அரசி யல் சாட்டையடிகளையும் இணைத்துக் காட்டினார். காங்கிரசு இயக்கத்தினர் அரசியலை இலக்கியமாக வடித்துத் தரும் கலை யைக் கற்றுக் கொண்ட பின்பு பாரதம் *(1958)*; சர்வாதிகாரி *(1959)*; குறிஞ்சி *(1961)* தேசியமுரசு *(1962)*; காங்கிரசு கர்ஜனை

(1967); கடலோசை (1967); காங்கிரசு முரசு (1967); செய்தி; காங்கிரஸ் போன்ற இதழ்களை வெளியிட்டனர். நாத்திகம் (1958); சிகப்புநாடா (1966); அலைஓசை போன்ற சில இதழ்கள் அரசியல் காற்று அடிக்கும் திசையை அனுசரித்து அங்குமிங்குமாக ஓடித் திரிகின்றன. கட்சிகளின் பிளவிலே புதிய இதழ்களும் தோன்றியுள்ளன. தென்னகம்; அண்ணா; நீதியின்குரல்; நீட்டோலை போன்ற இதழ்கள் பிளவில் பிறந்தவை. இன்றைய அரசியல் கட்சி இதழ்களின் எண்ணிக்கை குறைந்தே காணப்படுகிறது.

ஜனசக்தி (1943); திராவிடன் (1946); தோழன் (1947); போர்வாள் (1947); மாலைமணி (1949); செங்கோல் (1949); பேரிகை (1952); மறுமலர்ச்சி (1952); தீச்சுடர் (1953); சங்கொலி (1954); முரசொலி (1954); மன்றம் (1955); திராவிடக் குரல் (1955); திராவிட நாடு; திராவிடஏடு (1957); பாட்டாளி (1957); நாத்திகம் (1958); பாரதம் (1958); சர்வாதிகாரி (1959); யுகப் புரட்சி (1960); சாந்தி (1961); குறிஞ்சி (1961); எழுச்சி (1961); தேசியமுரசு (1962); சோசலிஸ்ட் (1962); சமநீதி (1963); திருவிளக்கு (1963); தீக்கதிர் (1963); காஞ்சி (1964); செங்கொடி (1966); காஞ்சிப் பாதை (1966); சிகப்பு நாடா (1966); தமிழ் முழக்கம் (1966); தனியரசு, விடிவெள்ளி, குடியாட்சி, காங்கிரஸ், கர்ஜனை, கடலோசை, சிந்தனை, தியாகமணி, காங்கிரஸ் முரசு (1967); விடிவானம் (1968); கழகக்குரல் (1970); எண்ணம் (1970); தென்னரசு; உதயசூரியன் (மதுரை); காங்கிரஸ். மறுமலர்ச்சி (திருச்சி); அலை ஓசை; அன்னைநாடு; இனமணி; செய்தி, உரிமைக்குரல்; நம்நாடு; அண்ணா; நீதியின் குரல்; தென்னகம் இவையெல்லாம் தமிழகத்தில் அரசியல் நடத்திய இதழ்களாகும்.

## மகளிர் — சிறுவர் இதழ்கள்

மகளிர் முன்னேற்றம் தமிழகத்தின் பழமையான சிந்தனைகளில் ஒன்றாக அமைந்துள்ளது. மகளிர் இதழ் அமிர்தவசனி 1860-ஆம் ஆண்டிலேயே பெண்கள் நலம் நாடும் இதழாக வெளி வந்திருக்கிறது. சமுதாயத்தில் பெண்கள் முன்னேற்றம் அடிப்படையான ஒன்றாகக் கருதப்பட்டது. நாட்டு நடைமுறைகள் அனைத்தும் வீட்டுக்குள் தொடங்குவதை உணர்ந்தே மகளிர்க்

கான இதழ்கள் பல தமிழகத்தில் உலாவந்துள்ளன. பெண்கல்வி, விதவை மறுமணம் போன்ற சமூதாயச் சீர்திருத்தக் கொள்கை களைப் பெண்கல்வி *(1912)*; மாதர் மறுமணம் *(1939)*; புதுமைப் பெண் *(1947)*; போன்ற இதழ்கள் வலியுறுத்தின. ஆங்கில மொழி யில் வெளியாகும் பெமினா; ஈவ்ஸ்வீக்லி போன்று தமிழில் மங்கை; மங்கையர் மலர் மாதவிதழ்கள் வெளிவருகின்றன, ஆண்களுக்கு இணையாக எல்லாத்துறையிலும் பணியாற்றும் பெண்களை அறிமுகப்படுத்திப் பெண்களுக்கான பயனுள்ள வீட்டுக் குறிப்புகளையும் மங்கை அளித்துக்கொண் டிருக்கிறது.

**மகளிர் இதழ்கள்**

அமிர்த வசனி *(1860)*; ஜனவிநோதினி *(1870)*; மஹா ராணி *(1887)*; விவேக போதினி, மாதர் மித்திரி *(1887)*' பெண்மதி போதினி *(1891)*; விநோதரச மஞ்சரி *(1891)*. சுகுண போதினி *(1893)* மாதர் மனோரஞ்சனி *(1899)*; மாதர் மித்திரி *(1899)*; சக்கரவர்த்தினி *(1905)*; தமிழ் மாது *(1906)*; மாதர் போதினி *(1911)*; பெண் கல்வி *(1912)*; சிந்தா மணி *(1924)* தமிழ் மகள் *(1928)* மாதர் மறுமணம் *(1936)* கிரக லட்சுமி *(1937)*; புதுமைப் பெண் *(1947)*; பாக்கியலட்சுமி *(1961)*; மண்மகள் *(1965)*; காதம்பரி *(1965)*; மங்கை; மங்கையர் மலர், சுமங்கலி, மருதாணி.

நாகர் கோவிலில் 1840-ஆம் ஆண்டில் பாலதீபிகை சிறுவர் இதழ் வெளியிடப்பட்டுப் பனிரண்டு ஆண்டுகள் நடந்தது. பாலர் பத்திரிகை *(1937)* வெளியிடப்பட்ட பின்பு இதழியலில சிறுவர் துறையும் இணைந்துவிட்டது. சிறுவர் இதழ்களைப் பொறுத்த வரை 1940-ஆம் ஆண்டு குறிப்பிடத்தக்கது. இக்கால கட்டத்தில் பாப்பா மலா, பாப்பா, அணில், ஜில்ஜில், சித்திரக்குள்ளன், மத்தாப்பூ, சிறுமி, அம்பி, மான், மயில், முயல், துப்பாக்கி, டுமீல், மிட்டாய், சாக்லேட்டு, சங்கு, கோமாளி, சிறுவர் முரசு, பாலர் ராஜ்யம், பூஞ்சோலை, டமாரம் முதலிய இதழ்கள் தோன்றியுள ளன. இவற்றில் பெரும்பாலானவை புதுக்கோட்டையிலிருந்து வெளிவந்துள்ளன. சிறுவர்களுக்கென்று தனித்த இதழ்களும், இதழாளர்களும் தோன்றினர். இன்றைய நடுவயதினர் சிறுவய தில் ஆடிஓடிச் சென்று அணில் *(1944)*; டமாரம் *(1948)* போன்ற இதழ்களை வாங்கிப் போட்டியிட்டுப் படித்தவர்களே. ஏராள மான நூல்களை எழுதிக் குவித்த தமிழ்வாணன் சிறுவர் எழுத்

தாளராகத்தான் அறிமுகமானார். கல்கண்டு சிறுவர் கையி ருந்து பின்புதான் விடுபட்டுத் திரட்டு இதழ்கள் வரிசையில் இடம் பெற்றுள்ளது. இத்துறையில் சிறப்பான இடம் பெற்றுள்ள அழ. வள்ளியப்பா பாப்பா மலர்; டமாரம்; சங்கு; பூஞ்சோலை ஆகிய சிறுவர் இதழ்களை நடத்தினார் அம்புலிமாமா (1947); கண்ணன் (1950); பாலமித்திரா (1978); ரத்தினபாலா (1978); ராக்கி (1979) இப்படியாகச் சிறுவர் இதழ்கள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. அம்புலிமாமா பல மொழிகளில் வெளி வருகிறது.

**சிறுவர் இதழ்கள்**

பாலதீபிகை (1840) பாலர் பத்திரிகை, பாலசிந்தாமணி (1935) சிறுபிள்ளையின் நேசத்தோழன் (1941) அணில் (1944) பாப்பா (1944); அம்புலிமாமா (1947); டமாரம் (1948); கண்ணன் (1950); தமிழ்ச்சிட்டு (1966); அரும்பு (1966); இந்திர ஜால காமிக்ஸ் (1966); பாலர் பூங்கா (1967); பூந்தோட்டம் (1967); பாலமித்ரா (1978); ரத்தினபாலா (1978); ராக்கி 1979); கோகுலம் (1982).

## வார – மாத இதழ்கள்

இந்தியாவில் விற்பனைச் செல்வாக்குடைய வார இதழ் களில் சில தமிழ் மொழியில் வெளிவருகின்றன, ஓராண்டிற்கு முன்பு தொடங்கிய இதழ்கள்கூட இலட்சக் கணக்கில் விற்கத் தொடங்கியுள்ளன. வார, மாத இதழ்களின் வாசகர்கள் கடந்த ஐந்து ஆண்டுகளில் இரண்டு மடங்காகியுள்ளனர் பொழுது போக்குவதையே கருவாகக் கொண்டு தமிழில் வார, மாத இதழ் கள் வெளியாகின்றன. இனக்கவர்ச்சியும் திரைப்படமும் இவை களின் இன்றியமையாத பகுதிகள். இன்றைய வார இதழ்கள் படிப்புப் பயனைவிடப் பார்வைப் பயனையே அதிகமாகத் தந்துகொண் டிருக்கின்றன.

பிரசண்ட விகடன், சுதேசமித்திரன் (வாரப்பதிப்பு), பொன்னி, ஹநுமான் போன்ற பழைய இதழ்களின் அமைப்பு முறை இன்றைய இதழ்களிலிருந்து வெகுவாக மாறியிருந்தது. அன்றைய வார, மாத இதழ்களில் நகைச்சுவைப் பகுதி மிகுதி

யாக இடம்பெற்றிருந்தன. எந்தச் செய்தியினையும் நகைச் சுவை வடிவத்தில் சொல்லிவிடுகின்ற முறையை இதழ்கள் பின் பற்றத் தொடங்கிய பின்பு 'விகட இதழ்கள்' பல தோன்றின. மகாவிகட தூதன் (1886) கோமாளி (1895) விகட தூதன் (1899) விநோத விசித்திரப் பத்திரிகை (1900) வினோதன் (1923) ஆனந்த விகடன் (1926) ஆனந்த விஜய விகடன் (1928) விநோத விகடன் (1931) பிரதாப விகடன் (1933) விகட ரத்னம் (1941) குமார விகடன் இப்படியாக விகட இதழ்கள் சிரிப்புத் தோர ணங்களைப் பரப்பி மகிழ்வித்தன. இதழ்களில் நகைச் சுவைப் பகுதிகள் இடம் பெற்ற பின்பு அதன் வரவேற்பை உணர்ந்த வாசன் முழு நகைச்சுவை இதழ் ஒன்றைத் தொடங்க விரும்பி னார். விகடகவி பூதூர் வைத்திய நாதன் மகாவிகட தூதன் (1886); ஆனந்த விகடன் ஆகிய நகைச்சுவை இதழ்களைத் தொடங்கியிருந்தார். வாசன் ஆனந்த விகடனை விலைக்கு வாங்கி 1928-இல் மாத இதழாகத் தொடங்கினார்.* பின்பு ஆனந்த விகடன் மாதம் இருமுறையாகி வார இதழாயிற்று. இடைக் காலத்தில் விகடன் பல்வேறு புதிய துறைகளை அறிமுகப் படுத்தியுள்ளது. கல்கி (1941) மாதம் இருமுறை-மாதம் மும் முறை-வார இதழ் என வளர்ச்சி பெற்றுள்ளது. புதினங்களைத் தொடர்ச்சியாக வெளியிடத் தொடங்கி அத்துறையில் புரட்சி செய்தவர் கல்கி. அரசியல் பாடங்களைத் தலையங்கங்களாக நடத்திவந்த கல்கி தேசியச் சிந்தனைகளை வார இதழ்களில் ஊட்டியவராவார். கல்வித்தந்தை அழகப்ப செட்டியார் முயற்சி யில் குமுதம் (1947) தோன்றியது 'எத்தனையோ இதழகள் வரலாம்; போகலாம்; ஆனால், நான் எப்பொழுதும் ஓடிக் கொண்டேயிருப்பேன்' என்பதுபோல் அமைப்பு, விற்பனை, செல்வாக்கு இவற்றில் மார்க்கண்டேயனாய்க் காட்சியளிக்கிறது குமுதம். இந்திய வார இதழ்களில் இன்றும் விற்பனை முன்னணி யில் இருப்பது குமுதம் இதழே. சாவியின் முத்திரை பதிந்த தினமணிக் கதிர் (1955) தினமணி நாளிதழின் இணைப்பாக வெளிவருகிறது. மாத இதழ்களில் பழமைச் செல்வாக்குடைய கலைமகள் (1932) இதழ் தரமும், தமிழ் வளமும் தொடக்க கால அமைப்பாகக் கொண்டிருந்தது. கலைக்கதிர் (1948) அறிவி

---

* ஆனந்த விகடன் என்ற பெயரை ஒரு எழுத்துக்கு 25 ரூபாய் வீதம் 200 ரூபாய் கொடுத்து வாங்கினார் வாசன்.

—சோமலெ. தமிழ் இதழ்கள் பக் - 39

யல் ஏடாகப் புகழடைந்துள்ளது. அதிக விற்பனையாகின்ற மற்றுமொரு வார இதழ் வாராந்திர ராணி (1960) குடும்பப் பத்திரிகை என்ற பெயருடன் வளர்ந்து வருகிறது. இதன் அடிச்சுவட்டில் அண்மையில் தேவி (1978) என்ற வார இதழும் வெளியாகிவிட்டது. மஞ்சரி (1947) மாதஇதழ், கல்கண்டு (1948) வாரஇதழ் இரண்டும் தமிழில் திரட்டு இதழ் (Digest Magazine) வகையில் சிறக்கின்றன. துக்ளக் அரசியல், சமுதாயச் சிக்கல்களைப் போட்டு உடைத்துக் காட்டி, அங்கத இதழாக வருகிறது. அண்மைக் கால வெளியீடுகளாகிய குங்குமம் (1978); இதயம் பேசுகிறது (1978); சாவி (1979) ஆகிய வார இதழ்கள் வாசகர்களைக் கவரும் எல்லாக் கலைகளையும் கையாளுகின்றன. எந்த இதழ்கள் எப்படியிருந்தாலும் வார இதழ்களின் வளர்ச்சிபாராட்டும் வகையில் அமைந்திருக்கிறது.

பிரசண்ட விகடன் (1925); ஆனந்த விகடன் (1926). சுதேசமித்திரன் (1929); கலைமகள் (1932); வானொலி (1939) கல்கி (1941); குமரிமலர் (1943); குமுதம் (1947); அம்புலி மாமா (1947); பொன்னி (1947); மஞ்சரி (1947): காதல் (1947); அமுத சுரபி (1947) கல்கண்டு (1948); கலைக்கதிர் (1948); கண்ணன் (1950)); தினமணிக் கதிர் (1955); குடியரசு (1957): தாமரை (1958); வாராந்திரி ராணி (1960); தீபம் (1965); கணையாழி (1965); கண்ணதாசன்; முத்தாரம்; சத்திய கங்கை; உமா; கோகுலம்; துக்ளக்; குங்குமம் (1978); பால மித்ரா (1978) இதயம் பேசுகிறது (1978) அலிபாபா (1978); மூக்குத்தி (1978); சாவி (1979); தேவி (1979);

## புலனாய்வு இதழ்கள்

தமிழ் இதழியல் துறையில் தனித்த இடம் பெற்றுப் புலனாய்வு இதழ்கள் வளர்ந்து வருகின்றன. அரசியல் தான் தோன்றித்தனங்களும், சமுதாயச் சீர்கேடுகளும் துணிச்சலாக இவ்விதழ்களில் வெளிச்சமாக்கப்படுகின்றன. பொதுமக்களிடையே பெருத்த ரவேற்பைப் பெற்று வரும் புலனாய்வு இதழ்களின் அண்மைக் கால வளர்ச்சி குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைந்

துள்ளது பழையகாலத்தில் 'இராமபாணம்' என்றதோர் இதழ் இலஞ்சம், சமூகக் கொடுமைகள் பற்றித் துணிவாக எடுத்துக் கூறியுள்ளது. இன்றைய புலனாய்வு இதழ்களில் மூடநம்பிக்கைகள் பற்றியும் எடுத்துரைப்பது மிகச்சிறப்பாக அமைந்துள்ளது. துக்ளக் ஜூனியர் விகடன், தராசு, தங்கக் கருடன், விசிட்டர், விசிட்டர் லென்ஸ், கேடயம், எகஸ்ரே ரிப்போர்ட் போன்ற இதழ்கள் இத்துறையில் சிறந்து விளங்குகின்றன. இவ்விதழ்களின் புலனாய் வுத்தாக்கம் இன்றைய எல்லா இதழ்களிலும் பரவத் தொடங்கியுள்ளது.

## பிறதுறை இதழ்கள்

இதுகாறும் கூறிய துறைகளைத் தவிர்த்து வேறுபல துறைகளிலும் தமிழ் இதழ்கள் தோன்றியுள்ளன மருத்துவம், சட்டம், வணிகம்,. தொழில், சோதிடம், கல்வி, அறிவியல், கிராம நலம். வெளிநாட்டுத் தகவல், உள்நாட்டு வளர்ச்சி, திரைப்படம் போன்ற துறைகளில் ஏராளமான இதழ்கள் வரலாறு படைத்துள்ளன.

**மருத்துவம் :**

அகத்தியவர்த்தமானி (1890);சுகாதார போதினி (1891); ஆரோக்கியவழி; ஆயுர் வேத பாஸ்கரன் (1908); வைத்திய போதினி (1910); நல்வழி (1911); சித்தர் திருஉள்ளம் (1920); தமிழ் வைத்தியக்களஞ்சியம் (1922); தமிழ் வைத்தியம் (1923); தன்வந்தரி (1923) மருத்துவன் (1929); சித்தர் களஞ்சியம் (1934); வைத்திய சந்திரிகா (1938); ஹோமியோபதி (1946); ஹோமியோபதி மித்திரன் (1950);ஆரோக்கிய மார்க்கம் (1956); ஆரோக்கியம் (1962); மூலிகைமணி (1964); மூலிகை ரகசியம் 1965); முதல் சித்தன் (1966); ஹோமியோ சிந்தனை (1979);

**சட்டம்**

சித்தார்த்த சங்கிரகம் (1887); மாதாந்தர சட்டப் பத்திரிகை (1893); வக்கீல் குமாஸ்தா ஜர்னல் (1914); ஹைக்கோர்ட்டுத் தீர்மானங்கள் (1914); பத்திரலேகரி (1922); வக்கீல் (1944); லாயர்.

**வணிகம்**

வர்த்தக மித்திரன் (1916); தனவணிகன் (1930); வர்த்தக ஊழியன் (1932); வியாபாரக் குரல் (1954); வர்த்தகக் குரல் (1964); வணிகச் செய்தி (1949); விற்பனைவரித் தகவல் (1964); வர்த்தக உலகம் (1967).

**தொழில்**

விவசாய தீபிகை (1904); விவசாய வர்த்தனி (1907) கிருஷிகன், (1909); ஏலவிவசாயி (1926) மேழிச் செல்வம் (1943); உழவர் நாடு (1949): விவசாய உலகம் (1961) உரமும் பயிரும் (1962); உழவுத் தொழில்; ஏர்முரசு (1967); விவசாய விஞ்ஞானம்; டெய்லி திருப்பூர்க் காட்டன் பிரஸ் (1947); டைலர் (1948); நடிகன் குரல் (1954) தையற் கலை; உஷா தையல் கிளப்; மோட்டார் (1958); டிரான்ஸிஸ்டர் மெகானிசம்; மோட்டார்த் தொழில் (1966); கைத்தறி; நெசவாளி; பனைச் செல்வம்; செய்தி மடல் (சக்தி சர்க்கரை ஆலை); என். ஜி ஓ. கூட்டுறவு; பாண்டியன் போக்குவரத்துக் கழக இதழ்; காமராஜர் பல்கலைக் கழக ஆசிரியர் மன்ற இதழ்; தொடக்கப் பள்ளி ஆசிரியன்.

**சோதிடம்**

ஜோதிட கலாநிதி (1923); மாத ஜோதிடம் (1949); புது மலர் (1949); ஜோதிட போதினி (1949); ஜோதிஷமணி (1953); மீனம் (1962); ஸ்ரீ சிந்தாமணி சோதிட மலர் (1962); ஸ்ரீ கற்பக மணி (1967); விதி; தலையெழுத்து; உங்கள் எதிர்காலம்; எதிர்காலம்; ராசி; பால சோதிடம்; பொய்யா மொழி; ஸ்ரீ சக்கரவாணி; ஜோதிடக் கடல்.

**கல்வி**

நடுத்தர - உயர்தரப் பள்ளி நண்பன் (1879); கிராமப் பள்ளி ஆசிரியன், உபாத்தியாயர் (1887); மாணவர் போதகன் (1892); தமிழ்க் கல்விப் பத்திரிகை (1897); நல்லாசிரியன் (1905); வித்தியாவிகாரினி (1908); தொழில் கல்வி (1910); கல்விக் கடல் (1924); தொழிலாசிரியன் (1927); அனுபவ ஆசான் (1928); பாலர் கல்வி (1936); முதியோர் கல்வி (1951); கல்விக் கதிர் (1955); புத்தக நண்பன் (1961); கல்வி (1966); ஆசிரியர் குரல், நூல் (1966) தமிழகக் கல்வி (1967).

**அறிவியல்**

தமிழ்க்கடல் (1933); மணிமாலை (1935); கலைக் கதிர் (1945); தோல் விஞ்ஞானம் (1962); இளம் விஞ்ஞானி (1965); களஞ்சியம் (1979).

**கிராமநலம்**

கிராமபரிபாலனம் (1923); கிராம வாழ்க்கை (1924); கிராம பஞ்சாயத்து (1925); கிராமானுகூலன் (1926) கிராம முன்னேற்றம் (1930) கிராம ஊழியன் (1937); கிராமப் பஞ்சாயத்துப் பத்திரிகை (1938); கிராம தூதன் (1939); கிராம இயக்கம்; கிராம ராஜ்யம் (1945) கிராம சேவை (1946); பஞ்சாயத்துச் செய்தி (1953); கிராம நலம் (1955); சேம நலம் (1962).

**வெளிநாட்டுத் தகவல்**

அமெரிக்கன் ரிப்போர்ட்டர் (1950); சோவியத் நாடு (1953); இதுதான் பிரிட்டன் (1959); சோவியத் பலகணி (1967); புதிய ஜெர்மனி (1967); சூரியர் (1967); சோவியத்து யூனியன் (1987)

**உள்நாட்டுத் தகவல்**

திட்டம்; தாய்நாடு (நடுவணரசு); தஞ்சைச் செய்திக்கதிர் (1956); தஞ்சைமணி (1956); புதுவைச் செய்திகள் (1956); கன்னியாகுமரி (1957); வஞ்சிநாடு (1959); மாநிலம் (1965) தமிழரசு (1970)

**திரைப்படம்**

முதல் தமிழ்த் திரைப்படம் 1931 – இல் 'காளிதாஸ்' என்ற பெயரில் வெளிவந்தது. முதல் திரைப்பட இதழ் சினிமா உலகம் என்ற பெயரில் 1935 – இல் வெளிவந்துள்ளது. அடுத்து கே. சுப்பிரமணியம் · பிலிம் மெயில் என்ற இதழை வெளியிட்டுள்ளார்.

நாடோடி (1938); பேசும்படம் (1941); சினிமாக் கதிர் (1952); தமிழ்ச்சினிமா (1953); தென்றல் திரை (1953); சினிமா ஸ்டார் (1954); மதி ஒளி (1955); குண்டூசி (1957); நாரதர் (1958); இந்து நேசன் (1958); கலைப் பொன்னி (1959) திரைஉலகம் (1960) திரைச் செய்தி (1963); திரைப் பொன்னி (1965); திரை நீதி (1965); கலை நீதி (1966); பொம்மை

*(1966); கலைப் பூங்கா (1970); பிலிமாலயா; சினிரமா; ஜெமினிசினிமா; சினிமாஎக்ஸ்பிரஸ், சினிமா மெயில்; சினி மாலயா; திரைச்சுவை.*

காணொளிச் சுருளில் (Video cassette) ஏக்நாத் விடியோ மேகசின் என்றதோர் புதுமை இதழ் சென்னையிலிருந்து வெளி வரத் தொடங்கியுள்ளது. ஓர் இதழின் உள்ளடக்கங்களான திரைப்படக் கலை, அரசியல் செய்திகள், சமையல் குறிப்புகள், பேட்டிகள், பெண்கள் பகுதி போன்ற பகுதிகளை இச்சுருளில் பட இதழியலாகக் காணமுடிகிறது. இந்தியாவில் இஃதோர் புதுமையான முயற்சியாகும்.

## பிறமா நிலத் தமிழ் இதழ்கள்

தமிழகம் தவிரப் பிற மாநிலங்களிலிருந்தும் தமிழ் இதழ் கள் வெளிவந்துள்ளன. பராட்டிய முரசு, போல்டு இந்தியா (பம்பாய்), சுடர் (தில்லி), தினத்தந்தி, தினச்சுடர் (பெங்களூர்) முத்தமிழ் (கொச்சி),கேரளத்தமிழ் (திருவனந்தபுரம்)கோட்டயம் தமிழ்மன்றம் (கோட்டயம்) தமிழ் மலர் (கள்ளிக் கோட்டை).

## அயல்நாடுகளில் தமிழ் இதழ்கள்

தமிழ் இதழ்களின் பிறப்பிடம் தமிழகத்தைத் தாண்டியும் அமைந்திருக்கிறது. குறிப்பாகத் தமிழர்கள் குடியேறியுள்ள நாடு களில் சென்ற நூற்றாண்டு தொடங்கித் தமிழ் இதழ்கள் எண்ணிக்கையில் அதிகமாகத் தோன்றியுள்ளன. இவ்வகையில் மலேசியா - சிங்கப்பூர் - பினாங்கு - இலங்கை ஆகியன தமிழர் நாடாகவே காட்சியளிக்கின்றன. தமிழகத்தில இதழ்கள் எந் தெந்தத் துறைகளிலெல்லாம் வளர்ச்சி கண்டனவோ, அந்தந்தத் துறைகளிலெல்லாம் இலங்கை, மலேசியா நாட்டு இதழ்களும் வளர்ச்சியடைந்தன.

**இலங்கை**

சிலோன் கெஜட் (1802) (தமிழ்,சிங்களம்,ஆங்கிலம் மூன்று பகுதிகள்); உதய தாரகை (1841) (யாழ்ப்பாணத்து முதல் தமிழ் இதழ்); இலங்கை நேசன் (1848); பாலியர்நேசன் (1859);

சத்தியவேத பாதுகாவலன் (1876); இந்து சாதனம் (1889); திராவிட கோகிலம் (1889); ஞான தீபம் (1892) (முகமதியர் இதழ்); விவேகானந்தன் (1902); குரு சந்திரோதயம் (1908); ஆதிதிராவிடன் (1919); சித்திரம்) (1925); சரஸ்வதி (1927); இந்தியகேசரி (1928); வீரகேசரி (1930); ஞாயிறு (1933); ஆசிரியன் (1955).

தினகரன், இலங்கை நேசன், சுதந்திரன், இலங்காபிமானி; தினபதி, உதய பானு, ஈழமுரசு, சுதேசஈழநாடு, நாட்டியன், சைவாபிமானி, ஞானப் பிரகாசம், ஞான சித்தி வித்தகம், விவேக திவாகரன், ஆத்ம ஜோதி, சிவத் தொண்டன், இந்து இளைஞன், முஸ்லிம் செய்தி, ஐக்கிய தீபம், திரைக் கலை, சிந்தாமணி, ஜோதி, தேசாபிமானி, முரசொலி, ஜன சக்தி, தீப்பொறி, விடுதலை, கதம்பம், நூல் நிலையம், விவேகி, மல்லிகை, செந்தாமரை, சங்கம் போன்ற எண்ணற்ற இதழ்கள் இலங்கை, யாழ்ப்பாணம், கண்டி ஆகிய இடங்களிலிருந்து வெளி வந்தன.

பிற்காலத்தில் புகழ் பெற்றவை: வீரகேசரி, தினகரன், தினபதி, தந்தி, மித்ரன்; (நாளிதழ்கள்); ஈழநாடு, செய்தி, சுதந்திரன் (வார இதழ்கள்); குமரன் கலைச் செல்வி, விவேகி, மல்லிகை, இளம்பிறை; (மாத இதழ்கள்)

ஈழ விடுதலை இயக்கங்களின் சார்பில் பொதுமை, நட்புறவுப் பாலம், விடுதலைப் புலி, ஈழச் செய்தி, வீரவேங்கை முதலிய இதழ்கள் வெளிவந்துள்ளன.

**சிங்கப்பூர் - மலேசியா இதழ்கள்**

சிங்கை வர்த்தமானி (1876) தங்கை நேசன் (1878) சிங்கை நேசன் உலக நேசன் (1887) இந்து நேசன், பினாங்கு விஜய கேதனன் (1888) தேசாபிமானி (1896) வர்த்தமானி (1897) தமிழ் நேசன் (1924); தமிழன், மலாய்நாடு (1930) முன்னேற்றம் (1931) சீர்திருத்தம், தேசநேசன் (1933) தமிழ்முரசு (1935) தேசாபிமானி (1937) தமிழ்க் கொடி (1939) ஜெயமணி (1941) சுதந்திரோதயம், யுவபாரதம், சிரம்பான் செய்தி (1942) புதுஉலகம் (1943) மலாய்வர்த்தமானி, ஜனநாயகம் (1946) தமிழ்ச்சுடர் (1948) சோலை (1951) நாகரிகம் (1952) தேச பக்தன் (1954) சிந்தனை, திருமூலம் (1955) தமிழ்க் குயில் (1956)

மலைநாடு, நவரசம் (1958) மாதவி (1959) பொன்னி (1966) இவற்றுடன் தமிழீயம், உலகத்தமிழர் குரல், தமிழ் ஒளி, தமிழரசி, வானம் பாடி, உதயம், சங்கமணி, சங்கமுரசு, புதிய சமுதாயம், சமநீதி, திரை நிலா, திரையொளி, மனோகரன், கண்ணோட்டம், கொள்கை முழக்கம், ஜெயபேரிகை, போன்ற இதழ்களும் சிங்கப்பூர், பினாங்கு, கோலாம்பூர் ஆகிய இடங் களிலிருந்து வெளிவந்துள்ளன.

கோ. சாரங்கபாணி மலேசிய நாட்டின் செய்தித்தாள் மன்னராகத் திகழ்பவர். இவரது தமிழ்முரசு மலேசியா நாட்டுத் தமிழர்களின் இல்லங்களை அன்றாடம் அலங்கரிக்கும் நாளிதழ். தமிழ்மலர், தமிழ்நேசன் ஆகிய நாளிதழ்களும் புகழ்பெற்றுள் ளன.

இலண்டனிலிருந்து இலண்டன் முரசு, தமிழன் குரல், தமிழ் மலர்ச்சி ஆகிய இதழ்கள் வெளியாகின்றன அந்தமானிலிருந்து அந்தமான் குரல், அந்தமான் எக்ஸ்பிரஸ், அந்தமான் இளைஞர் முழக்கம், தீப்பரவட்டும் ஆகிய இதழ்கள் வெளிவந்துள்ளன. பாரிசிலிருந்து பாரி மலர்; வாஷிங்டனிலிருந்து குமரி; கொலம் பியாவிலிருந்து வாழும் தமிழ் உலகம்; தென்னாப்பிரிக்காவி லிருந்து வணக்கம்; மொரீசியசிலிருந்து ஒளி ஆகிய இதழ்களும் வெளிவந்துள்ளன.

பகுதி 3

# செய்தித்தாள் அமைப்பு

## [NEWSPAPER ORGANIZATION]

செய்தித்தாள் நிறுவனம் ஓய்வு என்பதை அறிந்து கொள்ளாமல் நாள் பூராவும் — ஆண்டு முழுவதும் பணியாற்றிக் கொண்டிருக்கும் அமைப்பாகும். பத்துப் பஞ்சாலைகளை நடத்திவிடலாம்; ஒரு பத்திரிக்கையை நடத்துவது எளிதன்று. நிருவாகம் சிறந்திருக்க வேண்டும்; பொருளாதாரம் நிறைந்திருக்க வேண்டும்; உற்பத்திப் பொருள் தரமாக வெளிவர வேண்டும். அலுவலகத்தாரும் செய்தியாளர்களும் உள்ளும் புறமுமாக ஓடியாடி ஓய்வின்றிப் பணியாற்றிய பின்புதான் அன்றாடச் செய்தித்தாள் அனைவருக்கும் கிட்டுகிறது. இதழ்களை எடுப்பதும், படிப்பதும், எறிவதும் எல்லோருக்கும் எளிதாயிருக்கலாம். ஆனால் அவற்றை உருவாக்கித் தரும் அமைப்பிற்கு, 'அறிவாலும் அழகாலும் அனைவரையுங்கவரும் குழந்தை' யொன்றை ஈன்றெடுக்கும் தாயின் பொறுப்பும் கடமையும் சேர்ந்திருக்கின்றன.

# செய்தித்தாள் நிருவாகம்

எந்தவிதமான' வெளி நிர்ப்பந்தங்கள் இல்லாமல் தானாகவே திறமையுடனும் நேர்மையுடனும் இயங்கும் நிரு வாக இயந்திரமாகப் பத்திரிக்கைகள் மாறவேண்டும. பொது வாக ஜெர்மனியிலும் பெருமளவிற்குப்பிரிட்டனிலும் இத்தகைய போக்கைக் காண முடிகிறது.

— க. சந்தானம்

செய்தித்தாள் தயாரிப்பின் உற்பத்திச் செலவையும், மக்க ளுக்குக் கிடைக்கின்ற பயன்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் எல்லா நாடுகளிலும் மலிவான சரக்குச் செய்தித்தாள்களே என் பது தெளிவாகும். அவை குறைந்த செலவில் மக்களுக்குக் கிட் டும் நிறைந்த பொருளாக (Cheap Commodity) அமைந்திருக் கின்றன. காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலர்ந்து இரவில் வாடிவீடுகின்ற மலர்களை யொப்ப, இன்றை யச் செய்தித்தாள் நாளையக் கழிவுத்தாளாகி விடுகின்றது (To-day's Newspaper to - morrow's waste paper). அதன் ஒப்பற்ற வாழ்வு ஒருநாள்தான். எனினும் அந்த ஒருநாள் வாழ்விலும் உலகைத் தழுவிய பின்பே தன் வாழ்க்கையை முடித்துக்கொள் கிறது. அதறகுரிய தகுதியும் விரைவும் செய்தித்தாள் பெற் றிருக்க வேண்டும். பொருளாதாரத்தில் செழித்து, நிருவாகத் தில் சிறந்திருக்கின்ற செய்தித்தாள் நிறுவனங்கள்தாம் தரமான நாளிதழ்களைத் தயாரித்து விரைவாகக் கிடைக்குமாறு செய் கின்றன. நலல செய்திகளால் நாளிதழ் சிறப்படைகிறது; நல்ல நாளிதழால் நிருவாகம் பெருமையடைகிறது. டைம்ஸ் ஆப் இந்தியா, ஆந்திரப் பிரபா, மலையாள மனோரமா, தினத்தந்தி முதலிய செய்தித்தாள்களின் நிலைத்த விற்பனைக்கு அவைகளின் சிறந்த நிருவாக அமைப்பும் ஒரு காரணமாகும்.

## இதழ்களும் பொருளாதாரமும்

செய்தித்தாள் ஓர் உற்பத்திப் பொருள். எனவே பெருத்த மூலதனம் இங்கே முடங்கிக் கிடக்கின்றது. செய்தித்தாள்களை எவரும் தொடங்கிவிடமுடியும்; ஆனால் எல்லோரும் தொடர முடியாது. பெருத்த மூலதனமும், சிறந்த நிருவாக அமைப்புமே செய்தித்தாள் தொடர்ந்து நடைபெறத் தோள்கொடுத்து நிற்பவை. கடன் பெற்று நடத்துகின்ற தொழில் நிறுவனங்கள் வரிசையில் செய்தித்தாள் நிறுவனம் இடம்பெறலாகாது. எந்த விதமான வெளிநிர்ப்பந்தங்களும் கட்டுப்பாடுகளும் இல்லா திருக்க வேண்டுமானால் செய்தித்தாள்கள் சொந்த மூலதனத்

தில் நடைபெறவேண்டும். சுருங்கக் கூறின், நாளிதழ்களும் அவற்றின் பொருளாதாரமும் ஒரு நாணயத்தின் இரு பக்கங் களைப் போன்று அமைந்துள்ளன. விற்பனைச் சந்தையில் பிற இதழ்களுடனான போட்டி தவிர்க்க முடியாது. எனவே விளம் பரத்திற்கென ஒரு தொகையை இதழ்கள் ஒதுக்க வேண்டிய திருக்கிறது. நகரின் மையத்தில் சொந்தக் கட்டிடம் வேண்டும். உயர் அலுவலர் முதற்கொண்டு கடைநிலை ஊழியர்வரைப் பலரைப் பணியில்அமர்த்தி ஊதியமும் பிறவும் வழங்கவேண்டும். அதிக விலையுள்ள பொறிகளை வாங்கிப் பொருத்த வேண்டும்; பெருத்த அளவில் தாள் தேவைப்படுகிறது. சிறந்த எழுத்தாளர் களின் படைப்புகளுக்குப் பணம் கொடுக்க வேண்டும். இவை தவிரச் செய்தி நிறுவனங்களுக்கான உறுப்பினர் கட்டணம்; தொலை பேசி, கேபிள், டெலக்ஸ் ஆகியவற்றிற்குரிய கட்டணத் தொகை; அயல்நாடுகளில் செய்தியாளர்களை அமர்த்தும்செலவு, போக்குவரத்துச் செலவுகள், பிற நிருவாகச் செலவுகள் இவற் றையெல்லாம் செய்தித்தாள் நிருவாகம் ஒருசேரச் சந்திக்கிறது. இவற்றினடிப்படையில் நோக்கின் இதழியல் துறையைக் கௌரவத் தொழிலாகக் கருதிவிட முடியாது. வருவாய்த் தொழி லாகக் கொண்டு அதன் பொருளாதாரத்தை மேம்படுத்த வேண்டியதிருக்கிறது. இதழ்கள் சமுதாயத்திற்கு ஒரு வகையில் தொண்டாற்றுகின்றன; நிருவாகத்திற்குப் பலவகையில் தொழி லாற்றுகின்றன என்பதுதான் உண்மையாகும். எனவே செய்தித் தாள் நிறுவனங்கள் வருவாய் பெற்றுப் பொருளாதாரத்தை நிலைப்படுத்த நினைப்பது நியாயமானதேயாகும்.

## அலுவலக அமைப்பு

செய்தித்தாள் என்பது அறிவாளிகள், தொழிலாளிகள், நிறுவனத்தார் ஆகியோரின் கூட்டுத்தயாரிப்பாகும். செய்தித் தாள் அலுவலகத்தில் இவர்களனைவரும் ஒருங்கிணைந்து செய லாற்றுகின்றனர். தொடர்வண்டி, உந்துநிலையங்களுக்கு அருகில் செய்தித்தாள்களுக்குச் சொந்தக் கட்டிடம் அமைந்திருக்க வேண்டும். ஒவ்வொரு பிரிவின் வேலைப்பாடுகளுக்கேற்றவாறு அக் கட்டிடம் திட்டமிட்டுக் கட்டப்படுவதாகவும் இருக்க வேண்டும்.

அலுவலக அமைப்பு சிறிய, பெரிய செய்தித்தாள்களுக் கேற்றவாறு மாறுபடுகின்றன, பொதுவாக நிருவாகச் சீர்பாடு

களுக்காகச் செய்தித்தாள் அலுவலகம் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**நிருவாகப் பகுதி (Administrative Wing)**

செய்தித்தாள் உரிமம் தனியாருடையதாகவோ, கூட்டுறவு அடிப்படையிலோ, பொறுப்பாண்மைக் குழு (Trust) விற்குரிய தாகவோ அமைந்திருக்கலாம். இவற்றின் அடிப்படையில் நிருவாகத்தின் தலைவர் உரிமையாளர், பதிப்பாளர், செய லாளர், இயக்குநர், குழுத்தலைவர் முதலிய பெயர்களில் இயங்கு கிறார். உரிமையாளரே பதிப்பாளராகவும், ஆசிரியராகவுங்கூட இயங்குவதுண்டு. ஒவ்வொரு பகுதியின் பொறுப்பாளர்களாகத் தலைமை இதழாசிரியர், விற்பனை மேலாளர், விளம்பர மேலாளர், தலைமைக் கணக்கர் ஆகியோர் பொறுப்பேற்றுச் செயல்படுகின்றனர். பொது மேலாளர் எல்லாப் பகுதிகளின் நிருவாகத் தலைமையை ஏற்றிருக்கிறார். இவர்களுடன் காசாளர், தணிக்கையாளர், கொள்வினையாளர் ஆகியோரும் நிருவாகப் பகுதியில் பணியாற்றுகின்றனர்.

**ஆசிரியர் குழு (Editorial Wing)**

செய்தித்தாளின் படைப்புக்களை ஆசிரியர் குழு முழுமைப் படுத்துகிறது. இப்பகுதியில் செய்தி ஆசிரியர் (News Editor), துணை ஆசிரியர்கள் (Sub Editors), செய்தித் தொகுப்பாளர்கள் (Reporters), அச்சுப்படி திருத்துநர் (Proof Reader), ஓவியர், ஒளிப்படக் கலைஞர் முதலியோர் பணியாற்றுகின்றனர். ஆசிரியர் குழு செய்திப் பிரிவு, தலையங்கப் பிரிவு, கலைப் படைப்புப் பிரிவு என்ற மூவகைப் பிரிவுகளாகச் செயல்படு கின்றது. செய்தியாளர்களும் செய்தி நிறுவனத்தார்களும் செய்திகளைச் சேகரித்துத் தருகிறார்கள். ஒளிப்படக் கலைஞர்களும், ஓவியர்களும் படங்களைத் தயாரிக்கிறார்கள். விளையாட்டுப் பகுதி ஆசிரியரும், கலைப்படைப்புகளாசிரி யரும் தங்கள் துறைப் படைப்புக்களை அணிமைப்படுத்தி அளிக் கின்றனர். சிறப்பாசிரியர் கதை, கட்டுரை, கவிதை, பொழுது போக்கு போன்ற சிறப்புப் படைப்புக்களைத் தொகுத்துத் தருகிறார். இவற்றைத் தொகுத்துத் தருவதில் செய்தி ஆசிரியர் துணை செய்கிறார். இவ்வாறு தொகுத்த செய்திகளையும், படங்களையும், விளம்பரங்களையும் வைத்து ஆசிரியரும், துணை யாசிரியர்களும் செய்திப் பக்கங்களை உருவாக்குகின்றனர். பக்க

அலங்கரிப்பும், தலைப்பிடுதலும் தொடர்ந்து நடைபெறு கின்றன.

3. இயந்திரப் பகுதி (Mechanical wing)

செய்தித் தாளின் தொழில்நுட்பத் துறையாக இப்பகுதி செயல்படுகிறது. அச்சுக் கோப்பு, அச்சுப் பதிப்பு, அச்சுப் படிமங்கள் தயாரிப்பு, மெய்ப்புத் திருத்தம் ஆகிய பணிகள் இப்பகுதியில் நடைபெறுகின்றன. தலைமை அச்சகர் ஒருவர் இப்பணிகளை மேற்பார்வையிடுகிறார். இப்பகுதியில் மனிதர்கள் பொறிகளுடன் வேகத்தில் போட்டியிட்டுச் செய்தித்தாள்களைத் தயாரித்தளிக்கின்றனர். அச்சு வார்பபுப் பகுதியில் தனி அச்செழுத்துப் பொறி (Monotype), தொடர் அச்செழுத்துப் பொறி ஆகியவற்றில் ஒவ்வொரு பக்கத்திற்குரிய அச்செழுத்துக்கள் தயாரிக்கப்படுகின்றன. இவ்வெழுத்துக்களைக் கொண்டு ஈய வார்ப்பில் அரை உருளை வடிவத்தில் பக்கங்களைத் தயாரிக் கின்றனர். அச்சுப் பகுதியில் இவ்வுருளைகளைச் சுழல் அச்சுப் பொறியுடன் இணைத்துத் தாளில் பதிய வைக்கின்றனர்.

4. வணிகப்பகுதி (Bussiness Wing)

பொது அலுவலகம், விற்பனை, விளம்பரம் ஆகிய மூன்று பிரிவுகளாக வணிகப்பகுதி செயல்படுகின்றது. ஒவ் வொரு பிரிவையும் மேலாளர் ஒருவர் மேற்பார்வையிடுகிறார். எல்லாப் பிரிவுகளையும் வணிகபபகுதி மேலாளர் கண்காணிக் கிறார். விளம்பரப் பிரிவில் நிறுவனங்கள் தொடர்பான பெரிய விளம்பரங்களுக்கும், பகுக்கப்பட்ட சிறிய விளம்பரங்களுக்கு மெனத் தனிப் பிரிவுகள் உண்டு. விற்பனைப் பிரிவில் உள்ளூர் விற்பனை, வட்டார விற்பனை, அஞ்சல் வழி விற்பனை ஆகிய வற்றிற்கெனத் தனிப்பிரிவுகள் உள்ளன. தலைமை எழுததர், விளம்பர மேலாளர், விற்பனை மேலாளர், ஆகியோரின் விழிப் பான செயல் திறத்தால்தான் செய்தித்தாள்கள் நிலைதது நிற்கின்றன.

மனித இரத்த ஓட்டத்திற்குத் தமனிகளும் சிரைகளும் ஒன்று கூடி உதவுவதுபோன்று இதழ்கள் ஓட்டத்திற்கு விற்பனையும் விளம்பரங்களும் உதவுகின்றன. இவற்றில் ஏதேனும் ஒன்று குறைந்தால் இதழ்கள் தம் வாழ்க்கையில் தளர்ந்து விடுகின்றன. விளம்பரங்களே இதழ்களின் செழித்த வாழ்விற்கு உறுதுணை யாக விளங்குகின்றன; என்றாலும் விற்பனைக் கூடுதலே

விளம்பரங்களுக்குப் பெருத்த மதிப்பைத் தேடித் தருகின்றன. இதழ்களின் விற்பனை எண்ணிக்கை (Length), விற்பனையாகும் பகுதி (Breadth), மக்கள் தொகை, விரைவான விநியோகம் (Thickness) இவற்றையே முறையான அளவுகளாகக் கொண்டு விளம்பரம் செய்கின்றனர். எனவே, விற்பனைப் பிரிவு அலுவலக அமைப்பில் இன்றியமையாத இடத்தைப் பெற்றிருக்கிறது.

இதழ்கள் அலுவலகத்தில் விற்பனைப் பிரிவு இரண்டு வகையான செயல்களைச் செய்கின்றது.

1. இதழ்களைப் பரப்புதல் (Distribution)
2. விற்பனைப் பெருக்கம் (sales promotion)

பரப்புதல் பலமுறைகளில் நடைபெறுகிறது. முகவர்களை அமர்த்தி உள்ளூர்ப் பரப்பு நடைபெறுகிறது. மாநில அளவிலான பரப்பில் போக்குவரத்து வசதியுடைய ஊர்களில் முகவர்களை அமர்த்தி, அவர்களுக்குத் தொடர்வண்டி அல்லது உந்துகள் வழியாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. சில ஊர்களுக்குச் சொந்த ஊர்திகள் மூலம் இதழ்கள் அனுப்பப்படுகின்றன. இவற்றிற்கென்று ஒப்பந்த ஊர்திகளை அமர்த்திக் கொள்வதும் உண்டு தினமணி நாளிதழுக்கும் டி.வி.எஸ். நிறுவனத்திற்கும் இத்தகைய ஒப்பந்தம் இருந்தது. நாடு தழுவிய பரப்பலில் தலைநகரில் அல்லது பிற நாடுகளிலுள்ள முகவர்களுக்கு விமானங்கள் மூலம் இதழ்களை அனுப்புவதுண்டு. ஜப்பான் நாட்டில் நாள்தோறும் அறுபது இலட்சம் படிகள் விற்பனையாகிக் கொண்டிருக்கும் ‘அசாகி சிம்புன்’ என்ற நாளிதழ் பதின்மூன்று விமானங்களை வைத்திருக்கின்றது. நம் நாட்டில் ‘இந்து’ நாளிதழ் விமானம் ஒன்றை வைத்திருந்தது. அஞ்சல் வழிப்பரப்புதல் பொறுப்பும் வேலை மிகுதியும் கொண்டதாகும். இதழ்களை மடித்து ஒட்டி, முகவரி எழுதி ஊர்தியில் ஏற்றி உரிய இடத்தில் அஞ்சல் செய்ய வேண்டும். தொடர் வண்டி, பேருந்து, விமானம் ஆகியவை புறப்படும் நேரங்களைச் சரியாக அறிந்து வைத்திருக்க வேண்டும். இவ்வகை விநியோகத்திற்கென நாளிதழ்களில் அஞ்சல் பதிப்பு (Dak Edition) அச்சிடப்படுகிறது.

விற்பனைப் பெருக்கத்தில்தான் விற்பனைப்பிரிவு மேலாளர் தன் திறமைகளை வெளிப்படுத்த வேண்டும். பிற இதழ்

களின் போட்டி, விலையேற்றம், இதழ்களின் கொள்கை, அச்சு முறை, பொருளடக்கம் போன்றவை விற்பனையில் சரிவு ஏற் படக் காரணங்களாவதுண்டு. இவற்றுள் எது எந்த நேரத்தில் விற்பனையைப் பாதிக்கிறதென்பதை அறிந்து விற்பனை மேலா ளர் சரிப்படுத்திவிட வேண்டும். பிற இதழ்களின் போட்டி காரணமாக விற்பனையில் சரிவு இருந்தால், நாடு முழுவதும் அறிமுகமாகியுள்ள இதழ்களில் நன்கு விளம்பரம் செய்ய வேண்டும். சில நாட்களுக்கு இலவசமாகக்கூட இதழ்களை அளித் துப் பரப்பிய பின்பு விற்பனையைப் பிடிக்கலாம். முகவர்களுக்கு அதிகக் கழிவுத்தொகை அளித்து அவர்களை அடிக்கடி கூட்டு வித்து ஆலோசனை வழங்க வேண்டும். வாசகர்களுக்குரிய பரிசுத் திட்டங்களை அறிவிக்கவேண்டும். இணைப்பு இதழ் களைச் சேர்த்து வழங்கவேண்டும்(தமிழ் நாள்,வார இதழ்கள்இம் முறையைப் பின்பற்றுகின்றன). சில பரிசுப் பொருள்களைக் கூட வழங்கலாம். இலண்டனில் வெளியான டெய்லி எக்ஸ் பிரஸ், டெய்லி ஹெரால்டு ஆகிய இதழ்கள் உறுப்பினர்களுக்குப் புத்தகம், துணி, மரச்சாமான்கள் முதலியவற்றைப் பரிசாக அளித்தன.

தொடக்க காலத்தில் இதழ்களின் விற்பனை அவற்றின் விலையைப் பொறுத்திருந்தது. காலணா விலையில் சுதந்திரச் சங்கு விற்பனையில் மாபெரும் புரட்சி செய்தது. கடைகள் இதழ்களை விற்றுக் கழிவுத்தொகை பெறுகின்ற முறையை இந்த இதழ்தான் தமிழகத்தில் தொடங்கி வைத்தது. நாலா யிரம் படிகள் விற்றுக்கொண்டிருந்த இந்தியா இதழுக்குப் பாரதி யார் உறுப்பினர் கட்டணத்தை வகுத்திருந்தது விற்பனை யில் மற்றுமொரு புரட்சியாக அமைந்திருந்தது.*. ஓரணா விலையிடப்பட்டிருந்த இந்தியா இதழை மக்கள் சுதேசிப் பொருட்களில் ஒன்றாகக் கருதி வாங்கிக்கொண் டிருந்தனர். ஆங்கிலேயர் காலத்தில் மிகையான தயாரிப்புச் செலவு, மொழி யிதழ்கள் வளர்ச்சியின்மை, பாமர மக்களுக்குப் பயன்படாமை ஆகியவற்றின் காரணமாக இதழ்கள் பரவலாக விற்பனையாக

* அரசினருக்கு ஆண்டுக் கட்டணம் - ஐப்பது ரூபாய். அரசர், ஜமீன்தார் முதலியோருக்கு முப்பது ரூபாய். மாதம் இரு நூறு ரூபாய் வருமானமுடையோருக்குப் பதினைந்து ரூபாய். மற்றவர்களுக்கு மூன்று ரூபாய்.

வில்லை. வங்கத்தில் தாய்மொழி இதழ்கள் வெளிவந்த பின்பே இதழ்கள் நடுத்தர வர்க்கத்தினரின் கவனத்தைப் பெற்றன. மொழியிதழ்களில் விற்பனையைப் பரவலாகத் தொடங்கி வைத்தவை வங்கமொழி இதழ்களேயாம். விடுதலைப் போராட்ட காலத்தில் இதழ்களின் தரத்தை அடிப்படையாக வைத்து விற்பனை அமைந்திருந்தது. திலகர், காந்தியார் முதலியோர்களின் தேசியத் தரமுடைய இதழ்கள் பரவலான விற்பனையைப் பெற்றிருந்தன. மேலைநாட்டு இதழ்களின் தாக்கத்திற்குப் பின்பு பல்வேறு தரத்தினருக்கான பல தரப்பட்ட பொருளடக்கத்தைக் கொண்டிருக்கும் இதழ்களே விற்பனை முன்னணியில் உள்ளன. இன்றைய இதழ்களுக்கு நிரந்தரப் பார்வையாளர்களும் பற்றாளர்களும் கிடையா. தங்கள் பொழுதுபோக்கு உணர்வுகளைப் புரிந்துகொண்டு வெளியாகின்ற இதழ்களை அவர்கள் என்றும் கைவிடுவதில்லை. விற்பனைப் போட்டியில் வெற்றி பெற நினைக்கும் நாளிதழ்கள் கூடப் பொதுமக்களின் நாடி பிடித்துப் பார்த்துச்செய்திகளோடு பிறவற்றையும் சேர்த்துத் தருகின்றன. எனவே தரத்தின் அடிப்படையிலன்றி எவற்றின் அடிப்படையென்று அறிய முடியாத வண்ணம் இதழ்கள் விற்றுக்கொண்டிருக்கின்றன.

**விற்பனைக் கணிப்பு நிறுவனம் (Audit Bureau of Circulation)**

எல்லா இதழ்களும் தங்கள் விற்பனை எண்ணிக்கையைக் கூட்டியே சொல்லிக் கொள்கின்றன. பொது மக்களுக்கும், விளம்பரதாரர்களுக்கும் இதழ்களின் விற்பனையை அறிந்துகொள்ளும் ஆர்வம் ஏற்படுவதுண்டு. இதனைச் சரியாகக் கணக்கிட்டுச் சான்றிதழ் வழங்கும் நிறுவனமொன்று அமெரிக்க நாட்டிலுள்ள சிகாகோ நகரில் அமைக்கப்பட்டது. இந்தியாவில் 1949 - ஆம் ஆண்டு பம்பாயில் இவ்வமைப்புத் தோன்றியது. நம் நாட்டில் வெளியாகும் எல்லா நாள், வார, மாத இதழ்களின் நாடு முழுவதுமான விற்பனையை ஆண்டுக்கு இருமுறை கணக்கிட்டுத் தணிக்கை செய்யும் இந்நிறுவனம், ஆண்டு இறுதியில் விற்பனைக்கான சான்றிதழை அளிக்கின்றது. இச் சான்றிதழ் அறிவிக்கும் விற்பனை எண்ணிக்கையே அனைவரும் ஏற்றுக் கொள்வதாக உள்ளது. 1983, திசம்பரில் சில இதழ்களின் விற்பனையைக் கீழ்க்கண்டவாறு அறிவித்து, அதற்கான சான்றிதழை ஏ. பி. சி. நிறுவனம் அளித்துள்ளது.

| | |
|---|---|
| டைம்ஸ் ஆப் இந்தியா | — 5, 22, 900 |
| மலையாள மனோரமா | — 5, 20, 014 |
| இந்தியன் எக்ஸ்பிரஸ் | — 4, 55, 992 |
| ஆனந்த பஜார் பத்திரிகா | — 4, 16, 514 |
| ஜுகாந்தர் | — 3, 14, 018 |
| மலையாள மனோரமா (வாரஇதழ்) | — 5, 65, 591 |
| குமுதம் | — 5, 60, 616 |

இவற்றில் ஆனந்த பஜார் பத்திரிகா கல்கத்தாவிலிருந்து மட்டுமே வெளியாகின்றது. எனவே இந்தியாவில் அதிக விற்பனையை ஒரே இடத்தில் வெளியாகிப் பெற்றிருப்பது ஆனந்த பஜார் பத்திரிகா ஆகும்.

செய்தித்தாள் நிருவாகத்தின் இந் நான்கு பகுதிகளில் பணியாற்றுகிறவர்களின் கூட்டு முயற்சியில்தான் தரமானதும், பொருளாதார வாய்ப்பளிப்பதுமான இதழ்கள் உருவாகின்றன. ஒவ்வொரு பகுதியும் மற்ற பகுதிகளுடைய பணிகளையும், முறைகளையும் அறிந்து வைத்திருக்க வேண்டும். விற்பனைப்பிரிவின் பணிகளை விளம்பரப் பிரிவினர் அறிந்திருந்தால்தான் கூட்டு முயற்சியில் வெற்றிபெற முடியும்.

# செய்திகள்

> செய்தித்தாள் பாமரர்களின் பல்கலைக்கழகம்; அவர்களில் பெரும்பாலோர் வேறு எங்கு சென்றும் படிப்பதில்லை.
>
> —ஜே. பார்டன்

உலகின் நடைமுறை நிகழ்ச்சிகள் வழக்கத்திற்கு மாறாக அமையும்போது செய்திகள் பிறக்கின்றன. செய்திகள் என்பவை புதுமையானவை; சூடானவை; சுவையானவை. சமுதாயத்தில் அன்றாடம் நடைபெறும் அனைத்து நிகழ்ச்சிகளும் செய்திகளாகிவிடுவதில்லை. சமுதாயத்தைப் பாதிக்கிற அல்லது சமுதாயம் புதுமையாகக் கருதிக்கேட்கவும் படிக்கவும் விரும்புகின்ற நிகழ்ச்சிகளே செய்தியாகின்றன. அவற்றின் தரம் காணுகின்றவர்களின் கண்ணோட்டத்தைப் பொறுத்திருக்கிறது. சிலருக்குத் தங்கத்தின் விலையேற்றம் செய்தியாகிறது; பலருக்கு அரிசிவிலை கூடியது செய்தியாகிறது. செய்தி தனி மனிதனைப் பற்றியதன்று; அது விரைவாகப் பரவுகிறது; நிலைத்து நிற்பதில்லை. எனவே அதற்குப் பொதுமை, விரைவு, நிலையாமை என மூன்று பண்புகள் உண்டு.

## செய்தி இலக்கணம்

தொடக்க காலத்தில் 'செய்தி' என்ற சொல் 'புதியது' (Current) என்ற பொருளில் வழங்கியது. பின்பு குறிப்பிடத்தக்கன (Significant), வழக்கத்திற்கு மாறானவை (Unusual) என்ற பொருள்களில் அடங்கியிருந்தது. இத்தகைய குறிப்பிடத்தக்க, வழக்கத்திற்கு மாறான நிகழ்ச்சிகளை நான்கு திசைகளிலிருந்து பெற்றவுடன் 'NEWS' [North, East, West, South] என்ற பன்மைச் சொல் உருவானது.

"பெருத்த எண்ணிக்கையுடைய வாசகர்கள் விரும்புகிற முற்றிலும் உண்மையான நிகழ்ச்சிகளை அல்லது கருத்துக்களைச் செய்திகள் எனலாம்"*. எனப் பிற்காலத்தில் செய்தியிலக்கணத்தை வரையறை செய்தார்கள். 'செய்தி' என்பது அவசர அவசரமாக நடைபெறும் வரலாறு' என்பது அமெரிக்க இதழியலார் எச். மாரிஸ் என்பவர் கருத்தாகும். செய்திகள் புதுமையாகவும், வழக்கத்திற்கு மாறாகவும் நடைபெற்றதாக

---

* "News may be defined as an accurate fact or idea that interest a large number of readers"

— *Roland E. Wolseley*

இருக்கவேண்டும் என்ற கருத்தில் 'டான்' என்ற அமெரிக்க இதழாசிரியர் ஜான்போகார்டு செய்தியின் 'இலக்கணத்தைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

"நாய் மனிதனைக் கடித்தால் செய்தியாகாது;
மனிதன் நாயைக் கடித்தால் செய்தியாகும்."

இன்றைய இதழ்களின் செய்திகளை ஒப்பிட்டுப் பார்த்தால் இதிலும் மாற்றங்காண முடிகிறது. நாயிடம் கடிபட்டவர் செல்வாக்குடையவரெனின் அதுவும் செய்தியாகிவிடுகிறது. 'நாட்டு நடப்புச் செய்திகளையும், அவை பற்றிய கருத்துரைகளையும் உள்ளடக்கி, குறிப்பிட்ட காலங்களில் அச்சடித்து வெளிவருவனவே செய்திகளாகும்' என்று இந்திய இதழ்கள் பதிவுச் சட்டத்தில் செய்தித்தாளுக்கு இலக்கணம் வகுக்கப் பட்டுள்ளது.

## செய்தி வகைகள்

### பொதுவகை

1. பன்னாட்டுச் செய்திகள் 2. தேசியச் செய்திகள் 3. வட்டாரச் செய்திகள் 4. உள்ளூர்ச் செய்திகள் 5. அரசியல் செய்திகள் 6. விபத்து—குற்றச் செய்திகள் 7. விளையாட்டுச் செய்திகள் 8 சிறப்புச் செய்திகள் 9. திரட்டுச் செய்திகள் 10. அறிவிப்புச் செய்திகள்.

### சிறப்புவகை

#### 1. எதிர்நோக்கும் செய்திகள் (Expected News)

விழாக்கள், விளையாட்டுப் போட்டிகள், நாடகம், அரசியல் நடைமுறைகள் பற்றிய செய்திகள் இதில் அடங்குவன. இவற்றை வழக்கமான செய்திகள் (Routine News) என்றும் கூறுவர். இச்செய்திகளைப் பற்றிய அறிவிப்புகளையும், விளக்கங்களையும் முன்னமேயே அறிய முடிவதால் சில முன்னேற்பாடுகளைத் திட்டமிட்டுச் செய்துகொள்ள முடிகிறது. குழப்பங்களுக்கும் தவறுகளுக்கும் இடமின்றி, நிதானமாகச் செயல்பட இச்செய்திகள் இடமளிக்கின்றன.

#### 2. எதிர்பார்க்காத செய்திகள் (Unexpected News)

இவை எதிர்பாராமலும், வழக்கத்திற்கு மாறாகவும் திடீரென நடைபெறும் செய்திகளாகும்,வழக்கமான செய்திகளை

விடச் செய்தி மதிப்புக் கூடிய இவற்றைச் சிறப்புச்செய்திகள் (Special News) என்பர். விபத்து, இறப்பு, கலவரம், போர், புரட்சி போன்ற நிகழ்ச்சிகளில் எதிர்பார்க்காத செய்திகள் பிறக்கின்றன.

எதிர் நோக்கும் செய்திகள், எதிர் பாராத செய்திகளாக மாறிவிடுவதுமுண்டு. காற்பந்துப் போட்டியில் கலவரங்கள் ஏற்படுவதைக் குறிப்பிடலாம். இன்றைய உலகில் எதிர் பார்க்காத செய்திகளும் எதிர் நோக்குகிற செய்திகளாக நடைபெறுகின்றன. துப்பாக்கிச் சூடு போன்ற செய்திகளை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். எதிர் பார்க்காத செய்திகள் சமுதாயத்தைப் பாதிக்கிற தீயசெய்திகளாகும். ஆனால், செய்தித்தாள்கள் அவற்றிற்காகவே ஒவ்வொரு நாளும் எதிர் நோக்கிக் காத்துக் கிடக்கின்றன.

### 3. உடனடிச் செய்திகள் (Hard News)

பொதுமக்களுக்கு உடனடியாகத் தெரிவிக்கவேண்டிய முதன்மைச்செய்திகளாகும். தேர்தல்–தேர்வு முடிவுகள், நாடாளுமன்ற - சட்டமன்றத் தீர்மானங்கள், வரவு - செலவுத் திட்டங்கள், புயல், வெள்ளம் பற்றிய திடீர் அறிவிப்புகள் முதலியன இவ்வகையுள் அடங்குவன.

### 4. சாதாரணச் செய்திகள் (Soft News)

உடனடியாகத் தெரிவிக்கும் அவசியம் இல்லாத சாதாரணச் செய்திகள் இவை. காலங்கடந்தும் பார்வை படாத இடங்களிலும் (Blind Spot) வெளியிடலாம். விழாக்கள், சாதாரணக் குற்றங்கள் பற்றிய செய்திகள் இவற்றில் அடங்குவன.

## செய்தி மதிப்பு

நாளிதழ், வார இதழ், வட்டார இதழ், தேசிய இதழ் ஆகியவற்றில் வெளியிடும் முறை, ஒதுக்குகின்ற இடம் இவற்றினடிப்படையில் செய்திக்கு மதிப்பு அமைகிறது. இவற்றிற் கெல்லாம் மேலாகச் செய்திகளைப் பெறுகிற சமுதாயத்தின் கண்ணோட்டத்தைப் பொறுத்தும் செய்தியின் மதிப்பு கணிக்கப் படுகிறது. இவை தவிர, வேறுசில அடிப்படை நிலைகளைக் கொண்டும் செய்திகள் பிறப்பிலேயே மதிப்பைப் பெறுவதுண்டு. அவை :-

1. காலந்தவறாமை (Timeliness)

இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் நடைபெற்ற நிகழ்ச்சிகள்தாம் சூடான, சுவையான செய்திகளாகும். செய்திகள் அழுகும் பொருளுக்கு ஒப்பானவை. அன்றையச் செய்திகள் அடுத்த நாட்களில் பயன்பட மாட்டாதவை. போக்குவரத்துத் தொடர்புகள் அதிகமாகிவிட்ட இக்காலத்தில் வாசகர்கள் சூடான செய்திகளை எதிர்பார்ப்பது நியாயமே. எனவே, செய்திகளை முந்தித் தருவதைத் தலையாய கொள்கையாக இதழ்கள் ஏற்றுச் செயல்பட வேண்டும்.

2. நெருங்கிய தன்மை (Proximity)

வட்டாரச் செய்திகளுக்குக் கூடுதல் மதிப்புண்டு. அமெரிக்க நாட்டு விமான விபத்தைவிட அலங்காநல்லூர் கார் விபத்து வாசகர்களின் கவனத்தை ஈர்க்கின்றது. தங்களுக்கு அறிமுக மான இடமும், பெயரும் செய்தியில் இருந்தால் நெருக்கமான செய்தியாகக் கருதி ஆர்வத்தோடு படிக்கிறார்கள் வட்டார இதழ்களில் உலகச்செய்திகள் ஓரங்களில் ஒதுங்கிப்போய்க் கிடக்கின்றன.

3. மேம்பாடு (Prominence)

புகழ்பெற்ற பெயர்களும் இடங்களும் செய்திகளைப் படைப்பதுண்டு. அதிகாரம், செல்வாக்கு, புகழ் இவற்றின் அடிப்படையில் செய்திகளின் மதிப்புக் கூடுவதற்கு வாய்ப்புண்டு. முதலமைச்சரின் சுண்டுவிரல் சுளுக்கிக் கொண்டால் முதற்பக்கச் செய்தியாகிவிடும். அதே நேரத்தில் அவர் காரோட்டியின் கால் துண்டிக்கப்பட்டால் செய்தியாவதில்லை. நாள் தோறும் மழையி னால் ஒழுகிக்கொண்டிருக்கும் வீடுகள் யார் கண்ணிலும் படுவதில்லை. உலகத்தின் ஒன்பது அதிசயங்களில் ஒன்றான தாஜ்மகால் ஒழுகினால் அச்செய்தி பத்தாவது அதிசயமாகப் பத்திரிக்கையில் இடம்பெறுகிறது. தியாக எண்ணங்கொண்ட முன்னாள் அமைச்சர் ஒருவர் காலமான செய்தி ஓரத்தில் ஒதுங்கியிருக்க, திரைப்பட நடிகை ஒருவரின் தற்கொலைச் செய்தி அன்றைய தாளில் தலைப்புச் செய்தியானது!

4. விளைவு [Consequence]

சமுதாயத்தைப் பெரிதும் பாதிக்கிற செய்திகள் முதற் பக்கத் தலைமைச் செய்தியாக இடம் பெறுகின்றன. தொழி

வாளர் வேலை நிறுத்தம், கிளர்ச்சி, கதவடைப்பு, விலைஏற்றம். போர்த் தொடக்கம், போக்குவரவுத் தடை, ஊதிய உயர்வு போன்ற செய்திகள் பரபரப்போடு வரவேற்கப்படுகின்றன.

5. மாந்த நேயம் [Human Interest]

மனிதன் தன்னோடொத்த மனிதர்களைப் பற்றிய செய்திகளில் ஈடுபாடு கொள்வது இயற்கை. மனிதாபிமானம் என்பது நாடு இனம், மொழி ஆகியவற்றைக் கடந்த உள்ளுணர்வாகும். இன்ப துன்பங்கள், இழப்புகள், கண்ணீர்க் கதைகள், வெற்றி தோல்விகள், பஞ்சம், பட்டினி அழிவு, அநீதி முதலியவை எந்த நாட்டு மனிதர்களுக்கு ஏற்பட்டாலும் தானும் மனிதன் என்ற அடிப்படையில் ஒவ்வொருவரும் இத்தகைய செய்திகளை நெருங்கிச் செல்வதுண்டு. பூட்டோ தூக்கிலிடப்பட்டபோது உலக மக்களின் மனிதாபிமானத்தைச் செய்தித்தாள்களில் காண முடிந்தது. குமுதம் இதழில் வெளிவரும் 'பிரார்த்தனைக் கிளப்' என்ற பகுதியில் இடம்பெறும் செய்திகளின் அடிப்படையில் ஒரு மனித மனம் மற்றொரு மனித நலத்திற்காகப் பிரார்த்தனை செய்வது மனிதநேயத்தின் அடிப்படைதானே?

6. புதுமை [Novelty]

புதுமையின் அடிப்படையில் வெளிவரும் செய்திகளுக்குத் தனி மதிப்புண்டு, அவை வழக்கத்திற்கு மாறானவைகளாக அப்பொழுதுதான் நடைபெற்றவையாக அமைந்திருக்கின்றன. நாடு தழுவிய மாற்றங்கள், அறிவியற் கண்டுபிடிப்புக்கள், அதிசய ஆட்டுக்குட்டி, புதுமையான போராட்டங்கள் (சாலைகளில் விவசாயிகளின் கட்டை வண்டிப் போராட்டம்), ஒரே பிரசவத்தில் ஐந்துகுழந்தைகள் போன்றவற்றின் அடிப்படையில் வெளியாகும் செய்திகளும் மதிப்பினைப் பெறுகின்றன. உண்ணாவிரதச் செய்திகளுக்கிடையில் உண்ணும் விரதச்செய்தி புதுமையாகின்றது.

7. தன்னிலைச் சார்பு [Self Identification]

தங்களுக்குரிய தொழில், பணி,பொழுதுபோக்கு இவற்றின் அடிப்படையில் செய்திகளைச் சிலர் மதிப்பிடுவதுண்டு. தொழிலாளர்கள் பிற தொழிற்பகுதியின் நடவடிக்கைகளையும் உழவர்கள் பிற பகுதிகளின் விளைச்சலைப்பற்றியும், கலைஞர்கள்

தங்கள் துறைச் செய்திகளையும் ஆர்வத்தோடு வரவேற்கிறார்கள். அரசு வெளியிடும் வரவு செலவுத் திட்டம், வரிகள், சலுகைகள், ஊதிய உயர்வு, விலைவாசிகள் முதலியவை நாட்டு மக்கள் அனைவரும் அறிய விரும்பும் செய்திகளாகும்.

அபாயச் செய்திகள் [புயல், வெள்ளம்], அரிதான கண்டுபிடிப்புகள், மருந்து, தொல்பொருள், பொருளாதார, அரசியல் செய்திகள், வாழ்க்கைத்தரம், மனித உரிமைகளைத் தடை செய்யும் செய்திகள் முதலியன மக்களனைவரையும் கவரக்கூடிய மதிப்புள்ள செய்திகளாகும்.

## செய்தி அமைப்பு

ஒரு செய்தியை இரண்டு பிரிவுகளாகக் காணலாம். 1. தலைப்பு (Head), 2. செய்திக்கதை (News story). செய்திக்கதை செய்திச் சுருக்கம் (Lead), செய்தி விளக்கம் (Body) என இரு பகுதிகளைக் கொண்டது. செய்திக்கருவே தலைப்பாக அமைகிறது. கருவினும் சற்று விளக்கமான பகுதி செய்திச் சுருக்கம். செய்தி விளக்கம் செய்திக்கதையை விளக்குகிறது. செய்தி நடைபெற்ற நாள், இடம் காட்டும் வரி (Date line) யுடன் செய்திச் சுருக்கம் தொடங்குகிறது. செய்திச் சுருக்கம் பல முறைகளில் அமைகின்றது.

நேரடி முறை :

''தென்காசி, அக் 12 -

மூன்று பட்டதாரி இளைஞர்கள் நேற்றிரவு 'பஸ்ஸை நிறுத்திப் பயணிகளது உடைமைகளை அரிவாள் முனையில் கொள்ளையடித்துக்கொண்டு இருளில் மறைந்துவிட்டனர்.''

கூற்று முறை :

''மதுரை, செப். 2 -

லோக்சபா இடைத்தேர்தலுக்குத் தமிழ்நாட்டில் இந்திரா காங்கிரஸ் யாருடன் கூட்டு ஏற்படுத்திக் கொள்வது என்பதைக் கட்சியின் மேலிடந்தான் முடிவு செய்ய வேண்டும் என்று கருப்பையா மூப்பனார் கூறினார்.''

முரண்பாட்டு முறை

''நெல்லை, ஆக. 6-

வேலியே பயிரை மேய்ந்த கதை இங்கு நடந்துள்ளது.

போலீஸ்காரர் ஒருவர் குடித்துவிட்டுக் கலவரம் செய்ததாகக் கைது செய்யப்பட்டுள்ளார்''

கவர்ச்சி முறை :

" தூத்துக்குடி, ஜூலை 30 —
நினைத்தால் நெஞ்சத்தை உலுக்கி
கண்ணீர் வரச் செய்யும் இந்தப்
பரிதாப விபத்து நேற்றுப் பிற்பகல்
4 மணிக்கு நடந்தது''

வருணனை முறை :

" சொந்தத் தாயகமோ விரட்டிவிட்டது;
ஒதுங்க வந்த இடமோ அவர்களை
நரகத்தில் தள்ளி விட்டது. நரகம்
என்றால் சாதாரண நரகமல்ல. அது
ஒரு மிதக்கும் நரகம்.
37 இலங்கைத் தமிழர்கள்
எச். எம். வி. எர்ல் வில்லியம்
என்ற கப்பலில் கடந்த ஒரு
வருடமாகச் சிறைவைக்கப் பட்டுள்ளனர்.''

செய்தியமைப்பில் நிகழ்ச்சிகள் இடம் மாறுவதுண்டு. விழாத் தொடக்கத்தில் நிகழ்ந்த வரவேற்புரை பற்றிய செய்தி இறுதிக்குச் சென்று விடும். இறுதியில் பேசியவரின் பேச்சு முன்பகுதிக்கு வந்துவிடும்.

செய்தி பத்து அங்குல நீளத்தில் அமைவது சிறப்பாகும். பத்திகளாகப் பிரித்து, கவர்ச்சியான பத்தித் தலைப்புகள் கொடுக்கலாம். பத்திகள் மூன்று அங்குலத்திற்குள் அமைய வேண்டும். வெளிநாட்டுச் செய்திகளில் தொடர்பானவர்களின் புகைப்படமும்; போர்ச் செய்திகளில் எல்லை காட்டும் வரை படமும் இடம்பெற வேண்டும். சட்டமன்றம், விளையாட்டு, வானொலி, விலைவாசி, இன்றைய நிகழ்ச்சிகள், நீர்மட்டம் முதலிய செய்திகளுக்குக் குறிப்பிட்ட இடங்களை ஒதுக்க வேண்டும்.

# செய்தியாளர்

மெய்வருத்தம் பாரார்; பசிநோக்கார்; கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்; — செவ்வி
அருமையும் பாரார் ; அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

— நீதிநெறி விளக்கம்

செய்தியாளர்கள் நாட்டு மக்களை அறிவு. வெளிச்சத்திற்கு அழைத்துவரும் அடிப்படைத் தொண்டர்களாவர். சமுதாயம் இவர்களிடம் ஒவ்வொருநாளும் சிலவற்றை எதிர்பார்க்கின்றது. மனிதன் தேவைகளையும் சிக்கல்களையும் இவர்கள் தருகின்ற செய்திகளால் தீர்த்துக் கொள்கிறான். அவன் மனம் செய்திகள் அளிக்கின்ற அறிவுறுத்தலால் அடங்கி வாழ்கிறது. நாட்டு நிகழ்ச்சிகளை முதலில் அறிந்து வழங்குகிற தகவல் முன்னோடிகளான செய்தியாளர்கள், உலகச் சமுதாயம் என்ற நாடகத்தை முன்வரிசையில் அமர்ந்து பார்க்கும் வாய்ப்பினைப் பெற்றிருக்கிறார்கள். செய்தியாளர்களுக்குரிய தகுதிகள், பண்புகள், கடமைகள், பொறுப்புகள் முதலியவற்றை வளர்த்துக் கொண்ட பின்பே அவர்கள் இந்த இடத்திற்கு வந்து சேர முடிகிறது. ஊண் மறந்த நிலையிலே, உறங்க வேண்டிய நேரத்திலும்கூட ஊர்தோறும் உலவி, ஆழ்கடலில் முத்தெடுத்தாற் போல் அரிய செய்திகளைத் திரட்டித் தருகிற செய்தியாளர்களைச் சமுதாயத் தொண்டர்கள் என்று சொன்னால் மிகையாகாது. செய்திகளைத் தேடும் மோப்பவுணர்வும் மூக்கு வியர்ப்பும் அவர்களுக்கு உண்டு. செய்திகளை வெளிப்படுத்தி, அவற்றை எல்லோரும் அறியச் செய்வதால் துப்பறிவாரில் பாதியும் தூதுவரில் பாதியுமாகச் செய்தியாளர்கள் பணியாற்றுகின்றனர்.

மொகலாயர் காலத்தில் 'சவானிக் நாவிஸ்' என்ற பெயரில் செய்தியாளர்கள் அழைக்கப்பட்டனர். இவர்கள் செய்திக் கடிதங்கள் வழியே செய்திகளைத் தலைநகருக்கு அனுப்பிக்கொண்டிருந்தனர். இச்செய்திக் கடிதங்களை 'நிருபம்' என்றனர். பின்பு நிருபங்களை எழுதுகின்றவர்கள் நிருபர் எனப்பட்டனர். இவர்களுக்கு அக் காலத்தில் மிகப் பெரிய பொறுப்பும், அரசியல் செல்வாக்கும் இருந்தன. இடைக்காலத்தில் அவை பறிக்கப்பட்டு நிகழ்ச்சிகள் நடைபெறுமிடங்களுக்குள் செய்தியாளர்களை அனுமதிப்பதில்லை, வெளியில் காத்

திருந்தே அறிக்கைகளையும் தீர்மானங்களையும் பெற்று அவற்றைச் செய்தியாக்கினார்கள். இழந்த உரிமைகளை மீண்டும் பெற்றுள்ள இக்காலத்தில் நிகழ்ச்சிகளில் செய்தியாளர்களுக்கெனத் தனியிடம் ஒதுக்கி உதவுகின்றனர். நம் நாட்டின் பிரதமர் தாம் செல்லுமிடங்களுக்கு விமானத்திலேயே செய்தியாளர்களையும் அழைத்துச் செல்லும் அளவிற்கு அவர்களுக்குத் தொழிற்பெருமை கிட்டியுள்ளது.

செய்தி அலுவலகத்திற்குள் செய்தித்தாளை உருவாக்குவதில் பலர் முனைப்போடு பணியாற்றுகின்றனர். அலுவலகத்திற்கு வெளியில் செய்திகளைத் தொகுப்பதில் தேனீக்களாய்ச் சுறுசுறுப்போடு செய்தியாளர்கள் பணியாற்றுகின்றனர் பயிற்சி, தகுதி, பணியாற்றும் முறை ஆகியனவற்றில் செய்தியாளர்கள் பல வகையினராகச் செயல்படுகின்றனர். பகுதிநேரச் செய்தியாளர்கள் (Reporters), நிரந்தரச் செய்தியாளர்கள் (Staff Correspondents), சிறப்புச் செய்தியாளர்கள் (Special Correspondents), பொதுச் செய்தியாளர்கள் (Journalists), வெளிநாட்டுச் செய்தியாளர்கள் (Foreign Correspondents), சட்டமன்ற-நாடாளுமன்றச் செய்தியாளர்கள் (Lobby correspondents) எனச் செய்திகளைத் திரட்டும் முறையில் இவர்கள் வேறுபட்டுச் செயலாற்றுகின்றனர்.

தனிமனிதனும் ஏதோ ஒருவகையில் தகவல்களைப் பெறுகிறான். அதனை மற்றவர்களுக்கும் தெரிவிக்கிறான். என்றாலும் செய்தியாளனாகி விடுவதில்லை. செய்தியைப் பெறுகின்ற வாசகர்களின் எண்ணிக்கை, செய்திகளின் பயன்பாடு, செய்திச் சேகரிப்பு பற்றிய தொழில் அறிவு ஆகியனவற்றால் செய்தியாளன் தனிமனிதனிடமிருந்து வேறுபடுகிறான். 'செய்தியாளன் காணமுடியாத இடத்திலுள்ளவற்றையும் வாசகர்களின் கண்களுக்குக் காட்டிவிடுகிறான்; சென்று வர முடியாத தூரத்துச் செய்திகளைக் கொண்டுவந்து தருகிறான்; அறியவொண்ணாத் தொலைவுச் செய்திகளை அறிவில் பதிய வைக்கிறான். இதற்கு நாம் செலுத்துகிற வாடகை மிகக் குறைவாகும்'*

---

* "Professional Reporters are the hired eyes, legs and brain of the reader, viewer or listener."

*James M. Neal and Suzanne S. Brown·*
*— Newswriting and Reporting*

## செய்தியாளர் பணி

இதழ்களில் செய்தி என்பது என்ன? அவற்றை எப்படி எழுதவேண்டும்? எந்த அளவிற்கு அமைக்க வேண்டும்? என்ற நிலைகளில் செய்தியாளர்களே உதவுகின்றனர். செய்தியைத் தேர்ந்தெடுத்தல், வேண்டாதவற்றை ஒதுக்குதல், தொகுத்துத் தருதல் ஆகியவை செய்தியாளர்களின் பணியாகும். சுருங்கக் கூறின் 'வாசகர்களின் சிந்தனை முகவர்களாகச் செயதியாளர் கள் பணிபுரிகின்றனர்' என்பதே உண்மையாகும் † இபபணியில் நிகழ்காலத்தையும் எதிர் காலத்தையும் நிர்ணயிக்கும தகுதி அவர்களுக்குக் கிட்டுகிறது. இது ஒரு பொறுப்பான பணியாகும் ஒரு நிகழ்ச்சி அல்லது கண்டு பிடிப்புப் பற்றிய செயதியில பொது மக்கள் கண்ணோட்டத்தைச் செயதித்தாள்களே உருவாக்குவ தால் அவை தரும் செயதிகள் உண்மையின் அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும். உண்மைபற்ற அல்லது மிகைப்படுத் தப்பட்ட தகவல் சமுதாயத்தை எந்தவொரு வகையிலாவது தாக்கி விடும். ஏனெனில் மக்கள் அந்தத் தகவல்களின் அடிப் படையில்தான் முடிவெடுக்கிறார்கள்; செயல்படுகிறார்கள். எனவேதான் செய்தியாளர் பணி பொறுப்பானதாகக் கருதப் படுகிறது. செய்திகளைப் பெற்றவுடன் நேரில் சென்றும் அதற் குரிய சான்றுகள் கிடைக்குமடத்தை அணுகியும் செயதியாளர் கள் உறுதி செய்து கொள்ள வேண்டும். தொலைபேசியில் தொடர்பு கொண்டும் உசாவியறியலாம. மாறுபட்ட அல்லது சிக்கலான செய்திகளை ஒரு முறைக்கு இருமுறையாகச் சரி பார்த்துக் கொள்ள வேண்டும. "When is doubt check it out" என்பது செய்தித் துறையிலோர் பழமொழியாகும்.

தங்கள் சொந்தக் கருத்துக்களையும் கண்ணோட்டத்தினை யும் விருப்புவெறுப்புகளையும் தன்னுள அடக்கிக் கொண்டு செய்தியாளர் இதழின் நலன் கருதியே பணியாற்ற வேண்டும். மக்களைத் தூண்டி விடுவதாகச் செய்தியாளரின் பணி இருக்கக் கூடாது. செய்திகளின் அடிப்படையில் முடிவு எடுப்பதும் செயல் படுத்துவதும் பொது மக்களின் பணியாகும். செய்தியாளன் செய்திகளை அறிவிக்கவேண்டுமேயன்றி அதன்மீது ஆலோசனை வழங்கக் கூடாது.

† 'A Reporter is a thinking agent of the reader'

— *News writing and Reporting*

செய்திச் சேகரிப்பு ஒரு கடினமான தொழிலாகும், புதியவர்களுக்குச் சலிப்பு ஏற்படுவது இயற்கையே. செய்தியாளர்களின் பணிக்காலம் அலுவலகத்திலிருப்பது போன்று வரையறைக்குட்பட்டதன்று; உணவு உண்ண நேரமிருக்காது; இரவில் விழித்திருந்து பணியாற்ற வேண்டும்; பெருத்த வருவாய்க்கு வழியில்லை; குடும்பத்தினரைப் பிரிந்திருக்க வேண்டும்; எல்லாத் துன்பங்களையும் ஏற்றுக் கொள்ளும் தியாக மனப்பான்மைக்குச் செய்தியாளன் தன்னைப் பக்குவப் படுத்திக் கொள்ள வேண்டும்; பயிற்சியும் பட்டறிவும் பெற்ற பின்பு இப்பணியில் எளிதாக வெற்றி பெற முடியும்.

செய்தியாளர்கள் ஆற்ற வேண்டிய அன்றாடப் பணிகளுக்கு இதழாசிரியர் திட்டமிட்டு அட்டவணை (Assignment sheet) தயாரிக்கிறார். ஒவ்வொரு அட்டவணையும் செய்தியாளரின் பெயர் தாங்கி அணியமாக இருக்கும். செய்தியாளர்கள் தங்களுக்குரிய அட்டவணையைப் பெற்றுக்கொண்டு குறிப்பிட்டுள்ள செய்தியைச் சேகரிப்பார்கள். இடையிடையே அலுவலகத்தோடு தொடர்பு கொண்டும் செய்திகளைத் தெரிவிப்பார்கள். சென்ற இடம் அண்மையாக இருப்பின் அலுவலகம் திரும்பி செய்திகளைத் தொகுத்துத் தருவார்கள்.

## செய்திக் களங்க்ள் (News Sources)

செய்தி நிறுவனங்கள் அனுப்புகின்ற வெளிநாட்டு, உள்நாட்டுச் செய்திகள் தந்திமுறைத் தட்டச்சுப் பொறியின் மூலமாகச் செய்தித்தாள் அலுவலகத்தை அடைகின்றன. செய்தியாளர்கள் தொலைபேசி, கடிதங்கள் மூலமாகச் செய்திகளை அனுப்புகின்றார்கள். அலுவலகத்தில் இவற்றைப் பெற்றுச் செய்தியாக எழுதுவதை எடுத்தெழுதுதல் (Rewrite) என்பார்கள்.

இவை தவிர வெளியிடங்களுக்குச் சென்று சேகரித்து எழுதும் செய்திகள் 'அலைந்து திரட்டும் செய்திகள்' (Beat News) எனப்படும். வழக்குமன்றம், காவல் நிலையம், மருத்துவ மனை, சிறைச்சாலை ஆகியவை 'குற்றச் செய்திக் களம்' (Crime Beat) எனப்படும். இவ்விடங்களுக்கு நேரில் சென்று அங்குள்ள எழுத்துச் சான்றுகளையும் குற்றப் பதிவு ஏடு (Log book) களையும் கொண்டு செய்திகளைச் சேகரிக்கிறார்கள். சமூக விழாக்கள், பொதுக்கூட்டம், பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் முதலியவற்றி

லும் நேரில் பங்கு கொண்டு செய்திகளைச் சேகரிக்கின்றனர். வரையறுக்கப்பட்ட வேலைகள் இல்லாத செய்தியாளர்கள் விபத்து, வெள்ளக் கொடுமைகள், கலவரம் போன்றவற்றை நேரில் அறிந்துவர அனுப்பப் படுகிறார்கள். இம்முறை பொது வேலை (General Assignment) எனப்படும். சட்டமன்றம், நாடாளுமன்றம் இவையிரண்டும் தலைநகரின் செய்திக் களங்களாகும். இவை பற்றிய செய்திகளைத் தவறாகத் தருவது சபையின் உரிமை மீறல் குற்றமாகக் கருதப்படுகிறது. சட்ட மன்றத்தில் எழுப்பப்பட்ட வினாக்களுக்குரிய விடைகள் அச்சிடப்பட்டு முன்கூட்டியே தரப்படுவதுண்டு. அவற்றைப் பெற்றுத் தலைமையகப் பிரிவுகளுக்குச் சென்று சரிபார்த்து வைத்துக்கொள்ள வேண்டும். விளையாட்டுத்துறைச் செய்திகளை விளையாட்டு வீரர், பயிற்சியாளர், பார்வையாளர் ஆகியோரிடமிருந்து சேகரிக்க முடிகிறது. நகராட்சி அலுவலகம், தீயணைப்பு நிலையம், அரசினர் அலுவலகம் போன்றவற்றிற்குச் சென்று செய்தியாளர்கள் செய்திகளைத் திரட்டுகிறார்கள். மாநில, மத்திய அரசினரின் செய்தி நிலையங்கள், விளம்பரத் துறை, சுற்றுலா வாரியங்கள் ஆகியவை அரசின் திட்டங்களையும், செயல் முறைகளையும் விளக்கமாகக் கொடுத்து உதவுகின்றன. தலைமை அமைச்சர், மாநில முதலமைச்சர்கள் மாதந்தோறும் செய்தியாளர்களை வரவழைத்துச் செய்திப் பரிமாற்றம் செய்து கொள்கின்றனர். மாவட்ட ஆட்சியாளர்களையும், மாநகராட்சித் தலைவர்களையும் அணுகிச் செய்திகளைப் பெறும் வாய்ப்பிருக்கிறது. அரசியல் வாதிகள், தொழில் துறையினர், தொழிலாளர்கள், திரைப்படக் கலைஞர்கள் முதலியோர் அன்றாடத் தகவலாளர்கள் (Everyday Informats) என்ற முறையில் செய்திகளை அளிக்கிறார்கள். வர்த்தகக் கழகங்கள், பங்கு அங்காடிகள், வணிக மையங்கள், தொழிற்சாலைகள், அரசாங்க விடுதிகள், வானிலை ஆராய்ச்சி நிலையங்கள், துறைமுகம், விமான நிலையம், தொடர்வண்டி நிலையம், திரைப்படப் பிடிப்பு நிலையங்கள், அரசியல் கட்சி அலுவலகங்கள், கல்வி நிலையங்கள், தொழிற்சங்க அலுவலகங்கள், சமூக சேவைக்கழகங்கள், அறிவியல் கூடங்கள், செய்தித்தாள், வானொலி, தொலைக்காட்சி இவைகளும் செய்திக் களங்களாகவே அமைந்துள்ளன.

## செய்திச் சேகரிப்பு முறைகள்

செய்திகளைச் சேகரிப்பதற்கு ஐந்து முறைகள் உண்டு.

1. நிகழ்ச்சியில் நேரடிப் பங்கேற்றல் (**Participating in the action**)

இது நிகழ்ச்சியில் செய்தியாளரும் பங்கேற்றுச் செய்திகளைத் திரட்டும் முறையாகும். போர்க் காலங்களில் சிறப்புச் செய்தியாளர்கள் போர் நடைபெறுமிடங்களுக்கு அனுப்பப்படுகின்றனர். இந்திய-சீனப்போரின் போது இலண்டன் டைம்ஸ் இதழ் நெவில் மாக்ஸ்வெல் என்ற செய்தியாளரை அனுப்பிச் செய்திகளைச்சேகரித்தது.வங்காளப் போரின்போது அந்தோணி மாஸ்கரனேஸ் என்பவர் பாகிஸ்தான் இதழ்களின் சிறப்புச் செய்தியாளராகப் பணியாற்ற அனுப்பப்பட்டார்.

2. நிகழ்ச்சியில் பார்வையாளராகப் பங்கேற்றல் (**Observing the action**)

வழக்கு விசாரணை, விளையாட்டு, சட்டசபை நிகழ்ச்சிகள், பொதுக்கூட்டம் ஆகியனவற்றில் பார்வையாளராகச் செய்தியாளர் செய்திகளைத் தொகுக்கிறார். இவற்றைப் பற்றிய விளக்கங்களை முன் கூட்டியே அறிந்து வைத்துக்கொள்ள வேண்டும். நிகழ்ச்சி தொடங்குவதற்கு முன்பே சென்று முன் வரிசையில் அமர்ந்து கொள்ள வேண்டும். விளையாட்டு,மாநாடு போன்றவற்றில் ஒன்றிற்கு மேற்பட்ட செய்தியாளர்கள் பார்வையாளராகக் கலந்து செய்திகளைத் தொகுக்கலாம்.

3. பங்கு பெற்றவர் அல்லது பார்வையாளர்களிடம் கேள்விகள் வழியாகச் செய்தி சேகரித்தல் (**Asking Questions of someone who participated in the action or observed it**)

நேரில் அல்லது தொலைபேசியில் இம்முறைச் செய்திச் சேகரிப்பு நடைபெறுகிறது. பேட்டிகளாகவும் அமைவதுண்டு. நல்ல பேட்டிகள் 45 மணித் துளிகளிலிருந்து இரண்டரை மணிநேரத்திற்குள் முடிவடைகின்றன. குறிப்பிட்ட நேரத்திற்குள் சென்று குறிப்பிட்ட நேரத்தில் பேட்டியை முடிக்க வேண்டும். பேட்டியாளருடன் தொடர்புகொண்டு பேட்டிநேரத்தை உறுதி செய்து கொள்ளவேண்டும். செய்தியினைப் பற்றிய பொது அறிவுடன், வினாக்களைத் தயாரித்துக்கொண்டு செல்லவேண்டும். பேட்டியாளரிடம் புரியவில்லை என்று கூறக்கூடாது. 'இதற்கோர் எடுத்துக்காட்டு தரமுடியுமா?' என்று வினவி விளக்கம் பெறவேண்டும். செய்தியில் மாற்றமிருந்தால் தொலைபேசிவழி

யாகத்தெரிவிக்க வேண்டும். பேட்டி முடிந்த பின்பு வேறு செய்திகளையும் பேசிவிட்டு, வரும்போது நன்றி சொல்ல வேண்டும்.

4. அறிக்கைகள், சான்றாதாரங்கள், ஒப்பறி நூல்கள் வழித் தொகுத்தல் (**Reading reports, documents and reference books**)

வணிகக் குழுமங்கள், தொழில் நிறுவனங்கள் ஆகியவை அறிக்கைகளை வெளியிடுகின்றன. இவற்றிலிருந்து செய்திகளைத் தொகுக்க முடிகிறது. வணிகச் செய்தியறிய வணிகநூல்களையும்; அறிவியல் செய்திகளுக்கு அறிவியல் நூல்களையும் படித்துச் செய்திகளைச் சேகரிக்கலாம்.

5. அறிவியல் ஆய்வு முறைகளைப் பயன்படுத்துதல் (**Using Scientific Research Technics**)

இம்முறை, புள்ளி விவரக் கணக்கெடுப்பின்படி செய்திகளைச் சேகரிப்பதாகும். ஒரு நாட்டின் கட்சிகள் அல்லது தலைவர்களைப் பற்றிய நாடு தழுவிய புள்ளி விவரக் கணக்கெடுப்பில் யாருக்கு அதிக மதிப்பிருக்கின்றது என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.*

செய்தியாளர்கள் செய்திகளை விரைந்து அனுப்பித் தம் இதழில் வெளிவருமாறு செய்யவேண்டும். பிற இதழ்களில் ஒரு செய்தி இடம் பெறாமலிருப்பதே அச்செய்தியாளனுக்குப் பெருமை தேடித்தரும். இதனை முந்து செய்தி (Scoop) என்று கூறுவர். பெயரை வெளியிடக் கூடாதென்று வாக்குறுதி பெற்றுச் சிலர் செய்திகளைத் தருவர். செய்தியாளர்கள் அவ்வாக்குறுதிகளை

---

* 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' (29-8-1979) இந்தியாவில் ஒவ்வொரு கட்சிக்கும் உள்ள ஆதரவு பறறிய புள்ளி விவரக் கணக்கை வெளியிட்டுள்ளது.

| கட்சிகள் | நகர்ப்பகுதி | புறநகர்ப்பகுதி | சராசரி |
|---|---|---|---|
| காங்கிரஸ் (இ) | — 30% | — 31% | — 30.7% |
| ஜனதா | — 18 | — 20 | — 19.3 |
| ஜனதா (எஸ்) | — 6 | — 11 | — 09.3 |
| காங்கிரஸ் | — 6 | — 4 | — 04.7 |
| மாநிலக் கட்சிகள் | — 14 | — 11 | — 12.0 |
| பொதுவுடைமை (எம்) | — 6 | — 8 | — 7.3 |

இறுதிவரை காக்க வேண்டும். ஒரே ஊரில் பல நிகழ்ச்சிகள் நடை பெற்றால் பல்வேறு இதழ்களின் செய்தியாளர்கள் கலந்து பேசிப் பிரித்துப் பணியாற்றிச் செய்திகளைப் பரிமாறிக்கொள்வதுண்டு. இதனைக் கூட்டுச் செய்திச் சேகரிப்பு (Pool Reporting) என்பர்.

நினைவாற்றல், குறிப்புகள், சுருக்கெழுத்து ஏடு, நாடாப் பதிவு இவற்றைக் கொண்டு செய்தியாளர்கள் செய்திகளப் பதிவு செய்கிறார்கள். அலுவலகம் வந்த பின்பு செய்திகளை அசை போடும் தொழில் தொடங்குகிறது. குறிப்புக்களைக் கொண்டு செய்திகளை உருவாக்கும் பயிற்சி செய்தியாளர்களுக்கு அமைந் திருக்க வேண்டும். செய்திகளைத் தெளிவாகவும், சுருக்கமாகவும் எழுதவேண்டும். அவை மனத்தளவில் பதிய வேண்டும்; உணர்வு களைத் தூண்டக்கூடாது;ஆசிரியரால் உடனே ஏற்றுக்கொள்ளும் முறையில் அமைக்க வேண்டும். கவர்ச்சியான தலைப்பு, படிக்கத் தூண்டும் தொடக்கம் இவை இரண்டும் செய்தியமைப்பில் கவனிக்கபபட வேண்டியவையாகும்.

## செய்தியாளர் தகுதிகள்

தூண்டில் போடுவோனுக்குக் கிடைக்கும் மீன் குஞ்சாக வும் இருக்கலாம்: குரவையாகவும் இருக்கலாம்! தூண்டில் போட்டு மீன் பிடிப்பவனுக்குரிய பொறுமையும் முயற்சியும் செய்தியாளனுக்கும் வேண்டும். அத்தோடு செய்தியிருப்பிடங் களைக் கண்டு கொள்ளும் நுகர்வுணர்ச்சியும் (Nose for News) செய்தி மதிப்பை அறிந்து கொள்ளும் அறிவுத் திட்பமும் (Sense of News value) அமைந்திருக்க வேண்டும். பொற்கொல் லன் பார்த்தவுடனே தங்க நகை அல்லது போலி நகையென்று கண்டு கொள்வதைப் போன்று செய்தியாளனும் செய்திகளின் மதிப்பை அறிதல் வேண்டும். வழக்கு மன்றச் செய்திகளைப் பெறுவதற்குச் சட்ட நுணுக்கங்களையும் அறிந்திருக்க வேண் டும். விளையாட்டுப் போட்டிகளின் வரலாறு, நுட்பங்களை அறிந்தவர்களே விளையாட்டுத் துறைச் செய்திகளைத் தெளி வாக எழுத முடியும். செய்திகளைப் பிறர் அறியாமல விரைந்து அனுப்புவது இதழ்களின் தரத்தையும் விற்பனையையும் உயர்த் தும். அலுப்புச் சலிப்பற்ற உழைப்பு, ஆய்வுத் திறன், கட்டுரை வன்மை, கலை நோக்கு இவற்றோடு தட்டெழுத்துச், சுருக் கெழுத்துப் பயிற்சிகளும் செய்தியாளர்களுககுரிய தகுதிகளாகும்

கல்லூரிப் பட்டமும் இதழியல் துறைச்சிறப்புப் பட்டமும் அடிப் படைத் தகுதிகளாகும். ஆங்கிலம், தாய் மொழி இரண்டிலும் வளமுடையார் இத்துறையில் சிறப்பாகப் பணியாற்ற முடியும். எல்லாத் துறைகளைப் பற்றிய பொது அறிவு இன்றியமை யாத ஒன்றாகும்.

## கடமையும் பொறுப்பும்

மிகப் பெரிய சமுதாயத்தின் பொறுப்புள்ள சார்பாளன் என்ற நினைவு செய்தியாளருக்கு எப்போதும் இருக்க வேண் டும். செய்திச் சார்பின்றித் தனிச்சார்பில் செயல்படலாகாது. விருப்பு வெறுப்பு என்பனவற்றில் முற்றுந் துறந்த முனிவரா கிக் கடமையாற்ற வேண்டும். அறிமுகமில்லாதவரிடம் தானா கச் சென்று அறிமுகமாகி உரையாடுவதே செய்தியாளனுக்கு அழகாகும். அச்சமும் கூச்சமும் அகலாதவர் அனைவரிடமும் செய்திகளைத் திரட்ட முடியாது. வரவு - செலவு செய்யும் வணிகரைப் போன்று சிரித்த முகத்தோடு செயலாற்றுவதே செய்தித் தொழிலின் இரகசியமாகும். தங்களைப் பற்றிய செய்தி கள் வெளிவருவதை விளம்பரமாகவும் விருப்பமாகவும் சிலர் நினைக்கிறார்கள். வேறு சிலர் அச்சம் அல்லது கூச்சமடைகி றார்கள். இவ்விரு சாராரிடமும் செய்திகளைப் பெறுவதே செய்தியாளரின் திறமையாகும். செய்திகளை முற்றிலும் சரியா கத் தெரிவிக்க வேண்டும். பெயர், முன்னெழுத்து, முகவரி, பதவி ஆகியவற்றில் தவறிழைத்தால் பின்விளைவுகளைச் சந்திக்க வேண்டும். கொலை, கலவரம், தீ விபத்துப் போன்ற செய்திகள் தூண்டிவிடும் முறையில் அமைந்துவிடக்கூடாது. உணவுக்கு உப்பிடுவதைப் போன்று கவர்ச்சிச் செய்திகளை அளவோடு தருதல் வேண்டும். சமுதாயத்தைக் கட்டிக் காக்கும் உரிமையில் கடமையும் பொறுப்பும் கொண்டு செய்தியாளர்கள் பணியாற்ற வேண்டும்.

## தொழில் திறன்கள்

பல்வேறு மக்களுடன் தொடர்பு கொள்ளுவதால் செய்தி யாளர்கள் உளவியல் தத்துவங்களை அறிந்திருக்க வேண்டும். உளவியல் அறிவை இடத்திற்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்றவாறு பயன்படுத்திச் செய்திகளைச்சேகரிக்க வேண்டும். பிறரின் விருப்பு வெறுப்புக்களைப் புரிந்தும் செயல்பட வேண்டும். இராஜாஜி மரணப்படுக்கையில் இருந்தபோது ஒவ்வொரு நாளும் தவறாமல்

பேனா, செய்திக்குறிப்பு ஏடு சகிதமாய் வந்துகொண்டிருந்த செய்தியாளர்களை அவர் மகன் திட்டினாராம். இப்படிப்பட்ட இடங்களில் பொறுமையுடனும் புத்திசாலித்தனமாகவும் நடந்து கொள்ள வேண்டும். ஒருமுறை கேட்டவற்றைப் பார்த்தவற்றைப் படித்தவற்றைத் தேவைப்படும்போது திரும்பக் கொண்டு வரும் நினைவாற்றல் செய்தியாளர்களுக்கு இன்றியமையாத ஒன்றாகும். செய்திகளைத் திட்பமாகவும் சுவையாகவும் புரியும்படி எழுதும் ஆற்றல் வேண்டும். பேட்டி காணும் செய்தியாளர்களுக்கு அக் கலைத் திறன்கள் வளர்ந்திருக்க வேண்டும். சிறந்த மதிப்புரைகள் எழுதத் திறனாய்வு நோக்குச் சிறந்திருக்க வேண்டும்.

## செய்தியாளர் பண்புகள்

நல்ல பண்பாளர்களே நல்ல செய்தியாளர்களாவர். அவர்கள் ஆளுகின்றவர் முதல் ஆண்டி வரை அனைவரையும் அரவணைத்துத் தொழிலாற்ற வேண்டும். செய்தியாளர் பிறருக்கு மதிப்பளிப்பதால் தமக்குரிய மதிப்பைத் தாமே தேடிக் கொள்கிறார். இப்பணி பொறுமையோடு இரண்டறக் கலந்திருப்பதால் சினமறுத்தல் வேண்டும். செய்தியாளர்கள் உணவு, உறக்கம், உணர்வுகள் ஆகியவற்றைத் தியாகம் செய்யும் மனப்பக்குவம் வாய்த்திருக்க வேண்டும். மணச் செய்தியும் பிணச் செய்தியும் செய்தியாளர்களுக்குச் சுவையான செய்திகளேயன்றிச் சுகதுக்கங்களாகா. அவர்களுக்குப் பெரிய மனிதர்களின் தொடர்பிருக்கும். ஆனால் பெருத்த வருவாய் இருக்காது. நன்கொடை என்ற பெயரில்கூட எதனையும் ஏற்றுக்கொள்வது நன்மையாகாது. செய்தியாளர் நெஞ்சில் உரமும், நேர்மைத் திறமும் கொண்டு செயலாற்ற வேண்டும். தன்னம்பிக்கை, உண்மை, பொறுப்புணர்வு, நடுவுநிலைமை முதலிய பண்பாடுகளைக் காக்கவேண்டும். சமூக முன்னேற்றங் கருதாவிடினும் சமூகத் தீங்குகளை மனத்தில் நிறுத்திச் செய்திகளை வெளியிடவேண்டும். தவறுகள் மட்டுமின்றித் தண்டனைகளையும் செய்தியில் உணர்த்த வேண்டும். இத்தகைய பண்புடைய செய்தியாளர்களிடமே செய்தி உலகத்தைத் துணிந்து ஒப்படைக்க முடியும்.

# ஆசிரியர் குழு

அரசியல் பதவி கிடையாது; ஆனால் அரசியல்வாதி களை அதட்டுகிற அதிகாரம் உண்டு. எந்தச் சிக்கலுக்கும் அதன் தொடக்கம் தெரியாது; ஆனால் அதன் உள்நோக்கம் தெரியும்; நாடாளும் பொறுப்புக் கிடையாது; ஆனால் ஆள் வோரைக் கேலியும் கிண்டலும் செய்து அவர்தம் பதவிகளை ஆட்டங் காணச் செய்துவிடுவர்.

— வின்ஸ்டன் சர்ச்சில்.

செய்தி எனுந் தலைவிக்குச் செய்தியாளர்கள் செவிலித் தாயரெனின், ஆசிரியர்களே நற்றாயராவர். செய்திப் பெண்ணிற்கு அழகிய பக்கங்களை ஆடையாக உடுத்திச், செய்தி அணிகளைப் பூண்டு, தோழியராகிய துணையாசிரியர்கள் அழைத்துவர, அவள் வாசகர்களுக்கு மாலையிடுகிறாள். இதனை உருவாக்கும் அரும்பணியில் அலுவலகத்தார் அனைவரும் கூட்டாகச் செயலாற்றுகின்றனர். அவர்களில் ஆசிரியர் இதழின் பெயரோடு வெளி உலகில் அறிமுகமாகிறார். இதழ் எனும் உருள்பெருந்தேருக்கு ஆசிரியர் அச்சாணியாக விளங்குகிறார். இதழ்களில் இதுதான் இவருக்குரிய பொறுப்பென்றில்லாமல் எல்லாவற்றிற்கும் ஆசிரியரே பொறுப்பேற்றுள்ளார். செய்தி யாளர்கள், துணையாசிரியர்கள், அனைத்துப் பிரிவு மேலாளர் கள், அச்சுப் பகுதியினர், வாசகர் ஆகிய அனைவரோடும் ஆசிரியர் அன்றாடம் தொடர்பு கொண்டிருக்கிறார். இதழ்களை விலை கொடுத்து வாங்கிப் படிக்கின்றவர்களின் அறிவும் மனமும் ஒருசேர நிறைவடைய வேண்டும். இதனைப் புரிந்துகொண்டு இதழ்களை உருவாக்குவது ஆசிரியர் பொறுப்பாகும்.

## ஆசிரியர் பணி

ஆசிரியர் இதழ்களின் இயக்குநராகப் பணியாற்றுகிறார். அவர் அலுவலகத்தாரோடு கலந்தும், பொதுமக்களோடு உறவாடியும் பணியாற்ற வேண்டும். செய்தியாளருக்குரிய அன்றாடப் பணிகளுக்கான வேலை ஒதுக்கீட்டு அட்டவணையைத் தயாரித்துக் கொடுப்பது ஆசிரியரின் கடமையாகும். முக்கியமான செய்திகள் கிடைப்பின் மற்ற ஊர்ப் பதிப்புகளுக்கும் அவற்றை அனுப்ப வேண்டும். அச்சுக்கு அனுப்ப வேண்டிய படிகளை எக் காரணங் கொண்டும் தாமதமாக அனுப்பக் கூடாது. பிழைகள் திருத்தப்படிகளோடு நின்றுவிட வேண்டும். அச்சுப்படியில் பிழைகளிருப்பின் அவற்றின் காரணத்தைக் கண்டறிந்து,

மீண்டும் வராமல் தடுத்துவிட வேண்டும். ஒரு செய்தியைத் தவறாக வெளியிடுவதைவிட, வெளியிடாமல் இருப்பதே நல்லதாகும். முதல்படி அச்சானவுடன் நினைவோடு எடுத்துப் பார்த்துச், செய்திகள் மாறாமல் இருப்பதையும், படங்கள் நேராக இருப்பதையும் சரிபார்க்க வேண்டும், அச்சுக்குறைகள் இருந்தாலும் அவற்றைச் செப்பம் செய்ய வேண்டும். ஆசிரியருக்கு வரும் கடிதங்களில் வாசகர்களின் மனப்பிரதிபலிப்பை அறிந்து கொள்ளமுடியும். ஆசிரியர் அவற்றையெல்லாம் முறையாகப் படித்து நிறை குறைகளை அறிந்து கொண்டால் இதழின் வளர்ச்சிக்கு இன்னுஞ் சிறப்பாகப் பணியாற்ற முடியும். நேர்மையான முறையில் இதழ்களை வெளியிடுவதன் மூலம் ஆசிரியர் நிர்வாகத்தின்மீது நம்பிக்கையை உண்டாக்குகிறார். அத்துடன் சட்டபூர்வமான எதிர் நடவடிக்கைகளுக்கு இதழ்களை உட்படுத்தாமலிருப்பதே ஆசிரியரின் அரும்பணியாகும். இதழ்களால் ஆசிரியர்கள் சிறப்படைவது நிகழ்காலம். ஆசிரியர்களால் இதழ்கள் சிறப்படைந்தது கடந்த காலம். மறைமலை அடிகளார் (அறிவுக்கடல்), திரு. வி. க. (தேசபக்தன்), பாரதியார் (சுதேசமித்திரன்), பெரியார் (குடியரசு), டி.எஸ். சொக்கலிங்கம் (தினசரி), ஏ. என் சிவராமன் (தினமணி), ஆதித்தனார் (தினத்தந்தி) போன்றோர் இதில் அடங்குவர். விற்பனைக் குறைவு ஏற்படுவதை உடனடியாக உணர்ந்து போட்டிகள், பரிசுகள், இணைப்புகள் முதலியவற்றால் வாசகர்களைக் கவரும் முயற்சியில் ஆசிரியர் ஈடுபட வேண்டும்.

## ஆசிரியர் செயலாற்றும் முறை

ஆசிரியர் அனைவரிடமும் கலந்து பேசி, அரவணைத்துச் செயலாற்ற வேண்டும். பாராட்டுப் பெறுவதைப் போன்றே சில செய்திகள் கண்டனத்திற்கும் உள்ளாவதுண்டு. இத்தகைய நேரங்களில் புகழ்ச்சிக்கு அடிமைப்படுவதும், எச்சரிக்கைக்கு அச்சப்படுவதும் இதழாசிரியர்களுக்கு ஆகாதவையாகும். போட்டிகளுக்கிடையே புகுந்து வெளிவரவேண்டிய இன்றைய இதழ்களுக்கு மூலதனமும் செய்தித்தரமும் இன்றியமையாதவை. இதழின் தரத்தைக் கூட்டி, விளம்பரங்களைப் பெருக்கி, விற்பனையைக் கூட்டுவது ஆசிரியரின் முக்கியப் பொறுப்பாகும். இதற்கென விற்பனை மேலாளர், விளம்பர மேலாளர் ஆகியோருடன் அடிக்கடி கலந்து பேசவேண்டும். பல்துறை அறிவு, நாட்டு

நடப்பு, உலகக் கண்ணோட்டம், நிருவாகத் திறன், கட்டுரை வன்மை, இலக்கிய அறிவு, மொழிப்பயிற்சி முதலியன ஆசிரியருக்கான அறிவு பூர்வக் கருவிகள் (Intellectual Tools) ஆகும். இவற்றோடு இதழ்கள் கையேடு (Style Book), செய்தித்தாள் குறிப்பேடு (Head scheduled list) ஒப்பறி நூல்கள், தரமான அகராதி, கலைக்களஞ்சியம், தொலைபேசியகப் புத்தகம், அஞ்சல் துறை வழிகாட்டி, நகரமைப்புப்படம், உலகப்படம் முதலியவை ஆசிரியரிடம் இருக்கவேண்டிய பொருள்வடிவக் கருவிக (Physical Tools) ளாகும்.

## துணையாசிரியர்கள்

துணையாசிரியர்கள் இதழ்களில் இலைமறைகாய்களாக இருந்து செயலாற்றுகிறார்கள். இவர்களே இதழ்களின் தரத்திற்கும், புகழுக்கும் உரியவற்றை ஓசையின்றிச் செய்து முடிக்கிறார்கள். செய்தியாளர்கள் செய்தித் தொகுப்பிற்கு வெளியுலகில் அலைந்து திரிகிறார்கள்; துணையாசிரியர்கள் செய்தி அமைப்பிற்கு அலுவலகத்திற்குள் ஆடியோடிச் செயலாற்றுகின்றனர்.

ஓர் இதழை உருவாக்கும் பணியில் பல்வேறு துணையாசிரியர்கள் பங்கேற்கின்றனர். செய்தி ஆசிரியர் (News Editor) செய்தி அலுவலகத்திற்கு வந்துகுவிகின்ற செய்திகளை ஆராய்ந்து, அன்றைய செய்தித்தாளுக்குரிய செய்திகளைத் தேர்ந்தெடுக்கின்றார். மிகுதியுள்ள செய்திகளில் அடுத்த நாளில் வெளியிடும் தகுதியுள்ளவற்றையும் எடுத்துத் தனியே எழுதி வைத்துக் கொள்வார். பல்வேறு வழியாகச் செய்தி அலுவலகத்திற்கு வந்து சேரும் எழுத்துப்படிச் செய்திகளைச் சுவையறிந்து தேர்ந்தெடுப்பதால் இவர் எழுத்துப்படிச் சுவைஞர் (Copy taster) என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறார். இங்ஙனம் தேர்வு செய்யப்பட்ட செய்திகள், படங்கள், மற்றும் விளம்பரப் பகுதியிலிருந்து வந்த விளம்பரங்கள் முதலியன செய்திப் பரப்பு ஆசிரியருக்கு (Projection Editor) வந்து சேருகின்றன. இவர் பக்கங்களைத் திட்டமிடும் (Lay-out) பணியைத் தொடங்குகிறார். எந்தெந்தப் பக்கங்களில்-எந்தெந்தச் செய்திகள்- எந்த அளவில்- எந்த வகையில் இடம் பெறலாம் என்பதை இவ்வாசிரியர் திட்டமிட்டு முடிவு செய்து மாதிரிப் பக்கம் (Dummy page) தயாரித்துத் தருகிறார். இம் மாதிரிப்

பக்கங்கள் அடுத்து மறுஆய்வு ஆசிரியர் (Revise Editor) பகுதிக்கு வந்து சேருகின்றன. இப்பகுதியில் இத்துணையாசிரியருடன் எழுத்துப்படித் திருத்துநர்களும் ஒரே மேஜையினைச் சுற்றி அமர்ந்திருப்பர். இப்பகுதி 'திருத்தப்படி மேஜை' (Copy Desk) எனப்படுகிறது. மறு ஆய்வு ஆசிரியர் எழுத்துப்படித் திருத்து நர்களிடம் மாதிரிப் பக்கங்களைக் கொடுத்துச் சரிபார்த்துத் திருத்தம், நீக்கல், சேர்த்தல் முதலிய மாற்றங்களைச் செய்யப் பணிப்பார். குறிப்பிட்ட துறையில் தேர்ந்தார் அக் குறிப்பிட்ட துறைச் செய்திகளைச் செப்பம் செய்து முடிப்பார்; இறுதியாகச் செப்பம் செய்யப்பட்ட படிகள் பக்கப் புனைவு ஆசிரியரிடம் (Page make - up - Editor) வந்து சேரும். இத்துணையாசிரியர் மாதிரிப் பக்கத்தை வைத்துக் கொண்டு ஒவ்வொரு பக்கத்தினையும் எல்லா வகையிலும் சிறந்த அழகான பக்கமாக அமைத்துக் கொடுப்பார். இப்போது பக்கங்கள் அனைத்தும் அச்சிற்கு அணியமாகிவிடும். இவர்களுடன் இரவுச் செய்தி ஆசிரியர் (Night editor), மாநிலச் செய்தி ஆசிரியர் (State editor), நகரச் செய்தி ஆசிரியர் (City editor), ஞாயிறு சிறப்புப் பகுதி ஆசிரியர் (Sunday editor), கலைப்பகுதி ஆசிரியர் (Art editor), விளையாட்டுப் பகுதிஆசிரியர் (Sports editor), சமுதாயப் பிரிவு ஆசிரியர் (Society editor), சிறப்பு ஆசிரியர் (Special editor) என ஒவ்வொரு பகுதிக்கும் தனித்தனித் துணையாசிரியர்கள் பணியாற்று கின்றனர்.

## துணையாசிரியர் செயலாற்றும் முறை

அச்சாவதற்கு முன்பு செய்திப் படியின் பக்கங்களைத் துணையாசிரியர்கள் ஒழுங்குபடுத்துகின்றனர். சிறப்பான செய்திகளாக இருந்தாலும் அவற்றை ஒழுங்குபடுத்தி அமைக்கா விட்டால் செய்தித்தாள்கள் எதிர்பார்க்கும் வரவேற்பைப் பெற முடியாது. திறமையான பக்க ஒழுங்குப்பாட்டில் சாதாரணப் பக்கங்கள்கூட வாசகரின் கவனத்தை ஈர்க்கின்றன. எந்தச் செய்தி எந்தப் பக்கத்தில் இடம்பெற வேண்டும் என்பதைத் துணையாசிரியர்கள் அறிந்து வைத்திருக்கிறார்கள். அதற்றகேற் வாறு செய்திகளைக் கூட்டியும் குறைத்தும் அமைக்கிறார்கள். விரைவு, இக்கட்டான நிலைகள் காரணமாகச் செய்தியாளர்கள் தொகுத்த செய்திகளில் தவறுகள் ஏற்படவாய்ப்பிருக்கும். எனவே, துணையாசிரியர்கள் விழிப்போடு செயலாற்றி அவற்றைக் கண்டு நீக்க வேண்டும்.

துணையாசிரியர் தமக்குச் சிக்கலாகத் தோன்றும் செய்திகளை ஆசிரியர் முடிவுக்கு விடவேண்டும். அவதூறுச் செய்திகளை அகற்ற நீதிமன்றச் சட்டங்களையும், சட்டமன்ற உரிமைச் சிக்கல் செய்திகளை நீக்கச் சட்டமன்ற விதிமுறைகளையும் அறிந்திருக்க வேண்டும். ஐயங்கள் தோன்றும்போது அலுவலக நூலகத்தைப் பயன்படுத்த வேண்டும். நாட்டுத் தலைவர்கள், அரசியல்வாதிகள் மற்றும் முக்கியமானவர்களைப் பற்றிய வரலாறு, படங்கள் அடங்கிய கோப்புக்களைத் தயாரித்து வைத்துக் கொண்டால் எதிர்பாராமல் திடீரென நடைபெறும் செய்திகளுக்கு அவை பயன்படும். விளம்பரங்கள் இதழ்களின் வருமானத்திற்கு அடிப்படையானவையாகும். நிருவாகத்தினர் சிறிய விளம்பரங்களைக்கூட நீக்கிவிட விரும்பமாட்டார்கள். அதேநேரத்தில் இதழ்கள் விளம்பரமயமாக அமைந்துவிடலாகாது. அகலாது, அணுகாது தீக்காய்வார்போல் துணையாசிரியர் விளம்பரங்களைச் செய்தித்தாள்களில் அடக்கவேண்டும். எந்தச் சிக்கலையும் உடனடியாகத் தீர்க்கும் பல்துறை அறிவாளர்களாகத் துணையாசிரியர்களும் திகழவேண்டும். இதழ்களின் தரமின்மைக்கும் பிழை மலிவுக்கும் துணையாசிரியர்களே அடிப்படைக் காரணமாகக் கருதப்படுகிறார்கள். எனவே, அலுவலகத்தில் செயலாற்றும் அனைவரையும்விடப் பொறுப்பும், சுறுசுறுப்பும் துணையாசிரியர்களுக்கு அதிகமாக இருக்கவேண்டும்.

## மெய்ப்புத் திருத்துநர்

மெய்ப்புத் திருத்துநர்கள் செய்திப் படிகளை அச்சுப் படிகளோடு ஒப்பிட்டுப் பார்த்துக் குறியீடுகளால் திருத்தம் போடுகிறார்கள். இவர்கள் திருத்தங்களை மட்டுமே சுட்டிக் காட்ட முடியும். மாற்றங்களைத் துணையாசிரியர்கள்தாம் செய்கிறார்கள். இதழ்களின் தரக்குறைவிற்குப் பிழைகளும் காரணமாகின்றன. மெய்ப்புத் திருத்துநர் கவனமாகச் செயலாற்றி முற்றிலுமாகப் பிழைகளைப் போக்கிவிட்டால், துணையாசிரியர்களிடம் செய்திப்படி முடங்காமல் அச்சிற்கு விரைந்து போகிறது. அவதூறுச் செய்திகள் தென்பட்டால் இவர்கள் துணையாசிரியர்களின் கவனத்திற்குக் கொண்டு வருவதுண்டு. தேர்வு முடிவுகள் போன்ற எண்களடங்கிய மெய்ப்பைத் திருத்தும் போது ஒருவர் செய்திப்படியைப் படிக்க மற்றொருவர் அச்சுப்படியில் திருத்தம் போடவேண்டும். மெய்ப்புப் படியினைச் சரிபாதி

யாகப் பிரித்துக் கொண்டு இரு ஓரப்பகுதிகளிலும் திருத்தக் குறியீடுகளை எழுதுவது வழக்கம். பல சொற்றொடர்கள் அல்லது சில வரிகள் விட்டுப்போயிருப்பின் மெய்ப்பில் திருத்த முடிவதில்லை. அவ்விடங்களைக் குறியிட்டுச் 'செய்திப்படியினைப் பார்க்கவும்' (See copy) என்று எழுதி மீண்டும் அச்சுக் கோப்பிற்கு அனுப்பிவிடுவர்.

மெய்ப்புத் திருத்தலில் இருமுறைகள் பின்பற்றப் படுகின்றன. குறியிடும் முறையில், பிழைகளை அடித்துவிட்டு உரியவற்றை எழுதுவதோடு அதற்கு நேராக ஓரப்பகுதியிலும் திருத்தம் போட வேண்டிய எழுத்துக்களை எழுதுகிறார்கள். புத்தக மெய்ப்புத் திருத்தலில் இம்முறை பயன் படுகிறது. கோடிடும் முறையில், பிழைகள் உள்ள இடத்திலிருந்து ஓரப் பகுதிக்குக் கோடு இழுத்து அங்கே மாற்ற வேண்டிய எழுத்துக்களை எழுதுகிறார்கள். திருத்தம் போடுகின்றவர்களும் அவற்றைத் தெரிந்து கொள்கிறார்கள். செய்தித்தாள் மெய்ப்புத் திருத்தலில் குறிப்பிட்ட முறைகள் பின்பற்றப்படுவதில்லை. பலரும் பல முறைகளைப் பின்பற்றுகிறார்கள். மெய்ப்புத் திருத்துநர் மட்டுமின்றி, அலுவலகத்தில் பணியாற்றும் அனைவரும் மெய்ப்புத் திருத்தும் முறைகளை அறிந்து வைத்திருக்க வேண்டும்.

# செய்தி நிறுவனங்கள்

> புதுமையான செய்தித் தொடர்புகளால் மக்களின் வாழ்வு, கருத்து, பொழுது போக்கு ஆகியவற்றைப் பெரும்பாலோருக்குக் கிட்டும் வண்ணம் முறையாகவும் நேர்மையாகவும் பரப்புவதே செய்தித் தொழிலாகும்.
>
> அமெரிக்க இதழாளர், ஜி.எப்.மோட்

பருவ இதழ்கள் நிதானமாகச் சிந்தித்துச் செய்திகளை அச்சிட்டு வெளியிடுகின்றன, நாள்தோறும் பிறக்கின்ற நாளிதழ்கள் ஒரு நாள் வாழ்வோடு ஓடி மறைகின்றன. காலம் பொன் போன்றும், கடமை கண் போன்றும் கருதப்படுவதால் நாளிதழ்கள் விரைந்து செயல்படுகின்றன. செய்திகளைத் தொகுப்பதிலேயே இவ்விரைவு தொடங்கி விடுகிறது. காலங்கடந்து கிடைக்கின்ற செய்திகள் நாளிதழ்களுக்குப் பயன்தரா. செய்திகளை விரிவாக மட்டுமின்றி விரைந்தும் கொடுக்கின்ற நாளிதழ்களே நாட்டில் நின்று நிலைத்து வாழமுடியும். உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் செய்தியாளர்களை அமர்த்திச் செய்தித்தாள்கள் செய்திகளைச் சேகரித்துக் கொள்கின்றன. ஆனால், உலகம் முழுமையும் செய்தியாளர்களை அமர்த்த முடியாது. உலகளாவிய செய்திகளை நாளிதழ்கள் நீக்கவும் முடியாது. அணு-ஆயுதக் குறைப்புப் பற்றிய வல்லரசு நாடுகளின் தீர்மானம், நடுவு நிலைமை நாடுகளின் மாநாடு உலகத் தலைவர்களின் மறைவு, ஒலிம்பிக் விளையாட்டு, ஐக்கிய நாடுகள் சபையின் நிகழ்ச்சிகள், உலக நாடுகளின் பொதுத்தேர்தல் இத்தகைய உலகச் செய்திகளும் நாளிதழ்களுக்கு விரைந்து கிடைக்க வேண்டும். இதழியல் துறையில் விரைந்து சுறுசுறுப்புடன் செயல்படும் நாளிதழ்களுக்கு உதவியாக நிற்பவை செய்தி நிறுவனங்களேயாகும்.

உலகம் முழுவதையும் டெலிபிரிண்டர், டெலக்ஸ், கம்பியில்லாத் தந்தி, கடலடிக் கம்பி, தொலைபேசி ஆகிய தகவல் தொடர்புக் கருவிகளால் பின்னிப் பிணைத்து வைத்திருக்கும் செய்தி நிறுவனங்கள், உலகச் செய்திகளை நாளிதழ்களுக்கு விரைவாகச் சேகரித்துக் கொடுக்கின்றன, உலகம் முழுவதும் உள்ள செய்தித்தாள்களுக்குச் செய்திகளை விற்க முடிவதால் குறைந்த செலவில் நிறைந்த செய்திகளைச் செய்தி நிறுவனங்கள் வழங்க முடிகிறது. செய்தித்தாள்களுக்கு மட்டுமின்றி வணிகக் கழகங்கள், தொலைக்காட்சி, வானொலி ஆகியவற்றிற்கும் இவை செய்திகளைச் சேகரித்து வழங்குகின்றன.

"தொலைவரி, கையெழுத்துப் படிகள், நாடாப் பதிவுகள், தொலைபேசி இவற்றின் மூலமாக நாளிதழ்கள், பருவ இதழ்கள், தனியார் கழகங்கள், நிறுவனங்கள் போன்றவற்றிற்கும் ; தனிமனிதர்களுக்கும் உடனுக்குடன் செய்திகளைத் தரும் நிறுவனம் செய்தி நிறுவனமாகும்."

இவ்வாறு பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் விளக்கம் கூறுகிறது.* வெகுவாக முன்னேற்றங் கண்டுள்ள இன்றையச் செய்தி நிறுவனங்கள் இவ்விளக்கத்தையெல்லாம் தாண்டி விட்டன, தொலைவரித் தட்டச்சுப் பொறி (Teleprinter), நேர்படி ஒளிப்பட அனுப்புகை (Facsimile Transmission), தொலை ஒளிப்படம் (Telephotograph) இவற்றின் வளர்ச்சியால் அவை விரைந்து செயல்படுகின்றன. அத்துடன் கடலடிக் கம்பிகள் (Cable), செய்தி விண் கூடுகள் (satellite) இவற்றின் வழியாகவும் செய்தி நிறுவனங்கள் செய்திகளை இதழ்களுக்கு வழங்குகின்றன.

## தொடக்க காலச் செய்தி நிறுவனங்கள்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இராய்டர், ஹாவாஸ், உல்ஃப ஆகிய மூன்று செய்தி நிறுவனங்களிடமிருந்தே உலகநாடுகள் செய்திகளைப் பெற்றுக் கொண்டிருந்தன. இவற்றின் ஆதிக்கத்தைக் குறைக்க 'அசோசியேட்டட் பிரஸ் ஆப் அமெரிக்கா' 1848 - இல் தொடங்கப்பட்டது. 1825 - இல் சார்லஸ் ஹாவாஸ் என்பவர் பாரீஸ் நகரில் தொடங்கிய செய்தி நிறுவனமே உலகின் முதல் செய்தி நிறுவனமாகும். தொடக்கத்தில் செய்திக் கழகம் ஒன்றை அமைத்த ஹாவாஸ் அஞ்சல் வழியாகவும் ஆட்கள் வழியாகவுமே செய்திகளைத் தொகுத்து அனுப்பினார். உள்நாட்டிற்குள் புறாக்கள் பயன்படுத்தப்பட்டன. செல்வந்தர்கள், இராஜதந்திரிகள், வணிகர்கள் ஆகியோர் இச்செய்திக் கழகத்தினைப் பயன்படுத்திக் கொண்டனர். 1848 - இல் இலண்டன், ரோம் ஆகிய இடங்களில் கிளைகளைத் தொடங்கிய போது 'ஹாவாஸ்' செய்தி நிறுவனமாக வளர்ந்தது. இந்த நிறுவனத்தில் பணியாற்றிய பெர்னார்டு உல்ஃப் என்பார் 1848 - இல் தனியாகப் பிரிந்து செய்திகளைச் சேகரித்துத் தொலைவரி மூலமாக அனுப்பினார். செர்மனியில் தொடங்கப்பட்ட இந்நிறுவனத்தில் அங்காடி

* Encyclopaedia Britannica — page ; 125

நிலவரங்களைப் பற்றிய செய்திகளே அதிகமாகத் தொகுக்கப் பட்டு வணிகர்களுக்கு வழங்கப்பட்டன. காலப்போககில் அரசி யல், சமூகச் செய்திகளும் சேகரிக்கப்பட்டன. 1875 - ஆம் ஆண்டில் இராய்டர், ஹாவாஸ் நிறுவனங்களுடன் ஒப்பந்தம் செய்துகொண்ட பின்பு உல்ஃப் நிறுவனம், அவற்றிடமிருந்து செபதிகளைப் பெற்று வழங்கியது. ஜெர்மனி, ரஷ்யா, துருக்கி, ருமேனியா, பல்கரியா ஆகிய நாடுகளில தனிச் செலவாக்குப் பெற்றிருந்தது; இந்த நிறுவனம. முதல் உலகப போரின் போது இதழ்களின்மீது கண் வைத்த இட்லர் உல்ஃப் நிறுவனத் தைத் தடை செயதார். பால் சூலியஸ் ராய்டர் 'ஹாவாஸ்' நிறுவனத்தில் மொழிபெயர்ப்பாளராகப் பணியாறறியவர். வணிகச் செய்திகளைச் சேகரிக்க இலண்டனில் அலுவலகம் ஒன்றைத் தொடங்கிய போது இராய்டர் நிறுவனம் நிறை வாகச் செயலபடவில்லை. 1856-லதான டைம்ஸ் போன்ற இலண்டன் இதழ்கள் செய்திகளை வாங்கத் தொடங்கின. அஞ்சல் துறையில் 'தகவல் அறிவிப்புச் சாதனங்கள' வளர்நத பின்பு இராய்டர் விரைவாக வளர்ந்தது.

தொடக்க காலத்தில் அமெரிக்காவில் செய்திகளைச் சேகரித்த முறை புதுமையானதாகும். பிற நாட்டுக் கப்பல் கள் வருகின்ற போது துறைமுகத்திலிருநது படகுகளில் சென்று செய்திகளைத் திரட்டிவந்து செய்தித்தாளகளுக்கு வழங்கினார் கள். இப்படகுகள் 'செய்திப் படகுகள்' என்றே வழங்கப் பட்டன. இம்முறையின் வளர்ச்சியில உருவானதே அமெரிக் காவின் 'அசோசியேட்டட் பிரஸ்' செய்தி நிறுவனமாகும். 1892 - இல் இல்லினாய்ஸ் நகரில விரிவாகச் செயல் படத் தொடங்கிய இந்த நிறுவனம் உலகின் எல்லா நாடுகளுடனும் தொடர்பு கொண்டது. 'அசோசியேட்டட் பிரஸ்' நிறுவனத் தைத் தொடர்ந்து அமெரிக்காவில் 'யுனைடெட் பிரஸ் இண்டர் நேஷனல்' நிறுவனம் 1909 - இல் ஸ்கிரிப்ஸ் என்பவராலும், 1915 - இல் 'இண்டர்நேஷனல நியூஸ் சர்வீஸ்' ஹர்ஸ்டு என்பவராலும் தொடங்கபபட்டன.

சோவியத் நாட்டில் 1918 - இல் அரசுச் செய்தி நிறுவன மாக 'டாஸ்' (TASS) தொடங்கப்பட்டது. ஜெர்மனி அரசு 'டிரான்ஸ் ஓஷன்' (Trans Ocean) என்ற அரசுச் சார்பான செய்தி நிறுவனத்தை ஏற்கனவே தொடங்கியிருந்தது. சோவி

யத்து நாட்டில் அரசின் அதிகாரபூர்வச் செய்தி நிறுவனமாக இன்றுவரை டாஸ் விளக்குகிறது.

இந்தியாவில் பாம்பே டைம்ஸ் இதழ் 1860 - இல் இராய்டரின் செய்திகளைப் பெறத் தொடங்கியது. 1865 - இல் இந்தியாவிற்கும் இங்கிலாந்திற்கும் கடலடிக் கம்பிச் செய்தித் தொடர்பு ஏற்பட்ட பின்பு இராய்டரின் செய்திகள் விரைவாக வந்து சேர்ந்தன. முதல் உலகப் போரின் போது இதழ்கள் செய்தி நிறுவனங்களில் உறுப்பாண்மை பெறத் தொடங்கின. இரண்டாம் உலகப் போரினையொட்டி உள்நாட்டுச் செய்தி நிறுவனங்கள் ஒவ்வொரு நாட்டிலும் தோன்றி வளர்ந்தன.

## உலகச் செய்தி நிறுவனங்கள்

### இராய்டர் (Reuter)

ஜெர்மனியைத் தாயகமாகக் கொண்ட பால் ஜூலியஸ் இராய்டர் 1851-இல் 'ராய்டர் பீரோ' என்ற பெயரில் இலண்டனில் செய்தி நிறுவனம் ஒன்றைத் தொடங்கினார். தொடக்கத்தில் புறாக்களைப் பயன்படுத்திச் சிலவிடங்களுக்குச் செய்திகளை அனுப்பினார். தகவல் அறிவிப்பில் அறிவியல் சாதனத் தொடர்புகள் உண்டான பின்பு 'இராய்டர்' மிகப் பெரிய நிறுவனமாக மாறியது. ஹாவாஸ், உல்ஃப் ஆகிய நிறுவனங்களுடன் இராய்டர் செய்திகளைப் பரிமாறிக் கொள்ளும் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டார். 1941-ஆம் ஆண்டில் இராய்டர் கூட்டுறவு அடிப்படையில் பொது நிறுவனமாக மாற்றப்பட்டது. வேறுசில செய்தி நிறுவனங்கள் பங்குத் தொகை செலுத்தி இதன் நிருவாகக் குழுவில் இடம் பெற்றுள்ளன. இந்தியாவின் பி.டி.ஐ. நிறுவனமும் அவற்றுள் ஒன்றாகும். பி.டி.ஐ. நிறுவனம் இராய்டர் செய்திகளைப் பெற்று இந்திய இதழ்களுக்கு வழங்குகிறது. பிரிட்டன், ஆஸ்திரேலியா, நியூசிலாந்து நாடுகளைச் சார்ந்த இதழ்களின் கூட்டுப் பொறுப்பும் இராய்டருக்குக் கிட்டியது.

1860-இல் பாம்பே டைம்ஸ் இராய்டரின் மூலமாக அயல் நாட்டுச் செய்திகளைப் பெறத் தொடங்கியது. இந்த நிறுவனத்தின் இந்தியக்கிளை 1866-இல் தில்லியில் தொடங்கப்பட்டது. 1878-இல் பம்பாயில் ஒரு கிளை தொடங்கப்பட்டது. இராய்டர் செய்திகளைப் பெற இந்திய இதழ்கள் பேரார்வம் காட்டின,

ஆனால், இருபது சொற்களைக் கொண்ட ஒரு செய்திக்கு ஒரு பவுன் கட்டணம் செலுத்தும் நிலையில் அவை தள்ளாடின. என்றாலுங்கூட இராய்டர் 123 இந்திய இதழ்களை உறுப்பினர்களாகப் பெற்றிருந்தது. பிற்காலத்தில் இந்துஸ்தான் டைம்ஸ் ஆசிரியர் தேவதாசு காந்தி இதன் இயக்குநர் குழுவில் இடம் பெற்றிருந்தார். இன்று இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட அலுவலர்களைக் கொண்டிருக்கிறது இராய்டர் நிறுவனம். எல்லா நாட்டுத் தலைநகரிலும் செய்தியாளர்களை அமர்த்தியுள்ளது. ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா நாடுகளுக்குச் செய்திகளை உடனுக்குடன் கொடுக்கின்ற உலகின் தலை சிறந்த செய்தி நிறுவனமாக இராய்டர் விளங்குகிறது.

### அசோசியேடட் பிரஸ் (A.P.)

இந்நிறுவனம் நியூயார்க் நகரில் 1848-இல் ஜேம்ஸ் பென்னட் என்பவரால் தொடங்கப்பட்ட போது 'ஹார்பர் நியூஸ் அசோசியேசன்' என்பது இதன் பெயராகும். 1857-இல் டெலிகிராபிக் அண்டு ஜெனரல் நியூஸ் அசோசியேசன்' என்ற நிறுவனத்துடன் இணைந்தபோது 'நியூயார்க் அசோசியேடட் பிரஸ்' என்ற பெயருடன் அமெரிக்காவின் மிகப் பெரிய செய்தி நிறுவனமாகச் செயல்படத் தொடங்கியது. 1934-ஆம் ஆண்டில் இலாபக் கண்ணோட்டமில்லாத கூட்டுறவு நிறுவனமாக மாற்றப்பட்டது. அந்நிறுவனம் அரசுச் சார்பான நிறுவனங்களுடன் எவ்வித ஒப்பந்தங்களையும் வைத்துக் கொள்வதில்லை என்ற குறிக்கோளுடன் அரசினரின் உதவித் தொகையினையும் ஏற்க மறுத்து விட்டது. தகவல் துறையில் பத்தாயிரம் நிறுவனங்கள் தொடர்பு கொண்டு செய்திகளைப் பெறுகின்ற இந்நிறுவனம் விண்கலங்களின் வழியாகவும் செய்திகளை அனுப்புகின்றன.

### யுனைடெட் பிரஸ் இண்டர்நேஷனல் (U. P, I)

அமெரிக்காவின் மற்றுமொரு சிறந்த செய்தி நிறுவனம் யு.பி.ஐ. ஸ்கிரிப்ஸ் என்பவர் 1909-இல் தொடங்கிய 'யுனைடெட் பிரஸ் அசோசியேசன்', ஹரஸ்டு என்பவர் 1915 இல் தொடங்கிய 'இண்டர் நேஷனல் நியூஸ் சர்வீஸ்' ஆகிய இரு நிறுவனங்களும் இணைந்தே 'யுனைடெட் பிரஸ் இண்டர்நேஷனல்' செய்தி நிறுவனம் உருவாகியது. மெக்சிகோவைச் சார்ந்த மரியோ வாஸ்கிஸ்ரானா என்னும் செல்வந்தர் 1960-இல் இவ்

விணைப்பு நிறுவனத்தைத் தொடங்கினார். எட்டாயிரம் பேர் இந்நிறுவனத்தில் பணியாற்றுகின்றனர். இந்தியா, ரஷ்யா தவிர மற்றைய நாடுகளுக்கு யு பி ஐ. நேரடியாகச் செய்திகளை அனுப்புகிறது. கடலில் செல்லும் இரு நூறு கப்பல்களுக்குச் செய்திகளை வழங்கும் இந்த நிறுவனம் நியூயார்க் நகரைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்படுகிறது.

ஏஜன்சி பிரான்ஸ் பிரஸ் (A.F.P)

இது 1835-இல் பாரீஸ் நகரில் தொடங்கப்பட்ட நிறுவன மாகும். இப் பிரெஞ்சு நிறுவனமும் பல சிறிய நிறுவனங்கள் ஒன்று கூடி உருவானதேயாகும். இதன் தலைமை இயக்குநர் பிரெஞ்சு அரசினால் நியமிக்கப் படுகிறார். இந்நிறுவனம் ஆண்டுதோறும் அரசிடம் மானியம் பெற்றுவருகிறது.

டாஸ் (TASS)*

மாஸ்கோவில் 1918-ல் சிறிய அளவில் இயங்கிய 'ராஸ்டா ஏஜன்சி' என்ற நிறுவனத்தை சோவியத்து அரசு விலைக்கு வாங்கி 1925-இல் அரசுச் சார்பான செய்தி நிறுவனமாக்கியது இதுவே 'டாஸ்' நிறுவனம் ஆகும். இதன் ஊழியர்கள் அனைவரும் அரசு ஊழியர்களாவர். இந்நிறுவனத்தின் தலைமை, துணை இயக்குநர்களைச் சோவியத்து அரசு நியமிக்கிறது. அதிகாரிகள் வேண்டியபோது மாற்றப்படுவர். மாஸ்கோவைத் தலைமையிட மாகக் கொண்டிருக்கும் டாஸ்நிறுவனம் பிரிட்டன், பிரான்சு செய்திநிறுவனங்களின் தொடர்பைக் கொண்டிருக்கிறது. ஆங் கிலம்,பிரெஞ்சு,ஜெர்மன் ஆகிய மொழிகளிலும் பிறநாடுகளுக்குச் செய்திகளை அனுப்புகிறது. அரசுக்குப் புறம்பான செய்தி களை உள்நாட்டளவிலும், வெளிநாட்டளவிலும் டாஸ் நிறு வனம் இதழ்களுக்குக் கொடுப்பதில்லை. ஏழாயிரத்திற்கு மேற் பட்ட அலுவலகங்களை நூற்றுக்கு அதிகமான நாடுகளில் இந் நிறுவனம் அமைத்துச் செயல்படுகின்றது. இரசியாவில்ஏ.பி.என். (Novosti Press Agency) என்னும் மற்றுமோர் செய்தி நிறுவனம் உலக நாடுகளிடையே சமாதானம் பற்றிய செய்திகளைப் பரப்பு வதாகச் செயல்படுகிறது. இரசியப் பத்திரிக்கைகள், எழுத்தாளர்

---

* Telegrafnoie Agenstvs Sovietskavo Sovuiza என்ற இரசிய மொழிச் சொல்லின் சுருக்கம். சோவியத் யூனியன் செய்தி நிறுவனம் என்பது பொருள்.

கள், அறிஞர்கள் கூட்டு முயற்சியில் 1961-இல் இந்நிறுவனம் அமைக்கப்பட்டுள்ளது.

அசோசியேடட் பிரஸ் ஆப் பாகிஸ்தான். ஈரானில் பார்ஸ் (Pars) நிறுவனம், சப்பானில் கியோடா (Kyodo) நிறுவனம் முதலிய செய்தி நிறுவனங்களும் செயல்படுகின்றன,

## இந்தியச் செய்தி நிறுவனங்கள்

நாட்டின் பல்வேறு பகுதிகளில் செய்தியாளர்களைக் கொண்டு திரட்டிய செய்திகளை உள்நாட்டில் உறுப்பாண்மை பெற்ற இதழ்களுக்கும், வெளிநாட்டுச் செய்திநிறுவனங்களுக்கும் இந்தியச் செய்தி நிறுவனங்கள் வழங்குகின்றன. பிரஸ் டிரஸ்ட் ஆப் இந்தியா, யுனைடெட் நியூஸ் ஆப்இந்தியா ஆகிய இரண்டும் இந்தியாவில் தலைசிறந்த செய்தி நிறுவனங்களாகப் பணியாற்று கின்றன. இவற்றோடு சிறிய செய்தி நிறுவனங்கள் சிலவும் உள்ளன.

### அசோசியேடட் பிரஸ் ஆப் இந்தியா (A.P.I.)

இராய்டரின் தனியாட்சி அதிகாரமும் செய்திகளுக்கான அதிகக் கட்டணமும் இந்திய இதழாளர்களைச் சிந்திக்க வைத்தன. ஆங்கில அரசில் பணியாற்றிய இந்தியர் கே. சி. ராய் 1905-இல் 'அசோசியேடட் பிரஸ் ஆப் இந்தியா' என்ற பெயரில் இந்தியாவின் முதல் செய்தி நிறுவனத்தை அமைத்தார்.

இங்லீஸ்மேன் இதழின் செய்தியாளரும், இந்தியாவில் இராய்டர் நிறுவனத்தின் முகவராகப் பணியாற்றிவருமான எட்வர்டு பக், 'ஸ்டேட்ஸ்மேன்' செயதியாளர் கோட்ஸ் ஆகிய இருவரும் கே. சி ராய்க்குத் துணை நின்றனர். கல்கத்தாவின் ஆறு செய்தித்தாள்கள் ஆதரவு தந்தன. இதன் கிளைகள் கல்கத்தா, சென்னை, பம்பாய் ஆகிய இடங்களில் தோன்றின. இந்திய விடுதலைப் போராட்ட காலத்தில இந்தச் செய்தி நிறுவனத்தின் பணி இந்திப மக்களின் பெருதத வரவேற்பைப் பெற்றது. 1937-இல் டெலிபிரிண்டர் அமைப்பில் இந்தியாவின் அனைத்து மாநிலங்களையும் ஏ, பி. ஐ. தொடர்பு கொண்டது. 1952-இல் பி. டி. ஐ. நிறுவனத்துடன் இணைந்து விட்டது.

### பிரஸ் டிரஸ்ட் ஆப் இந்தியா (P.T.I)

1947-ஆம் ஆண்டுவரை ஏ. பி. ஐ. இந்தியாவின் ஒரே செய்தி நிறுவனமாக இயங்கிவந்தது. இராய்டரின் செய்திகள்

இந்த நிறுவனத்தின் வழியாகவே இந்திய இதழ்களுக்குக் கிடைத் தன. இரண்டாம் உலகப்போரின் போது இராய்டர் வழியாகப் பெற்ற போர்ச் செய்திகள் இங்கிலாந்து நாட்டுக்குச் சார்புடைய தாகவே அமைந்திருந்ததாக இந்திய இதழியல் துறையினர் அறிந்தனர். எவ்விதச் சார்பற்ற செய்திகளையும் பிற செய்தி நிறுவனங்களால் அறிய முடியாத ீதக்கநிலை உருவாகியது. இந் நிலையில் உள்நாட்டுச் செய்தி நிறுவனம் ஒன்றை அமைத்து உலகச் செய்திகளைப் பெற்றுக் கொள்ள இதழாளர்கள் எண்ணி னர் இநதிய இதழாளர்களான கஸ்தூரி சீனிவாசன், ராப நாத் கோயங்கா, சி. ஆர். சீனிவாசன், சதானந்தம், ஏ. எஸ். பரதன் முதலியோர் இந்தியச் செய்தி நிறுவனம் ஒன்றை அமைக்கத் திட்டமிட்டனர். இவர்கள் இந்தியா மற்றும் கீழைநாடுகள் செயதித்தாள் கூட்டமைப்பின் சார்பில் இலண்டன் சென்று இராய்டருடன் ஒபபந்தம் செய்து திரும்பினர். இராய்டரின் செய்திகளை 1948-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம், முதல் நாளி லிருந்து பி. டி. ஐ. வழியாகவே இந்தியச் செய்தித் தாள்கள் பெறத் தொடங்கின. இநத நிறுவனம இநதியக் செய திததாள் கஂள நிருவகிககின்ற கூட்டுறவு நிறுவனமாக அமைந்திருந்தது. இதன் முதல் தலைவராக இந்து நாளிதழ் ஆசிரியர் கஸ்தூரி சீனி வாசன் பொறுப்பேற்றார்; ஆயிரத்து இருநூறு உறுப்பினர் களைக் கொண்ட இநநிறுவனத்தின் தலைமைச் செயலகம் பம் பாயில் அமைந்திருக்கின்றது.

1953-ஆம ஆண்டில் இராய்டருடன் செய்து கொண்ட வணிக ஒப்பநதத்தின்படி இந்தியச் செய்தி களை இராய்டருக்கு அனுப்பி, உலகச் செய்திகளை இராய்டரிட மிருநது பி. டி. ஐ பெற்றுக் கொள்கிறது ஐரோப்பிய இந்தியச் செயதித்தாள்களுக் கிடையே விரைவான தொடர்புகளை பி.டி.ஐ அமைத்துக் கொடுப்பதோடு, ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் சிறந்த செயதி நிறுவனமாகவும் விளங்குகிறது. முப்பதாயிரம் டெலிபிரிண்டர் தொடர்புகளால் அறுபத்தாறு அலுவலகங்களை இணைத்துச் செயதிகளை பி.டி.ஐ. சேகரித்துக் கொண்டிருக்கிறது. இலண்டன் பாரிஸ், நியூயார்க், கெய்ரோ, இலங்கை, கராச்சி, காட்மாண்டு போன்ற பன்னிரண்டு உலகப் பெரு நகரங்களிலிருந்து இதன் செய்தியாளர்கள் செய்திகளைத் தொகுத்தனுப்புகிறார்கள், ஆயிரம்பேர் பணியாற்றும் பி.டி.ஐ. நிறுவனத்தில் இதழியல் துறையினர் மட்டும் இரு நூறுபேர் உள்ளனர். அமெரிக்கா

பிரான்ஸ், பிரிட்டன் போன்ற வல்லரசு நாடுகளில் உள்ள செய்தி நிறுவனங்களுடன் பி. டி. ஐ தொடர்பு கொண்டுள்ளது. வானொலி, அரசுச் செய்தித்துறை, வணிகக்கழகங்கள், தொழிற் சாலை ஆகியவற்றிற்குத் தேவையான செய்திகளையும் பி. டி. ஐ. நிறுவனம் வழங்குகிறது உலகந் தழுவிய அரசியல், அறிவியல், பொருளாதார, வர்த்தகச் செய்திகளை தொலைக்காட்சித் திரையில் தருகின்ற புதிய செய்தி அமைப்பு (News Scan Service) ஒன்றை பி. டி. ஐ. அண்மையில் தொடங்கியுள்ளது.

### யுனைடெட் பிரஸ் ஆப் இந்தியா (U. P. I.)

1933 - ஆம் ஆண்டில் சென்குப்தா கல்கத்தாவில் இந்த நிறுவனத்தைத் தோற்றுவித்தார். இலாகூரில் இதன் கிளை ஒன்றும் திறக்கப்பட்டது. ஏ. பி. ஐ யின் போட்டி நிறுவன மாகச் சில ஆண்டுகள் யு. பி. ஐ. செயல்பட்டது. பொருளாதார நெருக்கடியில் 1961 - ஆம் ஆண்டு இந்த நிறுவனம் மூடப்பட்ட பின்பு, இதன் பணிகளை, 'யுனைடெட் நியூஸ் ஆப் இந்தியா' என்ற நிறுவனம் ஏற்றுக் கொண்டுள்ளது.

### யுனைடெட் நியூஸ் ஆப் இந்தியா (U. N. I.)

இந்தியாவின் இரண்டாவது பெரிய செய்தி நிறுவனமாக யு. என். ஐ. அமைந்திருக்கிறது. யு. பி. ஐ. நிறுவனம் மூடப் பட்டபோது, அதற்குக் கடன் வழங்கியிருந்த மேற்குவங்க அரசு அந்த நிறுவனத்தைக் கைப்பற்றியது. கல்கத்தா, சென்னை, தில்லியிலுள்ள ஐந்து முன்னணி இதழ்கள் பணத்தைக் கட்டி மீட்ட பின்பு 'யுனைடெட் நியூஸ் ஆப் இந்தியா' என்ற பெயரில் 1959 - நவம்பரில் பதிவு செய்யப்பட்டு 1961 - ஆம் ஆண்டு முதல் செயல்படத் தொடங்கியது. பங்கு ஒன்றுக்கு நூறு ரூபாய் வீதம் பத்தாயிரம் ரூபாய்களுக்கான முழுப் பங்கினை யும் இந்திய இதழ்களே வாங்கின இந்தியச் செய்தித்தாள்கள் மட்டுமே இதில் பங்காளர்களாக முடியும். பம்பாயைத் தலைமை யிடமாகக் கொண்டுள்ள யு. என். ஐ. முப்பத்தாறு அலுவல கங்களை டெலிபிரிண்டர் மூலமாக இணைத்திருக்கிறது அயல் நாட்டுச் செய்திகளை இந்திய இதழ்களுக்கு வழங்குவதற்கு அமெரிக்க நாட்டு 'அசோசியேட்டட் பிரஸ்' நிறுவனத்துடன் தொடர்பு வைத்திருக்கிறது. வணிக நிலையங்களுக்கும் தேவை யான செய்திகளை யு. என். ஐ. அளிக்கிறது.

### ஃப்ரீ பிரஸ் ஆப் இந்தியா (Free Press of India)

'அசோசியேடட் பிரஸ் ஆப் இந்தியா' விடுதலைப் போராட்டச் செய்திகளை விரிவாகத் தரமுடியவில்லை. இந்தியச் செய்தித்தாள்களில் பங்கு கொண்டிருந்த அரசியல் தலைவர்கள் தேசியக் கொள்கைகளைப் பரப்பும் செய்தி நிறுவனம் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினர். பம்பாய் இதழ்களில் புகழ்பெற்றிருந்த சதானந்தம் 1927 - இல் இந்தியாவின் தேசியச்செய்தி நிறுவனத்தை 'ஃப்ரீ பிரஸ் ஆப் இந்தியா' என்ற பெயரில் தொடங்கினார். அன்னிபெசண்ட் அம்மையார், புருசோத்தம்தாஸ், தாகூர் தாஸ், வால்சந் ஹீராசந், பெரோஸ் சேத்னா, ஜி. டி. பிர்லா, எம். ஆர். ஜெய்கர் ஆகியோர்களின் அரவணைப்பில் இந்நிறுவனம் உரம்பெற்றது. 1930 - இல் இதழ்கள் அவசரச் சட்டத்தைக் கொண்டு வந்த ஆங்கில அரசு, இந்த நிறுவனத்திடம் செய்திகளைப் பெற்ற இதழ்களைத் தண்டித்தது. எனவே செய்தித்தாள்கள் இந்த நிறுவனத்தோடு தொடர்புகளை வைத்துக்கொள்ள மறுத்துவிட்டன. சதானந்தம் ஃப்ரீ பிரஸ் ஜெர்னல், நவபாரத், ஃப்ரீ இண்டியா ஆகிய இதழ்களைத் தாமே தொடங்கினார். சென்னையில் நடைபெற்று வந்த இந்தியன் எக்ஸ் பிரஸ், தினமணி ஆகிய செய்தித்தாள்களையும் விலைக்கு வாங்கி நடத்தினார். பொருளியல் தட்டுப்பாடு, இதழ்களின் தொடர்ந்த ஆதரவின்மை போன்ற காரணங்களால் செய்தி நிறுவனத்தைத் தொடர்ந்து நடத்த இயலாத நிலை ஏற்பட்டு, 1933 - இல் செய்தி நிறுவனத்தை மூடிவிட்டார்.

### இந்துஸ்தான் சமாச்சார்

தனியார் துறை அடிப்படையில் 1948-இல் தொடங்கப் பட்ட இந்துஸ்தான் சமாச்சார் நிறுவனம், 1957-இல் கூட்டுறவு நிறுவனமாக மாற்றப்பட்டது. இந்தியாவில் தொழிலாளர்களால் கூட்டுறவு முறையில் தொடங்கப்பட்ட முதல் செய்தி நிறுவனம் இதுவேயாகும். நூற்றுப் பதினைந்து உறுப்பினர்கள் உள்ளனர். இஃதோர் இந்தி மொழிச் செய்தி நிறுவனமாகும். சிறிய ஊர் களுக்கும் செய்தியாளர்களை அனுப்பி வட்டாரச் செய்திகளைத் தொகுத்து இந்தியமொழி இதழ்களுக்கு வழங்குகிறது. ஆங்கிலம் தவிர எட்டு இந்திய மொழிகளில் செய்திகளைத் தருகிறது. பதினான்கு இடங்களில் கிளைகளைக் கொண்டு இந்நிறுவனம் செய்திகளைத் தொகுக்கிறது. டாக்டர் அரிகிருஷ்ண மேத்தா

இந்தக் கூட்டுறவு நிறுவனத்தின் தலைவராகப் பொறுப்பேற்றிருந்தார். இந்தியமொழி இதழ்களுக்குப் பெரிதும் பயனளிக்கும் இந்துஸ்தான் சமாச்சார் நிறுவனம்தான் தேவநாகரி டெலிபிரிண்டரை முதன்முதலாகப் பயன்படுத்தியது.

**சமாச்சார் பாரதி**

இந்தியாவின் பல்வேறு மொழிகளில் செய்திகளை வழங்குகின்ற மற்றொரு செய்தி நிறுவனம் சமாச்சார் பாரதி. சிறிய நிருவாகத்தில் நடைபெறும் இந்தியமொழி இதழ்களுக்குச் செய்திகளை வழங்கும் பணியைச் இந்த நிறுவனம் ஏற்றுக் கொண்டுள்ளது. பெரிய இதழ்களின் ஆதரவு இந்த நிறுவனத்திற்குக் கிட்டவில்லை நடுவணரசு அளித்த ஐந்து இலட்சம் பணம் உதவியுடன் 1965இல் தொடங்கப்பட்டது. தொடங்கப் பட்டபோது சர்வோதயத் தலைவர் செயப்பிரகாசர் இதன் தலைவராகப் பொறுப்பேற்றிருந்தார். பல்வேறு இந்தியமொழிகளின் எழுபது இதழ்களை இந்த நிறுவனம் உறுப்பினர்களாகப் பெற்றுள்ளது.

**குளோப் நியூஸ் ஏஜன்சி**

கல்கத்தாவில் தலைமைச் செயலகத்தைக் கொண்டிருந்த 'குளோப் நியூஸ் ஏஜன்சி' பம்பாய், தில்லி, சென்னை, பெங்களூர் ஆகிய நகரங்களில் கிளைகளைக் கொண்டிருந்தது. ஆங்கில நாட்டு இதழாளர் எட்வர்டு ஹால்டன், என்பவர் ஆண்ட்ரூ வாட்சனை இந்தியாவிற்கு அனுப்பிக் 'குளோப் நியூஸ்' ஏஜன்சியைத் தோற்றுவித்தார். 1952 ஆம் ஆண்டு முதல் நியர் அண்டு ஃபார் ஈஸ்ட் நியூஸ் (NAFEN) என்ற பெயரில் இந்த நிறுவனம் செயல்படத் தொடங்கியது.

**ஓரியண்ட் பிரஸ்**

இந்திய முஸ்லீம்கள் தங்களைப் பற்றிய செய்திகளை இந்தியச் செய்தித்தாள்கள் முறையாக வெளியிடுவதில்லை என்பதைக் குறையாகக் கருதினர். தங்கள் உரிமையிலுள்ள இதழ்களுக்குத் தனிச் செய்தி நிறுவனத்தை அமைக்க விரும்பினர். சையது முகமது நிருவாக இயக்குநர் பொறுப்பை ஏற்க, 1942-ல் 'ஓரியண்ட் பிரஸ்' செய்தி நிறுவனம் உருவாகியது. ஹைதராபாத் நிஜாம் போன்ற செல்வந்தர்களின் ஆதரவு இந்நிறுவனத்திற்குக் கிட்டியது. தில்லியைத் தலைமை

யிடமாகக் கொண்டு இந்தியாவின் அனைத்து மாநில உருது மொழி நாளிதழ்களுக்குச் செய்திகளைத் திரட்டித் தந்த இந்த நிறுவனம் முஸ்லீம் சமுதாயச் செய்திகளை மட்டுமே திரட்டியதால் பிறநாட்டு நிறுவனங்களின் தொடர்பைப் பெற்றுக் கொள்ளவில்லை. இந்தியா-பாகிஸ்தான் பிரிவினைக்குப் பின்பு இச்செய்தி நிறுவனம் இருக்குமிடம் தெரியவில்லை.

## சிறிய நிறுவனங்கள்

டைம்ஸ் ஆப் இந்தியா, இந்தியன் எக்ஸ்பிரஸ் ஆகிய செய்தித்தாள்கள் நிறுவனங்கள் தாங்களாகவே இந்தியன் நியூஸ்சர்வீஸ் (INS) என்ற நிறுவனத்தை நடத்தினர். பெருத்த அளவில் பொறிகளும், அலுவலக அமைப்பும் இல்லாத சில செய்தி நிறுவனங்களும் இந்தியாவில் உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கன ஈஸ்டன் இந்தியா நியூஸ் ஏஜன்சி (கல்கத்தா) இந்தியா பிரஸ் ஏஜன்சி (தில்லி) நியூஸ் ஃப்யூச்சர்ஸ் ஆப் இந்தியா (பம்பாய்). பப்ளிகேஷன் சிண்டிகேட் (தில்லி), சத்திய சமாச்சார் (குவாலியர்), பிரஸ் ஆசியா இண்டர் நேஷனல் (தில்லி).

கட்டுரை, கருத்துப்படம், பொழுதுபோக்குப் பகுதிகள், விளையாட்டுப் போட்டி முதலியவற்றைச் செய்தித்தாள்களுக்குத் தொகுத்து வழங்கும் நிறுவனங்களும் இந்தியாவில் செயல்படுகின்றன. 'இண்டியன் நியூஸ் அண்டு ஃப்யூச்சர்ஸ்' அலையன்ஸ்' (INFA) என்ற நிறுவனம் செய்தித்தாள், தனியார் கழகங்கள், திரைப்படத்துறை, விளம்பர நிறுவனங்கள், வெளிநாட்டுத் தூதரகங்கள் முதலியவற்றிற்குத் தேவையான செய்திகளைத் தொகுத்துத்தருகிறது. அரசியல் நிலைமைகள், நாடளுமன்ற நடவடிக்கைகள், பொருளாதாரம், சமூகம் முதலியன பற்றிய கட்டுரைகளைக்கூட இந்த நிறுவனங்களே செய்தித்தாள்களுக்குத் தயாரித்துக் கொடுக்கின்றன.

செய்தித்தாள்களைப் போன்றே சமுதாய நலன் கருதும் நோக்கம் செய்தி நிறுவனங்களுக்கும் அமைந்திருக்க வேண்டும். சார்புக் கொள்கைகள் நிறுவனத்தின் நம்பிக்கையைக் குறைத்து விடும். செய்தி நிறுவனங்களைப் பற்றி யுனெஸ்கோ வெளியிட்ட அறிக்கையில். 'செய்தி நிறுவனங்கள் அரசிடமிருந்து உதவி பெறுவதைத் தவிர்க்க வேண்டும். வளர்ச்சியடையா நிலையில் கடன் வேண்டுமானால் பெற்றுக் கொள்ளலாம்'

என்று தெரிவித்துள்ளது. செய்தி நிறுவனங்களின் மீது அரசுத் தலையீட்டினைத் தடுக்க நினைக்கும்போது இக்கருத்து சரியாகப் படுகிறது. கூட்டுறவு முறையில் நடைபெறும் செய்தி நிறுவனங்களால் உறுப்பினர்கள் மட்டுமே பயனடைந்தாலும் செய்தி நிறுவனங்கள் சுதந்திரமாகச் செயல்பட முடிகிறது. செய்தி நிறுவனங்களின் மீது அந்தந்த நாட்டு நிர்ப்பந்தங்களும், கட்டுப்பாடுகளும் ஆதிக்கம் செய்வதுண்டு. பொதுவுடைமை நாடுகளில் அவை அரசுச் சார்பில் செயல்படுகின்றன. குடியாட்சி நாடுகளில் தனிக் கழகமாக இருந்தாலும் அவற்றின் மீது அரசு ஆதிக்கம் செலுத்துவதுண்டு. செய்தி நிறுவனங்களைத் தேசியமயமாக்கவோ, தனிக் கழகமாக மாற்றவோ நம் நாட்டின் அரசியல் அமைப்பில் சட்டபூர்வத் தடைகள் இல்லை. எனவே வேண்டியபோதெல்லாம் வேண்டிய முறையில் வளைத்துக் கொள்ளும்படி இச்செய்தி நிறுவனங்கள் இருக்கின்றன.

# அச்சு வகை

இந்திய மொழிகளில் முதன்முதல் அச்சுச் செதுக்கப்பட்டதும், அச்சுப் புத்தகம் உண்டாக்கப் பட்டதும் தமிழில்தான் என்பதை ஐயந்திரிபற முடிவு கட்டலாம்.

— அச்சுக்கலை மா.சு. சம்பந்தன்

மனிதன் வாயுள்ள ஊமையாக வாழ்ந்த காலம் ஒன்று உண்டு. அக்காலத்தில் சைகையாலும், ஒலியாலும், ஓவியத் தாலும் அடுத்தவர்களிடம் கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டிருந்தான். காலப்போக்கில் ஒலிகளை நீட்டியும் நிறுத்தி யும், கூட்டியும் குறைத்தும் ஒழுங்குபடுத்தி மொழியைப் படைத் தான். அம் மொழிவளர்ச்சியில் எழுத்துக்கள் பெற்றிருக்கிற வரிவடிவம், நாகரிகம் வளர்ந்திருப்பதன் உறுதிப் பாட்டை உணர்த்துவதாயிருக்கிறது.

## தோற்றம்

அச்சுக் காலத்திற்கு முன்பு கட்டையில் செதுக்கியோ அல்லது களிமண்ணில் பதித்தோ எழுத்துப் படிகளை உரு வாக்கிக் கொண்டிருந்தனர். சீனநாட்டில் பட்டுத்துணி, மூங்கில் பத்தை ஆகியவற்றில் கூரான குச்சிகளைக் கொண்டு பட எழுத்துக்களை அமைத்தனர். எகிப்தின் நைல் நதிக்கரையில் வளர்ந்திருந்த பேபைரஸ் (Papyrus) என்ற அகலமான புல்லில் நாணல் குச்சிகளால் எழுதி எகிப்தியர் எழுத்துக்களைப் படைத் தனர்.* ஏழாம் நூற்றாண்டு வரை இதே முறையைத்தான் யவனர், உரோமர், அரேபியர் முதலியோரும் பின்பற்றினர். உரோம நாட்டில் பலகையில் மெழுகினைப் பூசி ஆணியால் எழுத்துக்களை எழுதும் வழக்கமும் இருந்தது. சீனா, எகிப்து, சுமேரியா முதலிய நாடுகளில் கல் அல்லது பலகையில் செதுக் கப்பட்ட எழுத்துக்களின் மீதும் களிமண் அல்லது மெழுகில் தயாரித்த எழுத்துக்களின் மீதும் மையைத் தடவி நகல் எடுக் கும் முறை இருந்ததாக அறிகிறோம். மத்தியதரைக்கடல் நாடு களில் பதப்படுத்திய தோல்களின்மீது கூர்மையான ஆணிகளைக்

* பேபைரஸ் என்ற சொல்லிலிருந்தே பேப்பர் என்ற சொல் பிறந்தது. அரேபியர் நம் நாட்டிற்குத் தாளை அறிமுகப்படுத் திய போது 'காகத்' என்று பெயரிட்டிருந்தனர். இதிலிருந்தே 'காகிதம்' என்ற சொல் வந்தது.

கொண்டு எழுத்துக்களை எழுதி வந்தார்கள். கூர்மையான இரும்பு நுனிகளை மரக்கட்டைக் குச்சியில் கட்டியும் இறகு களில் செருகியும் எழுதும் வழக்கம் 1809-இல் அறிமுகமானது. அதுவரை தொட்டு எழுதுவதற்குரிய மை தனியாகவே பயன் படுத்தப்பட்டு, 1883-இல் வாட்டர்மன் என்ற அமெரிக்கரால் இரப்பர் பையில் அடைத்து எழுதும் முறை வழக்கத்திற்கு வந்தது.

நம் நாட்டில் ஓலை நறுக்குகளும் எழுத்தாணிகளும் உறவா டியபோதும்; கற்களும் உளிகளும் கலந்துகொண்ட போதும் எழுத்துக்கள் பிறந்தன. இயற்கையில் கிடைத்த பொருள்களைக் கூட எழுத்துக்களை உருவாக்கப் பயன்படுத்தியுள்ளனர். சிலப் பதிகார மாதவி பித்திகை அரும்பைச் செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்துத் தாழம்பூ மடலில் தன் காதலன் கோவலனுக்கு மடல் எழுதினாள். தாள் கண்டுபிடித்த பிறகு கையினால் எழுதி யெடுக்கும் கையெழுத்துப் படிகள் (Manuscripts) தோன்றின. மொகலாய அரசன் ஔரங்கசீப் அழகான கையெழுத்தினால் திருக்குரானை கையெழுத்துப்படி எடுத்திருந்தார். கையெழுத் துப்படி எடுப்போர் வணிகமுறையில் உலகம் முழுவதும் பரவி யிருந்தனர். இவர்கள் அச்சுக்கலை தோன்றியபோது அதனைச் சைத்தானின் வேலையென்று பீதியைக் கிளப்பிப் பயமூட்டினர்.

## வளர்ச்சி

அச்சும் தாளும் சீன நாட்டினரின் சிந்தனையில் தோன்றி யவை. முதல் அச்சுப் புத்தகம் 'டைமண்ட் சூத்திரா' (Diamond Sutra) சீனாவில் வாங் சிக் என்பவரால் கி. பி. 868இல் வெளி யிடப்பட்டு இலவசமாக வழங்கப்பட்டது. அச்சில் வந்து இப்போ துள்ள நூல்களில் இதுவே மிகப் பழமையானதாகக் கருதப் படுகிறது. அச்சுப்படிம முறை கி. பி. 960-1278-க்கு இடைப் பட்ட காலத்தில் சீனாவில் பலவகையாக வளர்ச்சி பெற்றிருந் தது. தனித்தனி எழுத்தச்சுமுறை (Movable Type) பதினொன் றாம் நூற்றாண்டில் பீ செங் என்பவரால் முதன்முதலில் பயன்படுத்தப்பட்டது. சீனக் களிமண்ணில் வரைந்து, தீயிலிட்டுச் சுட்டு எழுத்துக்களை இவர் படைத்தார். 1314-இல் மரக் கட்டையால் செய்யப்பட்ட அச்செழுத்துக்களை வாங் செங் என்பவர் அச்சிற்குப் பயன்படுத்தினார். கொரியா நாட்டு மன்னர் மரபில் வந்த ஜென்ரல் இ (General yi) 1392 - இல்

உருவாக்கிய உலோகத்தாலான அச்சுக்களைக் கொண்டு 1409 இல் புத்தகம் ஒன்றும் வெளிவந்தது.

சீனாவிற்கு வந்து சென்ற வணிகர்கள், பயணிகள் ஆகியோரால் அச்செழுத்துக்களும் படங்களும் அடங்கிய அச்சிடப்பட்ட பொருள்கள் ஐரோப்பாவை அடைந்தன. துணியச்சுமுறை (Textile Printing) யில் ஐரோப்பாவில் புகுந்த அச்சுக்கலை பின்புதாளச்சு முறையாக வளர்ந்தது. தொடக்கத்தில் படங்களைஅச்சிட்டனர்.பின்பு அதற்குரிய விளக்கம்தர விரும்பிய போது தனித்தனி எழுத்துக்களைப் படைக்க வேண்டிய தேவை ஏற்பட்டது.பத்தொன்பதாம் நூற்றாண்டில் அச்சுப்படிம முறை (Block Printing) மறைந்து ஐரோப்பாவில் அச்சுக்கலை (Typography) மறுமலர்ச்சி பெற்றது. ஜெர்மனி (1457), இத்தாலி (1465), பிரான்சு, ஸ்பெயின், ஹங்கேரி (1470), பிரிட்டன் (1476), போர்ச்சுக்கல் (1495), உருசியா (1553), இந்தியா (1556), அமெரிக்கா (1640) முதலிய நாடுகளும் தொடர்ந்து அச்சுக்கலையை அறிந்து கொண்டன. இவ்வாறு சீனத்தில் தோன்றிய அச்சு செர்மனியில் வளர்ச்சிகண்டது. செர்மனி நாட்டு மெயின்ஸ் நகரில் பிறந்த ஜான் கூட்டன்பர்க்கு தனித்தனி உலோக எழுத்துக்களை உருவாக்கியதோடு அச்சுப்பொறியையும் கண்டுபிடித்தது அச்சுக்கலை வளர்ச்சியில் முதல்படியாக அமைந்தது. அவரே 'அச்சுக்கலையின் தந்தை' எனப் போற்றப்படுகிறார். கி பி. 1457-இல் இவர் வெளியிட்ட 'கீர்த்தனைகள் புத்தகம்' முழுமை பெற்ற அச்சு எழுத்துக்களில் வெளிவந்ததாகும். இங்கிலாந்து நாட்டு வில்லியம் காக்ஸ்டன் ஹாலந்து நாட்டு காஸ்டர், பெல்ஜியநாட்டினரான ஜோகானஸ் பிரீடோ, இத்தாலியைச் சார்ந்த பாம்பிலோ முதலியோரும் அச்சுக்கலை வளர்ச்சியில் அரும்பணியாற்றியுள்ளனர்.

## தாள் வரலாறு

தாள் கண்டுபிடிப்பிற்குப் பின்பே அச்சுக்கலை பெரிய அளவில் வளர்ச்சி பெறத்தொடங்கியது.பட்டுத்தயாரிப்பில்மூலப் பொருளான பச்சைப்பட்டிலிருந்து தாள் தயாரிக்கும் முறைதான் சீனர்களின் முதல் முயற்சியாகும் பின்பு மரப்பட்டை, நார், துணி முதலியவற்றைப் பயன்படுத்தித் தாள் தயாரித்தனர். கி பி. 751-இல் சீனர்களிடமிருந்து தாள் தயாரிக்கும் முறைகளைக் கற்றுக் கொண்ட அரேபியர்கள் கி.பி. 900-இல் எகிப்தில் சணல் நாரில்

தாள் தயாரிக்கத் தொடங்கினர். சாமர்கண்டு, பாக்தாத்து, டமாஸ்கசு முதலிய இடங்களில் தாள் தயாரிக்கும் ஆலைகள் ஏற்பட்டன. தாள் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு அரேபியர்களால்தான் அறிமுகப்படுத்தப்பட்டது. கி.பி. 1100இல் ஐரோப்பாவில் தாள் தயாரிப்பு அறிமுகமான பின்பு மெயின்ஸ் நகரில் 1320-ஆம் ஆண்டு தாள் உற்பத்தித் தொழிற் சாலை தொடங்கியது. அமெரிக்காவின் முதல் தாள் தொழிற்சாலை 1690-இல் ஜெர்மன் டவுன் என்ற இடத்தில் தொடங்கப்பட்டது. அமெரிக்கரான டிக்கின்சன் என்பவர் 1809-இல் தாள் தயாரிப்புப் பொறிகளைக் கண்டுபிடித்தார். 1852-இல் செர்மானிய நாட்டு பிரடெரிக் கெல்லர் என்பவர் மரக்கூழைப் பயன்படுத்தி இதழ் களுக்குரிய தாள் (News Print) தயாரிக்கத் தொடங்கினார்.

அச்சுக்கலை மேலும் வளர்ந்த பின்பு தாள் தயாரிப்பு பெருகத் தொடங்கியது. அச்சிற்கேற்றவாறு இதழ்களுக்குரிய தாள் (Newspaper Print), வழுவழுப்புத்தாள் (Art Paper), போலி வழுவழுப்புத்தாள் (Imitation Paper), சருகுத்தாள் (Trace Paper) கொழுப்புத்தாள் (Cellophane Paper), பொருள்கள் கட்டுத்தாள் (Wrapper), அட்டைகள் (Card boards) என்றெல்லாம் பல வகையாகத் தாள்கள் தயாரிக்கப்படுகின்றன. இத்தயாரிப்பில் மரம், புல், நார், மூங்கில், வைக்கோல், கரும்புச் சக்கை, சாக்குத் துணி, சணல், பயன்படாத தாள்கள் முதலியன பயன்படுத்தப் படுகின்றன. எரியுப்பு, உவர்மக் கந்தகம், குங்குலியம் ஆகியவை தாள்களைப் பளபளப்பாக்கி நிறம் தருவதற்குப் பயன்படுகின்றன. டால்கம் பொடி, சீனக் களிமண், அலுமினியம் சல்பேட், ரோசின் ஆகியவற்றாலாகிய கலவைப் பொருளும் தாள்களுக்கு மழமழப்பையும் ஒலி புகாத் தன்மையையும் உண்டாக்குகின்றன.

## இந்தியாவில் அச்சுக்கலை

இந்தியாவில் கிறித்தவ சமயத்தை வளர்க்க விரும்பிய பாதிரியார்களின் முயற்சியில் இந்திய அச்சுக்கலையின் தோற்றம் அடங்கியிருந்தது. ஆங்கில ஆட்சியினரும் செய்திகளைத் தெரிவிப்பதில் அச்சுக்கலையின் வலிமையைக் கண்கூடாகக் காணத் தொடங்கினர்.

இந்திய நாட்டுப் பகுதிக்குள் அச்சுக்கலை புகுந்ததே ஒரு சுவையான வரலாறாகும். கிறித்தவ சமயத்தைப் பரப்பு

வதற்காகஅபிசீனியாவிற்கு அச்சுப்பொறிகள் கோவா வழியாக அனுப்பப்பட்டன. அச்சுக்கலையறிந்த பதினான்கு மதகுருக்களுடன் அபிசீனியத் தலைவர் ஒருவரும் உடன் வந்துகொண்டிருந்தஇந்தக் குழு 1556-ஆம் ஆண்டு, செப்டம்பர் 6-ஆம் நாள் கோவாவில் தங்கியிருந்தது. அங்கே அபிசீனியத் தலைவர் எதிர் பாராமல் இறக்க நேரிட்டது. அச்சுச் சாதனங்கள் அனைத்தும் கோவாவில் இறக்கப்பட்டு அங்கேயே அச்சகம் நிறுவப்பட்டது. 1557-இல் இந்தியாவின் முதல் அச்சுப் புத்தகமான டக்ட்ரினா கிறிஸ்டம் (Doctrina Christam) ஆங்கில மொழியில் கோவாவில் தான் அச்சிடப்பட்டது.*

1536 - இல் அச்செழுத்துக்களை உருவாக்கும் சாதனங்களுடன் ஸ்பெயினிலிருந்து இந்தியா வந்த ஜோ-டி-பஸ்டமெண்ட் (Jaao-De-Bustamante) என்பவருடன், இந்திய நாட்டு இரும்புப் பட்டறையாளர் ஹோன்சால்வஸ் (Gonsalves) இணைந்து அச்செழுத்துக்களை உருவாக்கத் தொடங்கினார். இவர்கள் இந்திய மொழியில் அச்செழுத்துக்களை வார்க்கத் தொடங்கிய போது முதன் முதலாகத் தமிழ் மொழியில்தான் அச்செழுத்துக்களை உருவாக்கினர். இந்தியநாட்டளவில் இது தமிழ் மொழிக்குக்கிடைத்த மிகப் பெரிய பெருமையாகும். 1557-இல் ஏற்கனவே ஆங்கில மொழியில் 'அச்சிடப்பட்டிருந்த டக்ட்ரினா கிறிஸ்டம் என்ற புத்தகம் 'தம்பிரான் வணக்கம்' என்ற பெயரில் முதன்முதலாக இந்திய மொழி ஒன்றில்—அதுவும் தமிழ் மொழியில்578 - இல் அச்சிடப்பட்டது. எல்லாவற்றிலும் முதன்மை பெற்றுள்ள தமிழ்மொழி அச்சுப்பதிப்பிலும் முதல் இடத்தைப் பெற்று விளங்குகிறது.

இந்திய நாட்டு இரண்டாவது அச்சகம் தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த புன்னைக்காயல் என்ற கடற்கரைக் கிராமத்தில் 1578 - இல் அமைக்கப்பட்டது. ஜான் -டி- ஃபாரியா பாதிரியார் (Father John - De - Faria) இவ்வச்சகத்தைப் பயன்படுத்தி 'ப்லோஸ் சாங்டோரம்' (Flos sanctorum) என்ற புத்தகத்தை வெளியிட்டார்.

---

* மர அச்சுக்களைப் பயன்படுத்திப போர்ச்சுக்கல் தலைநகரான லிஸ்பன் நகரிலிருந்து 1554-இல் 'லூசோ தமிழ்ச் சமய வினாவிடை' (Luso Tamil Catechism) என்ற நூல் ஒன்று வெளிவந்தது. இந்நூலில் தமிழ் எழுத்துக்கள் ரோம எழுத்துக்களின் வரிவடிவத்தில் அச்சிடப்பட்டுள்ளன.

இரண்டாவது அச்சகம் 1579-இல் மலையாள நாட்டில் உள்ள அம்பலக் காட்டில் அமைக்கப் பட்டது. இவ்வச்சகத்தில் இன்னாசி ஆச்சாமணி (Ignatius Aichamani) என்ற பாதிரியார் தமிழ் அச்செழுத்துக்களைப் படைத்தார். இந்தியாவின் அடுத்த அச்சகம் 1674-இல் பம்பாயில் ஏற்படுத்தப்பட்டது. இதுதான் வணிக நோக்கில் எழுந்த முதல் அச்சகமாகும். கிழக்கிந்தியக் கம்பெனியாரால் அனுப்பிவைக்கப்பட்ட ஹென்றிஹில்ஸ் (Henry Hills) என்னும் தலைசிறந்த அச்சகர் இங்கே பணியாற்ற வந்தபோது சிறந்த அச்சகச் சாதனங்களையும், அச்செழுத்துக் களையும், தரமான தாள்களையும் இந்தியாவிற்குக் கொண்டு வந்து அறிமுகப் படுத்தினார். இங்கே ஆங்கிலக் கிறித்தவ இலக்கியங்கள் மட்டுமே அச்சிடப்பட்டன. இதற்குப் பின்பு பதினெட்டாம் நூற்றாண்டில் தஞ்சைக்கு அருகில் உள்ள தரங் கம்பாடியில் டேனிஷ் மிஷின் பாதிரியார்கள் அச்சுக் கூடம் ஒன்றை நிறுவினார்கள். சீகன் பால்குஐயர் செர்மனியில் உள்ள கிறித்தவக் கழகங்களின் உதவியால் 1713 - இல் அச்சுப் பொறி களை வரவழைத்தார். தமிழ் எழுத்துக்கள் செர்மனி நாட்டில் உருவாக்கப்பட்டு தரங்கம்பாடிக்கு வந்தன. இவற்றைக்கொண்டு 1714 - இல் 'புதிய ஏற்பாடு' தமிழில் வெளியிடப்பட்டது. 1715 - இல் தரங்கம்பாடியை அடுத்த பொறையாருக்கு அருகில் தாள் ஆலை ஒன்றையும் சீகன் பால்கு தொடங்கினார். இதுவே இந்தியாவின் முதல் தாள் ஆலையாகும்.

1749 -இல் பிலிப்-தெ-மெல்லோ பாதிரியார் இலங்கை யில் அச்சுக்கூடம் ஒன்றை அமைத்தார். கிரேக்க மொழியிலி ருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட 'புதிய ஏற்பாடு என் னும் விவிலிய வேதம்' என்ற நூல் இங்கிருந்து வெளிவந்தது.

சென்னையில் 1761 - இல் தான் முதன்முதலாக அச்சகம் உருவாகியது. பிரெஞ்சு ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த பாண்டிச் சேரியைப் பிடித்த ஆங்கிலேயர், அங்குக் கைப்பற்றிய அச்சகப் பொருட்களைக் கொண்டுவந்து சென்னை வேப்பேரியில் தமிழர் ஒருவரைக் கொண்டு அச்சகத்தை நிறுவினர். இவ்வச்சகத்தி லிருந்து 1779 - இல் உருவான தமிழ்-ஆங்கில அகராதியும் 1786-இல் உருவான ஆங்கில - தமிழ் அகராதியும் புகழ்பெற்ற வையாகும். இதனைத் தொடர்ந்தே கல்கத்தாவில் அச்சகம் ஒன்று உருவாகியது. 1778:இல் 'வங்காள மொழி இலக்கணம்'

என்ற நூல் வங்காள மொழியில் அச்சிடப்பட்டது. கல்கத்தா விற்கு அருகில் உள்ள செராம்பூரிலிருந்த கிறித்தவ இயக்க அச்சகம் தெலுங்கு (1814), கன்னட மொழி (1817) இலக்கண நூற்களை வெளியிட்டது. இந்திய நாட்டின் தொடக்க கால அச்சகங்கள் பலவும் கிறித்தவ மதச் சார்புடன் சமய நோக்கில் செயல்படத் தொடங்கியதால் இந்திய மக்கள் அச்சுக்கலையில் விரைந்து செயலாற்ற முனையவில்லை. பத்தொன்பதாம் நூற் றாண்டில்தான் அச்சகங்களை அமைத்து நூற்களை வெளி யிடும் உரிமை இந்தியர்களுக்கு அளிக்கப்பட்டது.* சமயம் பரப் பப் பயன்பட்டுக் கொண்டிருந்த அச்சுக் கூடங்கள் நூற்களை வெளியிடத் தொடங்கின.

தமிழகத்தில் விசாகப் பெருமாளையங்கார், தாமோதரம் பிள்ளை, ஆறுமுக நாவலர், உ.வே.சா. முதலியோர் நூற் பதிப்பாளர்களாயினர். வழக்கிற்கு வந்தவுடன் அச்செழுத்துக் களுக்குத் தமிழ்ப்புலவர்கள் 'எழுதா எழுத்து' என்று பெயரிட் டிருந்தனர்.†

## அச்சுக் கூடங்கள்

ஜெர்மானியில் முழுமைபெற்ற அச்சுக் கூடம் 1470-இல் நூரம் பர்க்கு என்ற இடத்தில் ஏற்படுத்தப்பட்டத்தைத் தொடர்ந்து பாரிஸ் நகரிலும் அச்சகம் ஒன்று அடுத்துத் தோன்றியது.

---

* இந்திய ஆளுநர் சார்லஸ் மெட்காஃப் 3-8-1835-இல் ஆலோசனை சபையில் இந்த அச்சுச் சட்டத்தைக் கொணர்ந் தார். 1835-ஆம் ஆண்டு அரசுச் செய்தியிதழ் (Fort St. George Gazette) இந்த ஆணையை வெளியிட்டிருக்கிறது.

† 1858-ஆம் ஆண்டு சாமுவேல் என்பவர் தொல்காப்பிய நன்னூல் என்னும் இலக்கணத்தை அச்சிற் பதிப்பித்தகால், சிறப்புப் பாயிரம் பாடிய அஷ்டாவதானம் சபாபதி முதலி யார் அச்செழுத்தை எழுதா எழுத்தென்று குறிப்பிட்டுப் பாடுகிறார்.

> " இந்நூல் இயற்றி எழுதா எழுத்தில்
> பன்னூல் நெறியிற் பதித்து நல்கினான் "

—மயிலை சீனி. வேங்கடசாமி
பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்

இங்கிலாந்தில் 1476-இல் வில்லியம் காக்ஸ்டன் தம் அச்சகத்தை வெஸ்ட்மினிஸ்டரில் அமைத்தார். இவ்வச்சகத்தின் மூலம் ஆங்கில மொழியில் அச்சிடப்பட்ட 90 புத்தகங்களை வெளியிட்டார். உரோமில் மதத் தொடர்பான பணிகள், அறிக்கைகள், போப்பின் ஆணைகள் போன்றவற்றை அச்சிட்டு வழங்குவதற்கென அச்சுக்கூடங்கள் தோன்றலாயின. பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உலக நாடுகளில் அச்சுக் கூடங்கள் படிப்படியாக நிறுவப் பட்டதால், குறிப்பிட்ட நாட்டிற்கும் இனத்திற்குமே உரிமையாயிருந்த இலக்கியங்கள் உலக மக்களின் பொதுச் சொத்தாயின. அறிவு உலகம் விரிவடையத் தொடங்கியது. தாய் மொழிகள் வளர்ச்சி தனித்த இடம் பெறலாயிற்று.

## அச்சு வார்ப்பும் கோப்பும்

அச்செழுத்துக்களைக் கொண்டு கோக்கப்பட்ட செய்திகளை அல்லது படக்கட்டையில் உள்ள படங்களை அச்சுப்பொறியில் ஏற்றிப், பதிவெடுக்கும் முறையை அச்சிடுதல் என்று கூறுகிறோம். அச்சிடுதலில் அச்சுக் கோப்பு முதல் நிலையாகும். ஆட்களைக் கொண்டு அச்சுக் கோப்பது பொதுவானது. மிகப் பெரிய அச்சகங்களிலும் இதழ்களிலும் பொறிகளைக் கொண்டும் அச்சுக் கோப்பு நடைபெறுகிறது. அச்சுக் கோப்பவரின் திறமையினால் தான் அச்சுத்தொழில் முதலில் கலைவடிவம் பெறத் தொடங்குகிறது. அவர்கள் மொழியறிவும் கலை நுட்பமும் கொண்டிருக்க வேண்டும்.

தனித்தனி எழுத்துக்களுக்கெனப் பிரிக்கப்பட்டிருக்கும் சிற்றறைகளில் புள்ளிகள் (Points) வாரியாக எழுத்துக்கள் வைக்கப்பட்டுள்ளன. அச்சடிப்புப் பணி முடிந்து அச்சுக் கோப்பு கலைக்கப் படும்போது, பழைய அறைகளிலேயேஎழுத்துக்கள் பிரித்துப் போடப்படுகின்றன. அச்சுக் கோப்பானில் ஒவ்வொரு வரியாக எழுத்துக்களை அடுக்குகிறார்கள். சொற்களுக்கு இடையில் வேண்டிய இடத்தில் இட நிரப்பி (Space) களை இட்டுச் சரி செய்வர். ஒரு வரி சேர்த்து முடிந்தவுடன் இடையில் வைத்திருந்த ஈயத்தகட்டை(Lead)வெளியிலெடுத்து விடுவார்கள். ஒரு வரிக்குக் குறைவான இடங்களில் ஈயக்கட்டைகளை (Quads) இட்டுச் சரி செய்வார்கள். கோத்த பகுதியை தட்டு (Galley) ஒன்றில் தூக்கி வைத்து எழுத்துக்கள் கலைந்து விடாமல் கயிற்றினால் சுற்றிக் கட்டுவர். பக்க எண் இட்டபின்பு அதை அப்படியே மை தடவி,

உருளை ஒன்றினால் அழுந்த உருட்டி மெய்ப்புப்படி ஒன்றை எடுக்கிறார்கள். திருத்தம் போட வேண்டியதில் முதற்படியான இதைத் தட்டு மெய்ப்பு (Galley proof) என்று கூறுகிறார்கள். திருத்தம் போட்டபின்பு இரும்புச்சட்டமொன்றில் வைத்து இறுக்கமாக முடுக்கிவிடுவார்கள். இப்போது அச்சுப் பொறியில் அச்சிடுவதற்குரிய செய்தி அணியமாகிவிட்டது.

அச்சுக் கோக்கும் பொறிகளில் அச்சுக் கோப்பதும் அச்சு வார்ப்பதுமாக இரண்டு வேலைகள் ஒரே நேரத்தில் நடைபெறுகின்றன. அச்சுக் கோக்கும் பொறிகளில் வரியச்சுப் பொறி (Lynotype), தனியச்சுப் பொறி (Monotype) என்ற இருவகை உண்டு. முதல் வகையே அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது. இதில் அச்சுவார்ப்படப் பகுதிதனியாகச் செயல்படுகிறது. பொத்தானை இயக்கியவுடன் எழுத்துக்களும் இடநிரப்பிகளும் வார்க்கப்பட்டு வரிகளாகி ஒவ்வொரு வரித்துண்டும் வெளிவருகிறது. இப்பொறி 1886-இல் ஆட்மர் மெர்கன் தாலர் என்ற ஜெர்மானியரால் கண்டுபிடிக்கப்பட்டது. தனியச்சுப் பொறியில் அச்சகங்களுக்கு வேண்டிய தனித்தனி அச்செழுத்துங்கள் உருக்கி வார்க்கப்படுகின்றன. பொத்தான்களை இயக்கியவுடன் சரியான எழுத்துக்கள் வார்க்கப்பட்டு ஒன்றன்பின் ஒன்றாக வெளிவருகின்றன. தனியச்சுப் பொறியினை 1898-இல் தால்பர்டு லான்ஸ்டன் என்பவர் கண்டுபிடித்தார்.

### அச்செழுத்துக்கள்

அச்செழுத்துக்கள் கலப்பு உலோகம் ஒன்றால் தயாரிக்கப்படுகின்றன. ஈயத்தை மட்டும் பயன்படுத்தினால் எழுத்துக்கள் மென்மைப்படுவதோடு தேய்ந்தும் விடுகின்றன. இவற்றைத் தடுப்பதற்காக நீலாஞ்சனம் (Antimony), வெள்ளி (Silver). தகரம் (Tin) ஆகியவைகளைக் குறிப்பிட்ட அளவில் ஈயத்துடன் கலந்து அச்செழுத்துக்களை உருவாக்குகிறார்கள். அச்சுத் துளைக் கருவியைப் பித்தளை அல்லது செபபில் அழுத்தி முதலில் அச்சுக் கரு (Matrix) செய்யப்படுகிறது. இவ்வச்சுக் கருவில் அச்சு வார்க்கும் பொறி (Casting Machine) மூலமாக உருக்கிய கலப்பு உலோகத்தை வார்த்து எழுத்துக்கள் செய்யப்படுகின்றன. பின்பு இவ்வெழுத்துக்களில் நீட்டிக் கொண்டிருக்கும் பகுதிகளை அரத்தினால் தேய்த்துச் செப்பம் செய்யப்படும். அச்சுக் கோப்பவர் முகப் பகுதியை அடையாளங் கண்டுகொள்ள அடிப்

புறத்தில் கீறல் ஒன்று உண்டாக்கப்படுகிறது. இறுதியாக வார்க்கப்பட்ட எழுத்துக்களை உருப்பெருக்கி ஆடி கொண்டு அதன் முகப்புகள் சரிபார்க்கப்படும்.

## வகை

அச்செழுத்துக்களை இரு வகையாகப் பிரிக்கலாம்

1. மேல் வகுப்பு அல்லது தலைப்பு எழுத்துக்கள்.
   (Upper Case or Capital Letters)

2. கீழ் வகுப்பு அல்லது சிற்றெழுத்துக்கள்.
   (Lower Case or Small Letters)

இவ்விரு வகையில் பல்வேறு இன எழுத்துக்கள் அமைந்துள்ளன. உரோமன் (Roman), இத்தாலிக் (Italic), கோதிக் (Gothic), தடித்த எழுத்து (Bold), விரிந்த எழுத்து (Extended), கையெழுத்துவடிவ எழுத்து (Script) நிழல் எழுத்து (Shaded) முதலிய இனவெழுத்துக்கள் உள்ளன. இவ்வினவெழுத்துக்கள் 4 முதல் 72 புள்ளி வரையில் அமைந்துள்ளன.

## அளவு

புள்ளிகள் (Points) என்பதே அச்செழுத்துக்களின் அலகு (Unit) எனப்படுகிறது. ஒரு புள்ளி என்பது $\frac{1}{72}$ அங்குலமாகும். எனவே, 14 புள்ளி எழுத்து என்பது $\frac{14}{72}$ அங்குலம் தடிப்பு உள்ளதாகும். சாதாரணமாக ஒரு ஆங்கில எழுத்தின் மேலிருந்து கீழ்வரை உள்ள உயரம் .0917 அங்குலமாகும். சில நாடுகளில் சதுரவடிவ அச்செழுத்துக்களின் நீள அகலங்களை 'எம்' (Em) என்றும் குறிப்பிடுகிறார்கள். 14 புள்ளி 'எம்' எனப்படுவது 14'' × 14'' நீள அலகங்களைக் கொண்ட எழுத்தாகும். ஒரே இனமும் அளவுங் கொண்ட எழுத்துக்களின் தொகுதி அடங்கல் (Fount) எனப்படும்.

## அச்சுப் பொறிகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி அச்சுப் பொறியின் வளர்ச்சிக் காலமாக அமைந்தது. திருகு முறையிலான மர அச்சுப் பொறி பதினேழாம் நூற்றாண்டில் இரும்பினாலான அச்சுபொறியாக உருவெடுத்தது. இப்பொறியில் அச்

சாகும் பகுதியைப் பொருத்த வேண்டிய இடத்தில் நீண்டதட்டு அமைக்கப்பட்ருந்ததால் தட்டை அச்சுப் பொறி (Platen Machine) எனப்பட்டது. 1790-இல் உருளை அச்சுப் பொறி (Cylinder Machine) கண்டு பிடிக்கப்பட்டு கொஞ்ச காலத்திற்குள் அதனை நீராவியால் இயங்கச் செய்தனர். 1815-இல் அமெரிக்க நாட்டினரான கூப்பர் இவ்வுருளையில் வளைவான அச்சுப்பதிப்புத் தகட்டைப் பொருத்தி தொடர்ச்சியாக வரும் தாளில் அச்சடிக்கும் முறையைக் கொணர்ந்தார். இப்பொறியின் அடிப்படையில்தான் சுழல் முறை அச்சுப் பொறி (Rotary Machine) ஜே. வால்ட்டர் என்பவரால் கண்டு பிடிக்கப்பட்டது. புதுமையான அமைப்புகள் பலவற்றைக் கொண்ட சுழல் முறை அச்சுப் பொறியில் அச்சு வேலைகள் மிக விரைவாக முடிக்கப்படுகின்றன. பெரிய அளவிலான நாள்,வார இதழ்கள் இப்பொறிகளையே பயன்படுத்துகின்றன. இப்பொறி மனிதர்களுடைய வேலைக்கு இடமின்றித் தாள்களை எடுத்து, அச்சடித்து, மடித்துச் செய்தித் தாள்களாகக் கையில்தருகின்றது. எதிரீட்டு முறை (Offset Printing) என்பது இச்சுழல் முறையில் இன்னுஞ்சில புதுமையான அமைப்புக்களைக் கொண்ட பொறியால் அச்சிடுவதாகும். பெரிய அளவில் வண்ணப் படங்களை அச்சிட கல்லச்சுமுறை (Litho Printing) பயன்படுகிறது.

அச்சுப் பொறியில் செய்தி ஒன்றை அச்சிடுதல் குறுகிய நேரப் பணியாகும். இதன் எல்லா நிலைகளும் ஒரே நேரத்தில் நடைபெறுகின்றன. உரிய இடத்தில் தாளைப் பொருத்துதல், அச்சுப் பரப்பின்மீது மைதடவுதல், அழுத்திப் பதிவெடுத்தல், அச்செடுத்த தாளை நீக்கி வெற்றுத்தாளை வைத்தல் இவையனைத்தும் ஒரு சேர அச்சுப் பொறியில் நடைபெறும்போது அச்சிடும் பணியே முடிந்து விடுகிறது.

பகுதி 4

# இதழ்களின் இன்றியமையாப் பகுதிகள்

அறிவு வளர்ச்சிக்கான செய்திகளுடன் வேறுசில இன்றியமையாப் பகுதிகளும் பழைய இதழ்களில் சிறப்பாக இடம்பெற் றிருந்தன. இதழ்களின் இலக்கணத்திற்கான இலக்கியங்களாய் அவை அமைந்திருந்தன. எனவே, பழைய காலத்து இதழ்களை நூற் கட்டிடம் செய்து பாதுகாப்பாகப் பேணி வைத்திருப்பதுண்டு. இக்கால இதழ்களை யாரும் பாதுகாத்து வைத்துக் கொள்ள விரும்புவதில்லை. செய்திகளுக்கு அப்பாற் பட்ட சிறப்புப் பகுதிகள் தரமாகவும் உண் மையாகவும் அமைந்திருக்கும் இதழ்கள் தாம் சாகாவரம் பெறமுடியும்.

## தலையங்கம் [Editorial]

தலையங்கம் பொது மக்களுக்கு வழிகாட்டியாகவும் அவர்
கள் கருத்தை எதிரொலிப்பதாகவும் இருக்க வேண்டும்.

— டாக்டர் இராதாகிருஷ்ணன்

இதழ்களின் இதயப்பகுதி தலையங்கம். இன்றைய சமுதாயம் நோக்கர்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. நோக்கர்கள் சமுதாயத்தை உற்றுப்பார்த்தே உருவாகின்றனர். இதழ்கள் சமுதாயச்சிக்கலை அறிவுச் சல்லடையில் சலித்தெடுக்கும்போது தலையங்கம் பிறக்கிறது. ஆடல் வல்லார்க்கு அணிகலன்போலத் தாளிகைகளுக்குத் தலையங்கம் சிறப்புத் தருவதாகும். தலையங்கம்இடம்பெறாஇதழ்கள் முதுகெலும்பும் நாடும் இல்லா மனிதனையும், மறைதிரை இல்லா வீட்டினையும், அழகுபடுத்தாத கிருஸ்துமஸ் மரத்தினையும் ஒக்கும்'* என்பதற்கேற்பத் தலையங்கம் இதழ்களின் இன்றியமையாப் பகுதியாக விளங்குகிறது. ஆங்கிலச்சொல் லீடர் (Leader) என்பதற்குச் 'செய்தித்தாளின் தலையங்கம்' என்ற பொருளும் அகராதியில் காணப்படுகிறது.† செய்திகளுக்கு அப்பாற்பட்ட சில படைப்புக்கள் காலச்சூழல், சமுதாயநிலை, நாகரிகப் போக்கு இவற்றின் அடிப்படையில் இதழ்களில் இடம்பெறுகின்றன. அவற்றுள் தலையங்கம் முதலிடம் பெற்றுள்ளது. இதழாசிரியர் வாசகர்களுடன் கருத்துப்பரிமாற்றம் செய்துகொள்ளும் இடமாக அஃது அமைந்திருக்கிறது மற்றவர் பற்றிய செய்திகளை வெளியிடுவதைவிடத் தங்கள் சொந்தக் கருத்துக்களை எழுத்தாளர்கள் ஆர்வத்தோடு வெளியிடுகிறார்கள். எனவேதான் இதழாசிரியர் எழுத்துப் பசிக்கு உணவு படைக்குமிடங்களாகத் தலையங்கங்கள் அமைந்திருக்கின்றன.

### நோக்கம்

தலையங்கங்களின் அளவு பக்கமாகவோ, பத்தியாகவோ இதழ்களில் இடம்பெற்றாலும் அதன் எல்லை விரிந்து பரந்து

---

* Gayle watdrop — Editor and Editorial

† Leader : The most prominently featured article in a magazine. Also called leader the Principal editorial in a newspaper — The Random House Dictionary of the English Language.

கிடக்கிறது. தலையங்கங்களைக் குறிப்பிட்ட கொள்கைக் கூண்டுக்குள் கொண்டு வந்து நிறுத்திவிட முடியாது. ஏனெனில் தலையங்கப் பொருளுக்குத் தக்கவாறு அதன் நோக்கம் மாறு படுகிறது. பொதுமக்கள் கருத்து வெளிப்பாடு பொதுவான நோக்கமாகும். மற்றபடி சிக்கல்களை வெளிப்படுத்தி, நிலை மைகளை விளக்கி, அவை தீர்வதற்கு அறிவுறுத்தும் நோக்கில் தலையங்கம் அமைந்திருக்கின்றது. நாட்டு நலன், சமுதாயத் தொண்டு ஆகிய இவை இரண்டும் தலையங்கத்தின் உள்ளடக்கி உணர்த்தப்பட வேண்டியவையாகும். தலையங்கங்கள் ஆசிரி யருக்கு உரிய பகுதிதான். என்றாலும் சிக்கலில் ஆசிரியரின் சொந்தக்கருத்து முழுமையாக வெளிப்பட்டுவிடக் கூடாது. இதழ்கள் கருத்தும் பொதுமக்களின் நடைமுறைக் கருத்தும் வெளிப்படுமிடமாகத் தலையங்கம் அமையவேண்டும். தலை யங்கம் ஓர் உருவகப்பகுதி. கருத்துக்களை உருவாக்கும்போது ஆசிரியர் இதயத்திலிருந்து புறப்படும் எண்ணங்கள் பொது மக்கள் உள்ளங்களையும் ஊடுருவிச் செல்ல வேண்டும். பொதுச் சிக்கலொன்றில் ஆசிரியர்-வாசகர் எண்ணங்களின்இணைப்புப் பாலம் தலையங்கமேயாகும். இதழ்களைத் தாண்டி எங்கிருந் தோ தலையங்கம் பிறப்பதில்லை. பரவலாகப் பேசப்பட்டு, இதழ்களில் செய்தியாக வெளிவந்த நிகழ்ச்சிகளின் அழுத்தமான வெளியீடே தலையங்கமாகும். அது தகுந்த நேரத்தில், தகுந்த செய்திகளைப் பற்றிய விளக்கமாகத் திகழ வேண்டும். இவற்றோடு—

1. சார்புத் தன்மையை முற்றிலும் தவிர்க்க வேண்டும். எதிர்ப் புணர்ச்சியை மனத்திற்படுமாறு தெரிவிக்க வேணடும்.

2. தலையங்கச் செய்தியைத் திரித்துக் கூறிப் படிப்பவர்களைத் திசை திருப்பக் கூடாது. உண்மைகளை முழுமையாகப் பெருந்தன்மையோடு எழுதவேண்டும்.

3. சான்றுகூறி விளக்கும் போது அவை எவர் மனத்தையும் புண்படுத்தி விடாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

4. எடுத்துக் கொண்ட பொருள் தெளிவடைய வேண்டும்.

5. நுண்மை, தெளிவு, சுருக்கம், நடை இவற்றோடு தலையங்கம் சிறப்படைய வேண்டும்.

## தலையங்க வகைகள்

இதழ்களில் இடம்பெறும் உலகச் செய்திகளும், உள் நாட்டுச் செய்திகளும் தலையங்க வடிவமெடுக்கின்றன. இவை நாடு தழுவிய சிக்கலாக-மக்களைப் பாதிக்கும் நிகழ்ச்சியாக-உலகக் கண்ணோட்டத்தில் காணுமொரு வினைப்பாடாக அமைந்திருக்கின்றன. அரசியல், அரசு நடவடிக்கை, திட்டங்கள், வரவு-செலவு, தீர்மானங்கள், பொருளாதாரம், சமயம், ஒழுங்கு, சட்டம் இவற்றினடிப்படையில் தோன்றும் சிக்கல்கள் தலையங்கத்தின் வகைகளாகின்றன. இவற்றோடு நினைவு நாள், விடுதலை நாள், குடியரசு நாள், போராட்டம், தேர்தல், இனக் கொள்கை, கல்வி, சமுதாய நலன் இவற்றினடிப்படையிலும் தலையங்கங்கள் பிறக்கின்றன. பொதுவாகத் தலையங்கத்தைக் கீழ்க்கண்ட வகைகளாகப் பிரிக்கலாம். அவை-

1. நெடுங்காலமாகத் தீர்க்கப்படாத சிக்கல் (இலங்கைத் தமிழர் போராட்டம்)
2. இரண்டு மாநிலங்களுக்கிடையே மக்கள் தழுவிய சிக்கல் (காவிரி நீர்ப்பங்கீடு).
3. போர்காலச் செய்திகள் (இந்திய-பாகிஸ்தான் போர்)
4. சிலதுறைச் சீர்திருத்தங்கள் (கல்விச் சீர்திருத்தம், உணவுக் கட்டுப்பாட்டுக் கொள்கை)
5. போராட்டங்கள் (தொழிலாளர் மாணவர்போராட்டம், மொழிக் கிளர்ச்சி).
6. அயல் நாட்டுக் கொள்கை (ஆயுதக் குவிப்பு).
7. திடீரென்று நடைபெறும் அரசியல் நிகழ்ச்சி (அமைச்சரவைக் கலைப்பு).
8. அரசியல் கொடுமைகள், (இந்திராகாந்தி கொலை)
9. புதிய சுவையான செய்திகள் (அமெரிக்க விண்வெளிக் கூண்டு-ஸ்கைலாப்)

## தலையங்கம் அமைப்பு

செய்திக் கருவைத் தெரிவித்து, காரணத்தை ஆராய்ந்து, இறுதியில் சிக்கல் தீரப் பரிந்துரை செய்வதே தலையங்கத்தின்

அமைப்பு முறையாகும்.* தலையங்கத்தின் பணி நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும் வாய் நாடுவதையொக்கும். தலையங்கத்தை எழுதுவதற்குமுன் நினைவிற் கொள்ள வேண்டியவை சில உண்டு. தலையங்கத்தின் கருப்பொருள் பற்றிய செய்திகளைப் படித்துத் தொகுக்க வேண்டும். ஆதா ரங்களைத் திரட்டிய பின்பு கருப்பொருளோடு அவற்றை இணைக்க வேண்டும். கருவைப் பற்றி அறிவித்தல், அதனைப் புகழ்தல் அல்லது கண்டித்தல், விரிவான விளக்கம் தருதல், ஆக்கபூர்வமான கருத்துக்களை அறிவித்தல், நீக்க வேண்டிய செயல்களை அறிவுறுத்தல், பொதுவான கண்ணோட்டத்தில் முடிவு கூறுதல் ஆகிய வரிசையில் கருப்பொருளைக் கொஞ்சங் கொஞ்சமாக விளக்க வேண்டும். இந்த அடிப்படையில் தலை யங்கத்தைக் கருப்பொருள், விளக்கப் பகுதி, முடிவுப் பகுதி ஆகிய மூன்று பகுதிகளாகக் காணலாம். விளக்கப் பகுதியில் இதழாசிரியர் சிக்கலைத் திறனாய்வு செய்து, தம் கருத்தன்றிப் பிறரும் அதுபற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைத் தெரி விக்க வேண்டும். ஆசிரியரின் விருப்பு வெறுப்பு விளக்கப் பகுதி யில் வெளிப்பட்டால் அஃது இதழையே பாதிக்கும். முடிவுப் பகுதியில் இதழ்களின் கொள்கை அல்லது ஆசிரியரின் எண்ணம் வெளிப்படும். நல்ல தலையங்கத்தின் முடிவுப்பகுதி இவையிரண் டையும் சாராமல் பொதுமக்கள் கருத்தாக இருத்தல் வேண் டும். எல்லாச் செய்திகளும் சரியாகவும் தெளிவாகவும் இருக்க வேண்டும். கருத்துக்கள் முன்னுக்குப்பின் முரணாக அமையக் கூடாது. எடுத்துக் காட்டாகப் பாண்டிச்சேரி அமைச்சரவை கவிழ்ந்தது பற்றிய தலையங்கம் என்றால்—

> பாண்டிச்சேரி அமைச்சரவை எப்போது பதவியேற்றது? எத்தனை ஆண்டுகள் பதவியில் இருந்தது? உறுப்பினர்கள் எத்தனை பேர்? எத்தனை தடவைகள் கவிழ்ந்துள்ளது? இதற்கு முன்பு எந்த ஆண்டு கவிழ்ந்தது? கவிழ்ந்ததற்கான காரணம் என்ன? மத்திய அரசின் நடவடிக்கை சரிதானா? மறுபடியும் தேர்தலை நடத்தவாமா? பிரச்சனைக்குரிய

---

* A formal news editorial is held to consist of three parts—the statement of truth, its exposition and the deduction.

*H. F. Harrington & T. T. Frankeberg*
*'Essential in Journalism.'*

தீர்வு என்ன? மற்றும் பொது மக்கள் கருத்துக்கள், ஆசிரியரின் கருத்துக்கள் முதலியன பற்றிய செய்திகளாக அமைவதோடு அவை சரியாகவும் தெளிவாகவும் அமையவேண்டும். பொது மக்கள் பேசிக் கொள்கிறார்கள் என்று முடிவு கூறுவது கோழை எழுத்தாளரின் நடையாகும்.

## தலையங்க ஆசிரியர்

தொடக்ககாலத்து இதழ்களில் உரிமையாளர்களே ஆசிரியர் பொறுப்பை ஏற்றிருந்தார்கள். நிருவாக அழுத்தங்கள் காரணமாக இப்பொழுது அது சாத்தியமாவதில்லை. மேலும் இதழியல் துறையில் புகழ் பெற்றவர்களைத் தம் இதழின் ஆசிரியராக்கிப் பார்ப்பதும் வழக்கமாகிவிட்டது. இதற்குப் பின்பு ஆசிரியர் அல்லது துணையாசிரியர் தலையங்கம் எழுதுவது மரபாகிவிட்டது இதழின் பதிப்பாளர் கருத்தைப் புரிந்து கொண்டு ஆசிரியர்கள் தலையங்கங்களை எழுதுவதும், எழுதிய பின்பு பதிப்பாளர் பார்வைக்குக் கொடுத்து வாங்குவதும் உண்டு. ஆங்கில நாட்டுப் புகழ்பெற்ற பதிப்பாளர்கள் ஜோசப் புலிட்சர், ஜேர்ஸ் ஜோர்டன் பென்னட் போன்றவர்கள்கூட தங்கள் கருத்தின் அடிப்படையில்தான் ஆசிரியர்களைத் தலையங்கம் எழுதச் சொன்னார்கள். தலையங்கம் படைப்பதில் முதல் வகை இது. குழு ஒன்றை அமைத்துத் தலையங்கம் படைப்பது இரண்டாவது வகையாகும். இக்குழுவில் தலையங்க ஆசிரியர், பதிப்பாளர் அல்லது அவருடைய சார்பாளர், நிருவாக" ஆசிரியர் இவர்களோடு செய்தியாளர்கள் சிலரும் இடம் பெறுவர். பெருமளவு விற்பனையாகும் ஆங்கில நாட்டு இதழ்களில் இம்முறையே பின்பற்றப்படுகிறது. குழுவினர் தீர்வு காண இயலா நிலையில் 'ஓட்டெடுப்பு நடத்தித் தலையங்கக்'கருத்துக்களை முடிவு செய்வதும் உண்டு. தலையங்கப் பகுதி ஆசிரியர் தலையங்கங்களை எழுதுவது மூன்றாவது வகையாகும். இங்கேயும் பதிப்பாளரையும், நிருவாக ஆசிரியரையும் கலந்து கொண்டே தம் கருத்துக்களைத் தெரிவிப்பார்கள்.

இதழாசிரியர் என்ற பெயர் தாங்கியுள்ளவர் தலையங்கத்தின் வழியாக நாடு, இனம், மொழி, அரசியல், சமூகம் ஆகியவற்றைச் சிந்திக்கும் 'சமூகவியலறிஞராகத் திகழ்கிறார். இதழாசியர் தங்களோடு நேரிடையாக உரையாடும் உணர்ச்சியைப் படிப்பவர்களுக்குத் தலையங்கம் உண்டாக்குகிறது.

அப்போது அவர்,அவர்களின் வழிகாட்டியாகக் கருதப்படுகிறார். அறிவுரை தரும் போது நண்பராகவும், அறவுரை தரும் போது ஞானியாகவுங்கூடத் தென்படுகிறார். வாசகர்களின் பொதுவான நோக்கில் நட்புரிமை பூண்டுள்ள திறனாய்வாளர் என்ற உணர்வே விஞ்சி நிற்கிறது. செய்தித்தாளில் பிறபகுதியாளர்களைவிடத் தலையங்கப் பகுதியாசிரியர் தனித்தன்மை பெற்றிருக்க வேண்டும். பல்துறையறிவு, செயல்திறன், பட்டறிவு உள்ளவர்களே இப்பகுதியில் செயலாற்ற முடியும். இதழாசிரியர் தம் மொழித் திறனையும் மொழியாட்சியையும் வெளிப்படுத்தும் வாய்ப்பு தலையங்கத்தில் கிட்டுகிறது. தலையங்கம் என்பது ஆசிரியர்களின் அறிவுவிளையாட்டு.* இங்கே சொற்கள் சரியான நேரத்தில், சரியான முறையில் அமைந்திருக்க வேண்டும்.

இதழ்களின் குறிப்பிட்ட இடத்தில் அமைகின்ற ஆசிரியர்களின் எண்ணங்களே தலையங்கம் என்பது பழைய பல்லவியாகி, அப்பகுதி இன்றைய இதழ்களில் எங்கெல்லாமோ இடம்பெறத் தொடங்கிவிட்டது. பாரதியாரின் இந்தியா இதழில் முதல் பக்கமே தலையங்கமாக அமைந்திருந்தது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இதழ்களின் தலையங்கங்கள் அவர்களை அச்சுறுத்திக் கொண்டிருந்தன. இன்றைய இதழ்களில் தலையங்கப் பகுதிகள் சமுதாயப் பின்னணி நிலைகளைத் தாண்டித் தன்விளக்கப் போக்கில் அமைந்துள்ளன. எனவேதான் 'தலையங்கம்' என்ற பெயர் மாறி 'ஆசிரியவுரை' என்று அழைக்கப்படுகின்றன. குமுதம் வார இதழில் அவ்வப்போது நடைபெறும் அரசியல் செய்திகளின் அடிப்படையில் தலையங்கம் அமைந்திருக்கிறது. கலைமகள், சக்தி இதழ்களில் உள்ளடக்கங்களைப் பற்றிய விளக்கமாக அமைந்திருக்கிறது. இதயம் பேசுகிறது இதழின் தலையங்கம் 'நலந்தானே' என்று குசலம் விசாரிக்கிறது. தீபம் இதழில் 'எனது குறிப்பேடு' என்ற தலைப்பில் நா. பா. கலை, இலக்கியம் சமூகம் பற்றிய சிக்கலை ஆராய்கிறார். கல்கி, ஆனந்தவிகடன் இதழ்கள் அரசியல், சமுதாயம் பற்றிய அறிவுரைத் தலையங்கங்களை வாரந்தோறும் வழங்குகின்றன. தலையங்கங்கள் தனிச் சிறப்புப் பெற்ற காலம் ஒன்றிருந்தது. தேசபக்தன், நவசக்தி இதழ்களில் திரு. வி. க. எழுதிய தலையங்கங்கள் 'தமிழ்த் தென்றல்' என்ற நூலாக உருவாகிச் சிறப்புப் பெற்றன. டி. எஸ்.

---

* 'Words are the tools of their trade'.

சொக்கலிங்கம் தினசரி நாளிதழில்; எழுதிய தேசியத் தலையங் கம் 'ஜாமீன் கெடுபிடி' நீதிக் கட்சித் தலைவர் பன்னீர்ச் செல்வம் மறைவில் அண்ணா விடுதலையில் எழுதிய. 'மறைந் தாயோ செல்வமே' மற்றும் அவருடைய 'கல்கத்தா காய்ச்சல்', அதிர்ச்சிவைத்தியம்' போன்ற தலையங்கங்களும்; மணி. திரு நாவுக்கரசு என்பார் மறைவில் மறைமலையடிகளார் எழுதிய தலையங்கமும் வரலாற்றுச் சிறப்புடையன.

## ஆசிரியருக்குக் கடிதங்கள் [Letters to the Editor]

தலையங்கத்தைப் பற்றிய வாசகர்களின் கருத்துக்கள், விமர்சனங்கள் மற்றும் பொதுச்சிக்கல்கள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன. பொதுச் சிக்கலைச் செய்தித்தாள்களும், பொது மக்களும் கலந்து வெளிப்படுத்தும் பொது மேடைகளாக 'ஆசிரிய ருக்குக் கடிதங்கள்' அமைந்திருக்கின்றன. இப்பகுதி எழுதிப் பழகவேண்டும் என்று விரும்புகின்றவர்களுக்குப் பயிற்சிமேடை யாகவும் அமைந்திருக்கிறது. மிகப்பெரிய எழுத்தாளர்கூட எழுத்தைத் தொட்டுத் தொடங்கிய இடம் இதுவேயாகும்' அமெரிக்க, இங்கிலாந்து இதழ்களில் இப்பகுதிக்குச் சிறப்பான வரவேற்புண்டு. இலண்டன் டைம்ஸ் நாளிதழில் 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' பகுதியே விரும்பிப் படிக்கும் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. நம் நாட்டிலும் பம்பாய் இதழ்களில் இப்பகுதிக்கு நல்ல வரவேற்பிருக்கிறது. ஆங்கில இதழ்களுக்குக் கடிதங்கள் எழுதுவதைப் பெருமையாகக் கருதுவோரும் உண்டு. தமிழ் நாளி தழ்களில் தினமணியில் வரும் கடிதங்களுக்கு நல்ல செல்வாக் குண்டு. தினமலரில் கடிதப் பகுதிக்குச் சிறந்த வரவேற்பிருக் கிறது. தீபம் இதழில் 'இலங்கைக் கடிதம்' என்ற பகுதி ஈழத்து எழுத்தாளர்கள், வாசகர்களின் மனப் பிரதிபலிப்பாக அமைந் திருக்கிறது. வார இதழ்களில் பல்வேறு தலைப்புகளில் கடிதங் களை வெளியிடுகின்றனர். தினமணிக் கதிரில் 'நாலுவரி' என்ற தலைப்பில் கடிதங்கள் வந்தன. வாசகர்களிடமிருந்து கடுமை யான சொற்களை வாங்கிக் கட்டிக் கொள்வதும், அத்தகைய கடிதங்களைப் பெருமையுடன் வெளியிட்டுக் கொள்வதும் குமுதத்தின் வழக்கமாகிவிட்டது. துக்ளக் வாசகர் கடிதங்களைச் சம்பந்தப் பட்டவர்களுக்கு அனுப்பி, அதற்கான பதிலையும் விளக்கத்தையும் பெற்று வெளியிடுகிறது.

எல்லாக் கடிதங்களையும் இப்பகுதியில் வெளியிட முடிவதில்லை. சுயசிந்தனையுடன் அமைகின்ற கடிதங்கள், சமுதாயச் செல்வாக்குடையவர்களின் கடிதங்கள் முன்னிடம் பெறுகின்றன. மொட்டைக் கடிதங்களைப் பொதுவாக வெளியிடுவதில்லை. அவதூறுச் செய்திகள் பற்றியனவும் அப்படியே. அரசு அதிகாரிகளின் பொறுப்பின்மை, கையூட்டு, தான்தோன்றித்தனம் இவற்றை வெளிப்படுத்தி அவர்களை அச்சுறுத்தி உணரவைக்கும் தன்மை இக்கடிதங்களுக்கு உண்டு. அரசையும், அரசியலையும் தூய்மைப்படுத்தும் பொதுத் தொண்டும் இவற்றிற்கு உண்டு. அமெரிக்காவின் வாட்டர்கேட் விவகாரங்கள் அங்குள்ள வாசகர் கடிதப் பகுதியில் 'விமர்சிக்கப்பட்டபோதுதான் மறைந்துகிடந்த பல உண்மைகள் வெளிப்பட்டன.

எளிமையாகவும், எல்லோருக்கும் புரிவதாகவும் கடிதங்கள் இருக்க வேண்டும். அரசியல், கல்வி, நிருவாகம், பாராட்டு என்றவாறு பல்சுவையுடன் பல்கிப் பெருக வேண்டும். கடிதங்கள் ஒரே பொருளைப்பற்றி அமைவதே சிறப்பானதாகும். குறைகளையும் தவறுகளையும் சுட்டிக் காட்டும்போது ஆக்கபூர்வமான வழிமுறைகளையும் வாசகர் தன் கடிதத்தில் வெளிப்படுத்த வேண்டும். தன்னுடைய சொந்த அனுபவங்களையும் எடுத்துச் சொல்லவேண்டும். தங்கள் கடிதங்கள் வெளிவரவில்லையே என்ற ஏமாற்றத்திற்கு ஆளாகிவிடாமல் தளர்ச்சியின்றி அடுத்தடுத்த காலங்களிலும் கடித முயற்சியில் ஈடுபாடு கொள்ள வேண்டும். கடிதத்திற்குத் தலைப்புக் கொடுக்க வேண்டும். சமுதாயச் சிக்கலை வெளிப்படுத்திச் சம்பந்தப்பட்டவர்கள் மாற்றுவழி காண இதழ்களின் கடிதப் பகுதி இடந்தர வேண்டும். சிறிய பகுதிதான் என்றாலும் மற்ற வாசகர்களைச் சிந்திக்க வைக்கும் பகுதியாக 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' பகுதி அமைந்திருக்கின்றது.

# செய்தித் தலைப்பு

தலைப்புகள் விறுவிறுப்பாக இருக்க துடிப்புள்ள சொற்களைப் பயன்படுத்த வேண்டும்.

—சி.பா. ஆதித்தனார்

செய்திகளின் உயிரோட்டம் தலைப்புகளில் அடங்கியிருக்கிறது. உடலுக்குத் தலைபோன்று செய்திக்குத் தலைப்பு அமைந்திருக்கிறது. செய்திகளைத் தொடர்ந்து படிக்கும் எண்ணத்திற்கு வாசகர்களை இழுத்து வந்து நிறுத்தும் கவர்ச்சியணிகளாய்த் தலைப்புகள் காட்சியளிக்கின்றன. நிறுவனத்திற்குள் நுழைகின்றவர்களை வணங்கி வரவேற்கும் வரவேற்பு அழகியின் கவர்ச்சியும் பயனும் செய்திக்குள் நுழைகின்றவர்களுக்குத் தலைப்புகள் வழியே கிடைக்க வேண்டும். பலரும் பலமுறைகளில் செய்தித் தாள்களைப் படிப்பதுண்டு. முதல்பக்கம் தொடங்கி, இறுதிப் பக்கம் புரட்டிப் பின்பு உட்பக்கத்திற்குச் செல்லுவோருண்டு; ஒவ்வொரு பக்கமாய் வரிசையாகப் படித்து முடிப்பவர்களும் உண்டு; குறிப்பிட்ட பக்கத்தைப் புரட்டிச் சில குறிப்பான செய்திகளைப் படித்த பின்பு தொடருவதும் சிலரிடம்காணப்படுகிறது. இவர்களுக்கிடையேதான் தலைப்புக்களை மட்டும் படிக்கின்றவர்களும் இருக்கிறார்கள். தலைப்பில் வேகமும், அழுத்தமும் இருந்தால் இவர்கள் செய்திகளைத் தொடர்ந்து படிக்கும் உணர்ச்சியைப் பெறுகிறார்கள். நாளிதழ்கள் இருந்து படிக்கும் இலக்கியங்கள் அன்று; நடந்து செல்லும் போதும் படித்து முடிப்பதுண்டு. தெளிவும் சுருக்கமும் கொண்டதலைப்புகள் அப்போது பயன்படுகின்றன. செய்தித்தாளின் அமைப்பு, வளர்ச்சி, விற்பனை, புகழ், வரவேற்பு ஆகியனவற்றில் தலைப்புகள் இன்றியமையாத இடத்தினைப் பெற்றுள்ளன. இவற்றோடு தலைப்புகள்—

1. செய்திக் கருவை வாசகர்களுக்குத் தெரிவித்துப் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டுகின்றன.

2. செய்தித்தாள் அமைப்பில் மாறுபட்ட தன்மையைக் கொடுத்துப் பக்கங்களைக் கவர்ச்சியாக்குகின்றன,

3. நல்ல அமைப்புள்ள தலைப்புகள் கவர்ச்சியூட்டிப் போட்டி யிதழ்களுக்கிடையே விருப்பமான இதழ்களைத் தேர்ந்தெடுக் கச் செய்கின்றன.
4. செய்திகளின் மதிப்பைக் கூட்டுகின்றன.
5. சில செய்திகளைத் தலைப்புக்களே உணர்த்திவிடுவதால் நேரம் மிச்சப்படுகிறது.

## தலைப்பு வகைகள்

தலைமைத் தலைப்பு (Banner), செய்திகள் தலைப்பு (Heading) என்ற இரு பிரிவுகளில் முன்னது முதல் பக்கத்தில் அன்றைய இன்றியமையாதசெய்தி ஒன்றினைப்பற்றியதாகஅமை கிறது. எட்டுப் பத்திகளையும் தொட்டுக் கொண்டிருக்கும் தலைமைத் தலைப்பு அரசியல் மாற்றம், திடீர்த்திருப்பங்கள், அரசினரின் புதிய திட்டங்கள், உடன் படிக்கைகள் முதலிய செய்திகளைப் பற்றியதாக அமைந்திருக்சிறது. பரபரப்பூட்டும் நாளிதழ்களில் விபத்து, கொலை, கொள்ளை போன்ற நிகழ்ச்சி கள் சமுதாயத்திலும் அரசியலிலும் நடைபெறுகிறபோது தலைப்பாகின்றன. அரசியல் இதழ்களில் குற்றச்சாட்டுகள், தாக்குதல்கள், குறைகள், அறைகூவல்கள் தலைமைத் தலைப் பாகின்றன. அரசியலில் சாதாரண நிகழ்ச்சிகளும் பிறஅன்றாடச் செய்திகளும் செய்திகள் தலைப்பாக இடம்பெறுகின்றன. பழைய செய்தித்தாள்கள் தலைப்புகளைப் பல அடுக்குகளாக அமைத்தன. ஒவ்வொரு அடுக்குத் தலைப்பும் செய்தித் தொடர்பு களைக் கொண்டிருந்தன. முதல் அடுக்கினைவிட அடுத்த அடுக்குத் தலைப்புகள் செய்தியாலும், வேகத்தாலும் சிறப்புக் குறைந்தவையாக அமைந்திருக்கும். அடுக்குத் தலைப்பு முறை இன்றைய தமிழ் இதழ்களில் குறைந்துவிட்டன. குறைந்த அளவும் எளிமையோடு தெளிவுங் கொண்டுள்ள தலைப்பு களையே காணுகின்றோம். வடிவ அமைப்பு முறையில் இத் தலைப்புகளைப் பத்து வகையாகப் பிரித்துக் காணலாம்.

### 1. நேர்வரிசை அடுக்குத் தலைப்பு (Flush Left)

பழைய ஆங்கில நாளிதழ்களில் இவ்வகைத் தலைப்புகளே இடம் பெற்றிருந்தன. இத்தலைப்புகள் ஒரே சீரான நேர்வரிசை அடுக்குகளாக அமைவன. இவை அச்சுக் கோப்பதற்கும் படிப்பதற்கும் எளிமையானவைகளாக இருந்தன.

(எ.கா.) அரியானாவுக்கு
புதிய முதல்வர்
பஜன்லால் போட்டியின்றித் தேர்வு

— தினமலர்.

2. மாறுவரிசை அடுக்குத் தலைப்பு (Step Line)

முதல் அடுக்கினைத் தொடர்ந்து வரும் அடுக்குத் தலைப்புகள் சற்று உள்ளடங்கி அமைந்திருக்கும். ஆனால், ஒரேசீராக முடிந்திருக்கும். இவ்வகைத் தலைப்பும் பழைய நாளிதழ்களில் அதிகமாகப் பின்பற்றப்பட்டன.

(எ. கா.) காஷ்மீரில் கலவரம்
துப்பாக்கிச் சூடு !

— மாலை முரசு

3. தலைகீழ் பிரமிடு அடுக்குத் தலைப்பு (Inverted pyramid Line)

வழக்கமாக இவ்வகையில் மூன்று அடுக்குகள் அமைந்திருக்கும். போகப்போக ஒவ்வொரு அடுக்குத் தலைப்பும் அளவில் குறைந்திருக்கும். எகிப்தின் பிரமிடுகளைத் தலைகீழாக நிறுத்தினாற்போல் இவ்வகைத் தலைப்புகள் காணப்படுவதால் இப்பெயரைப் பெற்றன. ஆங்கில நாட்டின் பழைய இதழ்களில் இவ்வகை அதிகமாகப் பயன்பட்டிருக்கின்றன.

(எ. கா.) எம். ஜி. ஆர். திடீர் பல்டி
காங்கிரஸ் கண்டனம்
தனித்துப் போட்டி

— தினகரன்

4. ஒருவரித் தலைப்பு (Ribbon or Line Method)

ஒரே வரியில் நீளமாக அமைந்திருக்கின்ற தலைப்புகளை இன்றைய இதழ்களில் காணுகிறோம். இவை பெரும்பாலும் தலைமைச் செய்தித் தலைப்புக்களாக அமைகின்றன. நீண்ட காலமாகத் தினமணி ஒருவரித் தலைப்பினையே பயன்படுத்தி வந்தது.

(எ. கா.) ஹரியானா கல்வி மந்திரி நீக்கம்

— தினமணி

**5. கிடைநிலைத் தலைப்பு (Cross Line Method)**

ஒரு வரித் தலைப்புகள் நீண்ட தொடராக அமையாமல் இடைவெளி கொண்டு அமைந்திருந்தால் கிடைநிலைத் தலைப்புகளாகும். இவ்வகை எட்டுப் பத்திகளிலும் அடங்கியிருக்க வேண்டியதில்லை.

(எ.கா.) நாளை சட்டசபை ஆரம்பம்

— தினமலர்.

**6. சிறுதொடர் மேல் தலைப்பு (Kicker Method)**

இவ்வகையில் சிறப்புத் தலைப்பிற்குமேல் சிறிய தலைப்பு ஒன்று இடம் பெறுகிறது. சிறப்புத் தலைப்பின் தகவல்களைச் சொல்லாமல் மாறுபட்ட தலைப்பாக இவை அமைந்திருக்கின்றன. சிறப்புத் தலைப்பில் மூன்றில் ஒருமடங்கு அல்லது பாதியாகச் சிறுதொடர்த் தலைப்பு அமைந்திருக்கும். இட்டாலிக் இன எழுத்துக்களால் அச்சுக் கோக்கப்பட்டிருக்கும்.

அதிரடிக்கு எதிரடி

(எ.கா.) தேவராஜ் அர்ஸ் நீக்கப்பட்டார்

— தினமலர்

**7. நீண்ட தொடர் மேல் தலைப்பு (Reverse Kicker Method)**

சிறப்புத் தலைப்பினைவிட மேலே இருக்கும் இவ்வகைத் தலைப்பு நீளமாயிருக்கும்.

53 வயது திருமதி தாட்சர்

(எ.கா.) பிரதமரானார்

— தினத்தந்தி

**8. நெற்றித் தலைப்பு (Topic Headline)**

சிறப்புத் தலைப்பிற்கு மேல்பகுதியில் சிறிய எழுத்தில் நெற்றித் தலைப்பு அமைந்திருக்கும். தொடர்ந்து நடக்கும் நிகழ்ச்சி பற்றிய செய்திகளின் முன் அறிமுகமாக நெற்றித் தலைப்புகள் அமைந்திருக்கின்றன. இவ்வகைத் தலைப்பைத் தினத்தந்தி பயன்படுத்தியுள்ளது. நெற்றித் தலைப்புகளை அடிக்கோடிட்டுக் காட்டுவதுண்டு.

எதிர்ப்புக்குப் பணிந்தார்

(எ.கா.) தேசாய் இராஜினாமா

— தினத்தந்தி

**9. உடுக்குத் தலைப்பு (Waist Line-1)**

உடுக்கினைப் போன்று இடைப்பகுதி குறுகி மேலும் கீழும் உள்ள தொடர்கள் நீண்டிருக்கின்றன.

(எ. கா.) ராஜீவுக்கு
தி.மு.க.
வேண்டுகோள்

— தினமணி

**10. மாற்று உடுக்குத் தலைப்பு (Waist Line-2)**

இடைப்பகுதி நீண்டும் மேலும் கீழும் உள்ள தொடர்கள் குறுகியும் அமைந்திருக்கின்றன.

(எ. கா.) வைகை
எக்ஸ்பிரஸ்
தப்பியது

— தினமணி

வேண்டுகோள் தலைப்பு (Imperative Headline) என்பது இன்றியமையாத காலங்களில் அரசு, அமைச்சர், தலைவர்கள் விருப்பமாக இடம்பெறுகின்றன. வாசகர்களின் ஆர்வத்தை அதிகப் படுத்த வேண்டும் என்ற நிலையில் வினாக்குறிகளுடனும், வியப்புக் குறிகளுடனும் சில தலைப்புகள் முடிகின்றன. 'நொறுங்கிய ராக்கெட்டு தமிழ் நாட்டில் விழுமா?' (தினத் தந்தி) என்ற தலைப்பு செய்திக் கதையைப் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டுகிறது. 'டெல்லி மந்திரி பகுகுணா ராஜினாமா!' (தினத் தந்தி) என்ற தலைப்பில் ஏன்? எப்படி? எப்போது? என்ற செய்திகளை அறியும் ஆர்வம் உண்டாகிறது. இவை கிளர்ச்சியூட்டும் தலைப்புகள் (Exciting Headings) எனப்படும்.

## தலைப்புகளின் அமைப்பு

செய்திகளை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் காணலாம். அவை 1) தலைப்பு (Head line). 2) செய்தி நடைபெற்ற நாள், இடம் (Date line), 3) செய்திக் கதை (News story) என்பனவாகும். செய்திக் கதைப்பகுதி, செய்திச் சாரம் (Lead), செய்தி விளக்கம் (Body) என்றும் பிரிக்கப்பட்டுள்ளது. இவை அனைத்தையும் தலைப்புகளே தன்னுள் அடக்கி வைத்திருக்

கின்றன. தலைப்பில் செய்திக்கரு மட்டும் இடம் பெறுகின்றது. மற்ற பகுதிகளில் காரண காரியங்கள், பின் தொடர்கள், பிற தொடர்பான நிகழ்ச்சிகள் ஆகியவை இடம் பெறுகின்றன. தலைப்பின் அமைப்பு செய்தித்தாளுக்குச் செய்தித்தாள், ஆசிரி யருக்கு ஆசிரியர் மாறுபடுகின்றன. தலைப்பின் அமைப்பை வைத்துக் கொண்டே செய்தித்தாள் எது? ஆசிரியர் யார்? என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இவ்வகையில் காணும் போது "இதழ்களை அவற்றில் இடம் பெறும் தலைப்புகளே துல்லியமாகக் கணிக்கின்றன" எனக் கூறும் ஆலன் ஹால் கோம்ப் என்பாரின் கூற்று பொருத்தமாக அமைந்துள்ளது. செய்திக் கதையின் கடுமை, பீதி, அச்சம், ஆபத்து, பரபரப்பு, இரக்கம், விளைவு ஆகியவற்றைத் தலைப்புகள் எடுத்துக் காட்டு கின்றன. உள்ளூர்ப் பதிப்புக்கும், வெளியூர்ப் பதிப்புக்கும் ஏற்றவாறுகூட இவை மாறுபடுவதுண்டு. தமிழ் நாளிதழ்களில் தலைப்புகள் அவற்றின் தன்மைக்கேற்பவே அமைகின்றன. தினத்தந்தி, மாலை முரசு, தினகரன் ஆகியவற்றில் பரபரப் பூட்டும் தலைப்புகள் (Sensational Headings) இடம்பெறுகின் றன. தினமணியில் மிதவாதத் தலைப்புகள் (Conservative Headings) இடம் பெறுகின்றன. தினமலரில் இரண்டு வகையும் உண்டு. அரசியல் செய்தித்தாள்களில் தீவிர வாதத் தலைப்பு கள் (Radical Headings) அமைகின்றன.

## தலைப்புகள் அமையும் முறை

தலைப்புகள் கவர்ச்சியாக - பொருளுடையதாக - சுருக்க மாக அமைந்திருக்க வேண்டும். சரியான புள்ளி விவரங்களைத் தலைப்பில் தர வேண்டும். ஏறக்குறைய என்ற முறை கூடாது. எண்களைத் தலைப்பாக்குவதைத் தவிர்க்கவேண்டும். அப்படிப் போடவேண்டியதிருந்தால் பெரிய எண்களைப் பக்குவமாகப் பயன்படுத்தலாம். (எ.கா. மதுரையில் திருவிழா; ஐந்து லட்சம் பேர் கூடுகிறார்கள்'. இதை '5 இலட்சம் பேர்' என்றும் குறிப் பிடலாம்). தலைப்புகள் வாசகர்களைத் தடுமாற வைக்கக் கூடாது. தெளிவிலலாத தலைப்புகள் குழப்பத்தைக் கூடுதலாக் கும். 'கள்ளச்சாராயம் குடிக்கலாமா? கவர்னர் வருத்தம்' என்று தலைப்பிடுவது நல்ல சாராயத்தைக் குடிக்கவில்லையே என்று வருத்தப்படுவதாகப் பொருள் தந்துவிடும். ஒரே விதமான தலைப்புகளை (பஸ்விபத்து, லாரி விபத்து, தீ விபத்து) ஒரே பக்கத்தில் அமையாதவாறு, பரவலாக இருக்குமாறு பார்த்துக்

கொள்ளலாம். தலைப்பில் ஒருவர்தாம் இடம் பெறவேண்டும். 'முதல்வர் அமெரிக்கா பயணம்' என்ற தலைப்பில் உடன் சென்றவர்களும் இடம் பெற்றால் செய்திப் பட்டியலாகிவிடும். மற்றவர்களைச் செய்தி விளக்கத்தில் குறிப்பிட வேண்டும். அரசாங்க ஊழியர்களின் ஊதியஉயர்வு, அடிப்படைச் சம்பளம், ஊக்கப் பரிசுத்தொகை, மருத்துவ வசதி இவைகளைத் தலைப் பிட வேண்டியதிருந்தால் 'அரசாங்க ஊழியர்க்குச் சம்பள உயர்வு' என்றே தலைப்பிடலாம். பொது மக்கள் அறிமுக மில்லாத பெயர்களையும், பாலுணர்ச்சிச் செய்திகளையும் தலைப்பில் அமைக்கக் கூடாது. வெளிநாட்டுச் செய்திகளைத் தலைப்பிடும் போது நாட்டின் பெயரைச் சேர்த்திருக்க வேண் டும். (எ.கா,) சீனாவில் அணை உடைந்தது. ஆயிரம் பேர் பலி,

## தலைப்புத் தொடர்கள்

தலைப்புச் செய்திகளின் மொழிநடை தனித்தன்மை வாய்ந்ததாகும். மொழிஇலக்கணத்தை இங்கே முழுமையாக எதிர்பார்க்க முடியாது. இலக்கணத்திற்குக் கட்டுப்படாத வழக்கு மொழி ஒன்றையே இதழ்கள் படைத்து வைத்திருக்கின்றன. மொழிப் பயிற்சியும் உணர்வும் இருப்பதால் படிப்பவர்கள் அவற் றைப் புரிந்து கொள்ள முடிகிறது. தினத்தந்தி இயல்பான சொற் றொடர் (Simple Sentence) அமைப்பைக் கையாளுகிறது. கூட்டுத் தொடரைப் (complex sentence) பயன்படுத்தும் போது சுருக்கி அமைத்து விடுவதைக் காணுகிறோம். தலைப்பிடுவது,தினத்தந் திக்குக் கைவந்த கலையாகும். தினமணி கூட்டுப் பெயர்த்தொடர் (Noun Compound) அமைப்பிலும், தினமலர் பெயரெச்சத் தொடர் (Noun Phrase) முறையிலும் தலைப்பிடுகின்றன.

இரண்டு எதிர்மறைச் சொற்களைத் தலைப்பில் போடு வதை நீக்கவேண்டும். (எ.கா.) அமைச்சரவை கலைப்பு; எதிர்ப் புக்கு ஆதரவு. தலைப்புகள் எழுவாய்,பயனிலைகளோடு பொருள் தரும் சொற்றொடர்களாக இருத்தல்வேண்டும். செய்வினையில், நிகழ்கால அமைபபில் தலைப்பிட வேண்டும். வேற்றுமை உருபு கள், வினைத் தொகைகள் இடம் பெறல் கூடா. ஒரே சொற் களைப் பயன்படுத்தக்கூடாது. தமிழ் மொழி சொற்பஞ்சமில் லாத வளமான மொழி. ரெயில் கவிழ்ந்தது என்று தலைப்பிட்டு விட்டால் படகு மூழ்கியது,அணை உடைந்தது என்று வேறுவேறு

சொற்களையே வெளிப்படுத்த வேண்டும். எது எளிதாக உடனே புரியுமோ, அந்தச் சொற்களையே தலைப்பில் போடவேண்டும். 'மோட்டார் சைக்கிளில் சென்றவர் மரணம்' என்பதைவிட மோட்டார் சைக்கிளில் சென்றவர் சாவு' என்று தலைப்பிடுவது சுருக்கம்மட்டுமன்று; வழக்குமாகும். சுருக்கக் குறியீடுகளைத் தலைப்பில் தந்தால் அவை அனைவருக்கும் தெரிந்தவைகளாக இருக்க வேண்டும். (தி. மு. க, எம். ஜி. ஆர். இ. காங்கிரஸ்) தலைப்பும் செய்திதான்; அதற்குத் தனியலங்காரம் தேவையில்லை. ஆசிரியர் புலமை வெளிப்படுமிடங்களாகத் தலைப்புக்களைத் தேர்ந்தெடுத்துவிடக் கூடாது. தலைப்புக்களை மட்டும் பார்த்து வைப்பவர்களும் செய்தித்தாளைப் படித்த முழுமையான உணர்வைப் பெறவேண்டும். தலைப்பிற்கு இதுவே சுருக்கமான இலக்கணமாகும்.

# படங்கள்

> கருத்துப் படங்கள் நகையுணர்வைத் தரவேண்டுமே யன்றிப் பகையுணர்வைத் தரலாகாது.
>
> ஓவியர் ஆர். கே. லக்ஷ்மண்.

கற்றலிற் கேட்டலே நன்று; பார்த்தல் அதனினும் நன்றாகும். காதுகள் பெறுகின்ற செய்திகளைவிடக் கண்கள் பிடிக்கின்ற காட்சிகள் மூளையில் விரைவாகப் பதிகின்றனவாம். கேள்விப் பயனை விடப் பார்வைப் பயன் நீண்டநாள் நினைவில் நிற்கும். சிலவற்றை வார்த்தைகளால் வருணித்துவிட முடியாது. குமரிக் கடலில் காணும் எழுஞாயிற்றின் அழகுக் குவிப்பை எத்தனை புத்தகங்கள் எழுதினாலும் சொல்லித் தீர்த்துவிட முடியவில்லை. ஆனால் நல்ல படமொன்று அதனை அப்படியே பிடித்துத் தன்னுள் அடக்கி வைத்துக் கொள்கிறது. எண்ணற்ற சொற்கள் தெரிவிக்க முடியாதவற்றைச் சின்னப் படமொன்று தெளிவாக்கி விடுகிறது. (It is the Picture that makes the story). 'ஒரு படம் பத்தாயிரம் சொற்றொடர்களுக்கு ஒப்பானவை' என்றொரு சொல்வழக்கு சீனாவில் உண்டு. சிறந்த அறிஞர்களின் சிந்தனைத் தொடர்களை விரும்பாத நிலையில் மக்கள் திரைப்படத்தில் மோகங் கொண்டிருப்பதன் ரகசியம் இதுவாகக்கூட இருக்கலாம். இவற்றையெல்லாம் காணும் போது இதழ்களில் படங்கள் இன்றியமையாத இடத்தைப் பெற்றிருப்பதில் வியப்பேதுமில்லை. படங்களின் அவசியத்தையும் கவர்ச்சியையும் அறிந்து கொண்ட ஆங்கில நாட்டு இதழ்கள் அவற்றை அதிகமாகப் பயன்படுத்துகின்றன. அங்கே பட இதழியல் (Pictorial Journalism) என்பது தனித்துறையாக வளர்ந்து வருகின்றது. செய்தித்தாள்களில் இடம்பெறும் எல்லாப் படங்களும் பொருள் குறித்தனவே. (Every Picture tells a Story). இதழ்கள் அழகுக்கென்று படங்களை வெளியிடுவதில்லை. அவற்றின் ஒவ்வொரு படமும் செய்தி மதிப்பு (News Velue) உடையது.

தகவல் பரிமாற்றம் என்பது படங்களின் வழியாகத்தான் தொடங்கியுள்ளது. மனிதன் கருத்துப் பரிமாற்றத்திற்கு மொழியைப் படைப்பதற்கு முன்பு, படங்களின் மூலம் கருத்

துக்களை உணர்த்தியுள்ளான். மரக்கட்டையில் எழுத்துக்கள் செதுக்கப்பட்ட காலத்தில் படங்களும் மரத்தில் செதுக்கப்பட்டு அச்செடுக்கப்பட்டுள்ளன. சீனாவின் முதல் புத்தகம் (கி. பி.868) 'டைமண்ட் சூத்திரா' வின் அட்டையில் மரக்கட்டையில் செதுக்கி அச்செடுக்கப்பட்ட அழகான படம் காணப்படுகிறது. மரக் கட்டையில் செதுக்கப்பட்ட ஆங்கில நாட்டுக் கொடியின் படம் 1707-இல் 'பாஸ்டன் நியூஸ் லெட்டர்' என்ற தகவல் அறிக்கை ஏட்டில் வெளிவந்தது. அச்சுக்கலை வளர்ச்சிபெற்ற பின்பு படங்கள் இதழ்களில் தனித்த இடத்தைப் பெற்றன. 1850-ஆம் ஆண்டு தொடங்கிச் செய்தித்தாள்களில் படங்களை வெளியிடும் முறை வளர்ந்தது. ஆங்கில நாட்டில் டெலிகிராப், கூரியர் ஆகிய இதழ்கள் புகழ்பெற்ற சிற்பங்களின் புகைப்படங்களை முதன்முதலாக வெளியிட்டன. 1851 - இல் பம்பாய் இதழ் சித்திர ஞான தர்பன் முகமது நபிகளின் படமொன்றை வெளி யிட்ட போது முகமதியர்கள் எதிர்ப்புத் தெரிவித்துள்ளனர். டைம்ஸ் ஆப் இந்தியா 1880 இல் - வெளியிட்ட உதயப்பூர் மகாராணாவின் படமே இவ்விதழின் முதற் படமாகும். 1900 - இல் ஈயப்படக் கட்டை தயாரிக்கும் முறைகள் பரவலான பின்பும் முதல் உலகப் போரின் போதும் இதழ்களில் படங்கள் அதிகமாக இடம் பெறத் தொடங்கின. தாள் தயாரிப்பு, பல் வேறு வகையான அச்சு மைகளின் கண்டு பிடிப்பு இவைகளும் படங்களின் வளர்ச்சியை விரைவு படுத்தின. புகைப்படக் கலை யின் வளர்ச்சி புதுமைகள் பலவற்றைப் புகுத்தியது. இதழ்கள் புகைப்படக் கலைஞர்களைப் பணியில் அமர்த்தி அவர்களுக்கு வேண்டிய புதுப்பொறிகளையும் ஆய்வுக் கூடங்களையும் அலு வலகத்திலேயே அமைத்துக் கொடுத்தன. புகைப்படக் கலைஞர், ஓவியர், செய்தியாளர் ஆகிய மூவரும் இணைந்து செயலாற்றத் தொடங்கிய பின்பு செய்தியும் படங்களுமாக இதழ்கள் பொலி வுடன் வெளிவரத் தொடங்கின. புகைப்படச் செய்தியாளர்' புகைப்படச் செய்தி நிறுவனங்கள், செய்தித்தாள் கழகங்கள், செய்தி முகவர்கள், வணிக முறைப் புகைப்பட நிறுவனங்கள், தகவல் - தொடர்பு நூலகங்கள், அரசுச் செய்தித்துறை ஆகிய இடங்களிலிருந்தும் இதழ்கள் படங்களைப் பெற முடிந்தன.

புகைப்படங்களைச் செய்திகளின் கூடுதல் ஆதாரங்களா கக் கருத வேண்டும். குறிப்பிட்ட செய்திகளின் விளக்கமாக அமைவதோடு புகைப்படங்கள் செய்திகளின் மதிப்பையும் கூட்டி

விடுகின்றன. படவிளக்கத்தோடு செய்திகளைத் தருவதில் இல்லஸ்ட்ரேடட் வீக்லி ஆப் இந்தியா நம் நாட்டின் மிகச் சிறந்த இதழாக வெளிவருவதைக் காணுகிறோம். இவ்விதழின் படங்கள் சில செய்திகளைவிட மதிப்புக் கூடியவைகளாக அமைந்துவிடுகின்றன. செய்திக்குரிய இடங்களையும் பிரமுகர் களையும் காண வேண்டுமென்ற ஆர்வம் வாசகர்களுக்குத் தோன்றும் போது அவற்றிற்குரிய படங்களே அவர்கள் ஆர்வத் தைத் தணிக்கின்றன (விபத்து நடந்த இடங்கள், பிரமுகர் களின் திருமணம்), சிலரை அடையாளங் காணவும் படங்களே உதவுகின்றன (காணாமல் போனவர், குற்றவாளி). சில படங்கள் ஆர்வத்தைத் தூண்டுகின்றன (பரிசு பெற்றோர், சமூக சேவை யாளர், புதுமைகள் படைத்தோர்). சில படங்கள் அறிவுறுத்து கின்றன (சாலை விபத்து, வெள்ளப் பெருக்கு). வேறு சில படங்கள் மகிழ்வூட்டுகின்றன (நகைச்சுவை, இயற்கைப் படங் கள்). அரிதான படங்கள் செய்திகளுக்குச் சூடும் சுவையும் தரு கின்றன; அருமையான படங்கள் கவர்ச்சியை அள்ளித் தரு கின்றன.

இதழ்களின் பக்கங்களைக் கவர்ச்சியாக்கத் தோன்றிய ஓவியங்கள் இனக்கவர்ச்சியில் வந்து நிற்கின்றன. கதைகளுக்குத் தொடர்பில்லாக் கவர்ச்சிப் படங்களாகவே இன்றைய இதழ் களில் ஓவியங்கள் இடம்பெறுகின்றன. சிறுகதை இலக்கணங் களை விரட்டியடித்துவிட்ட எழுந்துத் துரியோதனர்களுக்கு ஓவியத் துச்சாதனர்கள் பெரிதுந் துணையாகி நிற்கின்றனர். முறையற்ற ஓவியங்களைக் கொண்டிருப்பதால் சில இதழ்கள் வீடுகளுக்குள் செல்லமுடிவதில்லை. ஓவியங்களைப் பொறுத்த மட்டில் இதழ்களில் சில புனிதமான மாற்றங்கள் நடைபெற்றே யாக வேண்டும்.

## நகைச்சுவைத் துணுக்குகள்

மனிதன் எப்போதும் கடும் முனைப்போடு ஒரே வகை யான சிந்தனையில் செயல்பட விரும்புவதில்லை. மனிதமனம் மாறுபட்ட பொழுது போக்குகளையும் விரும்புகிறது. செய்தித் தாள்களும் பிறபருவ இதழ்களும் வெறும் செய்தித் திணிப் பினால் அழுத்தி விடாமல் பொழுது போக்குப் படைப்புகளால் மனித மனத்தை இதமாகத் தடவிக் கொடுக்க வேண்டும். ஆங்

இல நாட்டில் வெளியான 'ஹியூமரிஸ்ட்,' 'டிட்பிட்ஸ்' என்ற இதழ்களின் நகைச்சுவைத் துணுக்குகள், தொடர்கள், படங்கள் முதலியன வாசன் அவர்களைக் கவர்ந்தபோது சிரிப்பு வழியில் சிந்தனையைத் தூண்டும் இதழ் ஒன்றைத் தொடங்கினார். அதுவே ஆனந்த விகடன். 'பஞ்ச்' என்ற ஆங்கில இதழ் இங்கிலாந்து நாட்டு நடப்புச் செய்திகளைக் கிண்டல் மொழிகளில் நகைச்சுவைப்பட எழுதிக் கொண்டிருந்தது. ஆனந்த விகடன் அந்த இதழின் நகைச்சுவைப் போக்கினைப் பின்பற்றியதால் ''the punch of south india'' என்று அக்காலத்தில் அழைக்கப்பட்டது.‡ இத்தகைய நகைச்சுவைத் துணுக்குகள் எளிமையான பட விளக்கங்களால் எப்போதும் விரும்பப்படுகின்றன. முப்பது ஆண்டுகட்கு முன்பு ஆனந்த விகடனில் வெளி வந்த 'சீமா சீரிஸ்' நகைச்சுவைத்துணுக்கை இப்போது எடுத்துப் போடும் போதும் அதன் எளிமை நம்மைக் கவர்ந்து கொண்டிருக்கிறது. சிரிப்புப் படங்கள் இல்லாத இதழ்களே கிடையாது. தினத்தந்தி முதல் பக்கத்திலேயே இரண்டு சிரிப்புப் படங்களை வெளியிட்டுக் கொண்டிருக்கிறது. பருவ இதழ்களில் இவை பக்கங்களெல்லாம் பரவிக்கிடக்கின்றன சிரிப்புப் படத்தில் இடம் பெறுகின்றவர்கள் பொது மக்களுக்கு அறிமுகமானவர்களாக இருக்க வேண்டும். பள்ளியாசிரியர், மருத்துவர், வழக்குரைஞர், காவலதிகாரி, திரைப்பட நடிகர், அஞ்சலகர் பெண்கள், அலுவலக ஊழியர் முதலியவர்கள் இடம் பெறும் சிரிப்புப் படங்களுக்கே அதிக வரவேற்பிருக்கிறது.

## படத் துணுக்குகள்

இதழியல் துறையில் புகழ் பெற்றிருந்த ஜோசப் புலிட்சர் *1896*— இல் நியூயார்க் வேல்டு என்ற இதழில் முதல் படத்துணுக்கைப் புகுத்தினார். இத்துணுக்கு 'மஞ்சள் சிறுவன்' (yellow kid) என்ற பெயரில் வெளிவந்தது* பிற்காலத்தில் இப்பகுதி 'மிக்கி மௌஸ்', 'டோனால்டு டக்' போன்ற தலைப்புகளில் உலகப் புகழ் பெற்றன. பிளிட்ஸ் இதழில் 'I don't know son' என்ற தலைப்புப் படங்கள் சிறப்புப் பெறுகின்றன. தினத்தந்தியின் ஆண்டிப்பண்டாரம்; குமுதத்தின் வெயிட் வெங்கம்மா; வாராந்திரி

‡ சோமலெ.- தமிழ் இதழ்கள். பக். 41.

* மிகச் சிறந்த கருத்துப் படத்திற்கு ஆண்டுதோறும் 'புலிட்சர் பரிசு' வழங்கப்படுகிறது.

ராணியின் குரங்கு குசலா போன்றவைகள் குறிப்பிடத்தக்கன. இப்போது வீரச்செயல், பெருமிதப் பண்பு, அறிவியல் கதைகள், புதினங்கள் இவற்றின் அடிப்படையிலும் படத்துணுக்குகள் வெளிவருகின்றன.

படத்துணுக்குகள் மூன்று வகைப்படும். அவை:

*1.* பேச்சுமொழி இல்லாதவை (Gag)

இதில் கதாபாத்திரங்கள் பேசுவதில்லை. செயல்களால் மட்டுமே கருத்தை உணர்த்துகின்றன.

*(எ. கா) :* மிக்கி மௌஸ்.

2. கருத்துப் படத்தொடர் (Panel)

கதாப்பாத்திரங்களைப் பேசவைத்துக் கருத்துக்களைத் தெரிவிப்பது. இம்முறையாகும்.

*(எ. கா.) :* குரங்கு குசலா.

3. தொடர் படக்கதை (Continuity)

ஏதாவதொரு கதை அல்லது நாவல் படக்கதையாகத் தொடர்ந்து வெளிவரும்.

(எ. கா) : டார்ஜான் ; சிந்துபாத்து போன்ற தொடர் படக் கதைகள்.

## கருத்துப்படங்களும் கேலிச்சித்திரங்களும்

வாசகர்களைக் கவருவதில் கருத்துப் படங்களும் கேலிச் சித்திரங்களும் வலிமையான சாதனங்களாகும். பொதுமக்கள் கருத்தை முறையாகத் தெரிவிப்பதில் தலையங்கத்திற்குச் சரியான மாற்று வழியாகக் கருத்துப் படங்கள் அமைந்திருக்கின்றன. தலையங்கத்தில் பல சொற்கள் தெரிவிக்கின்ற கருத்துக்களைக் கருத்துப்படத்தின் சில கோடுகள் தெரிவித்துவிடுகின்றன இன்னும் நெருக்கமாகக் கூறவேண்டுமானால் கருத்துப் படங்கள் என்பவை படத்தலையங்கங்களாகும். தமிழ் நாட்டில் பாரதியார்தான் முதன் முதலாகக் கருத்துப் படங்களை வெளியிட்டார். அவருடைய இந்தியா இதழின் முதல் பக்கத்தில் ஒவ்வொரு வாரமும் புரட்சிகரமான கருத்துப் படமொன்று இடம்பெற்றது.

கருத்துப் படங்களுக்கும் கேலிச்சித்திரங்களுக்கும் சில வேறுபாடுகள் உண்டு. கருத்துப்படங்கள் எளிமையானவை; குறைவான விளக்கமுடையன. தெரிவிக்க விரும்பும் குறிப்பிட்ட கருத்தினை மட்டும் படத்தில் பெரிது படுத்திக் காட்டுகிறது. மண்ணெண்ணெய் விலை உயர்ந்து விட்டதைக் காட்டும் கருத்துப் படத்தில், பாட்டில் ஒன்று இறக்கைகள் கட்டி உயரத்தில் பறந்து செல்வதைக் காட்ட வேண்டும். இப்படத்தில் பறக்கின்ற பொருளைத்தான் பெரிதாகக் காட்ட வேண்டும். அஃது உயர்ந்து விட்டதை வியப்போடு பார்த்துக் கொண்டிருக்கும் மனிதனின் உருவம் சிறியதாயிருந்தாலே போதுமானதாகும். இங்கே கருத்துக்களுக்கே முதலிடம்; ஆட்களுக்கு அடுத்த இடம்தான். ஆனால், கேலிச் சித்திரங்கள் இம்முறையினின்றும் மாறுபட்டவை. கேலிச் சித்திரங்களில் இடம்பெறும் மனிதர்களின் தோற்றம் அல்லது செய்கை மரபுகள் (feature or mannerism) ஏதாவதொரு முறையில் வெளிப்படுத்தப் படுகின்றன. சர்ச்சில் பற்றிய கேலிச் சித்திரம் என்றால் வாயில் சுருட்டும்; நேரு பற்றியதென்றால் சட்டைப் பொத்தானில் ரோஜாப்பூவும் கண்டிப்பாக இடம் பெற வேண்டும். ஸ்டாலின் மீசை; நிக்சனின் மூக்கு; மொரார்ஜியின் காதுகள்; ஐசனோவரின் சிரிப்பு; ராஜாஜியின் கறுப்புக் கண்ணாடி இவைகளெல்லாம் அவர்களின் அடையாள முத்திரைகளாகக் கேலிச் சித்திரங்களில் வெளிப்படுகின்றன.

கருத்துப் படங்களும் கேலிச் சித்திரங்களும் சமுதாயம், அரசியல் இவற்றின் உட்பொருளாக அமைவன. நாடுகள், மனிதர்கள், இயக்கங்கள், அரசியல் கட்சிகள் ஆகியவற்றின் கருத்துக்களை அவையிரண்டும் வெளிப்படுத்துகின்றன. கருத்துப்படங்கள் மக்களின் அடிப்படைத் தேவைகள் பற்றியனவாகவும், கேலிச்சித்திரங்கள் அரசியல் பற்றியனவாகவும் இதழ்களில் அமைகின்றன. இவற்றின் நோக்கம் உட்பொருளை நகைச்சுவையோடு வெளிப்படுத்துவதாக இருக்கவேண்டும். இடம்பெறுகின்றவர்களை இழிவுபடுத்தும் அல்லது தாழ்த்திப் பார்க்கும் நோக்கில் அமையக் கூடாது. ஆசிரியர் அல்லது உரிமையாளரின் தனிப்பட்ட கருத்தாக அமைந்து விடாதபடி பொதுமக்கள் கருத்து வெளிப்பாடாக அவை வெளிவர வேண்டும்.

கருத்துப் படங்கள் செய்திகளின் அடிப்படையில்தான் உருவாகின்றன. அவற்றைத் தயாரிக்குமுன் அதன் கருப்பொருளைத் தேர்ந்தெடுத்துத் தெளிவு படுத்திக் கொள்ள வேண்

டும். அது தொடர்பான செய்திகளைத் தொகுத்து, அதனடிப் படையில் கருத்துப் படத்தைச் சிந்திக்க வேண்டும். ஒரு கருப் பொருளை மட்டுமே எடுத்துக் கொள்ளாமல் மேலும் சிலவற் றைத் தேர்ந்தெடுத்து அவற்றின் அடிப்படையில் மாதிரிக் கருத்துப் படங்களைத் தயாரிக்க வேண்டும். இதழாசிரியருடன் கலந்தும் முடிவுக்கு வரலாம். பின்பு கருத்துப் படத்தினை இறுதி வடிவத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

கருத்துப் படங்களை மட்டுமே செய்திகளாகக் கொண்டு சங்கர்ஸ் வீக்லி இதழ் வெளிவந்து மிகச்சிறப்படைந்தது. கருத் துப் படங்களையும் கேலிச் சித்திரங்களையும் தயாரித்து இதழ் களுக்கு வழங்கிய சங்கர், ஆர். கே. லக்ஷ்மண், * பிரான், மூர்த்தி அப, மரியோ முதலிய இந்திய ஓவியர்கள் உலகப் புகழ் பெற் றுள்ளனர். ஆனந்த விகடன் வழியாக ஓவியர் மதன் இப் பட்டியலில் இடம் பெற்றுள்ளார்.

## படங்களைப் பதிப்பிக்கும் முறை

சிறந்த படங்களைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்குத் தலைப் பிடுவதற்காகப் பத்திரிக்கை அலுவலகங்களில் தனி ஆசிரியர் ஒருவர் செயல்படுகிறார். அத்துடன் அலுவலகத்தில் புகைப் படப்பிரிவும் படக்கட்டை (Block) உருவாக்கும் பிரிவும் அமைந் திருக்கும். செய்திகளின் மதிப்பையும், பக்க அமைப்பு முறையி னையும் நன்கு அறிந்தவர்களே செய்திக்குரிய படங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். குழுப்படங்களைத் தவிர்ப்பது நன்று. குழுப்படங்களாக இருப்பின் விளக்கத்தில் இடமிருந்து வலமாகப் பெயர்களைக் குறிப்பிட வேண்டும். கூட்டத்தில் உள்ள குறிப் பிட்ட ஒருவரை வெளிப்படுத்த வேண்டுமாயின் 'படத்தில் கண்ணாடி அணிந்திருப்பவர், என்பது போன்ற விளக்கக் குறிப்பினைத் தரவேண்டும். படங்களின் தலைப்புகள் சுருக்க மாகவும் தெளிவாகவும் இருக்க வேண்டும். தலைப்பு சிறப்பாக அமைந்து விட்டால் விளக்கம் தேவையில் லை. செய்திகளுக்குப் பொருத்தமாகப் படங்கள் அமைந்திருக்க வேண்டும். அமைச்சரின் பதவியேற்பு விழாச்செய்தியில் பார்வை யாளர்கள் படம்இடம்பெற வேண்டியதில்லை. அமைச்சர் உறுதி

---

* *1986—87*-ஆம் ஆண்டின் சிறந்த கேலிச் சித்திரப் பத்திரிக்கை யாளருக்கான 'பி டி. கோயங்கா விருது' (ரூபாய் ஒரு லட்சம்) ஆர்.கே. லக்ஷ்மணனுக்கு வழங்கப்பட்டுள்ளது.

மொழி எடுக்கும் காட்சியே இடம்பெற வேண்டும். செய்திக்கு விளக்கம் தரும் தொடர்புடைய பகுதியைப் பெரிது படுத்தி வேண்டாத பகுதிகளைப் படங்களிலிருந்து நீக்கிவிட வேண் டும். இதழ்களில் இடம்பெறும் புகைப்படங்கள் செயல் அடிப் படையில் (action oriented) அமைந்திருப்பதே சிறப்பானதாகும். ‘இதுதான் தீயில் எரிந்த கட்டிடம்’ என்ற தலைப்புப் படத்தினை விடத், ‘தீயை அணைக்கத் தீயணைப்புப் படையினர் போராடும் காட்சி’ என்ற தலைப்பிற்குரிய படமே வாசகர்களால் பெரி தும் வரவேற்கப் படுகின்றன. மிகச்சிறிய படங்களை வெளியிடு வதைவிட நிறுத்திவிடுவதே மேலாகும். படத்தில் இருப்பவரின் கண்கள் தெளிவாகத் தெரியும்படி படங்கள் இருக்க வேண்டும். உள்ளூர்ச் செய்தி பற்றிய படங்களை அன்றே வெளியிட வேண் டும். சுமையுந்து ஒன்று கவிழ்ந்து கிடக்கும் படத்தில் ஆள், வீடு, மரம் போன்றவைகளில் ஏதாவது ஒன்றும் இருக்க வேண் டும். அப்படியில்லாவிட்டால் தவறாகப் படத்தைத் தலைகீழாகப் போட்டு விட்டதாகக் கருதுவார்கள். போர்ச் செய்திகளில் அது நடைபெறு மிடங்களைக் குறிக்கும் வரைபடம் ஒன்றும் வெளியிட வேண்டும்.

# பக்க அமைப்பு [Page make-up]

ஒவ்வொரு அங்குலமும் தங்க நகையைப் போல் அலங்கரிக்கப்படுகிறது.

— தினத்தந்தி

செய்தித் தாள்களைப் பெண்களுக்கு ஒப்பிட்டுச் சொல்லலாம். இரண்டிற்கும் செல்வாக்குண்டு; இரண்டும் சொல்வதை முழுமையாக நம்பிவிட முடியாது; இரண்டுமே சொந்தமாக இருக்க வேண்டும்; இரண்டிற்கும் நாளாகிவிட்டால் மதிப்புக் குறைந்துவிடும்; இரண்டிற்கும் அழகும் கவர்ச்சியும் அமைந்திருக்க வேண்டும். அறிவும் அழகும் பெண்மைக்கு உரியவையென்றால் அவை பொருளும் கவர்ச்சியுமாக நாளிதழ்களில் அமைந்திருக்க வேண்டும். செய்தித் தயாரிப்பு மட்டுமே செய்தித்தாள் தயாரிப்பாகி விடுவதில்லை. அதன் ஒவ்வொரு பக்கத்தையும் செய்திகளடங்கிய கலைப்படைப்பாக உருவாக்க வேண்டும். அழகூட்டிய பக்கங்களைக் கொண்ட நாளிதழ் ஆடைகட்டி வந்த நிலவுப் பெண்ணாகக் காட்சியளிக்கின்றது. செய்தித்தாளில் அளவு, எழுத்து வகைகள், விதவிதமான தலைப்புகள், பொருத்தமான படங்கள், பல்துறைச் செய்திகள், கதை-கட்டுரைகள், துணுக்குகள், கருத்துப் படங்கள், விளம்பரங்கள் ஆகியனவற்றைப் பரவலாகவும் பக்கவாரியாகவும் பொருத்தமுற அமைப்பது பக்க அமைப்பு அல்லது பக்கம் கட்டுதல் எனப்படும். ஆடையில்லா மனிதன் அரை மனிதனாவதைப் போன்று பக்க அமைப்பால் அழகூட்டப்படாத நாளிதழும் அரைகுறைச் செய்தித்தாளாகி விடும். பக்க அமைப்பின் பயன்களாவன:

(1) பிற இதழ்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டுதல்.

(2) வாசகர்களை வாங்கத் தூண்டுதல்.

(3) செய்திகளின் முக்கியத்துவத்தை அறிந்து கொள்ள உதவுதல்.

(4) கலைத் தோற்றத்தை வடித்து வழங்குதல்.

(5) சுவைக்கேற்றவாறு வாசகர்கள் தேர்ந்தெடுத்துப் படிக்க உதவுதல்.

ஆங்கில நாட்டுச் செய்தித்தாள்கள் அதிகமான பக்கங்களைக் கொண்டிருப்பதால் பக்க அமைப்பிற்கென்றே அங்கே சிறப்பாசிரியர்கள் உண்டு. நம்நாட்டுத் தாள்களில் இதழாசிரியரின் கண்காணிப்பில் துணையாசிரியர்கள் இப்பணியை மேற்கொண்டுள்ளனர். இந்திய இதழியல் துறையில் சிறந்திருந்த சதானந்தம் ஃப்ரீ பிரஸ் ஜெர்னல் என்ற இதழைத் தடித்த எழுத்தில் தலைப்பிட்டுப் பத்திபிரித்தும் வெளியிட்டார் அது முதற் கொண்டே இந்திய இதழ்கள் இம்முறையை மேற்கொண்டன. டைம்ஸ் ஆப் இந்தியா, ஸ்டேட்ஸ்மேன், ஆனந்த பஜார் பத்திரிகா, இந்தியன் எக்ஸ்பிரஸ், ஆந்திர பிரபா, இல்லஸ்ட்ரேடட் விக்லி ஆப் இந்தியா, மலையாள மனோரமா முதலிய இதழ்கள் பக்க அமைப்பு முறையில் வெற்றிபெற்றுத் திகழ்கின்றன. தமிழ்ச் செய்தித்தாள்களில் தினத்தந்தியின் பக்க அமைப்பு முறை சிறப்பானது. அதன் முதல்பக்க உச்சியில் 'தினத்தந்தி ஒவ்வொரு அங்குலமும் தங்க நகையைப் போல அலங்கரிக்கப்படுகிறது' என்று சில நாட்கள் அச்சிட்டிருப்பார்கள். செய்தித் தலைப்புகள், எளிய நடை, பத்து பிரிப்பு, படவிளக்கம் இவற்றிற்கும் மேலாக ஒருவிதக் கவர்ச்சி அமைப்பு ஆகியவற்றால் தினத்தந்தி அச்சொற்றொடரை உண்மையாக்கிக் காட்டுகிறது. குறிப்பிடத்தக்க எல்லாத் தமிழ் இதழ்களும் பக்க அமைப்பில் கவனம் செலுத்தி விற்பனையில் கூடியுள்ளன.

## பக்க அமைப்பு வகைகள்

செய்தித்தாள்களில் பல வகையான பக்க அமைப்புகளைக் காண முடிகிறது. அவை இரண்டு அடிப்படை நிலைகளில் அமைகின்றன. முதல்நிலை அச்சுக்கலை (Typography) வழியாக அமைவது. மற்றொருநிலை பொருளடக்க அமைப்பு (Lay-out) வழியாக அமைவது.

### 1. சமநிலைப் பக்க அமைப்பு (Balanced Make - up)

ஒவ்வொரு பக்கத்திலும் ஏதாவதொரு படம், துணுக்கு, பெட்டிச் செய்தி, விளம்பரம் முதலியவை செய்திகளோடு சமநிலையில் அமைந்திருப்பது சமநிலைப் பக்க அமைப்பாகும். செய்திகள் குறைந்து விளம்பரம் போன்றவை அதிகரித்திருக்கக் கூடாது. ஒவ்வொரு நாளும் படைப்புகள் சமநிலையில் பங்கு பெறுவது சில நேரங்களில் சலிப்புத் தட்டலாம். எனவே, பல்

வேறு வகையும் அளவுங் கொண்ட எழுத்துக்களால் தலைப் பிடுதல், இரண்டு பத்திகளாகச் செய்தியினை அமைத்தல் இவை போன்ற சில மாற்றங்களால் வாசகர்களுக்குச் சலிப்புத் தட்டாமல் பக்கங் கட்டப்படுகிறது. செய்திகளையும் படங்களையும் பக்கங்களில் அமைக்கும் முறைகளின் அடிப்படையில் சமநிலைப் பக்க அமைப்பு சில உட் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

அ. நேர்வெட்டுப் பகுதிச் சமநிலை (vertical Balanced). ஒருசெய்தித்தாளை நேர் வெட்டாகப் பிரித்துப்பார்த்தால் அதன் வல, இடப்பகுதிகளைச் சமநிலைப்படுத்துவது வல, இடப்பகுதிச் சமநிலை(Formal Balanced) எனப்படும். நாற்பகுதியும் சமநிலைப்படுத்துவது நாற்பகுதிச் சமநிலை ஒருங்கமைப்பு (off Balanced) என்றும், நாற்பகுதிகளில் எதிர் மூலைகள் சமநிலைப் படுத்துவது நாற்பகுதி எதிர் மூலைச் சமநிலை ஒருங்கமைப்பு (opposite corner Balanced) எனவும் வழங்கப்படுகிறது.

ஆ. குறுக்கு வெட்டுப் பகுதிச் சமநிலை (Horizontal Balanced). ஒரு செய்தித்தாளைக் குறுக்கு வெட்டாகப் பிரித்துச் சமநிலைப்படுத்துவது. இதில் மேற்பகுதிச் சமநிலை அமைப்பு (Top Balanced), நடுப்பகுதிச் சமநிலை அமைப்பு (Centre Balanced), கீழ்ப் பகுதிச் சமநிலை அமைப்பு (Bottom Balanced) என மூன்று வகைகள் பின்பற்றப்படுகின்றன.

2. மாறுபாட்டுச் சமநிலைப் பக்கஅமைப்பு (**Contrast and Balanced Make - up**)

சமநிலைப் பக்க அமைப்போடு சில மாறுபட்ட அமைப்புகளைச்சேர்த்துக்கொள்ளுவது இம்முறையாகும். மூன்று அடுக்குத் தலைப்புகளைப் பயன்படுத்தி, இரண்டாவது பத்தியிலிருந்து அன்றைய முதல்தரச் செய்தியினைத் தொடங்கலாம் நாளிதழின் கீழ்ப் பகுதியிலுங்கூட ஒருவரித் தலைப்புடன் மூன்று பத்திகளை உள்ளடக்கிச் செய்திகளை அமைக்கலாம். மாறுபட்ட எழுத்துக்கள், வேறுபட்ட படங்களையும் பயன்படுத்திச் சமநிலையாக்கலாம். செய்தித் தாளின் தோற்றத்தில் இம்முறை சற்று மாற்றத்தை உண்டுபண்ணிக் காட்டும்.

3. கலப்பு நிலைப் பக்க அமைப்பு (Mixed Make-up)

சமநிலை முறையினின்று முற்றிலும் மாறுபட்ட நிலையுடையது கலப்பு நிலைப் பக்க அமைப்பு. சமநிலை முறையில் ஒவ்வொரு படைப்புக்கும் குறிப்பிட்ட இடமுண்டு. [கருத்துப் படம், கவர்ச்சிப் படம் முதலியவை தினத்தந்தியின் முதல் பக்கத்தில் இடப் பக்க மூன்று பத்திகளில் இடம் பெறுகின்றன] கலப்பு நிலைப் பக்க அமைப்பில் எல்லாப் பகுதிகளும் எங்கும் இடம் பெறுவதுண்டு. பல வகை எழுத்துக்களைக் கலந்து அச்சிடுவது, குறிப்பிட்ட இடங்களின்றி ஒவ்வொரு நாளும் வேறுவேறு இடங்களில் செய்திகளையும் பிறவற்றையும் அமைப்பது ஆகிய முறைகள் பின்பற்றப்படுகின்றன. நாளிதழ்களின் கீழ்ப் பகுதியில்கூடப் படங்கள் இடம் பெறுவதுண்டு. ஆங்கில நாட்டுக் கவர்ச்சியிதழ்கள் இம் முறையில் பெருத்த வரவேற்பைப் பெறுகின்றன.

4. தொடர்புச் செய்திப் பக்கஅமைப்பு (Stepped Make-up)

ஒரு குறிப்பிட்ட செய்தித் தொடர்பான விளம்பரங்களையோ, அல்லது குறிப்பிட்ட விளம்பரத் தொடர்பான செய்திகளையோ ஒரே பக்கத்தில் அமைப்பதாகும். (எ.கா. தேர்வு முடிவுகள் வெளியாகும் பக்கத்திலேயே தனிப் பயிற்சிக் கல்லூரி பற்றிய விளம்பரங்களை வெளியிடுவது; திருமண விளம்பரத்துனையும் அத்திருமணத் தொடர்பான வாழ்த்துச் செய்திகளையும் ஒரே பக்கத்தில் அமைப்பது).

5. வட்ட அரங்கு வடிவப் பக்க அமைப்பு (Circus Make-up)

நடுவில் படத்தினை வைத்துச் சுற்றிலும் செய்திகளைக் கொண்டு பக்க அமைப்புச் செய்யும் முறையாகும். செய்தித் தாள்களில் அதிகமாகப் பின்பற்றப்படுவதிலலை.

## பத்தி அமைப்பு

இயல்பான அளவுச் செய்தித்தாளில் எட்டுப்பத்திகளும் சிறிய அளவுச் செய்துத்தாளில் ஐந்து பத்திகளும் அமைந்திருக்கின்றன. ஒரு பத்தியின் அளவு 2 அங்குலத்திற்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு பத்தியும் கோடுகளினால் பிரித்துக் காட்டுவது பழைய இதழ்களில் காணப்பட்டது. இப்போது வெள்ளைப் பகுதி இடைவெளியால் பிரித்துக் காட்டப்படுகிறது.

சில நாளிதழ்கள் ஆறுபத்திகளாகப் பிரிக்கப்படுகின்றன. பயோனீர், சிவில் அண்டு மிலிட்டரி கெஜட், ட்ரிப்யூன், லீடர் போன்ற இந்திய முன்னணி நாளிதழ்கள் ஐந்து பத்திகளைக் கொண்டிருந்தன. பத்திகளின் சிறப்பு நாட்டுக்கு நாடு வேறு படுகின்றது. இங்கிலாந்து, இந்தியா ஆகிய நாடுகளைச் சார்ந்த நாளிதழ்களில் முதல் பக்கத்தின் முதல்பத்தி சிறப்பிடம் பெற்றுள்ளது. அமெரிக்க இதழ்களில் எட்டாவது பத்தியே முதலிடம் பெறுகின்றது. இப்பத்திகளிலேயே அன்றைய முதல் தரச் செய்தி (First Lead) தொடங்குகிறது. மூன்று—நான்கு, நான்கு—ஐந்தாம் பத்திகள் படங்களுக்குரியதாய் ஒதுக்கப்படு கின்றன. இத்தாலி நாளிதழ்கள் மூன்றாம் பக்கத்துப் பத்தி களில் இலக்கியம், பயணம் பற்றிய கட்டுரைகளை இடம் பெறச் செய்கின்றன. எளிதில் பார்வை படாத இடங்கள் (Blind Spot) என்று சில பத்திகள் உண்டு. சில சாதாரணச் செய்திகளை இந்த இடங்களில் ஒதுக்கிவிடுவதுண்டு. பொது வாகத் தமிழ் நாளிதழ்களில் உட்பக்கங்களின் 7, 8 — ஆம் பத்தி கள் பார்வைபடாத இடங்களாகக் கருதப்படுகின்றன.

## எழுத்துவகை அமைப்பு

எழுத்துக்கள் செய்திகளுக்குத் தனித்தன்மையைத் தருவன. நூற்றுககணக்கான எழுத்து வகைகள் உள்ளன. ரோமன், இட்டாலிக் வகை எழுத்துக்கள் தலைமைத் தலைப்பிலும் குறுகிய முகவெழுத்து, விரிவு முகவெழுத்து, மென்மை முக வெழுத்து, தடித்த முகவெழுத்து இவை உட்தலைப்புகளிலும் பயன்படுத்தப் படுகின்றன. விரிவுமுக வெழுத்து, அதன் இன் னொரு வகையான பயனீர் எழுத்தும் விளம்பரங்களில் காணப் படும், பழைய ஆங்கில வகை (Old English Type) இதழ்களின் பெயரில் பயன்படுவன (எ.கா. இந்து). ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு வகைப் புள்ளி எழுத்துக்கள் பயன்படுகின்றன.

| | | |
|---|---|---|
| பகுக்கப்பட்ட விளம்பரங்கள் | — | 5 புள்ளி |
| நீளயான மேற்கோள் தொடர்கள் | — | 6 புள்ளி |
| செய்திக் கதை | — | 9 புள்ளி |
| சிறுகதைத் தலைப்புகள் | — | 14 புள்ளி |
| இரண்டு அல்லது மூன்றுபத்திச் செய்தித் தலைப்பு | — | 18 புள்ளி |

| | | |
|---|---|---|
| நடுத்தரமான தலைப்புகள் | — | 24 புள்ளி |
| நடுத்தரக் கட்டுரைத் தலைப்பு | — | 24 புள்ளி |
| நீண்ட கதைகளின் தலைப்பு | — | 36 புள்ளி |
| நீண்ட கட்டுரைத் தலைப்பு | — | 48 புள்ளி |
| முன்பக்கத் தலைமைத் தலைப்பு | — | 72 புள்ளி |

**மாதிரிச் செய்தித்தாள் (Dummy News Paper)**

கட்டிடக் கலைஞனுக்கு வரைபடம் போன்று செய்தித் தாளுக்கு மாதிரி நாளிதழ் அமைந்திருக்கிறது. ஒரு பக்கத்தில் பாதி இடம் நிறைக்கப்பட்டிருக்கும் இம்மாதிரித்தாள் முதலில் விளம்பரப் பகுதிக்கு அனுப்பப்படும். விளம்பரங்கள் உரிய இடத்தில் அமைக்கப்பட்ட பின்பு செய்திப் பகுதிக்கு வந்து சேரும். இங்கே செய்தி இடங்கள் சரியாக்கப்படுகின்றன. செய்திகளும் விளம்பரங்களும் இடம்பெற்ற பின்பு மாதிரி இதழ் அச்சாளருக்குப் போய்ச் சேருகின்றது. செய்திகள் குறைவாக இருந்தால் காலியான பக்கங்களை நிரப்பச் செய்தி வங்கியிலிருந்து செய்திகளை எடுத்து நிறைவு செய்வார்கள். முதல் பக்கம் மட்டும் புதிய செய்திகளுக்காகக் கடைசி நேரம் வரை காத்திருக்கின்றது.

**பக்க அமைப்பு உத்திகள்**

செய்தித்தாளின் ஒவ்வொரு பக்கமும் படிப்பவர்களுக்குச் சுவையாக அமைய வேண்டும். கீழ்ப்பகுதி அவ்வளவாகக் கவருவ தில்லை. எனவே கீழ்ப்பகுதியும் கவனத்தைக் கவரச் சில சுவை யான படைப்புகளை (எ. கா. தினத்தந்தியில் சிரிப்பு) அமைக்க வேண்டும். தொடரும் போடுவதில் கவனம் வேண்டும். பெரும் பாலும் அந்தந்தப் பக்கங்களிலேயே ஏதாவதொரு பத்தியில் செய்திகள் தொடர வேண்டும். தலைமைத் தலைப்பின்கீழ் இடம்பெறுகிற செய்திகளைத் தொடரும் போட்டு உட்பக்கங் களுக்குக் கொண்டு செல்லக் கூடாது. முடியாமலிருக்கும் செய்திக் குக் கீழே 'தொடர்ச்சி 4-ஆம்பத்தி' என்பது போல் மறக்காமல் குறிப்பிட வேண்டும். ஒரே ஆளைப் பற்றிய செய்திகள் ஒரு பக்கத்தில் மீண்டும் செய்தியாகவோ கருத்துப் படமாகவோ இடம் பெறக் கூடாது. படங்களுக்கும் இது பொருந்தும். ஒரே படத்தை மீண்டும் போடும்போது அளவைக் குறைக்கலாம்.

படங்களைச் செய்தியின் பக்கத்தில் வைக்க வேண்டும். அடிப் பக்கத்தில் படங்களை வைக்கக் கூடாது படங்களைச் சுற்றிலும் இடம்விடுதல் வேண்டும். முதல் பக்கத்தின் நடுவில் அமைகின்ற செய்தி நெற்றிச் செய்தி எனப்படும். தரமான செய்தியைத் தேர்ந் தெடுத்து இங்கே அமைக்க வேண்டும். கவர்ச்சியான விளம் பரங்கள் உள்ள பக்கங்களில் முக்கியமான செய்திகளை வெளி யிடக் கூடாது.

தொடக்க கால இதழ்களில் பக்க அமைப்பு என்பது முறையாகப் பின்பற்றப்படவில்லை. ஒரேவகை அச்சில் படைப்பு கள் அங்குமிங்குமாகச் சிதறிக் கிடந்தன. அச்சுக் கலையின் வளர்ச்சியே பக்க அமைப்பின் தோற்றமாக அமைந்தது. செய்தித்தாள்கள் போட்டி உலகில் புகுந்தபோது அவற்றின் ஆசிரியர்கள் கலைஞர்களாக மாற வேண்டியதிருந்தது. இதழிய வில் புதுமை புகுந்தது. நாளிதழ்கள் செய்தித்தாள் என்ற நிலையைத் தாண்டிப் பொழுது போக்குச் கலையம்சங்களைக் கொண்டதாக மாறின. அதற்குப் பின்புதான் அழகும் அறிவும் கொண்ட நாளிதழ்ப் பெண்ணிடம் மனம் ஒன்று உரையாடி மகிழ முடிந்தது.

# விளையாட்டுப் பகுதி [Sports Page]

நவீன உலகின் முதன்மையான ஆச்சரியங்களில் ஒன்று பத்திரிக்கை.

— ஜே. ஏ. பிரோடஸ்

உலக அரங்கில் விளையாட்டுப் போட்டிகள் உச்சமான இடத்தை எட்டிப் பிடித்திருக்கின்றன. பல நாடுகளில் தேசிய விளையாட்டுக் குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. விளையாட்டும் பிற போட்டிகளும் இன்றைய உலகின் அன்றாட நிகழ்ச்சிகளாக அமைந்துள்ளன. எனவே இதழ்களில் அவை இன்றியமையாத பகுதிகளாய் இடம் பெறுகின்றன. உலகநாடுகளில் நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளைப் பற்றி அறியும் ஆர்வம் சிலரை ஆட்டிப் படைக்கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற் பகுதியில் (1890-1930) அமெரிக்காவில் விளையாட்டுத் துறை வணிக மதிப்பைப் பெற்ற பின்பு இதழ்கள் இத்துறையை இணைத்துக் கொண்டன. விளையாட்டுக்கள் உலகச் செல் வாக்குப் பெறத் தொடங்கிய பின்பு அவை பற்றிய செய்தி களுக்கு இதழ்கள் தனியிடம் ஒதுக்கின. இதற்கெனத் தனிச் செய்தியாளர்கள் அமர்த்தப்பட்டனர். இவர்கள் அங்குமிங்குமாக ஓடியாடி ஆட்டங்கள் பற்றிய செய்திகளை அள்ளிக் கொண்டு வந்தனர். உலகின் மிகச்சிறந்த இதழ்களில் விளையாட்டுத் துறைச் செய்திகள் நல்ல அமைப்பு முறையில் மிகச் சிறந்த நடையில் இடம் பெறுகின்றன. நாளிதழ்களில் இப்பகுதியை ஆர்வத்தோடு காணுகின்ற வாசகர்கள் பலர் நம்நாட்டிலும் உள்ளனர். இந்தியாவில் 1945-இல் ஏ. பி. ஐ செய்தி நிறுவனம் ஸ்போர்ட்ஸ் ஓயின் என்ற விளையாட்டு இதழை நடத்தியது. பல ஆண்டுக ளாக மிகச் சிறந்த முறையில் வெளியான ஸ்போர்ட்ஸ் அண்டு பாஸ்டைம் எனற இதழ் இப்போது நிறுத்தப்பட்டுள்ளது. ஸ்போர்ட்ஸ் வோல்டு, ஸ்போர்ட்ஸ் ஸ்டார் போன்ற இதழ்கள் இத் துறைக்கென்றே வெளிவருகின்றன.

## விளையாட்டுத் துறைச் செய்திகளின் வகை

விளையாட்டுத் துறைச் செய்திகளை இதழ்கள் மூன்று வகைகளில் வெளியிடுகின்றன. அவை, 1) போட்டிகள் பற்றிய செய்திகள் (The reporting of contests); 2) விளையாட்டுத்

துறையில் விவாதத்திற்குரிய பல்வேறு கட்டுரைகள் (The discussion of various other topics in the othletic world); 3) விளையாட்டுத் துறையினருடன் நேரடிப் பேட்டிச் செய்திகள் (The reporting of Interviews) என்பனவாகும். இவற்றில் முதல் வகைச் செய்திகள் வரிசைப்பட எடுத்துரைக்கும் நிகழ்ச்சியுரை; இரண்டாம் வகைச் செய்திகள் விளக்கவுரை; மூன்றாம் வகை கலந்துரையாடல். காற்பந்து, கூடைப்பந்து, மட்டைப்பந்து, போன்ற பெரிய விளையாட்டுப் போட்டிகள்; ஓட்டம், நீச்சல் போன்ற போட்டிகள்; குத்துச்சண்டை, குதிரைப்பந்தயம், சதுரங்கம் போன்ற பந்தயங்கள் ஆகியன பற்றிய செய்திகள் முதல் வகையில் தரப்படுகின்றன. உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் பள்ளிகள். கல்லூரிகள் மற்றும் தனியார் கழகங்கள் மூலமாக இப்பந்தயங்கள் நடைபெறலாம். இரண்டாம் வகைச் செய்தியில் விளையாட்டுகள், விளையாட்டு வீரர்கள் பற்றிய வரலாறு, பல்வேறு குழுக்களைப் பற்றிய வரலாறு, விளையாட்டுப் போட்டிகளின் தரம், முறை, எதிர்காலம் இவையெல்லாம் தொகுப்புக் கட்டுரையாக வெளியிடப்படுகின்றன. விளையாட்டுத்துறை பற்றி அறியும் ஆர்வமுடையோருக்கு இப்பகுதி பெரிதும் பயன்படுகிறது. மூன்றாவது வகையில் ஒவ்வொரு விளையாட்டிலும் சிறப்பிடம் பெற்றுள்ளவர்களின் பேட்டிச் செய்திகள் வெளியிடப்படுகின்றன. அவர்களின் தனித்தன்மை, விளையாட்டு அறிவு, ஆர்வம், பழக்க வழக்கங்கள், குடும்பப் பின்னணி இவற்றை இப்பகுதியில் அறிந்துகொள்ள முடிகிறது.

**விளையாட்டுத் துறைச் செய்தியமைப்பு**

விளையாட்டுத் துறைச் செய்திகள் இருபகுதிகளாக வெளியிடப்படுகின்றன. முற்பகுதி தொடக்க உரை (Lead Summary) எனப்படும். பிற்பகுதி விளையாட்டைப்பற்றிய நடப்புச் செய்தித் தொகுப்பு (Running Account) ஆகும். முதற்பகுதி வாசகர்களுக்கும் இரண்டாம் பகுதி விளையாட்டில் ஆர்வமுடையோருக்கும் விளக்கம் தருகின்றன. எல்லா வகை விளையாட்டுச் செய்திகளும் இவ்விரண்டு பகுதிகளாகவே அமைத்திருக்கின்றன. போட்டி நடைபெறும் போது செய்தியாளர் நடப்புச் செய்திகளையே முதலில் தொகுத்துத்தர முடிகிறது. போட்டியின் முடிவுகளைப் பற்றிய செய்தி இறுதியில் தான் கிடைக்கிறது. என்றாலும் செய்தியாக்கும்போது போட்டி முடிவுகளைத்

தொடக்கச் செய்திகளாக்கி, நடப்புச் செய்தித் தொகுப்பை விளக்கச் செய்திகளாக்க வேண்டும். யார், என்ன, எப்பொழுது' எங்கே, ஏன் என்ற ஐந்து வினாக்களைப் போட்டியோடு இணைத்துத் தொடக்கச் செய்திகளைத் தயாரிக்கலாம். போட்டி களின் முடிவு, நேரம், இடம், கலந்து கொண்ட குழுக்கள் அல்லது போட்டியாளர்கள் பற்றியதாகத் தொடக்கச் செய்தி அமைகிறது. இப்பகுதி நடந்து முடிந்த போட்டியைப் பற்றிய சுருக்கமான அறிமுகப் பகுதியாக அமைந்து, அடுத்துள்ள நடப்புச் செய்தித் தொகுப்பிற்குள் வாசகர்களைச் செல்லத் தூண்டுகிறது. வெற்றிப் புள்ளிகளைப் பெற்றமுறை, குழுக்களை ஒப்பிட்டுக் காட்டுதல், சிறந்த விளையாட்டு வீரர்கள், அவர் கள் ஆட்டத்தைத் தொடங்கிய முறை, பார்வையாளர்களின் எண்ணிக்கை, குழுத்தலைவர்களின் கருத்துக்கள், விளையாட்டு முடிவின் விளைவுகள் போன்றவை பற்றியும் விளக்கப்பத்தி அமைக்கலாம். நடப்புச் செய்தித் தொகுப்புப் பகுதியில் போட்டிக்கு வருகின்ற குழுக்களின் விவரம், பல்வேறு குழுக் களுடன் ஒப்பீடு, போட்டிகளின் நிலை முதலியவை விளக்க மாகத் தரப்படுகின்றன.

### விளையாட்டுத்துறைச் செய்தியாளர்

மற்ற செய்தியாளர்களுக்குரிய பொதுத் தகுதிகளோடு விளையாட்டுத் துறை அறிவு இவர்களுக்குச் சிறப்புத் தகுதியா கிறது. இப்பதவி மிகவும் பொறுப்பான ஒன்றாகும். உண்மை களைத் தவிர வேறு புனைந்துரைகள் எவற்றையும் எடுத் தெழுதக் கூடாது. பிற செய்திகளில் வளைவு நெளிவுகள் இருக்க லாம். ஆனால், இங்கே செய்திகள் உள்ளது உள்ளபடி இருக்க வேண்டும். போட்டிகளைப் பற்றிய அடிப்படை அறிவு, அதன் உலகச் செல்வாக்கு, சட்டதிட்டங்கள், வீரர்களின் விளையாட்டு முறை, வெற்றிப் புள்ளிகளைப் பெற்ற விதம், விளையாட்டு வீரர்களுக்குரிய தகுதிகள் முதலியவற்றை இத்துறைச் செய்தி யாளர் அறிந்திருக்கவேண்டும். போட்டியில் கலந்து கொள்கின்ற வர்களின் பெயர்களையும், விளையாட்டில் அவர்களுக்குரிய இடங்களையும் தெளிவாக அறிந்து வைத்திருக்க வேண்டும். பயிற்சியாளருடனும், விளையாட்டு வீரர்களுடனும் நன்கு பழகிச் செய்திகளைச் சேகரிக்க வேண்டும். விளையாட்டில் ஈடுபாடும்,பேட்டிகாணும் திறமையும், மிகச் சிறந்த கண்ணோட் டமும் அமைந்திருக்க வேண்டும். தனக்கு விருப்பமான குழுவை

மட்டும் வலிந்து பாராட்டும் ஒருசார்பு நிலையைத் தவிர்க்க வேண்டும். விளையாட்டுத்துறைச் சொற்றொடர்களைச் செய்தியில் அதிகமாக இடம்பெறச் செய்வதும் கூடாது. அளவுக்கு அதிகமான வருணனையால் வாசகர்களைத் திணறடிப்பது வேண்டாத வேலையாகும்.

இதழ்கள் விளையாட்டுப் போட்டிகளில் தலைசிறந்த ஒருவரை விளையாட்டுத்துறைச் செய்தியாசிரியராக அமர்த்துவதும் உண்டு. இப்போது இதழியல் துறையையும் விளையாட்டுத் துறையையும் பற்றி நன்கு அறிந்த ஒருவரைச் செய்தியாசிரியராக அமர்த்துகிறார்கள், மக்கட் பெருக்கமுடைய ஊர்களோடும் பல்கலைக் கழகங்கள் அமைந்துள்ள பெருநகரங்களோடும், விளையாட்டுத் துறையில் சிறந்தார்களுடனும் விளையாட்டுத்துறைச் செய்தியாசிரியர்கள் தொடர்பு வைத்துக் கொள்கிறார்கள்.

விளையாட்டுத்துறைச் செய்தியாளர்களுக்கான பத்துக் குறிப்புகள்

1. ஒருசார்புத் தன்மையுடன் எழுதக் கூடாது. குழுக்களின் போட்டி உணர்வை ஆராய்ந்து, இரு குழுக்களும் கண்டு உவக்கும் முறையில் செய்திகளைத் தரவேண்டும்.

2. இனம், மதம், நாடு இவற்றின் அடிப்படையில் வேண்டிய அல்லது வேண்டாத செய்திகளைப் படைத்தல் கூடாது.

3. உண்மையில்லாத புகழ்ச்சியுரைகள் வெற்றுரைகளாகும்.

4. போட்டிகளில் பங்கு பெறுகின்றவர்களின் முழுப் பெயரையும் எண்ணையும் அறிந்துகொள்ள வேண்டும். செல்லப் பெயரிடுவது பார்வையாளருக்கே உரியது.

5. கொச்சை மொழித் தொடர்கள், விளையாட்டுத் துறையின் விளங்காத தொடர்கள், சலிப்புத் தரும் விளக்கங்கள், பெருந்தன்மையற்ற பேச்சு, இருபொருட் சொற்கள் ஆகியவை விளையாட்டுத் துறைச் செய்திகளின் நற்பண்புகளை அழிப்பனவாகும்.

6. குழுக்களின் புகழுக்கு இழுக்குத் தேடும் புனைபெயர்களில் அழைக்கக் கூடாது.

7. குறிப்பிட்ட குழுவின் தொடர்ச்சியான வெற்றிகளை எதிர்பார்க்கக் கூடாது.

8. பரிசு, நன்கொடை என்ற பெயரில் பொருட்களைப் பெறுவது கையூட்டாகவே கருதப்படும்.

9. நல்லெண்ணமில்லாத் தன்னலக் கூட்டம் விளையாட்டுத் துறையைப் பயன்படுத்திச் சுரண்டுவதிலிருந்து அத்துறையைக் காக்க வேண்டும்.

10. தலைசிறந்த இதழ்களின் விளையாட்டுத்துறைச் செய்திகளைப் படித்தறிந்து கொள்ள வேண்டும்.

விளையாட்டை ஒரு நாடகமாகக் கருதும்போது விளையாட்டு விமர்சனம் நாடக விமர்சனத்தைப் போன்று இருக்க வேண்டும். இரண்டும் ஆடுகளததில் நடைபெறுகின்றன. பார்வையாளர்களுக்கே நடத்திக் காட்டப்படுபவை. இருவரும் ஒத்திகை முடிந்தே ஆடுகளத்திற்கு வருகின்றனர். நாடக விமர்சனத்தில் குறை நிறைகள் சுட்டிக்காட்டப்படுவதைப் போன்று விளையாட்டிலும் சுட்டிக்காட்டப்பட வேண்டும்.

# நூல் மதிப்புரை

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்

— திருக்குறள்

இலக்கியப் படைப்பாளர்களுக்கும் வாசகர்களுக்கும் இடையில் நின்று இலக்கியத்தின் தரத்தை எடுத்துத் தருவது இலக்கியத் திறனாய்வாகும். இறையனார் பாட லுக்கு நக்கீரன் பிழைகண்ட காலத்திலேயே திறனாய்வுச் சிந்தனை தோன்றிவிட்டதெனக் கருதலாம். ஆனால் தமிழில் அதன் வளர்ச்சி விரைவு காணமுடியாமல் தேங்கிக் கிடந்தது. கிரேக்கத்தில் ஆய்வு நோக்கைச் சாக்ரடீஸ் தொடங்கி வைத்தபின்பு இலக்கியங்களை ஆய்ந்து கற்கும் விதிமுறைகள் தோன்றின. அவற்றினடிப்படையில் இரண்டு நூல்களைக் கற்று முடித்த மனிதன், ஒன்றினைவிட மற்றொன்று உயர்ந்திருக்கிறது அல்லது தாழ்ந்திருக்கிறது என்பதை மதிப்பிட்டுத்தெரிந்து கொண்டான். சாக்ரடீஸ் வழிவந்த பிளேட்டோ, அவருடைய மாணவர் அரிஸ்டாட்டில் ஆகிய இருவரும் ஆராய்ச்சித் துறையை வளர்த்துப் போற்றியுள்ளனர். திறனாய்வு மேலை நாடுகளில் மிகச் சிறந்த துறையாக வளர்ந்த பின்பு இதழ்களில் புகழ்பெற்ற திறனாய்வாளர்கள் தொடர்பு கொண்டனர். நூல்கள் பற்றிய திறனாய்வு எளிமை பெற்று மதிப்புரை என்ற பெயரில் நாள், வார, மாத இதழ்களில் இடம்பெறத் தொடங்கின. புத்தகம், திரைப்படம், நாடகம், நாட்டியம், இசை, ஓவியம், சிற்பம் ஆகியன பற்றிய மதிப்புரைகளைச் செய்தித்தாள்கள் வெளியிடுகின்றன இசைத் துறையில் விமர்சக வித்தகராகச் சுப்புடு தமிழ் இதழ்களில் தனித்த இடம் பெற்றுள்ளார். ஒரு நூலைப் படித்து முடித்த திறனாய்வாளர் தம்முடைய கூர்த்த அறிவினாலும் நிறை அல்லது குறைகண்ட உணர்வினாலும் அந்நூலை மதிப்பிடுவது நூல் மதிப்புரையாகும். 'இலக்கியத்தின் மதிப்புப் பற்றிய அறிவும், உணர்த்தும் திறன் பற்றிய அறிவும் இலக்கிய ஆராய்ச்சிக்குத் தூண்களாக உள்ளவை' என்பது ரிச்சர்ட்ஸ் என்பாரின் கருத்தாகும். இதுவே மதிப்புரைகளுக்கும் பொருந்துவதாகும்.

## மதிப்புரைகளின் பயன்கள்

ஒவ்வொரு துறையிலும் உள்ள திறன்களை ஆழமாகத் தெரிந்து கொள்ளப் பலரும் விரும்புகின்றனர். புதிய நூல்கள் வெளிவந்திருப்பதைத்தெரிந்துகொள்ள மட்டும்விரும் புவதில்லை. எது பற்றிய எப்படிப்பட்ட நூல் என்பதையும் அறிந்து கொள்ள ஆர்வம் கொள்ளுகின்றனர். மதிப்புரைகள் நூல்களின் உட்பொருளைத் தெளிவாக்கி, அவற்றை நூலாசிரியர் எவ்வாறு கையாளுகிறார் என்பதையும் தெளிவாக்குகின்றன. நூலின் அடிப் படைச் செய்திகளை உணர்த்துகின்ற மதிப்புரைகள் அதனை முழுவதும் படிக்கவேண்டுமென்ற உணர்வினையும் உண்டாக்கு கின்றன. இவ்வகையில் புத்தகப் பற்றாளர்களின் உண்மையான வழிகாட்டியாய் மதிப்புரைகள் அமைந்திருக்கின்றன. இலக்கியம் ஒன்றைப் பலமுறை கற்றாலும் கருத்துக்கள் முழுமைப் படாமல் பனிப்படலமாக நம் அறிவில் படர்ந்திருப்பதுண்டு. தலைசிறந்த திறனாய்வாளரின் கருத்துக்களைப் படிக்கும் போது அவை ஒன்று கூடிஉருவமடைகின்றன. புத்தக உலகின் புதிய வரவுகளை வாசகர்களுக்கு அறிமுகப் படுத்தும் மதிப்புரைகள் உலகின் உயர் வான படைப்புகளை அறிமுகப்படுத்துகின்றன. அவற்றில் நம்மை ஆர்வத்தோடு ஈடுபாடு கொள்ளவும் வலியுறுத்துகின்றன. இவ் விலக்கியங்கள் வாழ்க்கையைப் புரிந்து கொள்ள உதவுகின்றன; திறனாய்வு அவ்விலக்கியங்களைப் புரிந்து கொள்ள உதவு கின்றன.•

## மதிப்புரைகளின் அமைப்பு

நூல் மதிப்புரையை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1. நூல் விளக்கம் :

சிறியதொரு பத்தியில் நூல் பெயர், ஆசிரியர் பெயர், பதிப் பகம், விலை முதலிய விவரங்கள் இடம் பெறுகின்றன. சில மதிப் புரைகளில் இப்பகுதி இறுதிப்பத்தியாகவும் இடம் பெறுவதுண்டு.

2. பொருள் விளக்கம் :

நூல் எப்பொருள் பற்றியது என்பதை விளக்கி, ஆசிரியரின் நோக்கத்தை வெளிப்படுத்தும் குறிப்புரைகளையும் இப்பகுதி

---

• Literature helps to understand life; but criticism helps to understand the literature.

— *James Reeves*

கொண்டிருக்கிறது. நூற்பொருளைச் சுருக்கமாகவும் தருவதுண்டு. சிறந்த பகுதிகள் எடுத்துக்காட்டப்படுகின்றன.

### 3. மதிப்புரை :

நூல் பற்றிய குறைகளை நாகரிகமாக வெளிப்படுத்தி, எம்முறையில் கருத்துக்களைத் தெரிவித்திருக்கலாமென்று இப்பகுதி கருத்துரைகளை வழங்குகிறது. மதிப்பீடு செய்கின்றவர்களின் சொந்தக் கருத்துக்களுக்கு இப்பகுதியே இடமளிக்கின்றது.

தினமணி நாளிதழில் வெளிவருகின்ற மதிட்புரைகள் மேற்குறிப்பிட்ட அமைப்பு முறையிலேயே காணப்படுகின்றன. சமயம், இலக்கியம், கவிதை, அறிவியல், நாட்டுவைத்தியம் முதலிய துறைகளைச் சார்ந்த நூல்கள் தினமணியில் மதிப்புரை பெறுகின்றன. பிற நாளிதழ்கள் 'வரப் பெற்றோம்' என்ற தலைப்பில் நூல், பதிப்பகப் பெயர்களை மட்டும் தொட்டுக் காட்டுகின்றன. குமுதம் வார இதழில் வெளிவரும் 'பு(து)த்தகம்' என்ற பகுதியும், தாய் வார இதழின் 'துறைமுகம்' என்ற பகுதியும், புதிய நூல்களின் அறிமுகப் பகுதியாக அமைந்துள்ளன. ஆங்கில நாளிதழ்களான இந்து, எக்ஸ்பிரஸ் ஆகியவற்றிலும் புத்தக மதிப்புரைகள் வெளிவருகின்றன. மாத இதழ்களில் தீபம், ஆராய்ச்சி, செந்தமிழ்ச் செல்வி முதலிய இதழ்களில் நூல் மதிப்புரைகள் வெளிவருகின்றன. தமிழகத்தின் பழம்பெரும் இலக்கிய இதழ் 'செந்தமிழ்' வெளியிட்ட மதிப்புரைகளைத் தொகுத்தால் அதுவே தனியானதொரு இலக்கியமாக அமைந்துவிடும்.

### மதிப்புரையாளர்களின் பண்புகள் :

உண்மையை வெளிப்படுத்துவதே ஆய்வின் உயிர் நாடியாகும். மதிப்புரையில் நூலின் குணம், குற்றம், நன்மை, தீமை முதலியவற்றைத் தயங்காது தெரிவிக்க வேண்டும். எல்லாச் சார்புகளுக்கும் அப்பாற்பட்டது மதிப்புரை. நட்புக் காரணமாகப் புகழ்வதும், பகை காரணமாகப் பழிப்பதுமாக மதிப்புரை அமைந்திருந்தால் வாசகர்களுக்கு எரிச்சலை உண்டாக்கிவிடும். நடுவுநிலையை வாசகர்கள் உணர்ந்தால்தான் நம்பிக்கையோடு மதிப்புரையைப் படிப்பார்கள்.

> "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு".

என்ற குறள், மதிப்புரை எழுதுகின்றவர்களின் மனத்தளவில் நின்று கொண்டிருக்க வேண்டும். 'இலக்கிய நயங்களைக் கண்டு அவற்றைப் பாராட்டுவதே உண்மையான திறனாய்வாளனின் உயர்ந்த செயலாகும்' — என்ற மாத்யூ ஆர்னால்டு என்ற அறிஞர் குறிப்பிட்டுள்ளபடி மதிப்புரைகள் மதிப்புடையவை களாய் அமைய வேண்டும். சில மதிப்புரைகளைப் படித்தால் மூலநூலினைப் படிக்காமல் எழுதியிருப்பது தெரியவரும். 'இதனைவிடச் சிறந்த நூல் தமிழில் தோன்றியிருக்க முடியாது; அழகான அச்சு, நல்ல பைண்டு, அனைவர் கையிலும் இருக்க வேண்டிய அரிய பொக்கிஷம்' இப்படியெல்லாம் வெற்றுக் கதைகளை விட்டிருப்பார்கள். இவ்வகையில் எழுதுவது மதிப் புரைகளை விளம்பர நோக்கில் பயன்படுத்துவதாகிவிடும். மதிப் புரை பெறும் நூல் சார்ந்த துறையில் பட்டறிவு உடையோர் கள் மட்டுமே அந்நூலின் மதிப்புரையை எழுத முன்வரவேண்டும்.

மதிப்புரைகள் சரியான காலத்தில் வெளிவரவேண்டும். பதிப்பகங்கள் மதிப்புரைக்காக நூற்படியை முன்னதாகவே அனுப்பி விடுவதுண்டு. நூல்வெளியிடுங் காலத்தை அறியாமல் மதிப்புரையை வெளியிடுவது சிரிப்புக்கு இடமாகிவிடும். மதிப் புரையைப் படிக்கும் வாசகர்களும் ஓரளவிற்குத் திறனாய்வுத் திறன் பெற்றவர்களே. தாங்கள் படித்து முடித்திருக்கும் நூல் பற்றி வெளியாகியிருக்கும் மதிப்புரைகள் பொருத்துகின்றனவா என்பதைக் கண்டு கொள்ள விரும்புவார்கள். எனவே, நூற்களை மதிப்பிடுகிறவர் பிறர் மனநிலையை அறியும் கூரிய அறிவுடை யராய்த் திகழவேண்டும். மதிப்புரையாளர் வெளிப்படையான சுயசிந்தனையாளர்; நல்ல சுவைஞர்; நிறைவான தீர்ப்பாளர்; பொது அறிவுடையவர்; ஒத்துணர்வுத்திறனுடையார் என் றெல்லாம் வாசகர்கள் உணரும்படிச் செய்ய வேண்டும்.

## மதிப்புரைகளின் இயல்புகள்

1. நூல் முழுமையும் படித்துப் புரிந்து கொண்டு எழுதப்பட்ட தாக மதிப்புரை அமைந்திருக்க வேண்டும்.

2. நூலின் நோக்கத்தைத் தெளிவுபடுத்தவேண்டும்.

3. மிகையான பாராட்டு, மிகையான தாக்குதல் இவை யிரண்டும் வெளிப்பட்டிருக்கக் கூடாது.

4. பிறமொழிகளுடன் ஒப்பிட்டாராய்வது நல்லது.

5. மதிப்புரையாளரின் சொந்தக் கருத்துக்களில் சான்றுகள் இடம் பெற்றிருக்க வேண்டும்.

6. விருப்பு வெறுப்புக்களைக் கொண்டிருப்பது முறையான மதிப்புரைகள் ஆகா.

7. மதிப்புரைகள் எளிய நடையில், எல்லோரும் புரிந்து கொள்ளும் வண்ணம் விளங்க வேண்டும்.

மதிப்புரைப் பகுதியை இக்கால இதழ்கள் அதிகமாக மதிப்பதில்லை. சில இதழ்கள் நினைத்தபோது மதிப்புரைகளை எழுதுகின்றன. தமிழ் நாட்டில் வெளியாகும் ஆங்கில நாளிதழ்கள் திரைப் படத்தைத் திறனாய்வு செய்கிற அளவுக்குக்கூடத் தமிழ் நூல்களைப் பற்றி மதிப்புரை வெளியிடுவதில்லை. சில ஆண்டுகட்கு முன்பு தென்மொழிகள் புத்தகக் கழகம் 'புத்தக நண்பன்' என்ற காலாண்டு இதழை வெளியிட்டுக் கொண்டிருந்தது. புதிய புத்தகங்களைப் பற்றிய செய்திகள் அதில் இடம் பெற்றன. இதற்குப் பின்பு 'நூலகம்' என்ற இதழ் இதே அமைப்பில் வெளிவரத் தொடங்கியது. ஆங்கில மொழியில் 'Books of the month and Books to Come' என்ற பெயரில் மாத வெளியீடு ஒன்று வெளிவருகிறது. இதில் குறிப்பிட்ட மாதத்தில் வெளியாகும் ஆங்கிலப் புத்தகங்களைப் பற்றிய செய்திகளைத் தருவதோடு சில புத்தகங்களுக்கு மதிப்புரைகளையும் எழுதுகிறார்கள் வளர்ந்து கொண்டிருக்கும் தமிழ் நூல்களுக்கு இத்தகையதொரு வாய்ப்புக் கிட்டுமா?

# விளம்பரங்கள் [Advertisements]

விளம்பரம் நுகர்ச்சியாற்றலை மிகுதிப்படுத்தி வாழ்க்கைத் தரத்தை மேன்மைப் படுத்துவதற்கும் வழிகோலுகிறது.

— வின்ஸ்டன் சர்ச்சில்

விளம்பரங்கள் விரைந்து பரவிக் கொண்டிருக்கும் உலகத்தில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். எல்லாத்துறைகளிலும் விளம்பரம் என்பதே பேச்சு; இதழ்களுக்கோ விளம்பரம் என்பதே மூச்சு. விற்பனையும் விளம்பரங்களுமே இதழ்களின் பொருளாதாரத்தை நிலைப்படுத்துகின்றன. விற்பனை கூடியுள்ள இன்றைய இந்திய இதழ்கள் அனைத்தும், விளம்பரங்களைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டுள்ளன. உலக மொழிகள் பலவற்றில் வெளியாகி, விற்பனையில் இருபத்தைந்து கோடியை எட்டிப் பிடித்திருக்கும் ரீடர்ஸ்-டைஜஸ்ட் மாத இதழில் விளம்பரத்திற்கு இடம் பிடிப்பது அரிதான செயலாம். 1963ஆம் ஆண்டில் மூன்றுமாதங்கள் அமெரிக்க இதழ்கள் வேலை நிறுத்தம் செய்திருந்தன. அப்போது செய்தித் தடையினைவிட விளம்பரத்தடையே அமெரிக்க மக்களின் வாழ்க்கையைப் பெரிதும் பாதித்தது. வணிக நிலையங்களும், பொழுது போக்கு அரங்கங்களும் பெருத்த அளவில் வருவாய் இழந்தன. இதழ்களில் வெளிவருகின்ற விளம்பரங்களின் வலிமைக்கு இந்த நிகழ்ச்சியே சிறந்த எடுத்துக்காட்டாகும். செல்வப் பெருக்குடைய நாடுகளில் பொது மக்களைத் தம்பால் ஈர்த்து நேரடிப் பயன் தருவதில் விளம்பரங்கள் துணை செய்கின்றன.* எந்தப் பொருள் எங்கே கிடைக்கும் என்ற செய்தியறிவிப்பாக விளம்பரங்கள் அமைந்திருப்பதால் நுகர்வோர்களின் வாங்கும் சக்தியை வளர்த்துப் பொருள்களின் தேவைகளை உணர்த்தி, வாழ்க்கைத் தரத்தை நிர்ணயித்துக் கொள்ளவும் வழிவகுக்கின்றன.

நம் நாட்டில் கல்கத்தா நகர் வணிகம், தொழில் இவற்றின் மையமாக இருந்ததால் இங்குத் தோன்றிய தொடக்க கால இதழ்கள் குறைந்த கட்டணங்களைப் பெற்றுக் கொண்டு தனியார்

---

* The word advertising is derived from the Latin word 'Advertero'. Ad meaning 'towards'; verto meaning 'it turn'. Advertising means 'to turn people's attention to a specific thing'.

விளம்பரங்களை வெளியிட்டுக் கொண்டிருந்தன. அரசு விளம் பரங்களென்றால் இலவசமாகத்தாம் வெளியிட வேண்டும். 1785 இல் பெங்கால் ஜெர்னலில் தாமஸ்ஜோன்ஸ் கட்டணமின்றித்தான் அரசு விளம்பரங்களை வெளியிட்டார். இதே ஆண்டில் வெளி யான மெட்ராஸ் கூரியர் அரசு விளம்பரங்களை வெளியிட்டு அஞ்சல் சலுகை பெற்றது. ஆனால், டைம்ஸ் ஆப் இந்தியாவில் இராபர்ட் நைட் அரசு விளம்பரங்களை வெளியிடக் கட்டணங் களை வேண்டிப்பெற்றார். அது முதற்கொண்டு கல்கத்தா, பம் பாய், சென்னை இதழ்கள் விளம்பரக்களுக்குக் கட்டணங்களை வகுத்துக்கொண்டன. ஆங்கில இதழ்களே விளம்பரங்களைப் பெறுவதில் ஏகபோகச்சக்கரவர்த்திகளாய் ஆண்டு அனுபவித்துக் கொண்டிருந்தன. ஆங்கிலச் சமூகத்தினருக்கு வேண்டிய பொருட் களான மதுபானங்கள், மருந்து வகைகள், துப்பாக்கிகள், மரச் சாமான்கள், கண்ணாடிப் பொருட்கள், கூந்தல் தைலங்கள் மற்றும் உதட்டுச் சாயங்கள் போன்ற ஆடம்பர அழகு சாதனங் களைப் பற்றிய விளம்பரங்களுடன் பேவர் லூபாக் கைக்கெடி காரம், பியர்ஸ் சோப்பு விளம்பரங்களும் அன்றைய ஆங்கில இதழ்களில் இடம் பெற்றிருந்தன. பர்மாஷெல், ஸ்டாண்டர்டு, கால்டெக்ஸ் ஆகிய எரிஎண்ணெய்க் குழுமங்கள் விளம்பரங்களில் பணத்தைத் 'தண்ணி' யாய்ச் செலவு செய்திருக்கின்றன. இந்திய மொழிகளில் குஜராத்தி மொழி விளம்பரமே முதலில் வெளி வந்தது சென்னையில் வெளியான மெட்ராஸ் கெஜட் தான் முதன் முதலில் தமிழ் விளம்பரங்களை வெளியிட்டதாகக் கருதப் படுகிறது. 1917-இல் சென்னையிலிருந்து வெளியான விவேகா மிர்தம் என்ற மாத இதழ் முப்பத்திரண்டு பக்கங்களில் மருந்து, புத்தகங்கள் போன்ற விளம்பரங்களை மட்டுமே வெளியிட்டுக் கொண்டிருந்தது. இவ்விதழின் எட்டுப் பக்கங்களில்தாம் கட்டுரைகள் வெளிவந்தன. மருந்து விளம்பரங்களை மட்டுமே வெளியிடும் செல்வக் களஞ்சியம் என்ற திங்கள் இதழ் ஒன்றும் 1926-ஆம் ஆண்டில் மதுரையிலிருந்து வெளியாகியிருக்கிறது.

**விளம்பரத் தொடர்புகள்**

விளம்பரத்தினைப் பரப்பும் தொடர்புடைய சாதனங் களில் பலவகை உண்டு. செய்தித்தாள்கள் (News papers), பருவ இதழ்கள் (Magazines), வானொலி (Radio), தொலைக் காட்சி (Television), வெளி விளம்பரங்கள் (Boards & Banners), வாகன விளம்பரங்கள் (Transits), விளம்பர நிறுவனங்கள் (Publicities)

முதலியனவற்றின் விளம்பரங்களைப் பரப்புகின்ற முறையும் பயனும் தொழில் முறையில் ஒன்றிற்கொன்று மாறுபட்டுள்ளன. இவற்றில் வானொலி விளம்பரங்களைக் கேட்டுக் கொள்ளவே முடிகிறது. மற்றவைகளில் பார்வைப் பயனும் கிட்டுகின்றது. சுவரொட்டி, தட்டி, துணிக்கொடிகள் மூலமாக வெளிவிளம் பரங்கள் செய்யப்படுகின்றன. சாதாரண மக்களின் கண்களில் பட்டுக் கருத்தைத் தெரிவிக்கும் எளிய முறை இதுவாகும். கலை நிகழ்ச்சி, விளையாட்டுக்களைப் பற்றிய விளம்பரங்கள் வாகனங் களில் ஒலிபெருக்கி அமைத்துப் பரப்பும் இறுதிநேர விளம்பர மாக அமைந்துள்ளன. விளம்பர நிறுவனங்கள் விளம்பரங்களைத் தொகுத்துத் தருகின்றவை. இவற்றில் செய்தித்தாள், பருவ இதழ்கள் தருகின்ற விளம்பரங்களே அதிகமாகச் சிந்தனையில் தங்குகின்ற பயனுடைய விளம்பரங்களாகும்.

### விளம்பரங்களின் வகை

பொது நிலையில் விளம்பரங்களை இரண்டு வகைகளாக வும், சிறப்புநிலையில் ஆறு வகைகளாகவும் பிரித்துக் காணலாம்.

### பொதுவகைப் பிரிவு

1) தயாரிப்புப் பொருளைப் பற்றிய விளம்பரம்.
   (Product Advertisement)

2) தயாரிப்பு நிறுவனம் பற்றிய விளம்பரம்.
   (Industrial Advertisement).

முதல்வகையே பெரும்பாலும் பின்பற்றப்படுகின்றன. நுகர் வோர்களை உடனடியாக வாங்கத் தூண்டுவதுடன் அவர்களு டன் நேரடித் தொடர்பை உண்டாக்குவதும் இவ்வகைகள்தாம். இங்கே தயாரிப்புப் பொருளைப் பற்றிய தன்னிலை விளக்கம் தெளிவாக அமைந்திருக்க வேண்டும். இரண்டாவது வகையில் தயாரிப்புப் பொருட்களைவிட அவற்றைத் தயாரிக்கும் நிறு வனங்களே சிறப்பிடம் பெறுகின்றன. பேருந்துகளின் உதிரிப் பாகங்களை வாங்கும்போது டி. வி. எஸ். என்ற நிறுவன முத்தி ரைக்கே அதிக மதிப்புண்டு. மருந்துப்பொருள் விளம்பரங் களிலும் தயாரிப்பு நிறுவனங்களே தனிச்சிறப்புப் பெறுகின்றன.

### சிறப்பு வகைப் பிரிவு

1. வணிக விளம்பரங்கள் (Commercial Advertisement)

2. பொது விளம்பரங்கள் (General or display Advertisement).

3. சில்லரை விளம்பரங்கள் (Retail Advertisement).

4. பகுக்கப்பட்ட விளம்பரங்கள் (Classified Advertisement).

5. செய்திக்கதை வடிவ விளம்பரங்கள் (News-Story Advertisement).

6. துண்டு அறிக்கைகள் (Notices).

வணிக விளம்பரங்களே இதழ்களுக்குப் பெருத்த அளவில் வருவாய் தருவன. வங்கிகள், கூட்டுறவு நிறுவனங்கள், துணி ஆலைகள், பெரிய வணிக நிறுவனங்கள், உயிர்க் காப்பீட்டுக் கழகம், வானூர்திக் கழகங்கள் இவற்றின் விளம்பரங்களே இவ்வகையில் அமைவன. இவ்வகை விளம்பரங்களை இதழ்கள் நேரிடையாகவே பெற்றுக்கொள்கின்றன.

பொது விளம்பரங்களைப் பெரும்பாலும் விளம்பர நிறுவனங்களே பெற்றுத் தருகின்றன. வணிகம், திரைப்படம், அரசு விளம்பரங்கள் போன்றவை இப்பகுதியில் இடம் பெறுகின்றன. இவற்றில் முழுப் பக்க விளம்பரங்களும் இடம் பெறுவதுண்டு. தமிழக நாளிதழ்களில் தினத்தந்தியே அதிகமான முழுப் பக்க விளம்பரங்களைப் பெறுகிறது. சிறிய வணிக நிலையத்தார், தயாரிப்பு நிலையத்தார், சில்லரை வியாபாரிகள் ஆகியோர் சில்லரை விளம்பர வகையைப் பயன் படுத்திக் கொள்கின்றனர். இவை பெரும்பாலும் உள்ளூர் விளம்பரங்களாகவே அமைவதுண்டு. இதழ்களில் இடம் பெறும் மொத்த விளம்பரங்களில் மூன்றில் இருமடங்கு சில்லரை விளம்பரங்களேயாகும். இவற்றில் பொருளை வாங்கும் இடம் போன்ற விளக்கங்களும் இடம் பெற்றிருக்கும். பொது விளம்பரங்களுக்குப் பக்கங்களைக் கணக்கிட்டும், சில்லரை விளம்பரங்களுக்குப் பத்திகளை அளந்து கணக்கிட்டும் கட்டண விகிதங்களை அமைத்திருக்கிறார்கள்.

பகுக்கப்பட்ட விளம்பரங்கள் துறைகள் வாரியாகப் பகுக்கப்பட்டுச் சிறிய அளவில் வெளிவருவனவாகும். அளவிலும் அச்சிலும் சிறியதான இவற்றை 'வரி விளம்பரங்கள்' என்று கூறலாம், கல்வி, தேவைகள், ஒப்பந்தப் புள்ளி, சிறுதொழில்,

சான்றிதழ், தேர்வுகள், திருமணம், சொத்து விற்பனை, காண வில்லை பகுதி, வேலை வாய்ப்பு, நிதியுதவி, மறைவு ஆகியவை தொடர்பான சிறிய வரி விளம்பரங்கள் இங்கே இடம் பெறு கின்றன (தினத்தந்தியில் இரண்டாம் பக்கம்) இவை சுருக்க மாகவும், தெளிவாகவும் இருக்க வேண்டும்; விலைகள் குறிப் பிடலாம். இவ்வகை விளம்பரங்களில் வரிகள் கணக்கிடப்பட்டுக் கட்டணங்கள் விதிக்கப் பெறுகின்றன.

செய்திக்கதை வடிவ விளம்பரங்கள் செய்திகளைப் போல விளம்பரத்தைத் தருகின்ற முறையாகும். செய்தி போலவே அமைந்து முடிகிறபோது விளம்பரமாகக் காணப்படும். செய்தி களுக்குரிய இடத்திலும் இவை இடம் பெறுகின்றன. முடிவில் தான் 'Adv' என்று சிறிய எழுத்துக்களில் குறிப்பிடப்பட் டிருக்கும். இது நுகர்வோர்களைக் கவரும் உத்திகளில் ஒன் றாகும்.

துண்டு அறிக்கை விளம்பரங்கள் இதழ்களின் உள்ளே தனியாக வைத்துப் பரப்புகின்ற விளம்பரங்களாகும்.

### விளம்பரங்களின் பயன்

புதிய பொருட்களின் உற்பத்தியில் அவை நுகர்வோரை அடைவதில் விளம்பரங்கள் இன்றியமையாத இடைச்சாதனங்க ளாய் அமைந்துள்ளன. உற்பத்திக்குப் பின்பு பரந்த விற்பனைக்கு (Mass Marketing) விளம்பரம் தேவையான ஒன்றாகக் கருதப்படு கிறது. பொருட்களின் மதிப்பு, பயன்பாடுகளைத் தெரிவிக்கின்ற போது தரமானவற்றைத் தேர்ந்தெடுக்க முடிகிறது. சில நேரங் களில் குறைந்த விலையில் நிறைந்த பொருட்களைக்கூட விளம் பரங்கள் பெற்றுத் தருவதுண்டு. உற்பத்தியாளர், விற்பனை யாளர், நுகர்வோர் இவர்களை இணைத்துச் சிந்தித்துச் செய லாற்ற வைக்கும் விளம்பரங்கள், அச்சுத்தாள் வணிக முறை (Salesmanship in Print) என்றழைக்கப்பட்டு வணிக முன்னேற் றத்தைக் காட்டும் அளவு கோலாகவும் அமைந்திருக்கின்றன. வணிகக் கண்ணோட்டத்தைக் கடந்து, தொழில் அமைப்பு முறைகள், வேலை வாய்ப்புப் பற்றிய செய்திகள், புதிய கண்டு பிடிப்புகள், மாற்றங்கள் இவற்றை அறியவும் விளம்பரங்கள் கைகொடுத்து உதவுகின்றன. புதுவகைத் தொழிற் புரட்சியாக விளம்பரங்களைக் கருதும் மேலைநாடுகளில் அதன் பயனறிந்தே

கோடிக்கணக்கில் செலவிடுகின்றனர். அரசின் திட்டங்களை வெளிப்படுத்தும்போது அரசினரின் கருத்துகளைப் பரப்பும் கருவியாகி, விளம்பரம் தனித்துறையாகச் செயல்படுகின்றது. உற்பத்திச் செலவின் முழுமையையும் ஒரு இதழ் விற்பனையில் சரிக்கட்டிவிட முடிவதில்லை. அப்போது அவை விளம்பரங்களையும் எதிர்பார்க்கின்றன. அடிக்கடி இதழ்களின் விலையை உயர்த்த வேண்டுமென்ற மனப்பான்மையைக்கூட விளம்பரவழி வருவாய் தடுத்துவிட முடியும்.

## விளம்பரத்தின் குறிக்கோள்

உற்பத்தியாளர் கண்ணோட்டத்திலும் நுகவோர் கண்ணோட்டத்திலும் வேறுபட்ட குறிக்கோள்களை விளம்பரங்கள் கொண்டிருக்கின்றன. உற்பத்தியாளரின் குறிக்கோள் உற்பத்திப் பொருளை நோக்கி நுகர்வோர்களை ஈர்த்து அதன்மீது நம்பிக்கையை உண்டாக்குவதாக இருக்க வேண்டும். அப்போது விற்பனையை மட்டும் குறிக்கோளாகக் கொள்ளாமல் விலைக்குறைப்பையும் கொண்டிருக்க வேண்டும்; தம்பொருளை அதுவரை வாங்காத நுகர்வோர்களைத் தம்பக்கம் இழுக்கவும் வேண்டும். நுகர்வோரின் குறிக்கோள் விளம்பரத்தின் வழியாகத் தரமான பொருட்களை மலிவான விலையில் பெறுவதாகும்.

விளம்பரங்கள் செய்திகள் ஆகமாட்டா. இதழ்கள் விளம்பரங்களை மட்டுமே நம்பியிருக்காமல், செய்தித்தரத்தோடு விற்பனையையும் அதிகரிக்கச் செய்ய வேண்டும். தம்முடைய இதழ்களில் ஆங்கில விளம்பரங்களை வெளியிடுவதில்லை என்ற குறிக்கோளில் காந்தியார், அன்னி பெசண்ட் அம்மையார், இராசாசி ஆகியோர் முழுவெற்றி பெற்றிருந்தனர். ஆனால் இன்றையச் சூழலில் இதழ்கள் விளம்பரங்களை முழுமையாக விட்டுவிட முடியாது. என்றாலும் சில விளம்பரங்களைத் தவிர்க்கும் குறிக்கோளுடைய இதழகளும் உண்டு. விளம்பரங்கள் நிறைந்துள்ள ரீடர்ஸ் டைஜஸ்ட் சிகரெட்டு விளம்பரங்களை வெளியிடுவதில்லை நம்முடைய இதழ்களில் ஆனந்தவிகடனும் இக்கொள்கையில் நிற்பது வரவேற்கத் தக்கதாகும். அறுபது விழுக்காடு விளம்பரமயமாகவே காட்சியளிக்கும் தினத்தந்தி போன்ற நாளிதழ்கள் இதே நிலையை நீடித்தால் செய்தித்தாள் என்ற பெயர் மாறி, விலைப்பட்டியல் என்ற பெயர்தான் பெற வேண்டியதிருக்கும். விளம்பரத்தில் போட்டிகள் உண்டு. ஆனால் விளை

யாட்டுப் போட்டிகளைப் போன்று அவை வெற்றியும் தோல்வி யும் கண்டுகொண்டிருக்கக் கூடாது. விளம்பர விளையாட்டில் விற்பவனும் வாங்குபவனும் வெற்றி மட்டுமே பெறவேண்டும். விளம்பரங்கள் என்பது ஏமாற்றுத் தொழிலாக அமையக்கூடாது. இத்தகைய ஏமாற்று விளம்பரங்கள் 'லூதியானா விளம்பரங் கள்' என்று பெயர் வாங்கியுள்ளன*. விளம்பரத்தில் நேர்மை யைக் கடைப்பிடிக்க வேண்டும்.

**விளம்பர முறைகள்**

விளம்பரங்களில் பொருளைப் பற்றிய தொடர்பு (Communication), பொருளைப் பற்றிய தகவல் (Information), பொருளைப் பற்றிய தூண்டுதல் (Persuation) ஆகிய மூன்று முறைகளும் அமைந்திருக்க வேண்டும். தொடர்பு வழியாக உற்பத்தியாளர் களுக்குத் தொழில் நீட்சியும், வணிக ஈட்டமும் கிடைக்க வாய்ப் புண்டு. இதுவே நுகர்வோருடன் வாணிகத் தொடர்பை வளர்க் கும் வழியாகும். தகவல் தரும்போது பொருளைப் பற்றிய மன நிறைவைப் பெறுவதோடு பொருளின் தரம், விலை, பயன்பாடு இவற்றை அறியும் வாய்ப்பும் உண்டு. விளம்பரத்தை நுகர்வோர் கவனத்திற்குக் கொண்டுவர மூன்று முறைகளைப் பின்பற்றலாம்.

1. சுவையான முறைகள் (Interest approach)
   பொருட்களின் பயன்களைக் கவர்ச்சியான முறையில் கொடுத்துக் கவனத்தைக் கவருகின்ற முறை இது வாகும்.
2. நுட்ப முறைகள் (Mechanical Method)
   விளம்பரங்களைப் பெரிய அளவிலும், பின் அட்டை கள் போன்ற பார்வையான இடங்களிலும் அமைப் பது.
3. வடிவமைப்பு முறைகள் (Shaping Method)
   முறையற்ற வடிவங்களுக்குப் பார்வைப்பயன் அதிகம் உண்டு.

---

* லூதியானாவிலிருந்து வெளிவரும் விளப்பரங்கள் பதினைநதே ரூபாய்க்கு வானொலிப் பெட்டி தருவதாகவும்; மற்றும் மாய மந்திரச் சால்வைகள், மோதிரங்கள் போன்றவற்றைக் குறைந்த விலையில் அனுப்புவதாகவும் வெளியிடப்படுகின்றன. இவற்றைச் சிக்க வைக்கும் விளம்பரங்கள் (Bait Advertisement) என்று கூறுவர்.

சதுர அமைப்பினைவிட வட்ட வடிவமான விளம்பரங்கள் கவர்ச்சியானவை. வண்ண விளம்பரங்களும் பளிச்சென்று கண்ணில் படுவதற்குப் பயன்படுகின்றன. இவை விளம்பரங் களின் அமைப்பு முறைகளாகும்.

விளம்பரங்களின் அறிவிப்பு முறைகளும் பலவகையாக அமைகின்றன. விளம்பரங்களில் சொற்றொடர்கள் நேரிடை யாக அமைந்து, படங்களும் குழுமத்தின் பெயர்களும் அடங்க வெளியிடும் முறை நேரிடை முறையாகும் (copy formets method). தயாரிப்புப் பொருள் அல்லது தயாரிப்பாளர் கூறுவதுபோல் அமைவன தன்னிலை விளக்க விளம்பரங்களாகும் (First Person Method). பொருள்களைப் பயன்படுத்துபவனும் பயன்படுத்தா தவனும் பேசுவது; விற்பனையாளரும் நுகர்வோரும் பேசுவது; மருத்துவரும் நோயாளியும் பேசுவது போன்ற முறைகளில் அமைவது உரையாடல் முறை விளம்பரங்கள் (Dialogue Method). கேலிப் படங்கள் வழியாகச் சொல்லப்படும் முறை கேலிச்சித்திர விளம்பரங்கள் (Cartoon Method) ஆகும். தொடர்ச்சியான கதை யுடன் படங்களையும் அமைத்துச் செய்திகளைப் பொருளோடு இணைத்து வெளி வருகின்றவை படக்கதை விளம்பரங்கள் (Strips Method). இவற்றோடு பாடல் வழி விளம்பரங்கள் (Verse Advertisement); கேள்வி பதில் முறை விளம்பரங்கள் (Question and Answer Method); பிரமுகர்கள் வாய்மொழி விளம்பரங்கள் (Testimonial Advertisement) ஆகிய அறிவிப்பு முறைகளும் விளம்பரங்களில் இடம்பெறுகின்றன.

### விளம்பர அமைப்பு முறைகள்

விளம்பரம் 'விளம்பரக்கலை' என்றே அழைக்கப்படும். விளம்பரங்களைக் கலைக் கண்ணோட்டத்துடன், தெளிவும் சுருக்கமும் உடையதாகக் கவர்ச்சியான சொற்களில் அமைக்க வேண்டும். அகராதி ஒன்றைப் புரட்டிப் பொருள் கொள்ளும் நிலையில் விளம்பரங்கள் அமையக் கூடாது. இனக் கவர்ச்சி யுள்ள விளம்பரங்களைக் கண்ணுறுவோர்களின் கருத்து. கவர்ச்சி சியில்தான் செல்லும்; பொருள்களின் தரத்தில் செல்லத் தாமதிக்கும். நம்முடைய பண்பாட்டில் வழுவாத விளம்பரங்கள் தாம் கருத்துப் பதிவினை விரைந்து பெறும். பொதுவாக விளம்பரங்களை உருவாக்குவதில் மாதிரிப் படிவம் ஒன்றைத் தயாரித்த பின்பே இறுதிப் படிவத்தை உருவாக்க வேண்டும். அப்போது 1. தலைப்பு (Heading), 2. விளக்கம் (Body),

3 பொருளைப்பற்றிய படம் (Block), 4. குழுமத்தின் பெயர் (Logo type)என்ற நான்கு நிலைகளில் விளம்பரத்தைப் பிரித்து அமைக்க வேண்டும். இவற்றோடு பரிசுக் கூப்பன்களையும் இணைத்துக் கொள்ளலாம். நுகர்வோர் பொருளின் விலையை அறியும் ஆவலோடு இருப்பர். வாங்கும் தீர்மானத்திற்கு வரவழைப்பது விலைக்குறிப்பாகும். உள்ளூர் வரி, போக்குவரத்துச் செலவுகள் மாறுபடுவதால் விளம்பரங்களில் விலையைக் குறிப்பிடுவதில்லை. என்றாலும் இவற்றைக் கணக்கிட்டுக் கொண்டு, சில குறிப்புகளுடன் (விலை + உள்ளூர் வரிகள் தனி) பொருள்களின் விலையை விளம்பரங்களில் தெரிவிப்பது நுகர்வோருக்குப் பெரிதும் பயன்படும்.

பொதுவான நோக்கில் விளம்பரங்கள் என்பவை —

1. நம்பிக்கை அளிக்கும் முறையில் அமைந்திருக்க வேண்டும்.
2. பார்த்தவுடன் மனத்தில் பதிந்து, நினைவில் நிற்கும் வகையில் இருக்க வேண்டும்.
3. கவனத்தைத் திருப்பும் வகையில் அளவான கவர்ச்சியோடு காணப்படுதல் வேண்டும்.
4. பொருள்களின் தன்மை, பயன்பாடு, பயன்படுத்தும் முறைகள் ஆகிய செய்திகளுடன் இருக்கவேண்டும்.
5. வாங்கிக் கொண்டிருக்கும் வாடிக்கையாளர்களை மீண்டும் தூண்டுவதாக இருக்கவேண்டும்.
6. படங்கள் விளம்பரத்தோடு தொடர்புடையதாக அமைந்திருக்க வேண்டும்.

சில எடுத்துக்காட்டுகள்

கவர்ச்சி விளம்பரம் : தலை வழுக்கையானால் மயிர்தான் நட்டம்

டயர் வழுக்கையானால் உயிரே நட்டம்!

**பாப்புலர் ரீடிரேடிங் கம்பெனி**

துடுக்குத்தனமான விளம்பரம் : சடுகுடுப் போட்டியில் இந்தியாவிற்கே முதலிடம்; ஏனென்றால்

மற்ற நாடுகளில் இந்த விளை
யாட்டு இல்லை.

இந்தியன் ஏர்லைன்ஸ்

சொகுசு ரதமேறிச் சொர்க்கபுரிகளைக்
காணுவீர்!

காலத்திற்கேற்ற விளம்பரம்

நாடு செழிக்க வேணும் நல்ல மழை பெய்ய வேணும்
சாமியே சரணம் ஐயப்பா

அடுப்படி ராணி அம்மாமி அப்பளம்

சொல்லாமல் சொல்லும் விளம்பரம் :

நல்ல சரக்கிற்கு விளம்பரம் தேவையில்லை.
வாடிக்கையாளர் வழக்கமாக வாங்குவது

S. V. R. கடலைமாவு & பட்டாணி மாவு

அறிவுரை கூறும் விளம்பரம் :

இழுக்க இழுக்க இறுதிவரை இன்பம்

பனாமா சிகரெட்டுகள்

சிகரெட் குடிப்பது உடலுக்குத் தீமை

தூண்டுதல் உணர்வு விளம்பரம் :

செலவு ரூபாய் 1, வரவோ பல லட்சம்!
வாங்கிடுவீர்!

தமிழக அரசுப் பரிசுச் சீட்டுகள்

எளிமைத் தொடர் விளம்பரம் :

காலையில் எழுந்ததும் தினத்தந்தி
காபி குடிப்பதும் அதன் பிந்தி.

சிந்தனைத் தொடர் விளம்பரம் :

ஒரு மரம் ஓராயிரம் தீக்குச்சிகளை உருவாக்கும்.
ஒரு தீக்குச்சி ஓராயிரம் மரங்களை அழிக்கும்!

காடுகள் நாட்டின் செல்வமாகும்

## விளம்பரத்தின் பகுதிகள்

### 1. விளம்பரத் தலைப்புகள் (Head Lines)

விளம்பரத் தலைப்புகள் ஒரே சொற்றொடரில் அமைவதே சிறப்பாகும். நீண்ட தொடர் மொழிகளைத் தவிர்க்க வேண்டும் தலைப்பிற்குக் கீழே தொடருகின்ற விளக்கப் பகுதியைப் படிப்பதற்குத் தூண்டும் முறையில் தலைப்பு அமைந்திருக்க வேண்டும். தலைப்புகள் அதிகப் பிரசங்கித்தனமாக இருக்கக் கூடாது. சுருக்கமும் தெளிவும் தலைப்பில் இருக்க வேண்டும். பொருள் அடிப்படையில் விளம்பரத் தலைப்புகள் மூன்று வகைப்படும்.

**(அ) அடையாளங் கூறும் தலைப்பு (Identification Headline)**

இது விளம்பரதாரர்களின் பெயர், பொருளின் தயாரிப்பு முத்திரை (Trade Mark) இவற்றுடன் கூடிய விளம்பரங்களாகும். இத்தகைய விளம்பரங்கள் நிறைந்த பயனைத் தருவதில்லை.

**(ஆ) தற்பெருமை கூறும் தலைப்பு (Boast Headline)**

இவ்வகை விளம்பரங்களின் விளம்பரதாரர்கள் தங்களைப் பற்றியும், தங்கள் பொருட்களைப் பற்றியுமே அதிகமாகக் குறிப்பிடுவார்கள். நுகர்வோர்களை அதிகமாக நினைத்துப் பார்ப்பதில்லை. எனவே, இதுவும் அவ்வளவாகச் சிறப்படைவதில்லை. பழனியிலிருந்து சுற்றுப் பயணம் கிளம்பும் வைத்தியர்களின் விளம்பரங்களை இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

**(இ) பயன்களைத் தரும் தலைப்பு (Benefit Headline)**

சிறந்த இடத்தைப் பெறுவன இவ்வகை விளம்பரங்களே. நுகர்வோர்களின் நம்பிக்கை, தேவை, சிக்கல் இவற்றைத் தீர்த்து வைக்கும் பயனோடு இவை அமைகின்றன.

அமைப்பு அடிப்படையில் விளம்பரத் தலைப்புகள் நான்கு வகைகளாகும்.

**(அ) கேள்வி முறைத் தலைப்பு (Question Headline)**

(எ.கா) உங்களுக்குச் சிறப்பான மிதியடிகள் தேவையா?

கேள்விக்கான பதிலும் விளம்பரத்தில் அமைந்திருக்கும்.

(எ.கா) வாங்கிடுவீர் பாட்டா காலணிகளை.

(ஆ) கட்டளைத் தலைப்பு (Command Headline)

(எ.கா) உங்கள் பணத்தைப் பரோடா வங்கியில் சேமியுங்கள்.

(இ) ஆர்வத்தைத் தூண்டும் தலைப்பு (Curiosity Headline)

நுகர்வோர்களின் கற்பனைக்கு வேலை கொடுக்கும் முறையில் தலைப்பை முழுமைப் படுத்தாமல் இவ்வகை விளம்பரங்கள் அமைந்திருக்கின்றன.

(எ.கா) : பூச்சிகள் தொல்லையா? ... ... ...
நாளை இதே இடத்தைப் பாருங்கள்.

(ஈ) தேர்ந்தெடுக்கப்பட்ட தலைப்பு (Selective Headline)

(எ.கா) லைப்பாய் இருக்குமிடமே ஆரோக்கியம் இருக்குமிடம்.

தலைப்பில் எழுத்துக்களின் எண்ணிக்கை பெரிதில்லை. பொருளைப் பற்றிய செய்திதான் சிறப்பு. இக்கருத்தில் பருவ இதழ்களைவிடச் செய்தி இதழகளில் தலைப்புக் களைச் சுருக்கமாக அமைக்க வேண்டும். ஒரேவரித் தலைப்பே மிகச் சிறந்தது. முன்னிலைப் படுத்திக் கூறு மாறும் நிகழ்கால அமைப்பிலும் தலைப்புகளை அமைப் பதே விரைவாக மனத்தில் தட்டுப்படும்.

2. விளக்கப் பகுதி (Text or Body)

நுகர்வோர்களிடையே படிக்கும் ஆர்வத்தைத் தலைப்பும் படங்களும் உண்டாக்குகின்றன. ஆனால், விளக்கப் பகுதிதான் வாங்கும் ஆர்வத்தைக் தூண்டுகின்றன. விளக்கப் பகுதியில் பயன், வாங்க வேண்டிய காரணம் மற்றும் நுகர்வோர்களுக்குத் தேவைப்படும் பிற விளக்கங்களும் அடங்கியிருக்கும். படிப்பவர் களின் தரத்திற்கேற்ப விளக்கப்பகுதி அமைய வேண்டும். விளக்கப்பகுதி பத்திகளாகத் தொடருமானால் தொடக்கப்பத்தி சுவையாக அமைய வேண்டும். அப்படியிருந்தால்தான் அடுத்த பத்திகளைத் தொடர்ந்து படிப்பார்கள். தலைப்பில் குறிப்பிட் டுள்ள பொருளின் தன்மைகளைத் தொடர்ந்து கூறுவதாகப் பத்தி விளக்கங்கள் அமைய வேண்டும்.

### 3. விளம்பரப் படங்கள் (Illustrations)

விளம்பரத்தில் பிற பகுதிகளைப் போன்று படங்களையும் நுகர்வோர் எதிர்பார்க்கிறார்கள். சிலவற்றைச் சொற்களால் விளக்குவதை விட எளிமையாகவும் விரைவாகவும் படங்களால் விளக்கிவிட முடியும். படத்தோடு அமைகிற விளம்பரங்களில் குறிப்பிட்ட பொருளை அடையாளங் கண்டுகொள்ள முடிகிறது பேருந்துகளுக்கான உதிரிப் பாகங்கள், குழந்தை உணவுகள் போன்ற விளம்பரங்களில் விளம்பரத்தைவிடப் படங்களே பெரிதும் பயன்படுகின்றன விளம்பரத்தின் அளவையும் நோக்கத் தையும் பொறுத்துப் படங்களின் அளவும் அமைப்பும் இடம் பெறல் வேண்டும். குறிக்கோளுக்குத் தகுந்ததும் சிறப்பானது மான ஒரே படம் காண்போர் கவனத்தை உடனடியாக ஈர்க் கிறது. சிறப்பு நிலைகளையும் பயன்படுத்தும் விளக்கங்களையும் தெரிவிக்கும்போது சிறிய படங்களைச் சேர்த்துக் கொள்ளலாம். நல்ல விளம்பரங்களில் படமே பெரிதாகக் காணப்படும்.

### விளம்பரப் படங்களைத் தேர்ந்தெடுக்கும் முறை

விளம்பரப் பொருளுக் கேற்றவாறு பின்னணிகளைக் கொண்ட படங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் அழகிய கார் விளம்பரத்தின் பின்னணியாக அழகானதொரு மாளிகை அமைந் திருக்கலாம் ஆண்களும் பெண்களும் பொதுவாக விரும்பும் இயற்கைக் காட்சிகள் வீட்டு மிருகங்களைப் பற்றிய பின்னணிக் காட்சிகள், இவையும் சிறப்பாக அமையும். அலமாரி விளம்பரம் ஒன்றில் அழகான பெண் ஒருத்தி நீச்சல் குளத்தில் குளிக்கும் காட்சி இடம்பெறக் கூடாது. காலத்திற்கேற்ற படங்களைக் கணிப்பதிலும் கருத்தைச் செலுத்த வேண்டும். தீபாவளி, பொங்கல், கிருஸ்துமஸ் விழாக் காலங்களுக் கேற்றவாறு பாட்டா காலணிக் குழுமம் விளம்பரப் படங்களைத் தேர்ந் தெடுத்து வெளியிடுகின்றது. நவீன ஓவிய முறைகளைப் படங்க ளாக்கிக் குழப்பக் கூடாது. அதே நேரத்தில் விளம்பரப் படங்கள் நம்பிக்கை அளிக்கும் வகையில் அமையவேண்டும். ஒரு குறிப்பிட்ட 'டானிக்' சாப்பிடுகிறவர் இமய மலையைத் தூக்கிக் காட்டுவதாகப் படம் அமைந்தால் நம்ப மாட்டார்கள். வரைபடங்களை விட நிழற்படங்களே அதிக நம்பிக்கை யூட்டு வன. எனவே நிழற்படங்களையே தேர்ந்தெடுக்கவேண்டும்.

## அரசும் விளம்பரங்களும்

சிறுசேமிப்புத் திட்டம், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம், விவசாய வளர்ச்சி, தொழில் பெருக்கம், போர் நன்கொடை, பரிசுச் சீட்டுத் திட்டம் போன்றவை அரசு விளம்பரங்களாக அமைவனவாகும். செய்தித் தாள்களின் விற்பனை, புகழ் இவற்றைப் பொறுத்தே அரசு விளம்பரங்கள் அளிக்கப்படு கின்றன. அரசு ஆதரவு பெற்றுள்ள இதழ்களுக்கு அடிக்கடி விளம்பரம் கொடுக்கும் வழக்கம் மற்றைய நாடுகளிலும் உண்டு. ஆஸ்திரேலியா, துருக்கி ஆகிய நாடுகளில் அரசைத் திறனாய்வு செய்த காரணத்தால் இதழ்களின் விளம்பரங்கள் பறிக்கப் பட்டதை வரலாற்றில் காணமுடிகிறது. பாகிஸ்தானின் இதழ்க ளான பாகிஸ்தான் அப்சர்வர், டாண், ஈவினிங் ஸ்டார் ஆகிய இதழ்கள் அரசின் சினத்திற்கு ஆளாகி விளம்பரங்களை இழந்த கதையும் உண்டு. பர்மாவில் எல்லா இதழ்களும் நாட்டுடைமை யாக்கப்பட்டிருப்பதால் சிக்கலுக்கு இடமில்லை. அரசு அதிகாரி களைத் திறனாய்வு செய்து எழுதியதாக 1953-இல் பம்பாய் மாநில அரசு டைம்ஸ் ஆப் இந்தியாவிற்கு அளித்துவந்த விளம்பரங்களை நிறுத்தி விட்டது. இதனால் டைம்ஸ் ஆப் இந்தியாவின் விளம்பர வருமானத்தில் 2.2 விழுக்காடு பாதிப்பு ஏற்பட்டது. சென்னையிதழ் சுவராஜ்யா பலகாலம் அரசு விளம் பரங்களை இழந்திருந்தது.

## விளம்பர நிறுவனங்கள்

இதழ்களில் விளம்பரத் துறை தனித்து இயங்குகின்றது. விளம்பர மேலாளர் ஒருவரும் உண்டு. இதழ்களுக்கு வருவாய் தேடித்தரும் பொறுப்புள்ள பதவியாளர் இவர். பேச்சுத் திறமை யும் செயல் திறமையும் கொண்டவரையே இப்பதவிக்குத் தேர்ந் தெடுப்பர். இதழின் பொருத்தமான இடங்களில் விளம்பரங்களை அமைத்துக் கொடுக்கும் தனித்திறமையும் விளம்பர மேலாளருக்கு இருக்கவேண்டும். தனியார் விளம்பர நிறுவனங்களும் இதழ் களுக்கு விளம்பரங்களைப் பெற்றுத்தருகின்றன. பம்பாய், கல்கத் தா, சென்னை போன்ற இடங்களில் மிகப் பெரிய விளம்பர நிறு வனங்கள் செயல்படுகின்றன. அஜந்தா விளம்பர நிறுவனம், தத்தாராம் விளம்பர நிறுவனம், எவரெஸ்ட் விளம்பர நிறு வனம், நேசனல் விளம்பர நிறுவனம், சில்பி விளம்பர நிறுவனம், ஹிந்துஸ்தான் அசோசியேட்ஸ், ஒகில்வி பென்சன் அண்டு

மேதர், லிண்டாஸ், சாமி அட்வர்டைசிங் அசோசியேட்ஸ் ரிடிஃப்யூசன், உல்கா, கிளாரியன், சைத்ரா, சிஸ்டாஸ் போன்ற விளம்பர நிறுவனங்கள் இந்தியாவில் குறிப்பிடத் தக்கவைக ளாகும்.

## விளம்பரக் கழகங்கள்

'இந்திய விளம்பர முகவர்கள் கழகம்' 1945-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டதாகும். 'இந்திய விளம்பரதாரர்கள் கூட்டுக் குழு' (Indian Society of Advertisers) என்ற அமைப்பு 1952-ஆம் ஆண்டிலும் 'இந்திய விளம்பரதாரர்கள் குழு' (Indian Council of Advertisers) 1959 முதலும் தொடங்கப்பட்டுச் செயல்படுகின்றன. நடுவணரசு விளம்பரங்களைத் தருவதற்காக 'இந்திய அரசு விளம்பர நெறியகம் (Directorate of Advertising and Visual Publicity) தலைநகரில் இயங்கி வருகிறது. இஃது இதழ்களுக்கு விளம்பரங்களைப் பகிர்ந்தளிப்பதோடு விளம்பரக் கட்டணங்களையும் உறுதி செய்கிறது.

விளம்பரங்கள் கல்வியைக் கற்றுக் கொடுக்கும் கொள்கை யோடு இணைந்தவையே. மனிதர்களைப் பற்றிய அறிவும், பொருள்களைப் பற்றிய அறிவும் இன்றைய உலகில் உடனடி யாக அறிந்து பயன்படுத்த வேண்டியவை. தேசிய அளவில் தொழில், வணிக வளர்ச்சியின் அளவு, திட்டங்களைப் பற்றிய அளவு இவற்றை விளம்பரங்கள் வழியாகவே நாம் கற்றுக் கொள்கிறோம்.இவற்றோடு தனிமனிதனின் வாழ்க்கைத்தரத்தை அமைத்துக் கொடுக்கும் வழிகாட்டிகளாகவும் விளம்பரங்கள் அமைந்திருக்கின்றன

பகுதி 5

# இதழியல்—ஒரு பார்வை

இதழ்களின் நோக்கம் எப்படி இருக்க வேண்டுமென்று காந்தியார் முதல், குடியரசுத் தலைவராயிருந்த ஜையில்சிங் வரை பலரும் அறிவுரைகளை வாரி வழங்கியிருக்கிறார்கள். ஆனால் 'அரசியல் எவ்வழி இதழ்கள் அவ்வழி' என்பதே இதழ்களின் அச்சடித்த வேதப் புத்தகமாகி விட்டது. கருத்துச் சுதந்திரம் அரசினால் ஊனப்படுத்தப் படாமல் காத்துக் கொடுக்கின்ற போதுதான் இதழ்கள் ஜனநாயகம் படைக்கும் வலிமையான கருவி என்பதை உணர முடியும். மரபுகளைக் காத்துச் சட்டத்திற்கு அடங்கிச் செயல்படும்போது இதழ்களால் அரசிற்கும், அரசினால் இதழ்களுக்கும் எவ்விதத் தீங்கும் வருவதற்கு வாய்ப்பில்லை. தமிழ் நடையைப் பின்பற்றுவதில் இதழ்களுக்கு ஏதோ ஒரு சிக்கல்; பரவாயில்லை. மொழி நடையையாவது பின்பற்றுமாறு இதழ்களை வேண்டிக் கொள்வோமாக!

# இதழ்கள் நோக்கம்

> இதழியலை அதன் பத்திரிக்கைக் கொள்கைகளுக்காக நான் தேர்ந்தெடுக்கவில்லை. என்னுடைய கடமைகளையும் குறிக்கோள்களையும் வெளிப்படுத்தும் கருவியாகவே நான் அதைப் பயன்படுத்த விரும்புகிறேன். பிறருக்கு முன் உதாரணமாக வாழ்ந்து காட்டுதல் என் இலட்சியம்; என் உயிர்க் கொள்கைகளை இதழ்கள் மூலமாகப் பரப்புவேன். பிறரைப் பற்றிச் சினந்தும், பொறாமைப்பட்டும் எழுதமாட்டேன் உணர்ச்சியைத் தூண்டுகிற மாதிரியும் என் எழுத்துக்கள் அமையாது. இதழியல் எனக்கு ஓர் அனுபவமாக அமைகிறது. என்னை நானே அறிந்து கொள்வதற்கும், என் குறைகளைக் கண்டு திருந்துவதற்கும் இதழ்கள் எனக்கு உதவட்டும்'.
>
> — காந்தியார்

எல்லா இதழ்களும் குறிப்பிட்டதொரு நோக்கத்தின் அடிப்படையில் வெளிவருவனவே. தொடங்கிய போதிருந்த நோக்கம் காலப் போக்கில் மாறியிருக்கலாம்; அல்லது புதியதொரு நோக்கம் இடையில் புகுந்திருக்கலாம். எப்படியிருப்பினும் இதழ்களின் பொருளடக்கம் அவற்றின் நோக்கத்திற்கேற்றவாறே அமைந்திருக்கிறது. தொடக்க காலத்தில் இந்த நோக்கங்களெல்லாம் நாட்டுச் சூழல், சமுதாயச் சிக்கல் ஆகியவற்றின் அடிப்படையில் உருவாகும் வாய்ப்பினைப் பெற்றிருந்தன.

### சமய நோக்கம்

இதழியல் துறையை ஆங்கிலேயர் அறிமுகப்படுத்தியதால் கிறித்தவ சமயப் பரப்புதலைத் தொடக்க கால இதழ்கள் நோக்கமாகக் கொண்டிருந்தன. கிறித்தவர்களின் நோக்கத்தைப் புரிந்துகொண்ட இந்து, முகமதியச் சமயத்தினர் தங்கள் சமயத்தை நிலைநாட்டுவதற்கு இதழ்களைப் பிடித்துக் கொண்டனர். இதழ்களின் தமிழ்ச் சமய நோக்கம் தமிழ்ப்பண்பாடு, இலக்கியம், மொழி இவற்றிலெல்லாம் பரவிக் கிளைத்தது. தத்துவம், தமிழ் வளர்ச்சி, சித்தாந்தம், திருவிழா, புராணம், இதிகாசம், காப்பிய விளக்கம் ஆகிய துறைகளும் இதழ்களில் இடம் பெற்றன. ஆன்மீக நெறியை அழுத்தமாகச் சொல்லிய தமிழ் இதழ்கள் தங்களுக்கு விருப்பமான சமய நெறிகளைப் பின்பற்றி ஆழமான செய்திகளை அளித்தன. 1930 வரை இத்தகைய நோக்கத்தில் இதழ்கள் செயல்பட்டாலும் இலக்கியங்கள் வளரவே அவை இடமளித்தன. சமயத் துறையை அடுத்துச் சமூக இதழ்களின்

எண்ணிக்கை அதிகமாக இருந்தது. ஆங்கில ஆட்சியில் பதவியும் செல்வாக்கும் பெற முந்திய சமூகங்கள் தங்களை உயர்த்திக் காட்டும் நோக்கத்திற்கு இதழ்களைக் கருவியாகக் கொண்டன. செங்குந்தமித்திரன், யாதவ மித்திரன், வணிக மித்திரன் என்றெல்லாம் சமூக மித்திரன்கள் தங்கள் சமூகச் செய்திகளைத் தொகுத்துத் தந்தன.

## தேசிய நோக்கம்

இந்திய விடுதலைப் போராட்டத்தில் இதழ்களின் பங்கு மிகப் பெரியது. நாட்டின் இதழ்கள் அனைத்தும் தேசிய நோக்கத்தில் திரும்பிப் பொறுப்புடன் செயல்பட்டதையறிந்து பூரிப்படைகிறோம். நாட்டு நலனில் ஆர்வங் கொண்ட அனைவரும் மக்கள் சக்தியை ஒன்றுபடுத்தி விடுதலையுணர்வை உருவாக்கும் முயற்சியில் இதழ்களையே துணையாகக் கொண்டனர். உணர்ச்சியூட்டுவனாக மட்டுமே இல்லாமல் எழுச்சியூட்டும் வகையிலும் கருத்துக்களை இதழ்களில் அழுத்தமாக எழுதினர். ''நம் தேசக் கடைகளில் அரிசி, பருப்பு, காய்கறி தவிர மற்றவை எல்லாம் ஆங்கிலேயர் சாமான்களே அன்றி நமது சாமான்கள் அல்லவே! அப்படிப்பட்ட சாமான்களைச் சிருஷ்டிக்க நமது தேச மக்களுக்குத் திறமையில்லையே; ஐக்கியமில்லையே; தைரியமில்லையே; ரோஷமில்லையே!'' என்ற சுதேச மித்திரனின் தலையங்கம் (4. 5. 1887) சிந்திக்கத் தூண்டுவதாக அமைந்திருந்தது. பாட்டுக்கொரு புலவனாயிருந்த பாரதி நாட்டுப்பற்றினை ஊட்டுவிக்கும் நோக்கில் தேசியக் கட்டுரைகளை இதழ்களில் எழுதினார். பாட்டெழுதும் பாரதியை நாட்டுச் சூழல் காரணமாகச் சுதேசமித்திரன் ஆசிரியர் கட்டுரைகளை எழுதுமாறு தூண்டினாராம். இதைப் பாரதியே 'என்னை வசனம் மட்டும் நித்தம் எழுதென்று. சென்னைத் தினசரியின் ஆசிரியர் செப்புகின்றார்' என்று குறிப்பிட்டுள்ளார். வடக்கே திலகரின் இதழ்கள் முற்றிலும் விடுதலை நோக்கத்தோடு வெளிவந்தன அவருடைய கேசரி இதழின் கருத்துக்களைப் பரப்புவதற்காக ஆந்திர கேசரி, கன்னட கேசரி, இதழ்கள் தெற்கிலும் தோன்றின. பெரியார் ஈ. வே. ராவின் இதழுக்குக் 'குடிஅரசு' என்ற பெயர் சூட்டப்பட்டிருந்தது மட்டுமன்றி, 'மகாத்மா காந்தி வாழ்க' என்ற முழக்கம் அதன் உச்சியில் அச்சிடப்பட்டிருந்தது. அதன் முகப்புப் பகுதியில் மூவண்ணக் கொடியேந்திய பாரத மாதாவின் உருவப்படமும் இராட்டையில் நூல் நூற்கும் பெண்ணின் உருவப்படமும் அமைந்திருந்தன. இந்தியநாட்டு விடு

தலைப் போராட்டத்தில் முகமதியர்களின் பங்கு குறைந்திருப் பதைக் கண்டு வருந்திய அபுல்கலாம் ஆசாத், அவர்களை அறப் போரில் ஈடுபடுத்த எண்ணியபோது அல்-ஹி-லால்என்ற உருது மொழி இதழைத் தொடங்கினார். இந்தியநாட்டு விடுதலைப் போராட்டத்திலிருந்து முகமதியர்களை ஒதுக்கி வைத்திருக்கும் பிற்போக்குச் சக்திகளைச் சிதறடிப்பதே தம் வாரஇதழின் நோக்கமாகுமென்று ஆசாத் முதல் இதழிலேயே அறிவித்தார்.

## சமுதாய நோக்கம்

இந்தியச் சமயங்களைத் தாக்கி எழுதிய செராம்பூர்க் கிருத்துவ இயக்க இதழ்களுக்குப் பதிலிறுககவே இராஜாராம் மோகன்ராய் இதழியல் துறையில ஈடுபட்டார். இந்து சமயப் பற்றாளர் என்பதோடு முற்போக்குச் சிந்தனையாளர் வரிசையி லும் அவர் முதலிடம் பெற்றிருந்தார். இவர் காலத்திலேயே பழமைவாதிகள் ஒன்று கூடிச் சந்திரிகா சமாச்சார் என்ற இதழை நடத்தினர். விதவைகள் மறுமணத்தை எதிர்த்தும், உடன் கட்டை ஏறுதலை ஆதரித்தும இவ்விதழ் எழுதிக் கொண்டிருந் தது. இப் பழமைவாதிகளின் கொள்கையற்ற குட்டிச்சுவர் களைத் தட்டிவிடவே மோகன்ராய் சில இதழகளைத தொடங்கி னார். இராயின் இதழ்கள் மூடப் பழக்க வழக்கங்களைக் கண்டித்து முற்போக்கு எண்ணங்களை வளர்க்கும சமுதாய நோக்கில் வெற்றி நடைபோட்டன. 1829-இல உடன்கட்டை ஏறும் கொடிய பழககத்தைப் பெண்டிங் பிரபு சட்டப்படி தடை செய்தார். இஃது இராய்இதழ்களின் கொள்கைகளுக்குக் கிடைத்த முதல் வெற்றியாயிற்று ஆங்கிலேயர் துதிபாடும் பயோனீர், சிவில அண்டு மிலிடரி கெஜட் முதலிய இதழ்கள் இந்தியப் பெண்களின் பண்புகளைக் குறைத்து எழுதிவந்தன. முக்காடிட்டுக்கொள்வது, வீட்டிற்குள் அடங்கி வாழ்வது, ஆண்களுக்கு அளவு கடந்த மரி யாதை கொடுப்பது இவை யாவும் தவறானவை என்று இவ்விதழ் கள் வற்புறுத்தின. இவற்றிற்கெதிராகச் சுரேந்திரநாத்பானர்ஜி தம்முடைய பெங்காலி இதழில் ஆங்கில நாட்டுப் பெண்களின் பழக்க வழக்கங்களை எடுத்துக் காட்டி அவற்றினும் இந்தியப் பெண்களின் ஒழுக்கம் உயர்ந்ததென்று வெளிப்படுததினார். தமிழகத்தில் பாரதியார், சுப்பிரமணிய சிவா, திரு.வி.க. போன் றோர் இதழகள் வழியாகவே சமூகச் சீர்திருத்தத்தை மேற்கொண் டனர். நாடு, மொழி, இனம் ஆகிய மூன்றையும மேம்படுத்தும்நோக் கத்திலேயே பாரதியாரின் இதழியல் தொண்டு அமைந்திருந்தது.

"உறங்கிக் கிடக்கும் தமிழ்ச் சாதியினரை அறிவாகிய சாட்டை யால் அடித்து எழுப்பி, அவர்களுக்கு ஊக்கத்தையும் ஆக்கத்தை யும் உண்டுபண்ணி, அவர்களை முன்னிலையிற் கொண்டு வரவேண்டுமென்பதே இப்பத்திரிகையின் நோக்கம்" என்ற அறிவிப்போடு ஞானபாநு மாத இதழைச் சுப்பிரமணிய சிவா தொடங்கினார். சமுதாயப் பாதையிலிருந்த குண்டு குழிகளைத் திரு. வி. க., கல்கி போன்றவர்கள் இதழ்களைக் கொண்டே செம்மைப்படுத்தினர். 1928-இல் இராசாசி நடத்திய விமோசனம் என்ற திங்களிதழ் குடிபபழக்கத்தை ஒழிப்பதைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தது. விதவை மறுமணத்தைஆதரித்து காரைக்குடியி லிருந்து மாதர்மணம் இதழை மரகதவல்லியம்மையார் வெளி யிட்டார். பிற்காலத்தில கல்வி, கிராம முன்னேற்றம், பெண்கள் சீர்திருத்தம், தொழிலாளர் நலன், உழவுத்தொழில், குடிசைத் தொழில், கைத்தறி நெசவு போன்ற சமுதாயத் துறைகளில் இதழ்கள் வெளிவந்தன. இன்று 'சமூகச் சீர்திருத்த இதழ்' 'குடும்பப் பத்திரிகை' என்றெல்லாம பட்டந்தாங்கிக் கொண் டிருக்கும் இதழ்கள் தரககுறைவான அரசியல, கவர்ச்சியான திரைப்படம் முதலியவற்றை வெளியிட்டு, நோக்கமில்லாப் பாதையில் கவர்ச்சி ஊரை நோக்கி ஓடிககொண்டிருக்கின்றன,

## இலக்கிய நோக்கம்

சிறுகதைகளை மட்டும் வெளியிடுவதை நோக்கமாகக் கொண்ட சிறுகதைத் தொகுப்புகள் கதாநிதி, பாரிஜாதம், வாடாமலர், கலாவல்லி என்ற பெயர்களில் வெளிவந்தன. 1955-இல் தோன்றிய கலாவல்லி என் நோக்கத்தைப் பின்வருமாறு எழுதி யிருந்தது.

"நாடும் மக்களும் வளர, வாழ நல்ல கதைகள் வேண்டும். கதைகள் மூலமாகவே சிறந்த கருத்துக்களைச் செப்பனிட்டுத் தரலாம்; வாழ்வை வளப்படுத்தலாம்; பண்பாட்டைப் பசுமை யாக்கலாம், இந்த நற்கருத்தைத் தாங்கி இன்று கலாவல்லி பணியாற்ற வருகிறாள்."*

சிறுகதைகளைத் தொடர்ந்து கவிதை, புதினம், நாடகம், நாட்டுப்புறப் பாடல்கள் ஆகியவற்றையும் இதழ்கள் வெளி யிட்டன. உத்தரப்பிரதேசம், பீகார் ஆகிய மாநிலங்களில் ஆட்சிமொழியாக விருந்த உருதுமொழியை நீக்கிவிட்டு இந்தி யை இடம்பெறச் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் 1867-

---

* தமிழ்ப் பத்திரிகைகள் — க. குளத்தூரான். பக். 83

இல் கவிவாசன் சுதா என்ற மாத இதழ் போராடியது. 1884-இல் இதே நோக்கத்தில் ஹிந்துஸ்தானி என்ற இந்தி இதழும் வெளிவந்தது. அரசினர் வேலைக்கு உருதுமொழியில் தேர்வு பெற்றிருக்க வேண்டும் என்ற அரசு ஆணையை ஹிந்துஸ்தானி எதிர்த்துப் போராடியது. தமிழகத்தில் தனித்தமிழ் பரப்புவதைத் தலையான நோக்கமாகக் கொண்டு தென்மொழி, தமிழ்ச் சிட்டு, முதன் மொழி, மாணாக்கன், அறிவு, கைகாட்டி, தமிழ்ப்பணி முதலிய இதழ்கள் வெளிவந்தன.

1940-ஆம் ஆண்டிற்குப் பிறகு இந்திய இதழியல் துறையில் மேலை நாட்டு இதழியலின் தாக்கமும் கவர்ச்சிப் போக்கும் குடியேறின பொதுமக்களைக் கவருகின்ற பொருளடக்கத்தோடு பிற இதழ்களுடன் போட்டியிட்டு விற்பனையைப் பெருக்கிக் கொள்ளும் வியாபார நோக்கத்திற்கு இதழ்கள்வந்து சேர்ந்தன. "இந்தியாவில் நாளிதழ்கள் தொண்டு என்ற நிலையிலிருந்து தொழில் என்ற நிலைக்குத் தாழ்ந்து விட்டன. சோப்பு வியாபாரத்திற்கு இருக்கும் யோக்கியதைகூட இவற்றிற்குத் தற்சமயம் இல்லை. பொது மக்களுக்கு வழிகாட்டும் பொறுப்பையும் மறந்து விட்டன. செய்திகளை உள்ளது உள்ளபடி தருவது, தனக்குச் சரியெனப் பட்டதை அச்சம், ஆதரவு கருதாமல் எழுதுவது இவையெல்லாம் இங்குத் தொண்டாக மதிக்கப்படவில்லை. திடுக்கிடும் பரபரப்பான தகவல்கள், உணர்ச்சியைத் தூண்டும் செய்திகள் இவற்றை வைத்து வாணிகம் செய்வது பத்திரிகைத் தொழில் ஆகிவிட்டது" என்று டாக்டர் அம்பேத்கார் அன்றே இதழ்களைப் பற்றிக் கணித்திருப்பது சரிதானே?

குறிக்கோள் இல்லாத வாழ்க்கை சென்று தேய்வது போலக் குறிப்பிட்ட நோக்கமில்லாத இதழும் குன்றிவிடும். சில இதழ்கள் தாங்கள் கொண்ட நோக்கத்தைத் தொடர முடியாமல் விரைவில் மலட்டுத் தன்மை அடைந்து விடுகின்றன; சில மாறுபட்டு வேண்டாத செய்திகளுக்கு முன்னுரிமை தருகின்றன. திரைப்பட நடிகைகளின் விவகாரம், திருமணம், மணவிலக்கு இவைகள்தாம் அவ்விதழ்களின் முத்தாய்ப்பான செய்திகளாகும். மக்களுக்குத் தொண்டு செய்யும் நோக்கமில்லாவிடினும் சமுதாயத்திற்குத் தீங்கு செய்யும் நோக்கத்தை இதழ்கள் நீக்க வேண்டும். இல்லையேல், 'செய்தித்தாள்கள் மக்கட் சமுதாயத்தைக் கெடுக்கவந்த நஞ்சு' என்று புகழ்பெற்ற நாவலாசிரியர் சர் வால்டர் ஸ்காட் கூறியிருப்பது நூற்றுக்குநூறு உண்மையாகிவிடும்!

# பத்திரிகைச் சுதந்திரமும் தணிக்கை முறையும்

சிறந்த அச்சகங்கள், பத்திரிகைத் தாள்கள் ஆகியவை முதலாளித்துவத்தின் கட்டுப்பாட்டில் இருக்கின்றவரை பத்திரிகைச் சுதந்திரம் என்பது ஒரு ஏமாற்று வித்தையாகும்.

— லெனின்

செய்தித்தாள்களுக்கும் சுதந்திரம் என்ற சொல்லுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு இந்தியப் பத்திரிகை வரலாறு, இந்திய நாட்டுவிடுதலைப்போராட்ட வரலாற்றோடுஇணைந்தே காணப்படுகிறது. நாட்டுச் சுதந்திரத்திற்கு நற்றொண்டாற்றிய நாளிதழ்களுக்கு வீட்டுச் சுதந்திரம் வேண்டுமன்றோ? எழுத்துரிமை, பேச்சுரிமை, கருத்தை வெளியிடும் உரிமை ஆகியன ஜனநாயக நாட்டின் அடித்தளமாகும். இம்மூன்றையும் பெறுகின்ற அடிப்படை உரிமை குடியாட்சி நாட்டின் மக்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது இம்மூன்றிற்கும் வரும் ஆபத்து மக்கள் எதையும் அறிந்து கொள்ளும் உரிமைக்கு வந்த ஆபத்தாய் முடியும். அச்சிடும் உரிமை (Right to Print) திறனாய்வு உரிமை (Right to Criticize) அறிவிக்கும் உரிமை (Right to Report) ஆகிய மூன்று உரிமைகளைப் பெற்றிருக்கும் இதழ்கள் உள்ள நாடுதான் முழுவிடுதலையைத் துய்க்கின்ற நாடாகும். இதழ்கள் உரிமையில்தான் எல்லா உரிமைகளையும் உணரமுடிகின்றது. முழுமையான விடுதலை பெற்ற நாட்டில் நாம் வாழ்கின்றோம் என்ற உணர்வு உண்டாக வேண்டுமானால் நாளிதழ்களின் கைகள் கட்டப்பட்டிருக்கக் கூடாது; வாய்கள் பூட்டப்பட்டிருக்கக் கூடாது. பத்திரிகை முடக்கம் என்பதுஒரு நாட்டின் அரசியல், வரலாறு, பொருளாதாரம், கலை, இலக்கியம் ஆகியவற்றின் முடக்கமாகிவிடும். தனிமனிதன் தன்னோடொத்த மனிதர்களின் அன்றாடச் செய்திகளை அறிந்து வாழவேண்டும். அந்த வாய்ப்பினை இழக்கின்றபோது விடுதலை பெற்ற நாட்டின் ஜனநாயகக் கூறுகளில் ஒன்றை இழந்தவனாகிறான். இதழ்களை 'ஜனநாயகம் பரப்பும் தூதுவன்' என்று கூறுவதுண்டு.

## பத்திரிகைச் சுதந்திரம்

பத்திரிகைச் சுதந்திரம் என்பது பத்திரிகை நடத்துவதற்கான சுதந்திர மட்டுமன்று; பல செய்திகளையும், கருத்துக்

களையும் தெரிந்து கொள்வதற்காக ஜனநாயக நாட்டில் மக்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சுதந்திரமுமாகும். எனவே, பத்திரிகைச் சுதந்திரம் பத்திரிகைகளின் தனிவழியன்று. அது மக்கள் உரிமையுடன் பெறுகின்ற கருத்துச் சுதந்திரமாகும். இதில் யாருடைய தலையீடும் இருத்தல் கூடாது. எவ்வித அச்சுறுத்தலும் இன்றிச் செய்திகள் தொகுக்கப்பட வேண்டும்; எவ்வித இடையூறுமின்றி அவை செய்தித்தாள் அலுவலகங்களை அடைய வேண்டும்; அச்சான செய்திகள் எவ்விதத் தடையுமின்றி மக்களிடம் பரவவேண்டும் — பத்திரிகைகளுக்கான சுதந்திரம் இவ்வளவுதான். ஜனநாயக நாடுகளில் இதழ்களுக்கு இந்த உரிமைகளைவழங்குவது நியாயமானஒன்றாகஅமைந்திருக்கிறது. 'வருங்காலச் சமுதாயம் பேனாவால் கெட்டுப்போக வழியிருக்கிறது' என்று நெப்போலியன் போன்றவர்கள் கருதியதுண்டு. பொது நலம் பேணும் வேறு எவரும் அப்படிக் கருதியதில்லை; அடக்கி வைக்கப்படும் இதழ்களைவிடச் சுதந்திரமான இதழ்களால் ஆபத்தில்லை என்பதை அறிந்து கொள்ளும் ஆட்சியாளர்கள் இதழ்களைக் கண்டு பயந்ததில்லை. அரசைக் கட்டுப்படுத்துவதற்கும், திருத்துவதற்குமான வழிகள் அரசியல் சட்டத்தில் முழுமையாக இல்லை. இந்நிலையில் பத்திரிகைகள் தான் அரசின் முறையான பாதுகாவலனாகப் பணியாற்றுகின்றன. ஒரு நாட்டின் நாடாளுமன்றத்தில் ஆளுங்கட்சியின் பெரும்பான்மைப் பலத்தினால் எல்லா நடவடிக்கைகளும் அப்படியே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. எதிர்க்கட்சிகள் செயலாற்ற முடியாத நிலையில் வெளியிலிருந்து இதழ்கள்தாம் அப்பணியைச் செய்ய வேண்டியதிருக்கிறது. இங்கே ஜனநாயக மரபுகள் பத்திரிக்கைச் சுதந்திரத்தின் மூலம் பாதுகாக்கப்படுகின்றன.

## வரலாற்றில் பத்திரிகைச் சுதந்திரம்

அச்சுக்கலை முனைவர் கூட்டன்பர்க்கு அச்சுப்பொறியைக் கண்டு பிடித்தபோதே செய்திகளையும், கருத்துக்களையும் தெரிவிப்பதற்குத் தடைகள் வந்துவிட்டன. இங்கிலாந்தில் எட்டாம் ஹென்றி (1534) காலத்தில் அரசு அனுமதி பெற்றே அச்சுச் செய்திகள் வெளிவர வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. வெளிநாட்டுப் புத்தகங்கள் தடைசெய்யப்பட்டதோடு, தடைசெய்யப்பட்ட புத்தகங்களின் பட்டியல் ஒன்றும் வெளியிடப்பட்டது. அரசாங்கத்தையும், அரசனையும் திறனாய்வு செய்த கவிதைகளுக்

குரியவர்கள் தண்டிக்கப்பட்டனர். 1557-இல் பத்திரிகையாளர் சங்கம் ஒன்று அமைக்கப்பட்டது. புத்தக வியாபாரிகள், அனுமதி பெற்றவெளியீட்டாளர்கள்இச்சங்கத்தில் இடம் பெற்றிருந்தனர். அச்சுச் செய்திகளை இச்சங்கமே ஒழுங்கு படுத்தத் தொடங்கியது. 1649-இல் ஆலிவர் கிராம்வெல் இதழ்களுக்குத் தற்காலிகமாகச் சில உரிமைகளை அளித்தார். கி.பி. 1700 வரை ஆங்கில நாட்டில் இதழ்களின் உரிமை பற்றிய போராட்டம் தொடர்ந்து நடைபெற்றது. கி.பி 1664-இல் முதலாம் சார்லஸ் காலத்தில் ஜான் மில்டன் இதழ்களின் உரிமைக்காக அரசினரோடு வாதாடினார். உண்மைகளைக் கண்டு அஞ்சுகிறவனே இதழ்களைக் கண்டும் அஞ்சுவான் என்பதைத் துணிவோடு அவர் அறிவித்தார். இதழ் தணிக்கை முறை, கட்டுப்பாடு, அனுமதி பெறுதல் ஆகியவற்றைத்தாக்கி எழுதிய அவருடைய'ஆரியோ பெசடிக்கா' நூல் இதே ஆண்டில் வெளியானது. ஆங்கில இலக்கிய வரிசையில் இந்நூல் அரிய இடத்தைப் பெற்றிருக்கிறது. 'எல்லா விடுதலைக்கும் மேலான, மனச்சான்றின்படி அறிந்து தாராளமாக வாதாடும் உரிமையை எனக்கு அளியுங்கள்' என்று வேண்டுகோள் விடுத்துக் கருத்துச் சுதந்திரத்தை மில்டன் வேண்டி நின்றார். பதினெட்டாம் நூற்றாண்டில் மன்னர்களையும் பிரபுக்களையும் பற்றி இதழ்கள் எழுத முடியவில்லை. 1787-ஆம் ஆண்டில் தாமஸ் ஜெஃபர்சன் என்பாரும் இங்கிலாந்து நாட்டு இதழ்களுக்குச் சுதந்திரம் வேண்டிப் போராடினார்.

''செய்தித்தாள்கள் இல்லாத அரசு; அரசே இல்லாது செய்தித்தாள் — இந்த இரண்டு அமைப்பில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுக்க விட்டால் பிந்தியதைத் தேர்ந்தெடுக்க ஒரு போதும் தயங்கமாட்டேன்'' என்று அழுத்தமான கருத்தொன்றை ஜெஃபர்சன் வெளியிட்டார்.

இந்தியாவில் 1798-ஆம் ஆண்டுவரை செய்தித்தாள் தணிக்கை முறை அவ்வளவாக இல்லை. ஆங்கில ஆளுநர் வெல்லெஸ்லி பிரபு 1799, மே 13-இல் இதழ்கள் சட்டத்தைக் கடுமைப் படுத்தினார். 1823-இல் ஆளுநரின் செயலாளர் ஜான் ஆடம் செய்தித் தணிக்கை அதிகாரியாகவும் பணியாற்றினார். இறப்புப் பற்றிய செய்திகளைக்கூடத் தணிக்கைக்கு அனுப்ப வேண்டுமென்று ஆடம் வலியுறுத்தினார். சென்னையில் 1795, திசம்பர் 12-ஆம் நாளில் பத்திரிக்கைத் தணிக்கை முறை கொண்டுவரப்பட்டது. 1835-இல் சார்லஸ் மெக்காஃப் ஆட்சியில்தான் பத்திரிக்கைகளுக்குச் சுதந்திரம் அளிக்கப்பட்டது.

ஆசிரியர் பெயர், வெளியிடுவோர் பெயர் இவற்றைப் பற்றிய உறுதிமொழி ஒன்றை நீதிமன்ற நடுவர் முன்னிலையில் அளிக்க வேண்டும் என்ற ஒரு கட்டுப்பாடு மட்டும் விதிக்கப்பட்டிருந்தது. இந்திய இதழ்களின் உரிமைக்காகப் போராடியதில் இராஜா ராம் மோகன்ராய் ஆங்கில நாட்டு மில்டனைப் போன்றவர்.

## பல்வேறு நாடுகளில் பத்திரிக்கைச் சுதந்திரம்

ஜனநாயகத்தில் முன்னுரிமை பெறவேண்டியவைகளில் பத்திரிகைச் சுதந்திரமும் ஒன்று. எந்த நாட்டிலும் இதழ்கள் எண்ணியதை எண்ணியவாறு எழுதமுடியவில்லை. ஆதிக்க நாடுகளில் ஆட்சியாளர்கள் வகுத்திருக்கும் கொள்கைகள் தவறாக இருந்தாலும் இதழ்கள் தாளம் போடவேண்டியது தவிர்க்க முடியாத ஒன்றாகிவிட்டது. 'எந்தவிதமான வெளி நிர்பந்தமும் இல்லாமல் தானாகவே திடமுடனும் நேர்மையுடனும் இயங்கும் நிர்வாக இயந்திரமாகப் பத்திரிகைகள் மாறவேண்டும். பொதுவாக ஜெர்மனியிலும், பெருமளவிற்குப் பிரிட்டனிலும் இத்தகைய போக்கைக் காணமுடிகிறது.''$ பிரிட்டனில் பத்திரிகைகளுக்கு முழுச் சுதந்திரம் உண்டு, நீதிபதிகளைக்கூட அவை கண்டிக்கலாம். 1695-இல் இரண்டாம் மேரி காலத்தில் பத்திரிகைத் தணிக்கை முறை பற்றிய சட்டம் ஒன்று பிரிட்டன் நாடாளு மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது. ஆனால் பெரும்பான்மையோர் எதிர்ப்பில் அது தள்ளுபடி செய்யப்பட்டது. எழுதப்படாத அரசியல் சட்டத்தைக் கொண்டுள்ள பிரிட்டன் நாட்டில் இதழ்களை ஒடுக்க வேண்டுமென்ற எண்ணம் இல்லை. மரபுமுறை ஆட்சி நடைபெறுவதால் சட்ட பூர்வப்பத்திரிகைச் சுதந்திரம் தேவைப் படவில்லை. உலக நாடுகளிலேயே கூடுதலான சுதந்திரத்தை அனுபவிப்பது பிரிட்டன் நாட்டு இதழ்களேயாகும்.

சுவிட்சர்லாந்து, யுகோஸ்லோவியா, எகிப்து, ஜோர்டான், சிலி, நார்வே, இத்தாலி, அர்ஜென்டைனா, கொலம்பியா, மெக்சிகோ, பிரேசில், அமெரிக்கா ஆகிய நாடுகளில் சட்ட பூர்வமான பத்திரிகைச் சுதந்திரம் உண்டு. நீதித்துறை சம்பந்தப்பட்ட பத்திரிகைச் சட்டங்கள் சிலவே இந்நாடுகளில் வழக்கில் உள்ளன. இந்தோனேசியா, பர்மா, பாகிஸ்தான் ஆகிய நாடுகளின் அதிபர்கள் இதழ்கள் உரிமையைப் பறித்து வைத்தனர். இந்த நாடுகளின் அரசியல் மாற்றங்களுக் கேற்றவாறு இதழ்களும் மாறவேண்டியிருக்கிறது. தென்கொரியா,

$ க. சந்தானம் — தினமணி. 10—4—1977.

தென்வியட்னாம், சூடான், துருக்கி ஆகிய நாடுகளில் இதழ்கள் பல வகையிலும் அரசின் கட்டுப்பாட்டிற்குட்பட்டிருந்தது. கானா அதிபராயிருந்த நிக்ருமா ஆங்கிலேயரின் செய்தித்தாள்களான பயனீர், டெய்லி கிராபிக் இரண்டையும் கட்டுப்படுத்தியே நடமாட விட்டார். தென்னாப்பிரிக்காவில் இதழ்கள் முன் தணிக்கைக்கு உட்பட்டேயாக வேண்டும். சோவியத்து நாட்டு அரசியல் சட்டம் 125 - ஆம் பிரிவுப்படி அந்த நாட்டு இதழ்களின் உரிமை கட்டுப்பட்டதாக அமைந்திருக்கிறது. நூற்றைம்பது ஆண்டுகள் இந்திய இதழ்களின் உரிமையை ஆங்கில அரசு அடக்கியே வைத்திருந்தது. விடுதலையடைந்த பின்பே இந்திய இதழ்கள் சுதந்திரப்பாதையில் விரைந்து நடை போடுகின்றன.

## பத்திரிகைச் சுதந்திரச் சட்டம்

நாளிதழ்களுக்கென்று சில சட்டங்கள் நடைமுறையில் உள்ளன. அவற்றிலிருந்து அவை விதிவிலக்குப் பெறமுடியாது. ஆனால், நாளிதழ்கள் தங்கள் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ளும் உரிமையில் தடையாக இருக்கும் சட்டங்கள் எவையும் ஜனநாயக நாட்டுச் சட்டங்களாகா. இந்தியா போன்ற ஜனநாயக நாடுகளின் மக்களவையில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் விரும்பினால் பத்திரிக்கைச் சுதந்திரம் மக்களின் அடிப்படை உரிமைகளுள் ஒன்றாகிவிடும். இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 13-ஆம் பிரிவில் எழுத, பேச, கருத்தை வெளியிடச்சுதந்திரம் வழங்கப்பட்டிருந்தாலும் பத்திரிகைச் சுதந்திரம்பற்றிக் குறிப்பிடப்படவில்லை. சர் தாமோதர் ஸ்வரூப்சேத் பத்திரிகைச் சுதந்திரம் பற்றிக் குறிப்பிடும் தனிச் சட்டம் இயற்ற வேண்டுகோள் விடுத்தார். அரசியலமைப்புச் சட்டத்தின் 19-ஆம் பிரிவு 1-A சட்டம் இயற்றப்பட்டு, 1951-இல் அதன் முதல் திருத்தச் சட்டம் கொண்டுவரப்பட்டது.* மக்கள் நலனைக்கருத்தில் கொண்டு, பிற நாடுகளின் உறவைப் பாதிக்காதவாறு, குற்ற உணர்வுத் தூண்டுதலின்றிச் செய்திகளை வெளியிட வேண்டுமென்று இச்சட்டம் இதழ்களைக் கட்டுப்படுத்தியது. இவை நியாயமான கட்டுப்பாடுகளென்று இந்திய இதழ்கள் அப்போது ஏற்றுக்கொண்டன. இப்பொழுது சில வேளைகளில் அச்சட்டம் பெருஉருவெடுத்து அச்சுறுத்தும் போது இந்திய இதழ்கள் பத்திரிக்கைச் சுதந்திரம்

---

* இந்திய அரசியல் சட்டப்பிரிவு 19 - இல் உட்பிரிவான 1-A கருத்துச் சுதந்திரத்தைப் பற்றியதாக அமைந்துள்ளது. பத்திரிகைச் சுதந்திரம் இதன் உள்ளடக்கமாகக் கருதப் படுகின்றது.

பறிக்கப்பட்டு விட்டதாகப் பதறுகின்றன. 1956-இல் பெரோஷ் காந்தி சட்டம் அமுலுக்கு வந்தது. நாடாளுமன்றச் சட்டமன்றத் தொடர்பான செய்திகளில் சிவில், கிரிமினில் அடிப்படையில் வழக்குத் தொடருவது நிறுத்தப்பட்டு உரிமை மீறல் விளக்கம் கேட்கும் முறை இச்சட்டத்தால் வந்தது.

## உரிமைகளும் கடமைகளும்

உரிமைகளையும், சலுகைகளையும் மட்டுமே எண்ணிக் கடமைகளை மறக்கும்போது இதழ்கள் திறனாய்வு செய்யும் கருவிகளாக மாறி விடுகின்றன. அவை உரிமைகளைப் பயன் படுத்தும்போது வாய்ப்பும் வசதியும் உடையவர்கள் தங்கள் கருத்துக்களைவெளிப்படுத்த இதழ்களைப் பயன்படுத்திக் கொள் கின்றனர். 1937-இல் மொழிவாரி மாநிலம் அமைக்கப்பட்ட போது பத்திரிகைகளுக்கான கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டன. நெடுநாள் கிடைக்காதிருந்த உரிமையைத் தீவிரமாகப் பயன் படுத்திய இதழ்களின் செய்திகள் மராத்தியர்-குஜராத்தியர்களுக் கிடையே இனக் கலவரத்தைத் தூண்டியதாகக் கருதப்பட்டது. தனக்குப் பிடிக்காத அரசு என்பதால் இதழ்கள் தாக்கி எழுத வேண் டியதில்லை. கண்டிக்க வேண்டியதைக் கண்டித்து, அறிவுறுத்த வேண்டியதை அறிவுறுத்தி ஆக்க பூர்வமாகச் செயல்படவேண் டும். அரசினரின் உண்மையான சாதனைகளை வெளியிட்டுப் பாராட்ட வேண்டும். செய்திகளை வழங்குதல், பொறுப்புடன் விமர்சித்தல், பொதுமக்கள் கருத்தை வெளிப்படுத்துதல், சமு தாய விழிப்புணர்ச்சியை உண்டாக்குதல் ஆகிய நான்குபொறுப் புக்களும் உரிமைகளைப் பயன்படுத்தும் ஜனநாயகநாட்டு இதழ் களின் முறையான நோக்கமாக அமைந்திருக்க வேண்டும்.

## தணிக்கை முறை

தகவல் அறிவிப்புச் சாதனங்களான புத்தகம், செய்தித் தாள், கட்டுரை, வானொலி, நாடகம், திரைப்படம் ஆகியவை தரும் செய்திகளை வெளியிடுவதற்கு முன்பு சட்டபூர்வமாக ஆய்ந்து, மறுப்புக்கு இடமான செய்திகளை நீக்குவது தணிக்கை யாகும். நாட்டின் நெருக்கடி நிலையின் போது கடிதங் களும் தணிக்கைக்குட்படுவதுண்டு. கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் ரோமன் நாட்டு அரசவை தணிக்கையாளர்கள் (Censors) என்ற பெயரில் நீதிமன்ற நடுவர்கள் சிலரை நியமித்திருந்தது. மக்களின் பழக்க வழக்கங்கள், நடவடிக்கைகள், ஒழுக்க முறை களைக் கண்காணித்துப் பதிவு செய்யும் அலுவலை இவர்கள்

செய்து வந்தனர். இந்தச் சொல்லிலிருந்தே தணிக்கை (Censorship) என்ற சொல் பிறந்தது. அது தத்தித் தவழ்ந்து இதழ்களையும் எட்டிப் பிடித்தது. ஜனநாயக நாடுகளில் பத்திரிகைத் தணிக்கை முறை வெளிப்படையாக அமைந்திருப்பதில்லை. இலைமறைகாயாகத் திரைப்படம் போன்றவற்றில் இடம் பெறுகின்றது. போர், நெருக்கடி நிலைபோன்ற காலங்களில் மற்ற துறைகளையும் தணிக்கை முறை சுவை பார்ப்பதுண்டு. தணிக்கை செய்யப்பட்ட இதழ்கள் ஒரு வகையில் ஊனமுற்றவையேயாகும். ''தணிக்கை செய்யப்பட்ட நாளிதழ்கள் தரமான செய்திகளைத் தந்தாலும் முறையான நாளிதழ்களாகா. தணிக்கை செய்யப்படாத நாளிதழ்கள் தரமற்றசெய்திகளைத் தந்தாலும் முறையான நாளிதழ்களாகும்'' என்ற கருத்து போலந்து நாட்டு ரோசாலப் சம்பர்க் அம்மையாரால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. கூடுவது, பேசுவது, எழுதுவது இவையெல்லாம் தனி மனித உரிமைகளாகும். தணிக்கை என்ற பெயரில் பத்திரிகைச் சுதந்திரத்தைத் தடுப்பது தனிமனித உரிமைகளைப் பறிப்பதாகும். தணிக்கைமுறை அமுலில் உள்ளபோது அரசிற்கு வேண்டாத இதழ்கள் அதிகமாகப் பாதிக்கப்படுகின்றன. 1978-ஆம் ஆண்டில் நெருக்கடி நிலையின்போது நடைமுறையில் இருந்த தணிக்கையால் சில இதழ்கள் முடமாகிப் போய் நிலை தடுமாறின. சில இதழ்கள் மறை பொருளில் செய்திகளைத் தந்தன. துக்ளக் இதழ் எப்போதோ வெளிவந்த 'சர்வாதிகாரி' என்ற திரைப்படத்தை விமர்சனம் செய்வது போல் ஆட்சியில் இருந்தவர்களை விமர்சித்தது. முரசொலி நாளிதழ், நெருக்கடி நிலைச் சட்டத்தால் கைது செய்யப்பட்ட தன் கட்சிக்காரர்களின் பட்டியலை 'அண்ணா நினைவுநாளில் அண்ணா சமாதிக்கு வர இயலாதவர்கள்' என்ற தலைப்பிட்டு வெளியிட்டது. இதே காலத்தில் தணிக்கை முறையால் இந்தியன் எக்ஸ்பிரஸ் நிறுவன இதழ்கள் பெரிதும் பாதிக்கப்பட்டன. அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய நாடுகளில் தணிக்கை முறைகள் இல்லை. பிரெஞ்சு நாட்டு இதழ்கள் அரசினரையும் தனி மனிதர்களையும் திறனாய்வு செய்யும் உரிமை பெற்றுள்ளன.

பத்திரிகைச் சுதந்திரமே எல்லா வகைச் சுதந்திரத்திற்கும் அடிப்படையான ஒன்றாகும். சமுதாய நியதி, மனிதநேயம், சமூக நல்லுணர்வுகள், பொருளாதார மேம்பாடு இவற்றின் வளர்ச்சியில் பத்திரிகைச் சுதந்திரம் பங்கு பெறுகிறது.

# ஜனநாயகத்தில் இதழ்களின் பங்கு

> இந்தியக் குடியரசின் எதிர்காலம் நாட்டின் செய்தியாளர் கையில் உள்ளதென்பதில் எனக்கு யாதொரு ஐயமும் இல்லை.
>
> — இந்திய இதழாளர் ஏ.டி. மணி

நம் இந்திய நாடு உலகின் மிகப் பெரிய ஜனநாயக நாடுகளில் ஒன்றாகும். ஜனநாயக சக்திகளை வலுப்படுத்தி, அதனைச் சிறப்பானதாக்குவதில் இதழியலின் பங்கு எப்படிப் பட்டதென்பதை ஜனநாயக நாட்டில் வாழும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். முழுமை பெற்ற குடியரசு உருவாகக் காரணமாக அமைகின்ற மக்களின் உணர்வுகளையும், புதிய அரசியல் சக்திகளையும் பிரதிபலிப்பதன் மூலமாக இந்திய இதழ்கள் தமக்கெனத் தனியிடம் பெற்றுள்ளன. ஜனநாயகம் எங்கெல்லாம் தழைக்கிறதோ அங்கெல்லாம் இதழ்களின் பணி சிறக்கிறது. இந்திய நாட்டில் இந்தியர்களுக்கு உரிமையில்லா திருந்த ஜனநாயக உணர்வுகளை நினைவூட்டி, எழுச்சிப்பாதை யில் அவர்களை நடக்கவிட்டுத் தில்லிச் செங்கோட்டையின் தலை வாயிலில்கொண்டுவந்துநிறுத்தியபெருமைஇதழ்களுக்கேஉண்டு. 1858 - இல் அரிச்சந்திர முகர்ஜி, "அரசாங்கத்தில் பங்கேற்கும் உரிமை இந்தியர்களுக்கும் வேண்டும்" என்ற ஜனநாயக அறை கூவலை முதன் முதலில் இதழ்களின் வழியேதான் விடுத்தார். 'செய்தித்தாள் வெளியீடுதான் குடியரசை நடைமுறைபடுத்து கின்றது'.* என்று உலக அறிஞர்கள் உறுதியாகக் கூறுவர். அடிப் படைச் சிக்கலில் மக்களுக்கு வழிகாட்டுவதன் மூலம் ஜனநாயக இயக்கத்தில் இதழ்கள் நேரடிப் பங்கு வகிக்கின்றன. இதழ்கள் அரசியல், சமுதாயம், பொருளாதாரம் இவற்றின் வளர்ச்சிப் பாதையில் எதிர்ப்படும் தடைக்கற்களைத் தகர்த்தெறியும் கருவி களாகின்றன. நாடாளுமன்றக் குடியாட்சி என்பது சட்டமன்றம் (Legislature), நிருவாகத் துறை (Executive), நீதிமன்ற அமைப்பு (Judiciary) ஆகிய மூன்று தூண்களைக் கொண்டதாகும். நான் காவது தூணாக அச்சுத்துறை (Press) அவற்றோடு இணையும்

---

* "It is the newspaper press that has made democracy possible".

— *John Bryce.*

போதுதான் குடியாட்சி நிலைத்து நிற்கமுடிகிறது. எனவேதான் அச்சுத்துறையினை 'ஒரு நாட்டின் நான்காம் சொத்து' (Press is the Fourth Estate) என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

ஜனநாயகப் பாராளுமன்ற அமைப்பின் நடைமுறைகளும் இதழ்களின் செயல்முறைகளும் சில நிலைகளில் ஒத்திருக்கின்றன. 'Parley' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு 'discussion' (விவாதம்) என்ற பொருள் உண்டு. விவாதங்கள் நடைபெறுகின்ற நாடாளுமன்றத்தைப் போலவே இதழ்கள் உலகமும் பரந்த விருப்பு வெறுப்பற்ற விவாதத்திற்கு இடமளிக்கும் இடமாக அமைந்திருக்கிறது. நாட்டின் நடவடிக்கைகளை நாடாளுமன்றம் முறைப்படுத்துகிறது. நாளிதழ்களில் நடைபெறும் கருத்துப் பரிமாற்றங்கள் ஜனநாயகம் இயங்குவதை முறைப்படுத்துகின்றன. செய்தித் தொகுப்புக்களை மட்டும் இதழ்களிடம் மக்கள் எதிர்பார்ப்பதில்லை; நிகழ்கால அரசியல், சமுதாய, பொருளாதார வளர்ச்சிகளைப் பற்றிய ஆக்கபூர்வமும், அறிவுத் தெளிவும் கொண்ட விமர்சனங்களையும் எதிர்பார்க்கிறார்கள். நாடு தழுவிய எந்தச் சிக்கலிலும் மக்கள் கருத்து (Public Opinion) வெளிப்பாட்டிற்கு இதழ்களின் விவாதங்கள் இடமளிக்கின்றன. ஆக்கபூர்வமான விவாதங்கள்தான் ஆரோக்கியமான அரசியலுக்கு வழி வகுக்கின்றன. அரசியல் அமைதியின்மை, சந்தர்ப்ப வாதம், பதவி ஆசை, அதிகார வெறி, நிருவாக ஊழல் இவையெல்லாம் இந்திய அரசியலில் கட்டுமீறித் தலைவிரித்தாடினாலும் இவற்றை இந்திய இதழ்கள் ஒழுங்குபடுக்கி ஜனநாயகத்தை நிலைநாட்டுவதிலேயே கருத்துச் செலுத்துகின்றன. அரசியலில் உயர் தகுதியுடையவர்களையும் அதிகாரிகளையும் இதழ்கள் அச்சுறுத்தி எச்சரிக்க முடிகின்றது. 'ஈட்டி எறியும் மட்டுமே பாயும்; அதிகாரம் எங்கும் பாயும்' என்பது இதழ்களைப் பொறுத்த மட்டில் உண்மையாவதில்லை.

### ஜனநாயகக் காவலன்

அரசியல் அமைப்பில் ஜனநாயகத்தைக் காப்பதற்குப் பல் வேறு பிரிவுகள் வகுக்கப்பட்டுள்ளன. ஆனால் அதைக் கட்டிக் காப்பதில் கடமையுள்ள காவல்காரன் நிலையில் இதழ்களே உள்ளன. பணிவாகச் சொல்லவேண்டுமானால் 'ஜனநாயகக் காவல்நாய்' (watch dog) என்று கூறலாம். உயர்வானதொரு நோக்கில் 'ஜனநாயகக் காப்புத் தேவதை செய்தித்தாள்களே'* என்றும் கருதலாம். நம் நாட்டில் நாடாளுமன்றம், சட்ட

* The Press is the guardian angel of democracy

மன்றம், போன்ற உள்ளாட்சித் துறை அமைப்புக்கள் ஆங்கி லேயர் ஆட்சியில் அமைந்திருக்கவில்லை. அப்போது மக்களின் குறைகளை அன்னிய ஆட்சியினருக்கு எடுத்துவைக்கும் ஜன நாயக அமைப்பு (Democratic Body) என்ற நிலையில் இந்திய இதழ்கள்தாம் செயல்பட்டன. ஆங்கிலேயர் காலத்தில் பெரும் பான்மை இதழ்கள் அரசியல் தலைவர்களுக்குரியதாகையால் இந்திய ஜனநாயக வித்துக்கள் இதழ்களை விளைநிலமாகக் கொண்டே ஊன்றப்பட்டன. இராஜாராம் மோகன்ராய் மக் களின் குறைகளை ஆட்சியாளரின் கவனத்திற்குக் கொண்டுவரும் வெறும் மனுக்களாகத் தம் இதழ்களைப் பயன்படுத்தவில்லை. வருங்காலத்தில் அரசியல் — சமுதாய உரிமைகளைத் துய்ப் பதற்கு மக்களைத் தயார்படுத்தும் சாதனங்களாகவும் இதழ் களைப் பயன்படுத்தினார். ஆட்சியாளர்களின் ஆதரவுக்கு ஆடி ஓடி அலைகின்ற இன்றைய இதழ்களின் பரிதாப நிலைகள், பழைய இதழ்களுக்கு ஏற்படவில்லை. இந்தியாவில் ஆட்சியைப் பிடித்து வைத்திருந்த ஆங்கிலேயரை எங்கு எப்படிச் சந்திக்க வேண்டுமோ அப்படியே சந்தித்தன.

## பொதுமக்கள் கருத்து வெளிப்பாடு

மக்கள் அறிவுமேம்பாடு (Mass Enlightment) வளர்ச்சி பெற்ற நாட்டில் பொதுமக்கள் கருத்து தெளிவாக உருவாகும். இத்தகைய பொதுமக்கள் கருத்தினை வெளிப்படுத்தும் அறிவுக் களஞ்சியங்களாக இதழ்கள் திகழ்கின்றன. அறிவு விளக்கமில் லாத நாட்டில் குடியாட்சி உணர்வுகள் நிலைத்து நிற்பதில்லை. மேற்கத்திய நாட்டு இதழ்கள் பொதுமக்கள் கருத்தை உரு வாக்கும் வலிமை வாய்ந்த கருவியாகத் திகழ்கின்றன. வியட்னாம் போரில் அமெரிக்க ஈடுபாடு பற்றிய பொதுமக்கள் கருத்தினை இதழ்கள்தாம் வெளிப்படுத்தின. அரசின் தவறான கொள்கை களைத் துணிவோடு இதழ்கள் சுட்டிக்காட்டுகின்றன. அறைக்குள் நடத்திய அமெரிக்காவின் வாட்டர்கேட் ஊழல்களை அம்பலத் திற்குக் கொண்டுவந்து, அரசியல் மாற்றம் ஏற்படுத்தியதில் அந்த நாட்டின் இதழ்கள் பெரும்பங்கு வகித்திருந்தன. ஆதிக்க நாடுகளில் ஜனநாயகத்தை ஊனப்படுத்தி, அதிகாரத்தை முடிசூடிக் கொண்டவர்கள் இதழ்கள் வழியே பொது மக்கள் கருத்து வெளிப்படுவதைத் தடைசெய்தனர். அரசியல், வரலாறு இவை தொடர்பான பாடங்களைப் பள்ளிகளில் கற்றுக் கொடுப்பது நாட்டில் அரசியல் விழிப்புணர்ச்சியைத் தூண்டி விடுமென்று கருதிய முதலாம் நெப்போலியன், தன் ஆட்சிக் காலத்தில் அவற்றைத் தடைசெய்ததுண்டு. ஜெர்மானிய

நாட்டு மக்கள் அறிவு விளக்கம் பெறக் கூடாதென்று இட்லர் இதழ்களைத் தடைசெய்திருந்தார். இவற்றிற்கெல்லாம் மாறுத லாக பொதுமக்கள் கருத்தை அறிந்து கொள்ளும் ஆர்வத் தோடு இதழியலில் பங்கு கொண்டதே தன் அரசியல் வெற்றிக் குக் காரணமென்று சர்ச்சில் நம்பிக்கை கொண்டிருந்தார். பொது மக்கள் கருத்தை எழுச்சி பெறவைப்பது மட்டும் இதழ்களின் பொறுப்பன்று; அவற்றைத் திறனாய்வுக்குட்படுத்தி உடன்பாடு களையும் மாறுபாடுகளையும் வெளிப்படுத்திக் காட்ட வேண்டும்.

**ஜனநாயகத்தில் இதழ்களின் கடமைகள்:**

இதழியல் துறையில் பங்குகொள்ளும் செய்தியாளர், ஆசிரியர், துணையாசிரியர், தலையங்க ஆசிரியர், கருத்துப் படக்காரர் ஆகியோரனைவரும் ஜனநாயகத்தின் அமைப்பு முறைகளை அறிந்திருக்க வேண்டும். தவறான செய்திகளையும், திரித்துக் கூறப்படும் விமர்சனங்களையும் இவர்கள் வெளியிடக் கூடாது. இதழாளர்கள் ஜனநாயகத்தை அரிக்கும் நோய்களைக் கண்டுபிடிக்கும் மருத்துவராகச் செயல்படுவதோடு, அவற்றை அழிக்கும் வழிவகைகளையும் மக்களிடம் பரிந்துரைக்க வேண் டும். மருத்துவ உலகில் தலைசிறந்த மருத்துவரின் முடிவே இறுதி முடிவாக இருப்பதுபோல் ஜனநாயக அமைப்பில் நல்ல இதழாளரின் முடிவுகளே முடிந்த முடிவாக அமைகின்றன. அவ்வப்போது அரசால் கொண்டுவரப்படும் சட்டத்திருத்தங் கள் அடிப்படை உரிமைகளையும், சமுதாய நீதியையும், மக்க ளின் விருப்பத்தையும் பாதிக்காமலிருந்தால் அவற்றை ஆதரிக்க வேண்டும். சட்டத்திருத்தங்கள் பாமரர்களால் தெரிந்து கொள்ள முடியாத அல்லது விரும்பாத ஒன்றாக அமையுங் காலத்தில் இதழ்கள் அதனைப் பற்றிய போதுமான, சரியான தகவல்களைக் கொடுத்து மக்களின் கருத்தைத் திரட்டுவது அவற்றின் கடமை யாகும். எண்ணிக்கையில் கூடியுள்ள இந்திய நாட்டுப் பாமரமக் களைக் கல்வியால் அறிவுறுத்துவதைவிடத் தகவல் தொடர்புச்- சாதனங்களைக் கொண்டு அறிவுறுத்தல் எளிதான செயலாகும். ஜனநாயகப் பொதுமைக் கோட்பாடு (Democratic Socialism) நம் நாட்டில் தோன்றிய போது இதழ்கள் தந்த விளக்கங்களே பாமர மக்களுக்கு அதனைத் தெளிவாக உணர்த்தின. குடியாட்சி அமைப்பில் தேர்தல் என்பது இன்றியமையாத ஒன்று தேர்தல் காலங்களில் செய்தித் தாள்களாக மட்டும் இதழ்கள் செயல் படக்கூடாது. மக்களாட்சியில் தேர்தலின் பங்கு, முறை, வாக்கா ளர்கடமை போன்றவற்றை உணர்த்த வேண்டும். தேர்தல்

காலத்தில் விழிப்புடனும், பொறுப்புடனும் செயல்படும் இதழ்கள் நாட்டில் நிலைத்த ஜனநாயக அரசை அமர்த்துகிறது. ஜனநாயகப் படுகொலைகள், அரசியலில் பழிவாங்கும் உணர்ச்சிகள் எங்கே தோன்றினாலும் மனிதாபிமான அடிப்படையில் இதழ்களே அவற்றைக் கண்டிக்கின்றன. பாகிஸ்தானின் பழைய அதிபர் பூட்டோ தனிப்பட்ட முறையில் நம் நாட்டின் வெறுப்புக்குட்பட்டிருந்தவர் என்றாலும் அவரைத் தூக்கிலிட்டபோது அனைத்து இந்திய இதழ்களும் கண்ணீர் வடித்த நிகழ்ச்சியை மறக்க முடியாது.

ஜனநாயக நாட்டில் இதழ்கள் செயல்பட வேண்டிய மூன்று நெறிகளைக் காந்தியார் வகுத்துள்ளார். அவை,

1. பொதுமக்கள் உணர்ச்சிகளைப் புரிந்துகொண்டு அதனை வெளிப்படுத்துவதே இதழ்களின் நோக்கமாக இருக்க வேண்டும்.
2. சிறந்த உணர்வுகளை மக்களிடையே எழுப்ப வேண்டும்.
3. குறைகளைப் பயமில்லாமல் சுட்டிக்காட்டவேண்டும்.

இதழ்கள் நாட்டு மக்களுக்குத் தகவல்களைத் தொடர்ந்து தருகின்றன; மக்களிடம் பெற்ற மாறுபட்ட கருத்துக்களை வெளியிடுகின்றன; பொதுச் சிக்கலில் மக்களை ஈடுபடச் செய்கின்றன. எனவே, இதழ்களைத் 'தொடர்ந்து நடைபெறும் சட்ட மன்றம்' (Press is a legislature in Continuous Sessions) என்றே கருதலாம். அவை மக்களுக்காகப் பேசுகின்றன; அவர்களின் நலனைக் காக்கின்றன; ஜனநாயக முதுகெலும்பைப் பலப்படுத்துகின்றன. நாட்டின் நாடித்துடிப்பை இதழ்களின் பத்தியில் அறிய முடிகிறது. நாடாளுமன்றத்தின் தீர்மானங்கள் அதன் நான்கு சுவர்களுக்குள் முடங்கிவிடாமல் பொது மக்களின் பார்வை முத்திரை பெறுவதில் இதழ்களின் பங்கு இன்றியமையாத ஒன்றாகும். ஜனநாயக மரபுகளைக் காப்பதில் அரசிற்கும் மக்களுக்கும் இடையே இணைப்புப் பாலமாக அவை அமைந்துள்ளன.

ஜனநாயக அரசு இதழ்களின்மீது எடுக்கும் சில நடவடிக்கைகள் பத்திரிக்கைச் சுதந்திரத்தைப் பாதிப்பதாகக் கருதப் படுகின்றன. அரசு இந்தப் போக்கினைத் தவிர்க்க வேண்டும். இதழ்களும் தனிமனித வழிபாட்டை நிறுத்தி, கட்சிகள் சார்பற்ற நிலையில், மக்கள் நலன் குறித்தே செயல்பட வேண்டும்.

# இதழ்களின் மொழிநடை

இலக்கணமும் இலக்கியமும் தெரியாதான்
ஏடெழுதல் கேடு நல்கும்
— பாரதிதாசன்

செய்தித்தாள்களின் நோக்கம் வாசகர்களுக்குச் செய்திகளை அறிவிப்பதாகும். எனவே, அவர்களுக்குப் புரியுமாறு செய்திகளை எழுத வேண்டும். இன்றையச் செய்தி நாளைய வரலாறாக மாறமுடியும். எனவே அனைவரும் அறிந்திருக்கிற எளிய சொற்களில் தெளிவாகச் செய்திகளைத் தெரிவிப்பதுதான் இதழ்களுக்குரிய மொழிநடையாகும். வாசகர்களுக்கு நடை என்பது மேலோட்டமாகத் தெரியாது. அதைக் காணவேண்டுமென்று விரும்புகிறவர்கள் ஆழமாகத் தேடும்போதே புலப்படுகிறது. செய்தித்தாள் வெளிவருகிற மொழிகளில் செய்தியாளர்கள் அறிவும் திறமையும் பெற்றிருக்க வேண்டும். ஆங்கிலப் புலமையாளர்கள் பணியாற்றுவதால் ஆங்கில நாளிதழ்களில் அம்மொழி முறையாகப் பயன்படுத்தப்படுகிறது. அங்கே இலக்கணம் வழுக்குவதில்லை; நடை கோணுவதில்லை; வழக்குகள் மாறுவதில்லை; கலப்பிற்கும் இடமில்லை.

1890-இல் இங்கிலாந்து நாட்டு ஆல்பர்ட்ஹாம்ஸ் வெர்த், அமெரிக்க நாட்டு வில்லியம் ராண்டால்ப் ஆகிய இருவரும் இதழ்களுக்கு எளிய, நிலையான நடையை வகுத்துத் தந்ததோடு செய்திகளை வெளியிடும் முறைகள் சிலவற்றைப் புகுத்தினார்கள். எல்லா நாட்டு ஆங்கில இதழ்களும் இம்முறைகளை ஏற்றுக் கொண்டுள்ளன. தமிழ் இதழ்களில் மொழிநடை வேறுபடுகின்றது. ஓர் இதழில் நான்கு செய்திகள் வெளியானால் நான்கு வகையான மொழி நடைகளைக் காணுகிறோம். ஆங்கில இதழ்கள் பயன்படுத்தும் மொழிநடைப் பயிற்சிப் புத்தகம் [Style Book] தமிழ் மொழியில் உருவாகாததே இதற்குக் காரணமாகும். தலைப்புகளின் அமைப்பு, நிறுத்தக் குறிகளையிடுதல், செய்திகளைத் தொடங்கும் வகைகள், முடிக்கும் முறைகள், மொழி இலக்கணம் முதலியவற்றைப் பின்பற்றப் பயிற்சிப் புத்தகம் உதவுகிறது. நியூயார்க் டைம்ஸ், கிறிஸ்டின் சைன்ஸ் மானிட்டர், லாஸ் ஏஞ்சல்ஸ் டைம்ஸ் போன்ற உலகின் தலைசிறந்த இதழ்களெல்லாம் தனித்தனியாக மொழிநடைப் பயிற்சிப் புத்தகங்களை உருவாக்கிப் பின்பற்றுகின்றன. எந்தப்

பகுதிகளை எப்படி அமைக்கவேண்டுமென்ற 'நாள் தாள் எழுத்தாளர் கையேடு' ஒன்றைஆதித்தனார் உருவாக்கியுள்ளார். தினத்தந்தியின் ஆசிரியர்கள் எல்லோரும் அதைப் பின்பற்றுவ தால் எல்லாப் பதிப்புகளிலும் ஒரே சீரான நடையைக் காணமுடிகிறது.

ஐம்பது ஆண்டுகட்கு முன்பிருந்த தமிழ் நாள், வார இதழ் களின் நடையினின்று இன்றைய நடை மாறியிருப்பதை அறிய முடிகிறது. மாற்றத்தை விரும்பிய தமிழ்ச் சமுதாயமும் தமிழியக் கங்களும் இதற்குரிய காரணங்களாகும். விடுதலைப் போராட்டக் காலத்தில் புரட்சிக் கவிஞர்களும், உணர்ச்சி எழுத்தாளர்களும் இதழ்களில் ஒன்றுகூடினர். இதன்பிறகு இதழ்களின் உரைநடை ஓட்டமும் ஊட்டமும் ஒருங்கே பெற்றது. இந்தியத் தலைவர்கள் சுட்டெரிக்கும் சொற்களால் இதழ்களில் சுதந்திர உணர்வைச் சித்திரித்துக் காட்டினர். அமைதியின் உருவமான திரு.வி.க. வின் நடையிலுங்கூடக் கடுமையைக் காணமுடிந்தது. ''யான் உருத்திர னானேன்;என்எழுதுகோல் பாசுபதமாயிற்று'' என்றுஅவரே தம் எழுத்து நடைபற்றிக் குறிப்பிட்டுள்ளார். தமிழ்வளமும், மொழி யுணர்வுங் குறைந்திருந்த காலத்தில் நடையாலும் கருத்தாலும் இதழ்களில் புதுப் புரட்சியை உருவாக்கிக்காட்டியவர் திரு.வி.க. ஆவார். சுதேசமித்திரனில் அத்துமீறிய ஆங்கிலச் சொற்களும் வரம்புமீறிய வடமொழிச் சொற்களும் புகுந்து விளையாடின. பாரதியார் சுதேசமித்திரனில் பணியாற்றிய காலத்தில் இவ்விரு மொழிச்சொற்களின் கலப்பு விழுக்காடு குறையலாயிற்று. ஆங் கிலச் சொற்களை அப்படியே எழுதும் வழக்கத்தை மாற்றித் தமிழ்ச் சொற்களைக் கண்டுபிடித்து எழுதினார் பாரதி. என்றா லும் அவை தனித்தமிழ்ச் சொற்களாக அமையவில்லை. டாக்டர் வரதராஜுலுநாயுடு சேலத்தில் தொடங்கிய 'தமிழ்நாடு' (1922) நாளிதழில் நல்ல நடையுடன் தூய தமிழ்ச் சொற்களும் அமைந்திருந்தன. கல்கி நவசக்தியில் பணியாற்றிய போது படித்தோருக்கு நிறைவாகவும், பாமரருக்கு எளிமையாகவும் உள்ள மொழி நடையைப் பயன்படுத்தினார். அவருடைய எழுத்துக்கள் மனத்தைத் தொடும்; அறிவை எட்டிப் பிடிக்கும்; உணர்வில் ஒன்று கூடும். சங்குக் கணேசனின் நடை உணர்வைக் கிளர்ந்து உள்ளத்தில் சென்று பாய்வதாக இருந்தது 'செய்திச் தாளின் மொழிநடை' (Journalese) என்று ஒன்றுண்டு; அதனை டி.எஸ். சொக்கலிங்கம் தினமணியில் வெளிப்படுத்தத் தொடங்கி

னார். மறைமலையடிகளார், நாவலர் சோமசுந்தர பாரதியார், வேங்கடசாமி நாட்டார் போன்றவர்கள் இதழ்களோடு தொடர்பு கொண்ட காலத்தில் ஆழமும்; அண்ணா காலத்தில் அழகும் கொண்டதாகத் தமிழ் இதழ்களின் நடை அமைந் திருந்தது.

## நடைச் சிறப்பு

தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு இதழ்கள் உரிய இடமாக விளங்கின. இலக்கிய உலகில் 'திரு. வி. க. நடை' என்றோர் நடை இருப்பதை அறிவோம். 'தேசபக்தன்' நாளிதழ்தான் அந்நடை உருவாகிய இடமென்று திரு.வி.க குறிப்பிட்டுள்ளார். "தேச பக்தனுக்கென்று ஒரு தனி நடை கொண்டேன். சிறுசிறு வாக்கி யங்கள் அமைக்கலானேன். அந்நடையை நாடோறும் எழுதி யெழுதிப் பண்பட்டமையால் அதுவே எனக்குரிய இயற்கை யாகியது"— என்று அவர் தெரிவிக்கின்றபோது உரைநடை வளர்ச்சிக்கு இதழ்கள் உதவமுடியும் என்ற உண்மை வெளிப் படுகிறது. நவசக்தி, தேசபக்தன் என்ற இரண்டு நாளிதழ்களில் மொழி, நடை, செய்தியமைப்பு ஆகிய இவை மூன்றும் மிகச் சிறப்புற்றிருந்தன. இவற்றுடன் செய்திக் கருத்துக்களின் தொகுப்பு, கவர்ச்சியான தலைப்பு, சுருக்கமான உட்குறிப்பு கள், தெளிவான விளக்கம், சிறிய தொடர்கள் இவற்றையும் பின்பற்றித் தரமான செய்தித்தாள்களை திரு.வி.க. நடத்திக் காட்டினார். இம்முறையைப் பின்பற்றி மதுரையிலிருந்து 'தமிழ் நாடு' என்னும் நாளிதழ் 1951-இல் வெளிவரத் தொடங்கியது. நூற்றுக்கு நூறு பிறமொழிக் கலப்பின்றி நடைச் சிறப்புடன் நாளிதழை வெளியிட முடியும் என்பதற்கான எடுத்துக் காட்டித மூாகத் தமிழ்நாடு அமைந்திருந்தது. கலப்பு நடையைக் கொண் டிருந்த தினமணி கொஞ்சங் கொஞ்சமாக அந்நடையிலிருந்து மாறி வருகிறது. 'வெகுஜன நடை' எனப்படும் பொதுமக்கள் நடையைத் தினத்தந்தி முழுமையாக உரிமையாக்கிக்கொண்டது. தினமலரின் நடை நேருக்கு நேர் பேசுவதைப் போன்றிருக்கிறது. இதன் வட்டார வழக்குச் சொற்கள் சில நேரங்களில் புரியாம லிருந்தன. நெல்லையைத் தவிர மற்ற இடங்களிலும் பதிப்புகள் வெளியான பின்பு இக்குறை நீங்கி விட்டது. செந்தமிழ் நடையில் தொடங்கிய இதழகள் இலக்கிய நடையில் புகுந்து, பேச்சு மொழி நடைக்கு வந்து சேர்ந்திருக்கின்றன. இதழ்களின் நடை மனித னின் விருப்பு வெறுப்புக்களையும் உணர்த்துகிறது. நடையை

வைத்து எழுத்தாளனை இனங்கண்டு கொள்ள முடிகிறது. ஒரு இதழ் தன் நடையிலிருந்து மாறினால் அம்மாற்றமே இதழின் உட்கருத்தை வாசகர்களுக்கு உணர்த்தி விடும். அரசியல் இதழ்கள் இதற்குச் சான்றுகளாய் விளங்குகின்றன.

## மொழி வழக்கு

இலக்கிய மொழிவழக்கு இதழ்களுக்குப் பொருந்தாது. கொச்சைச் சொற்கள் இல்லாத பேச்சு வழக்கிலேயே இதழ்கள் வெளிவரவேண்டும். பேச்சு மொழி என்பது செய்தித்தாள்களைப் படிக்கின்றவர்களின் வழக்கில் வழங்குகின்ற சொற்களைக் கொண்டதாகும். 'ஈருருளை வண்டியுடன் பேருந்து மோதியது' என்று எழுதுவது பேச்சு வழக்கிற்கு மாறுபட்டதாகும். தினத்தந்தியில் இலக்கியத்தரம் இல்லை என்று குறை கூறுகின்றவர்களிடம் 'நாங்கள் செய்திதான் எழுதுகின்றோம்; திருக்குறளை எழுதவில்லை' என்று அதன் உரிமையாளர் கூறுவாராம். மொழி வழக்கினைப் போன்று ஒலிவழக்கிலும் இன்னும் சில மாற்றங்கள் ஏற்பட வேண்டும். 'ஔவை', 'சௌடாம்பிகை' என்ற சொற்களை முறையே 'அவ்வை', 'சவுடாம்பிகை' என்றே எழுதலாம். வடமொழி எழுத்துக்களை நீக்கி எழுதும் போது பொருள் மாறுபாடு வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். 'முதலமைச்சர் எம். சி. ஆர்', 'செகப்பிரியர்' என்றெல்லாம் எழுதும் போது ஆள் மாறாட்டம் ஏற்பட வழியுண்டு. மொழி வழக்கில் பயன்படுத்தாத அல்லது பயன்படுத்தக் கூடாத சொற்களைத் தவிர்த்து விடவேண்டும். 'அக்காலத்தில் திரு.எஸ்.எஸ். வாசன் 'பிணம்', 'கோழை', 'சாம்பல்' என்பன போன்ற சொற்களை அமங்கலச் சொற்களாகக் கருதி இவை போன்றசொற்கள் ஆனந்தவிகடனில் வெளிவராமல் தவிர்க்க விரும்புவாராம்'.*

## சொற்றொடர்

வீணான சொல்லடுக்குகளும் கடுமையான சொற்றொடர்களும் செய்தித்தாள்கள் பயன்படுத்த வேண்டாதவை. செய்தியில் வேகம் இருக்க வேண்டுமானால் தேவையற்ற சொற்றொடர்களை நீக்கிவிட வேண்டும். திரு.வி.க.வின் இதழ்கள் வருவதற்கு முன்புவரை நீண்ட சொற்றொடர்களே இதழ்களில் இடம் பெற்றன. இஃது அக்காலத்துத் தமிழ்நடையாகவே அமைந்திருந்தது. பல நிலைகளில் மாற்றங் கண்டு வரும்

---

* சோம.லெ. தமிழ் இதழ்கள் – பக். 43.

இக்கால இதழ்களில் நீண்ட தொடர்கள் தேவையில்லை. சொற்றொடர் அமைப்பில் கவனமில்லாவிடின் செய்தியே மாறிவிடும். ‘சேலம் சப் இன்ஸ்பெக்டர் கள்ள நோட்டு அடித்துக் கொண்டிருந்த போது இக் கும்பலைக் கைது செய்தார்’ என்ற தொடரமைப்பு தவறான கருத்தை உண்டாக்குகிறது. அறிவித்தார், தெரிவித்தார், கூறினார், சொன்னார் என்பன போன்ற ஒரே-பொருளைத் தரும்சொற்களைக் கலந்து பயன்படுத்த வேண்டும். விதவிதமான தொடர்களை வெளிப்படுத்த வேண்டும்,ஓரிடத்தில் விலை குறைந்தது என்றிருந்தால் மற்றோரிடத்தில் விலை இறங்கியது. என்றிருக்க வேண்டும். செயப்பாட்டு வினைத்தொடர்களில செய்திகளைத் தராமல் நேரடிச் சொற்றொடரில் தெரிவிப்பதே தெளிவாக அமையும்.

## பிறமொழிச் சொற்கள்

ஆங்கில மொழியை வைத்துப் பிழைக்க விரும்பிய போதும் பெருமைதேட விரும்பியபோதும் தமிழர்கள் பல துறைகளில் அம்மொழியைப் பரப்பி விட்டனர். இதன் தாக்கத்தைச் செய்தித்தாள்களில்தாம் முற்றிலுமாகக் காணமுடிந்தது, சிலர், கருத்து வேகத்திற்குக் கலப்பு நடையே வேண்டுமென்றனர். பொருள் விளக்கத்திற்காகப் பலமொழிச் சொற்களை வாரி இறைத்தனர். செய்திகளை வேற்று மொழியில் பெறுவதாலும் விரைவாக வெளியிட வேண்டியதிருப்பதாலும் மொழிக் கலப்பு நீக்க முடியாதது என்பது சிலரது வாதமாக இருந்தது. “செய்திகள் எல்லாம் ஆங்கிலததில வருவதால் ஆங்கிலப பத்திரிகை நடத்துபவர்களுக்கு மொழி பெயர்க்க வேணடிய சிரமம கிடையாது. தமிழப் பத்திரிகைதான் அதை மொழிபெயர்த்தாக வேணடும. சாவகாசமாக யோசித்து ஒரு தமிழ் வார்த்தையைக கண்டு பிடிக்கலாம் என்ற பேச்சுககே இடமில்லை” ‡ எனபது ஓரளவிற்கு உண்மையாயிருக்கலாம்; ஆனால் பேரளவிற்குப் பிறமொழிச் சொற்களைச் செய்தித்தாளகள் புகுத்தியதறகு அது காரணமாக அமையாது. ஈழம், மலேசியா, சிங்கப்பூர் ஆகிய-நாடுகளில் வெளியாகும் தமிழ் இதழ்களில் இல்லாத மொழிக் கலப்பு தமிழ் நாட்டு இதழ்களில் மட்டும் மிகுந்திருப்பது வியப்பாக உள்ளது.

ஐம்பதாண்டுகளுக்கு முன்னால் சுதேசமித்திரனில் ஆங்கிலச் சொற்கள் மிகுதியாகக் காணப்பட்டன. ‘ஹிஸ் எக்ஸெல்லென்ஸி

‡ டி. எஸ். சொக்கலிங்கம் — எனது இராஜினாமா.

கவர்னர்', 'யுவர் மெஜஸ்டிஸ்', 'ஒபீடியண்ட் சேர்வண்ட்' போன்ற சொற்களை வெளியிட்டபோது 'சுதேசமித்திரன் அறிவைப் பரப்புகிறதா அல்லது ஆங்கிலமொழியைப் பரப்புகிறதா?' என்று சுப்பிரமணிய சிவா தம் இதழில் எழுதிக் கண்டித்திருந்தார். தினமணி 'மோட்டார் விபத்தில் ஸ்திரி மரணம்', 'திருச்சி ஜில்லாவுக்கு மே மாதம் காவேரி ஜலசப்ளை' என்றெல்லாம் எழுதியதோடு ஹேஷ்யம், மகஜர், ஜரூர், ஷரத்து, கனம் அக்ராசனர், ஸ்ரீமான் ஹைகோர்ட் ஜட்ஜ், சகஜ நிலை, விஷயதானம், பார்லிமெண்டு, சர்வ கலாசாலை, லோக்சபா என்பன போன்ற பிறமொழிச் சொற்களையும் வலிந்து பயன்படுத்தி வந்தது. அண்மைக் காலத்தில் தினமணி பிறமொழிச் சொற்களைச் சற்றுக் குறைத்திருப்பது போல் தோன்றுகிறது. கவர்னர், பட்ஜெட், மேயர் முதலிய சொற்கள் தமிழ் நாளிதழ்களின் உரிமைச் சொற்களாய் உலவிவருகின்றன. வழக்கில் அழுத்தமாக ஊன்றிவிட்ட இச்சொற்களை இதழ்கள் மாற்றிக் கொள்ள இயலா நிலையில் உள்ளன. ஆனால், அதிகமாக மக்கள் வழக்கின் உள்ள சட்டமன்றம், அஞ்சலகம், உணவு விடுதி, கட்டணம், காசாளர், ஒலி பெருக்கி, தலைமைச் செயலகம், நிலக்கொடை, செய்தித்தாள், அச்சகம், பதிப்பாளர், பல்கலைக்கழகம் முதலிய சொற்களை இதழ்கள் பயன்படுத்தாமல் இவற்றுக்குரிய வேற்றுமொழிச் சொற்களைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பது கண்டிக்க வேண்டிய ஒன்றாகும்.

## இலக்கணப் பிழைகள்

செய்தித்தாள்கள் இலக்கண மரபிலே முழுமையாகக் கட்டுப்பட்டுக் கிடக்க வேண்டும் என்பதில்லாவிட்டாலும், அடிப்படை இலக்கணத்தை விட்டுக் கொடுக்கக் கூடாது என்ற எண்ணத்தில் செயல்பட வேண்டும். இலக்கணம் என்று ஒன்றிருப்பதைத் தமிழ் இதழ்கள் நினைத்துப் பார்ப்பதே இல்லை ஒற்றுக்கள், பன்மை விகுதி, மொழிக்கு முதலில் வராத எழுத்துக்கள், வல்லின, இடையின வேறுபாடுகள் முதலியவற்றை இதழகள் கண்டு கொள்வதே இல்லை. இப் பிழைகள் யாவும் மொழியறிவு இல்லாத இதழாசிரியரின் குறைகளேயாகும். ஒற்றுப் பிழைகள் கருத்துப் பிழைகளாக மாறுமென்பதை உணராத வரை அவை நீங்க வழியில்லை. சொற்சுருக்கம் காரணமாக இதழ்களில் மொழி இலக்கணத்தை மறந்து விடுகிறார்கள்.

மொழிப் பரப்புதலுக்கு இதழ்கள் வலிமையான சாதனங்க ளாகும். அவை பரப்பும் தவறான மொழியமைப்பு வழக்கிற்கு வரும்போது மொழிக் கொலையாக முடிந்துவிடும். தாய் மொழியின் முறையான வளர்ச்சியை வணிகக் காற்றில் பறக்க விட்டுவிட்டுச் சந்தடி சாக்கில் வந்தது இலாபமெனக் கருதுவது மொழியிதழ்களுக்கு நல்லதன்று.

சொல்வளத்தை வெளிப்படுத்துவதும் புதிய சொற்களை உருவாக்குவதும் மொழிவளர்ச்சியாகக் கருதப்படுவதால் செய் தித்தாள்களுக்குத் தமிழை வளர்க்கும் பொறுப்பு உண்டு. நவ சக்தி, தேசபக்தன், தமிழ்நாடு போன்ற இதழ்கள் இதை உணர்ந்திருந்தன. ''இன்று சங்கம் இல்லை; மன்னர்கள் இல்லை; தமிழை வளர்க்கப் பத்திரிகைகள் இருக்கின்றன. அரசாங்கமும் வளர்க்க முன்வந்திருக்கிறது ஆனால் அது நின்று நிதான மாகத்தான் வேலை செய்யும். பத்திரிகைகளோ அருவி வேகத் தில் வேலை செய்கின்றன''* என்ற கூற்றை இன்றைய இதழ் கள் எந்த அளவிற்கு உண்மையாக்கப் போகின்றன என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

---

* கி. வா. ஜகந்நாதன். நவமணி *(10-9-1960)*

# இதழ்கள் தொடர்பான சட்டங்கள்

வெளியீடுகளின் வலிமையைவிட அவற்றின் பொறுப்புணர்வில் எனக்கு மிகுதியான நம்பிக்கை உண்டு.

—ரோஸ்பெரி பிரபு

குடியாட்சி நாட்டில் குடிமகனுக்கும் இதழ்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கும் பேச்சுரிமையும், எழுத்துரிமையும் பொதுவானவை. சட்டத்திற்குப் புறம்பாக நடக்காதவரை தனி மனிதன் நாட்டின் குடிமகனாகவும் இதழ்கள் உரிமைபெற்ற மக்கள் தொடர்புச் சாதனமாகவும் விளங்குகின்றன. அவ்வாறன்றிக் கட்டுப்பாடற்ற முறையில் செயல் படும்போது நாட்டின் நலன் கருதி அரசு வகுத்திருக்கும் சட்டங்களைச் சந்திக்க வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாக நேரிடுகிறது. பொது மக்களுக்கு எல்லாச் செய்திகளையும் தருவது இதழின் மரபானால் சிலவற்றைத் தரக்கூடாது என்பது அரசின் சட்டமாக உள்ளது. முன் அனுமதியின்றிச் செய்திகளை வெளியிடும் உரிமையைப் பத்திரிகைச் சுதந்திரமாக இதழ்கள் பெற்றுள்ளன. சில சட்ட வரையறைகளுக்கு உட்பட்டே இந்த உரிமைகளைப் பயன்படுத்த வேண்டுமென்று அரசு விரும்புகிறது. வயலுக்குப் பாதுகாப்பாகவும், உடையவனுக்கு உரிமை தருவதாகவும் அமைகின்ற வேலி போலக் குடியாட்சி நாடுகளில் சட்டத்திற்குட்பட்ட பத்திரிகைச் சுதந்திரம் அமைந்திருக்கிறது. இதழியல் துறை பிற சமூகத் துறைகளைப் போன்று எல்லா வளர்ச்சிகளையும் பெற்றிருப்பதால், அரசு வகுத்திருக்கும் சமூகச் சட்டங்களுக்கு உட்பட்டே இயங்க வேண்டியதிருக்கிறது. மக்களனைவரும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். நாட்டு நிகழ்ச்சிகளையும் சமுதாயச் செய்திகளையும் நாடித் துடிப்பாகக் கொண்ட நாளிதழ்களும் சட்டத்திற்குக் கட்டுப் பட்டவை என்ற நிலையில் சட்டம் புறக்கணிக்க முடியாத ஒன்றாகும்.

செய்தித் துறையினர் எல்லா வகையிலும் பொறுப்புடையவர்கள். அவர்களைப் பாதிக்கின்ற சட்டங்களைப் பற்றிய தெளிவான அறிவு அவர்களுக்கு வேண்டும். தனிமனித அவதூறு, நீதிமன்ற அவமதிப்பு, குற்றம் புரியத் தூண்டுதல், நெருக்கடிக் காலத்தில் அரசிற்குப் புறம்பாகச் செயல்படுதல், உள்நாட்டுப்

பாதுகாப்பிற்கும் வெளிநாட்டு உறவுக்கும் தீங்கான செய்தி களைப் பரப்புதல் முதலியவற்றைச் செய்தித்தாள்களின் குற்ற மாக அரசு கருதுகிறது. இக்குற்றங்களின் அடிப்படையில் வழக்குத் தொடர்ந்து தண்டனையளிக்க அரசியல் சட்டப் பிரிவு கள் இடந்தருகின்றன. இவை தவிர, தொழில் முறைச் சட்டங் கள் சிலவற்றையும் நடைமுறையில் காணுகிறோம்.

## ஆங்கிலேயர் காலச் சட்டங்கள்

இதழியல் துறை ஆங்கிலேயர் ஆட்சியின் போது இந்தியா விற்கு அறிமுகப்படுத்தப்பட்டது. இதழ்களைக் கண்காணிப்ப தும், செய்தித் துறையைக் கட்டுப்படுத்தச் சட்டங்கள் இயற்று வதும் ஆங்கில அரசின் அன்றாடச் செயல்களாய் இருந்தன. பிறர் அறியாதிருக்கும் முறையில் அல்லது புரியாதிருக்கும் வகை யில் ஆங்கிலச் சட்டங்கள் வாழைப்பழத்துள் ஊசிகளாய் இறங் கிக் கொண்டிருந்தன. செய்தித் துறையின் நடைமுறையில் இன்று உள்ள சட்டங்களில் பல ஆங்கில அரசினால் கொண்டுவரப்பட்ட வையே. இச்சட்டங்களின் முக்கியக் குறிக்கோள் அரசை எதிர்த் துக் குரல் எழுப்பும் இதழ்களின் குரல்வளையை நெரிப்பதாகும். 1766-இல் இந்தியாவில் முதல் செய்தித்தாளைத் தொடங்க முயன்ற வில்லியம் போல்ட்ஸ் ஆங்கிலேயர்களின் பிடிக்குள் அடங்காதபோது நாடு கடத்தப்பட்டார். அடுத்துத் தோன்றிய ‘பெங்கால் கெஜட்’ ஆசிரியர் ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி அடைந்த துன்பம் சொல்லுந் தரமன்று. வாரன் ஹேஸ்டிங்ஸ் இரண்டே ஆண்டுகளில் பெங்கால் கெஜட்டை ஒழித்தபின்புதான் நிம்மதி யடைந்தார். இவை சட்டங்கள் இல்லாத காலத்தில் நடந்த கொடுமைகளாகும்.

வெல்லெஸ்லி பிரபு செய்தித்தாள்களைக் கட்டுப் படுத்தக் கொண்டுவந்த ஐந்து அம்சத் திட்டம் கல்கத்தாவின் வில்லியம் கோட்டையிலிருந்து 1799-இல் வெளியானது. அவை

1. செய்தித்தாள்களின் கடைசிப் பக்கத்தில் அச்சிடுவோர் பெயரைக் குறிப்பிட வேண்டும்.
2. இதழ் உரிமையாளர் அரசின் தலைமைச் செயலருக்கு முகவரியைத் தெரிவிக்க வேண்டும்.
3. ஞாயிற்றுக் கிழமைகளில் இதழ்களை வெளியிடக் கூடாது.

4. அரசின் தலைமைச் செயலகம் அனுமதி கொடுத்த பின்புதான் இதழ்களை வெளியிட வேண்டும்.
5. மேற்கண்ட நான்கு அம்சத் திட்டத்தை நிறைவேற்றா தவர்கள் நாடு கடத்தப் படுவார்கள்.

இத்திட்டம் வந்த பின்பு ஆட்சியாளர் கிழக்கிந்தியக் குழுமம், இராணுவம், கப்பல் போக்குவரத்து முதலியவை பற்றிச்செய்தித் தாள்கள் வெளிப்படையாக எழுதமுடியவில்லை. ஓய்வு நாளில் நிதானமாகச் செய்தித் தாள்களைப் படித்து முடித்தால் அரசிற்கு எதிரான சிந்தனைகள் ஒன்றுகுவியும் என்பதால் ஞாயிற்றுக் கிழமைகளில் வெளிவரும் வார இதழ் களைத் தடைசெய்து விட்டனர். கல்கத்தாவிலிருந்து வெளி யான கல்கத்தா கூரியர் வெள்ளிக்கிழமை தோறும் வெளிவரத் தொடங்கியது. ஆசியாட்டிக் மிர்ரர் புதன் கிழமைக்கும், ஓரியண்டல் ஸ்டார் சனிக்கிழமைக்கும் வெளியிடும் நாளை மாற்றிக் கொண்டன.

1800-இல் பிறப்பிக்கப்பட்ட சட்டமொன்று, செய்தித் தாள் உரிமையாளர்களை அஞ்சல் தலைக்குரிய பாதுகாப்புக் கட்டணத்தைக் கட்டுமாறு வற்புறுத்தியது. கட்ட மறுத்த இதழ்களை அஞ்சலகங்கள் ஏற்றுக்கொள்வதில்லை.

**1823-ஆம் ஆண்டு, செய்தித் தாள் அவசரச் சட்டம்**

ஆங்கில ஆளுநர் ஆடம்ஸ் கொண்டுவந்த 'ஆடம்ஸ் ஒழுங்கு படுத்தும் சட்டம்' (Adam's Regulations Act of 1823) என்பதே செய்தித்தாள்களுக்கான முதல் அவசரச் சட்டமாகும். சம்பாத் கௌமதி, மீரட்-அல்-அக்பர் ஆகிய இதழ்களில் இராசா ராம் மோகன்ராய் எழுதிய தலையகங்களின் விளைவாக இச்சட்டம் வந்தது. செய்தித்தாள்களின் மீது ஆடம்ஸ்தான் முதன் முதலாகத் திட்டவட்டமான கட்டுப்பாடுகளைக் கொணர்ந் தார். விளம்பரம், விலைப்பட்டியல், போக்குவரத்துச் செய்தி கள் இவற்றைத் தவிரப் பிற செய்திகளை வெளியிட அரசுத் தலைமைச் செயலாளரிடம் அனுமதி பெற வேண்டும். கொடுத்த அனுமதியை நீக்கும் அதிகாரம் ஆளுநருக்கு உண்டு. அச்சிட்ட இதழின் ஒரு படியினை உள்ளூர் நீதிமன்ற நடுவருக்கு அனுப்பி வைக்க வேண்டும். அனுமதியின்றிச் செய்தித்தாள்களை வெளியிட்டால் தண்டத் தொகையாக நானூறு ரூபாய் அல்லது நான்கு மாதச் சிறைத் தண்டனை வழங்கப்படும்.

இச் சட்டத்தின் கடுமையால் இந்திய இதழியல் துறையின் வளர்ச்சிக் காலத்தில் முனைந்து செயலாற்றிய பக்கிம்காம், ஆடம்ஸ் ஆகியோர் பாதிக்கப்பட்டு இங்கிலாந்துக்குச் சென்று விட்டனர்.

**1835 - ஆம் ஆண்டு செய்தித்தாள் பதிவுச் சட்டம் [Act No. 11 of 1835]**

'கிழக்கிந்தியக் குழுமத்தின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் இச்சட்டம் செல்லுபடியாகும்' என்ற அறிவிப்போடு சார்லஸ் மெக்காஃப் காலத்தில் வந்தது இச் சட்டம். இதன் சரத்துக்கள் கடுமையாக இல்லாது வங்காளம், பம்பாய், சென்னை ஆகிய இடங்களின் செய்தித்தாள்களுக்குரியதாயிருந்த சில கட்டுப்பாடுகளைத் தளர்த்துவதாக அமைந்திருந்தன. இச்சட்டத்தின்படி அச்சகர், வெளியிடுபவர் இருவரும் தங்கள் பெயர், அச்சகம் அமைந்திருக்கும் இடம், பதிப்பிக்கும் இடம் ஆகிய விவரங்கள் அடங்கிய அறிக்கை ஒன்றை அளிக்க வேண்டும். தவறியவர்களுக்கு ஐயாயிரம் ரூபாய் தண்டமும், இரண்டு ஆண்டுச் சிறைத் தண்டனையும் உண்டு. 1858 - இல் விக்டோரியா அரசியார் ஆட்சிப் பொறுப்பேற்ற பின்பு, இந்திய ஆளுநர்களாயிருந்த கானிங் பிரபு, எல்சின் பிரபு, இராபர்டு நேப்பியர், வில்லியம் டல்ஜன் போன்றவர்கள் செய்தித்தாள்களைச் சட்டங்களினால் கசக்கிப் பிழியவில்லை. '1867 - ஆம் ஆண்டுச் சட்டம் எண் - 25' என்னுமோர் சட்டத்தினால் மெக்காஃப் சட்டம் சில திருத்தங்களைப் பெற்றது. மேலும் சில திருத்தங்களைப் பெற்று இன்றும் இச்சட்டம் நடைமுறையில் உள்ளது. இதன் சரத்துக்களாவன.

1. அச்சகம் வைத்திருப்பவர் நீதிபதி ஒருவர்முன் உறுதி மொழிப் பத்திரம் கொடுக்க வேண்டும்.

2. அச்சக உரிமையாளரும் பதிப்பாளரும் அச்சிடும், வெளியிடுமிடங்களை அரசுக்கு அறிவிக்க வேண்டும்.

3. அச்சிட்ட இதழ்களின் இரண்டு படிகளை அரசுக்கு அளிக்க வேண்டும்.

4. தவறுகின்றவர்களுக்கு ரூபாய் இரண்டாயிரம் தண்டம் அல்லது ஆறு திங்கள் சிறைத் தண்டனை வழங்கப்படும்.

**1857-ஆம் ஆண்டு இதழ்கள் சட்டம் எண் - 15**

இந்தியாவின் முதல் சுதந்திரப் போர் 1857-இல் சிப்பாய்க் கலகமாக மீரட்டில் தொடங்கியது. மதச் சுதந்திரத்தில் தலையிட்டதாக ஆங்கில அரசின்மீது மன வருத்தங்கொண்ட இந்து, முசுலீம் சிப்பாய்கள் கலகம் செய்யத் தொடங்கினர். செய்தித்தாள்களில் சிப்பாய்க் கலகத்தை ஆதரித்துச் செய்திகளும் தலையங்கங்களும் வெளிவந்தன. எனவே செய்தித்தாள்களைக் கட்டுப்படுத்த அரசு இச்சட்டத்தைக்கொண்டுவந்தது. சட்டநடைமுறைகள் மிகக் கடுமையாக இருந்தமையால் இச்சட்டத்தை 'வாய்ப்பூட்டுச் சட்டம்' [Gagging Act] என்றே இந்தியர்கள் பெயரிட்டு அழைத்தனர். இதன்படி, 1) அச்சகம் அமைக்க அனுமதி பெறவேண்டும். 2) ஆங்கில அரசின்மீது வெறுப்புணர்ச்சியுண்டாக்கும் செய்திகள் தடைசெய்யப்படும். 1823-ஆம் ஆண்டு ஆடம்ஸ் ஒழுங்குபடுத்துச் சட்டத்தின் முக்கிய பிரிவுகளுக்கு இச்சட்டம் மீண்டும் உயிர் கொடுப்பதாக அமைந்தது. பெங்கால் ஹாரகாரு என்ற செய்தித்தாளின்உரிமம் ரத்துச்செய்யப்பட்டது. சுல்தான் - அல் - அக்பர், சமாச்சார் ஆகிய இதழ்களின்உரிமையாளர்கள் தண்டிக்கப்பட்டனர். பிரஸ்ஆப் இந்தியா, பாம்பே டைம்ஸ் இரண்டும் நிறுத்தப்பட்டன. பண்டிட் ஈஸ்வர் சந்திர வித்யாசாகர் தொடங்கிய சோம்பிரகாஷ் என்ற வங்காள இதழ் தடை செய்யப்பட்டது. 1882-இல் ரிப்பன் பிரபு இச்சட்டத்தை நீக்கும்வரை அஃது ஆடாத ஆட்டமெல்லாம் ஆடியது.

**1870-ஆம் ஆண்டுச் சட்டம் எண்-27**

ஜான் லாரென்ஸ், மேயோ பிரபு இருவரும் இச்சட்டத்தைக் கொணர்ந்தனர். இதன்படி ஆங்கில ஆட்சிக்குட்பட்ட இந்தியாவின் சட்டபூர்வ அரசின்மேல் வெறுப்புணர்ச்சியை உண்டாக்கும் முறையில் செய்தித்தாளில் எழுதினால் இதழாசிரியர்கள் நாடு கடத்தப்படுவர் அல்லது மூன்று ஆண்டுகள் சிறைத் தண்டனை அளிக்கப்படுவர். இச்சட்டமே பின்பு இ. பி. கோ. 124-A என்ற பிரிவாகச் சேர்க்கப்பட்டதோடு இ.பி.கோ. 153-A, இ.பி.கோ. 505 ஆகிய பிரிவுகளிலும் இணைக்கப்பட்டது.

**1872 - ஆம் ஆண்டுச் சான்றாதாரச் சட்டம்**
**[Evidence Act 1872]**

ஏதாவதொரு வழக்கில் இதழ்களில் வந்த வழக்குத்தொடர்பான செய்திகளைச் சான்றாதாரமாக எடுத்துக் காட்டலாம். வழக்கு மன்றம் அச்செய்தியினை ஏற்றுக் கொள்கின்றது.

**1878-ஆம் ஆண்டு, இந்தியமொழி இதழ்கள் சட்டம் (The Vernacular Press Act of 1878]**

தலைமை ஆளுநர் லிட்டன் பிரபு காலத்தில் இந்தியமொழி இதழ்கள் ஆங்கில அரசைக் கடுமையாகத் தாக்கி எழுதின. சட்டத்தினால் இதனைத் தடுத்து நிறுத்தாவிடின் ஆங்கில அதிகாரிகளுக்கு ஆபத்து வரலாமென்று லிட்டன் பிரபு இங்கிலாந்து நாடாளு மன்றத்திற்குத் தெரிவித்து ஒப்புதல் பெற்றார். இச்சட்டத்தின்படி இதழ்கள் குறிப்பிட்டதொரு தொகையைப் பிணையமாகக் கட்ட வேண்டும்; அரசாங்கத்தின்மீது வெறுப்பு உண்டாகும்படி எழுதக் கூடாது; இனம், மதம், சாதி இவற்றினடிப்படையில் கலவரத்தைத் தூண்டும் முறையில் செய்திகள் வெளிவரக்கூடாது. மேற்கண்ட கட்டுப்பாடுகளை ஒப்புக்கொள்வதாக அச்சிடுபவர், வெளியீட்டாளர் இருவரும் நீதிமன்ற நடுவர் அல்லது காவல் துறை அதிகாரியிடம் உறுதிமொழிப் பத்திரம் ஒன்றை எழுதிக் கொடுக்க வேண்டும். அச்சகங்களையும் இதழ்களையும் பறிமுதல் செய்யும் அதிகாரம் இவர்களிருவருக்கும் உண்டு. இந்த நடவடிக்கைகளை எதிர்த்து எந்த வழக்கு மன்றத்திற்கும் போக முடியாது. இச்சட்டத்தை மீறுகிறவர்களுக்கு முதலில் எச்சரிக்கை அறிவிப்பு வரும். மறுபடியும் தொடர்ந்தால் பிணையத் தொகையை இழப்பதோடு அபராதமும் சிறைத் தண்டனையும் அளிக்கப்படும்.

இந்திய மொழி இதழ்களுக்கு இச்சட்டம் பெருத்த அடியாக அமைந்தது. சென்னையில் தாய்மொழி இதழ்கள் அதிகம் இல்லாததால் இச்சட்டம் அங்கு நடைமுறைப் படுத்தப்படவில்லை. வங்காள மொழியில் வெளிவந்து கொண்டிருந்த அமிர்த பஜார் பத்திரிகா இச்சட்டத்திலிருந்து தப்புவதற்காகவே அமுலுக்கு வந்த அன்று இரவே ஆங்கிலமொழி நாளிதழாக மாறிவிட்டது. இங்கிலாந்து நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சித் தலைவர் கிளாட்ஸன் பிரபு இச்சட்டத்தினைக் கடுமையாக எதிர்த்துப் பேசினார். இங்கிலாந்து நாட்டின் பிரதமராக கிளாட்ஸன் வந்த பிறகு அவருடைய ஆலோசனையின்படி ரிப்பன் பிரபு 1881-இல் இச்சட்டத்தைத் திரும்பப் பெற்றார்.

**1908-ஆம் ஆண்டு, குற்றத் தூண்டுதல் தடுப்புச் சட்டம் (Incitement to affences Act of 1908)**

கொலை செய்தல் அல்லது பிற குற்றங்களைத் தூண்டுகின்ற செய்திகளைத் தடைசெய்வதற்காக இச்சட்டம் கொண்டு.

வரப்பட்டது. வன்முறை, கொலைக் குற்றம் முதலியவற்றைத் தூண்டும் செய்திகள், கட்டுரைகள் ஆகியவற்றை வெளியிடும் செய்தித்தாள்களின் மீது அரசு நீதிமன்றத்தில் முறையிட்டால் சம்பந்தப்பட்ட செய்தித்தாளினையும் அச்சகத்தையும் பறிமுதல் செய்யும் அதிகாரம் நீதிமன்ற நடுவருக்கு இருந்தது. தீர்ப்பினை எதிர்த்து நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்யப் பதினைந்து நாட்கள் அவகாசம் கொடுக்கப்பட்டது.

இச்சட்டத்தின்படி பம்பாயில் ஒன்றும், பஞ்சாபில் இரண்டும், வங்காளத்தில் நான்குமாக ஏழு அச்சகங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. குற்றத் தூண்டுதல் செய்திகளை வெளியிட்டதாகப் பறிமுதல் செய்யப்பட்ட செய்தித்தாள்கள், அச்சகங்கள் ஆகியவற்றின் மொத்த எண்ணிக்கை 963 ஆகும். முதல் ஐந்து ஆண்டுகளில் மட்டும் அரசுக்குப் பிணையத் தொகையாக ஐந்து இலட்சம் ரூபாய் கிடைத்தது.

**1910-ஆம் ஆண்டு இதழ்கள் சட்டம்**
**[The Press Act of 1910]**

இந்திய தேசியக் காங்கிரசு வலிமை வாய்ந்த இயக்கமாகி விடுதலை வேண்டிப் போராடியபோது இந்திய இதழ்கள் மக்களிடையே விடுதலை உணர்வைத் தூண்டின. ஆங்கில அரசினால் இதனைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. 1908-ஆம் ஆண்டுச் சட்டத்தை வலிமையற்றதெனக் கருதிய அரசு கடுமையானதொரு சட்டத்தினை 1910-இல் கொணர்ந்தது. இச்சட்டம் பதினாறு வகைக் குற்றங்களை வகைப்படுத்தி வெளிவந்தது. இச்சட்டத்தின்படி ஐந்நூறு முதல் இரண்டாயிரம் ரூபாய் வரை பிணையத்தொகை கட்டவேண்டியதிருந்தது. அரசுக்கு எதிரான செய்திகளை வெளியிடும் இதழ்களின் பிணையத் தொகையை உடனடியாக இழக்கச் செய்யும் விதி முறைசேர்க்கப்பட்டது. ஒரே குற்றத்தை மீண்டும் செய்தால் பிணையத் தொகையை இழப்பதோடு அச்சகத்தையும் இழக்க நேரிடும். அரசிற்குப் புறம்பான செய்திகள் வெளிவந்திருப்பதை அறிந்தால் செய்தித்தாள்களை நிறுத்திவைக்கும் அதிகாரம் அஞ்சலக அதிகாரிகளுக்கும் வழங்கப்பட்டிருந்தது. அச்சிட்ட இதழின் ஒரு படியை அரசிற்குக் கொடுத்து அஞ்சல் கட்டணமும் செலுத்த வேண்டும். அதிகாரிகள் அளித்த தண்டனையை எதிர்த்து இதழ்கள் நீதிமன்றம் செல்ல முடியாது.

இச்சட்டம் வந்தபிறகு ஆங்கில ஆட்சியின் மீதிருந்த அரைகுறையான நம்பிக்கையையும் இந்திய மக்கள் இழக்கத்தொடங்

கினர். அதிகமான பிணையத் தொகையினைக் கட்ட முடியாத இதழ்கள் நின்றுவிட்டன. குறிப்பாகப் பம்பாய் இதழ்கள் அதிகமாகத் தொல்லைப்பட்டன. அரவிந்தரின் இதழ்கள் மீது கடுமையாகக் குற்றம் சாட்டப்பட்டது. தொல்லை பொறுக்க முடியாத அரவிந்தர் அரசியலைத் துறந்து ஆன்மீகத்தில் ஈடுபட்டார் பின்னர் 1921 - ஆம் ஆண்டில் தேஜ் பஹதூர் சாப்ரு தலைமையில் அமைந்த குழுவின் பரிந்துரைப்படி 1908,1910 - ஆம் ஆண்டுச் சட்டங்கள் நீக்கப்பட்டன.

**1930 - ஆம் ஆண்டுச் செய்தித்தாள் அவசரச் சட்டம்**

1930, மே மாதம் 30 - ஆம் நாள் நடைமுறைக்கு வந்த இச்சட்டம் அவசியமானபோது செய்தித்தாள்களை நிறுத்தி வைக்கும் உரிமையை அரசிற்குத் தந்தது. தேசியத் தலைவர்களின் கைது பற்றிய செய்திகள், ஊர்வலங்கள், தடியடிகள் பற்றிய படங்கள் ஆகியவற்றைத் தடித்த எழுத்துக்களில் செய்தித்தாள்கள் வெளியிட்டன. இந்திய மக்களின் உரிமையுணர்வுகளைத் தூண்டிய தேசிய இதழ்களை அடக்கி வைக்க வேண்டுமென்ற கருத்தில் ஆங்கில அரசு இந்த அவசரச் சட்டத்தைக் கொண்டு வந்தது. இச்சட்டத்தினால் பல செய்தித்தாள்கள் நின்றுவிட்டன. 1927 - ஆம் ஆண்டில் தொடங்கிய இந்தியர்களின் செய்தி நிறுவனமும் இச்சட்டத்தால் பாதிக்கப்பட்டது.

**1931-ஆம் ஆண்டு இந்திய இதழ்கள் (நெருக்கடி கால அதிகாரங்கள்) சட்டம்**

**[Indian Press (Emergency Powers) Act-1931]**

1930-இல் காந்தியார் தொடங்கிய சட்ட மறுப்பு இயக்கம் பெரிதும் பரவிப் பல்வேறு விளைவுகளை உண்டாக்கியது. இக்கொந்தளிப்பான சூழலில் கடுமையான சட்டங்களை இதழ்கள் மீது ஆங்கில அரசு திணித்தது. கொலை, வன்முறை முதலியவற்றைத் தூண்டும் அல்லது ஆதரிக்கும் வகையில் அமையும் வெளியீடுகளைத் தடுப்பது இச்சட்டத்தின் நோக்கமாகும். இதன்படி அச்சுக் கூடங்களும், இதழ்களும் பத்தாயிரம் ரூபாய் வரை பிணையத்தொகையாகக்கட்ட வேண்டியிருந்தது. பிணையத் தொகையினைப் பறித்துக் கொள்ளும் உரிமை மாநில அரசுகளுக்கும் கொடுக்கப்பட்டிருந்தது. செய்தித்தாள்களில் தேசியத் தலைவர்கள் கைது, ஊர்வலம், தடியடி போன்ற செய்திகளையும், படங்களையும் வெளியிடத் தடை

விதிக்கப்பட்டது. அச்சுக் கூடங்களும் செய்தித்தாள்களும் அடிக் கடி மூடப்பட்டதால் அவற்றின் பொருளாதாரம் பெரிதும்பாதிக் கப்பட்டது. எல்லா அரசியல் நிகழ்ச்சிகளுக்கும் முட்டுக்கட்டை யாக இச்சட்டம் அமைந்திருந்தது.

**1932 - ஆம் ஆண்டு அயலக உறவுச் சட்டம்**
**(Foreign Relation Act of 1932)**

நட்புறவு நாடுகள், அண்டை நாடுகளுக்கு எதிரான கருத்துக்களை வெளியிட்டு அந்நாடு ளின் நட்புறவைக் கெடுக் கின்ற இதழ்களின் மீது குற்றஞ் சாட்டித் தண்டிக்க வகை செய்தது இச்சட்டம்.

**1934 - ஆம் ஆண்டு இந்திய அரசுச் (பாதுகாப்பு) சட்டம்**

இந்தியச் சிற்றரசுகளையும் அவற்றின் மன்னர்களையும் செய்துததாள்கள் தாக்குவதிலிருநது பாதுகாப்பதும், அரசுக்கு எதிரான கருத்துக்களைப் பரபபும் குழுக்களையும் நிறுவனங் களையும் தடை செய்வதும் இச்சட்டத்தின் நோக்கமாகும்.

**நடைமுறைச் சட்டங்கள்**

**இந்திய அரசியல் அமைப்பின் அடிப்படை உரிமைகள்**
**[Fundamental Rights in the Constitution of India]**

இந்திய நாடு குடியரசு அமைப்பிற்கான அரசியல் சட்டங் களை வரையறைப்படுததியது. 1950 சனவரி மாதம் 26-ஆம் நாள் நடைமுறைக்கு வந்த இச் சட்டத் தொகுப்பில் பிரிவு 19-இன் உட்பிரிவு 1 (19-1) கருத்துச் சுதந்திரம் பற்றியதாக அமைந்தது. இரண்டாம் பிரிவில் (19-2) கருத்துச் சுதந்திர உரிமைக்கும் சில வரையறைகள் கொண்டுவரப்பட்டன.

அவதூறு (Libel), இழித்துப் பேசுதல் (Scandal), பெயருக் கும் புகழுககும் இழுக்கு உணடாக்குதல் (defamation), நீதிமன்ற அவமதிப்பு (Contempt of Court) ஆகியவற்றின் தொடர்பில் இப்பிரிவின் சட்டங்கள் வரையறைப் படுத்தப்பட்டன. அத்துடன் புதிய சட்டங்கள் இயற்றுவதைத் தடுத்தல், நாட்டின் பாது காப்பிற்குத் தீங்கு உண்டாக்கும் முறையில் பேசுதல் - எழுது தல்; அரசைக் கவிழ்க்கும் முறையில் பேசுதல்-எழுதுதல்; வன் முறை, நாசவேலைகளைத் தூண்டும் முறையில பேசுதல் — எழுதுதல் ஆகியனவும் இச்சடடப் பிரிவினபடி குற்றங்களாகக் கருதப்படுகின்றன.

**1951-ஆம் ஆண்டு இந்திய அரசியல் அமைப்புச் (முதல் திருத்தம்) சட்டம் [Constitution (First Amendment) Act of 1951]**

மேற்கண்ட (19-2) பிரிவு 1951, ஜூன்மாதம் 18-ஆம் நாளன்று திருத்தப்பட்டு மேலுஞ் சில வரைமுறைகள் சேர்க்கப் பட்டன. அயல் நாடுகளுடன் உள்ள பொது உறவுகளுக்குத் தீங்கு உண்டாக்கும் முறையிலும், குற்றங்களைச் செய்யுமாறு பொதுமக்களைத் தூண்டும் முறையிலும் பேசுவதையும் எழுது வதையும் இத்திருத்தம் தண்டனைக்குரிய குற்றங்களாகக் கருதியது. இக் குற்றங்களைப் புரிந்தோர்கள்மீது வழக்குத் தொடுத்துத் தண்டனை அளிப்பதற்கும் நீதி மன்றங்களுக்கு உரிமை வழங்கப்பட்டது.

**1954-ஆம் ஆண்டு இதழ்கள், செய்தித் தாள்கள் அனுப்புகைச் [பொது நூலகங்கள்] சட்டம்**

**[The Delivery of Books and News Papers (Public Libraries) Act — 1954]**

நடுவணரசு பரிந்துரைக்கும் நூலகங்களுக்கு வெளியீட்டின் ஒரு படியை விலையின்றிக் கொடுக்க வேண்டுமென இச்சட்டம் கூறுகிறது. குறிப்பாக பம்பாய் மத்திய நூலகம், கல்கத்தா தேசிய நூலகம், தில்லி தேசிய மத்திய நூலகம், சென்னை கன்னிமாரா நூலகம் ஆகிய நூலகங்களுக்கு அனுப்ப வேண்டும்.

**1955-ஆம் ஆண்டு பரிசுப் போட்டிகள் பற்றிய சட்டம்**

இதழ்கள் நடத்தும் குறுக்கெழுத்துப் போட்டி போன்ற வற்றில் ஆயிரம் ரூபாய்க்கு மேல் பரிசளிப்பதைத் தடுக்கும் சட்டம் இது. பரிசுகள் தொடர்பான கணக்குகளைச் சரியாக வைத்திருக்க வேண்டுகிறது. சில மாநிலங்கள் இச்சட்டத்தை ஏற்றுக் கொள்ளவில்லை.

**1955-ஆம் ஆண்டு, உழைக்கும் பத்திரிகையாளர் (பணி நிலைகள் பற்றிய பாதுகாப்பு) சட்டம்**

**[The working Journalists (conditions of Service and Miscellaneous Provisions) Act- 1955.]**

*1955*-இல் கொண்டுவரப்பட்ட இச்சட்டம் *1962*-இல் திருத்தம் செய்யப்பட்டுள்ளது. இதழியளார்களின் பணிப் பாது காப்புச் சலுகைகள் தொடர்பில் இச்சட்டம் அமைந்துள்ளது. இதழியல் துறை சார்ந்தவர்களை வேலை நீக்கம் செய்வதாக

இருந்தால் ஆறுமாதம் முன் அறிவிப்பு அறிக்கை கொடுக்க வேண்டும். பணிநேரம், விடுமுறை மற்றும் பிற சலுகைகளை இதழியல் துறையினருக்கு அளிக்க வேண்டும். பத்து ஆண்டுகள் பணியாற்றிப் பணியிலிருந்து விடுபட்டால் பணிக்கொடை (Gratuity) வழங்க வேண்டும். அவ்வப்போது ஊதியக் குழு நியமிக்கவும் இச்சட்டம் வழிகோலுகின்றது.

**1956-ஆம் ஆண்டு நாடாளுமன்ற நடவடிக்கைகள் சட்டம் [Parliamentary Proceedings (Protection of Publication) Act—1956]**

பெரோஷ் காந்தி சட்டம் என்று அழைக்கப்படும் இச் சட்டம் இதழ்களுக்குப் பாதுகாப்புத் தருகின்றது. நாடாளு மன்றத்தின் விவாதங்களையும் நடவடிக்கைகளையும் செய்தித் தாள்கள் வெளியிடும் போது தவறுகள் காணப்பட்டால் அது சம்பந்தமாக இதழ்களின்மீது சிவில் அல்லது கிரிமினல் வழக்கு களைப் பதிவு செய்யக் கூடாது என்று இச்சட்டம் வற்புறுத்து கிறது. அதற்குப் பதிலாக உரிமை மீறல் விளக்கம் கேட்கும் முறை பரிந்துரைக்கப்பட்டுள்ளது. இச்சட்டம் மாநிலச்சட்ட மன்றங்களுக்கும் பொருந்துவதாகும். இச்சட்டத்தின்படி உரிய தண்டனை வழங்கச் சபையின் அவைத்தலைவருக்கும் உரிமைக் குழுவிற்கும் அதிகாரம் உண்டு. குற்றம் சாட்டப்பட்டவர் இதழ்கள் வழி மன்னிப்புக் கேட்டால் எச்சரித்து விட்டுவிடலாம்.

**1956-ஆம் ஆண்டு இதழ்கள் (விலை, பக்கம்) சட்டம்**

செய்தித்தாளின் பக்கங்களையும் விலையையும் கட்டுப் படுத்தும் சட்டம் இது. இச்சட்டத்தால் பத்திரிகைச் சுதந் திரத்தில் அரசு தலையிடுவதாகச் சில இதழ்கள் வழக்குத் தொடுத்த போது வெற்றி பெற்றுள்ளன.

**1956-ஆம் ஆண்டு செய்தித்தாள், புத்தகப் பதிவுச் சட்டம்**

**[Press Registration Act — 1956]**

இச்சட்டம் 1876-ஆம் ஆண்டிலிருந்து நடைமுறையில் உள்ளது. 1940, 1956-ஆம் ஆண்டுகளில் சில திருத்தங்களைப் பெற்றுள்ளது. இந்தியாவில் வெளியாகும் புத்தகங்கள், செய்தித் தாள்கள் அனைத்தும் தில்லியிலுள்ள செய்தித்தாள் பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்து சான்றிதழ் பெற்றுக் கொள்ள வேண்டும். புத்தகம் வெளியிட்ட இரண்டு நாட்களுக்குள் படி யொன்றைப் பதிவாளருக்கு அனுப்புதல் வேண்டும். அனுமதி

பெற்ற பின்பு நாள், வார இதழ்களை ஒன்றரை மாதத்திற் குள்ளும் பிற இதழ்களை மூன்று மாதத்திற்குள்ளும் வெளியிட வேண்டும். இவை அனைத்தும் இவ்வலுவலகத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன. செய்தித்தாள்கள் பற்றிய புள்ளி விவரங் கள் தொகுக்கப்பட்டு நாடாளு மன்றத்தின் ஒப்புதலோடு ஆண்டு தோறும் அறிக்கைப் புத்தகம் ஒன்று வெளியிடப்படுகிறது.*

★ இந்தியச் செய்தித்தாள் பதிவு அலுவலகம் வெளியிட்டுள்ள 1983-ஆம் ஆண்டு அறிக்கை

| மொழிகள் | நாளிதழ் | இரண்டு வாரம் மூன்று இதழ்கள் | வார இதழ்கள் | பிற | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| இந்தி | 470 | 27 | 2,709 | 2,730 | 5,936 |
| ஆங்கிலம் | 123 | 13 | 428 | 3,276 | 3,840 |
| அசாமி | 3 | 3 | 26 | 52 | 84 |
| வங்காளம் | 44 | 8 | 417 | 1,113 | 1,582 |
| குசராத்தி | 40 | 5 | 174 | 510 | 729 |
| கன்னடம் | 85 | 3 | 161 | 406 | 655 |
| காஷ்மீர் | — | — | 1 | — | 1 |
| மலையாளம் | 112 | — | 121 | 607 | 840 |
| மராத்தி | 127 | 17 | 370 | 617 | 1,131 |
| ஒரியா | 14 | — | 40 | 245 | 299 |
| பஞ்சாபி | 24 | 1 | 184 | 243 | 452 |
| சமஸ்கிருதம் | 2 | — | 4 | 25 | 31 |
| சிந்தி | 6 | — | 20 | 39 | 65 |
| தமிழ் | 106 | 4 | 129 | 618 | 857 |
| தெலுங்கு | 37 | 2 | 162 | 382 | 583 |
| உருது | 148 | 6 | 672 | 552 | 1,378 |
| இருமொழி இதழ்கள் | 33 | 15 | 373 | 1,220 | 1,641 |
| பலமொழி இதழ்கள் | 9 | 1 | 66 | 279 | 355 |
| பிற | 40 | 3 | 65 | 191 | 299 |
| மொத்தம் | 1,423 | 108 | 6,122 | 13,105 | 20,758 |

விலை மாறுதல்களை இரண்டு நாட்களுக்குள் தெரிவிக்க வேண்டும். இதழ்களின் வருடாந்திர அறிக்கையை ஒவ்வோர் ஆண்டும் பிப்ரவரி மாதத்தில் அந்தந்த இதழ்களில் வெளியிட வேண்டும். ஆசிரியர், அச்சிடுபவர் பெயர்களையும் அச்சக முகவரியையும் ஒவ்வொரு இதழிலும் வெளியிடவேண்டும். தில்லியிலும் பம்பாயிலும் உள்ள மத்திய நூலகங்கள், கல்கத்தா தேசிய நூலகம், சென்னை கன்னிமாரா நூலகம் ஆகியவற்றிற்கு ஒவ்வொரு படியினை அனுப்பி வைக்க வேண்டும்.

**1956-ஆம் ஆண்டு தீங்கு விளைவிக்கும் இதழ்கள் சட்டம்**

இளைஞர்களிடையே தீங்கு விளைவிக்கும் வெளியீடுகளையும் படங்களையும் இச்சட்டம் தடுத்து நிறுத்துகிறது. ஆபாச வெளியீடுகள் என உறுதிசெய்யப் பட்டால் ஆசிரியருக்கும் வெளியீட்டாளருக்கும் மூன்று மாதச் சிறைத் தண்டனையும் அபராதமும் விதிக்கலாம்.

**1957-ஆம் ஆண்டு பதிப்புரிமைச் சட்டம்**
**[Copy Right Act — 1957]**

கருத்துத் திருடர்களையும் எழுத்துத் திருடர்களையும் வளரவிடாமல் இச்சட்டம் படைப்பாளருக்குப்பாதுகாப்புத் தருகிறது. புத்தகம், கட்டுரை, பேச்சு, நாடகம், படங்கள் ஆகியவை பதிப்புரிமை பெறுகின்றன. இப்படைப்புகளை உரியவர் அனுமதியின்றி அப்படியே வெளியிடுவது, கருத்துக்களைப் பயன்படுத்துவது, மொழி பெயர்த்து வெளியிடுவது இவையனைத்தும் இச் சட்டப்படி தண்டனைபெறுங் குற்றங்களாகும். 1914-ஆம் ஆண்டிலிருந்து நடைமுறையில் உள்ள இச்சட்டம் 1956-இல் சில திருத்தங்களைப் பெற்றுள்ளது. இருபத்தெட்டு வருடங்களுக்குப் பதிப்புரிமை வழங்கி, அதனை மீண்டும் இருபத்தெட்டு வருடங்களுக்குப் புதுப்பிக்கும் உரிமையைப் பழைய சட்டத்தில் அரசு வழங்கியிருந்தது. இப்பொழுதுள்ள சட்டப்படி ஆசிரியரின் வாழ்க்கைக் காலமும் அதற்குப் பின்பு ஐம்பது ஆண்டுகளுக்கும் பதிப்புரிமை வழங்கப்படுகிறது. விற்பனைக்குக் கிடைக்காத புத்தகங்களைப் படியெடுத்துக்கொள்ள நூலகங்களுக்கு மட்டும் இச்சட்டம் அனுமதி வழங்கியுள்ளது.

**1971 - ஆம் ஆண்டு நீதிமன்ற அவமதிப்புச் சட்டம்**
**[Contempt of Courts Act — 1971]**

நீதிமன்றங்கள் உயர்வாகப் போற்றப்பட வேண்டிய இடங்களாகும். அவற்றின் நடவடிக்கைகள் அனைத்தும் சட்டத்

திற்குட்பட்டு இருப்பதோடு விவாதங்களுக்கும் அப்பாற்பட்டன. நீதித்துறைச்சொற்களையும் அவற்றின் சட்டபூர்வ பொருளையும் செய்தியாளர்கள் அறிந்து வைத்திருக்க வேண்டும். நீதிமன்றநடவடிக்கைகளையும், நீதித்துறையைச்சார்ந்தவர்களையும் அவமதித்துப் பேசுவதும் எழுதுவதும் பெருங்குற்றமாகக் கருதப்படும். வழக்கில் இருக்கும் செய்திகளைப் பற்றி விவாதிப்பதும், தீர்ப்புக்குப் பின்பு திறனாய்வு செய்வதும் தண்டனை பெறுகின்ற குற்றங்களாகும். தீர்ப்பினைக் கண்டிப்பதும், தீர்ப்புக்கு முன்பே வழககில உள்ளவரை எழுத்தால் குற்றவாளியாக்குவதும் குற்றமாகும் நீதிமன்ற நடுவர்களைத் தரக்குறைவாக எழுதுவதும, கருத்துப் படங்களாக வரைவதும் கூட அவமதிக்கும் குற்றமாகவே கருதப்படுகிறது. நீதிமன்றத்துக்குள் புகைப்படம் எடுக்கவும் அனுயதிப்பதில்லை.

### இந்தியன் பீனல் கோடு சட்டப் பிரிவுகள்

நாட்டின் நலனிறகுக் கேடு விளைவிக்கும் முறையில் பேசுவதையும் எழுதுவதையும் நாட்டுத் துரோகமாகக் கருதி இ.பி. கோ. 124-A பிரிவு தண்டனை அளிக்கிறது. இப்பிரிவின்படி ஆங்கிலேயர் ஆட்சியில் திலகர் ஆறு ஆண்டுகள் சிறைத்தண்டனை பெற்றார். இராணுவ வீரர்களிடம் கலவரங்களை உண்டாக்கும்படி அறிக்கை வெளியிடுவதையும், வதந்திகளைப் பரப்புவதையும் இ.பி.கோ. 505-ஆம் பிரிவு தடுக்கிறது. இ.பி.கோ. 295-A பிரிவு மதவுணர்வுகளுக்கு ஊறு தேடுவதைத் தடுக்கும் சட்டமாகும். 99-A- 99-G வரையிலுள்ள பிரிவுகள் இனவெறுப்பு, மதவெறுப்பு ஆகியவற்றை உண்டாக்கும் செய்தித்தாள், புத்தகங்களைப் பறிமுதல் செய்யும் அதிகாரத்தை அரசுக்கு வழங்குகிறது. அஞ்சலகத் தொடர்பான 26, 27-A—27-D வரையிலுள்ள பிரிவுகள், தடைசெய்யப்பட்ட வெளியீடுகளைப் பறிமுதல் செய்ய அஞ்சலக அதிகாரிகளுக்கு அதிகாரம் வழங்குவதோடு சட்டத்திற்குப் புறம்பான செய்திகளை வெளியிடும் இதழ்களை நிறுத்தி வைக்கவும் அதிகாரமளிக்கிறது. இ.பி.கோ. 228 ஆம் பிரிவு நீதிமன்ற அலுவலர்களை அவமதித்து எழுதுவதைத் தடுக்கிறது. இ. பி. கோ. 193, 228-ஆம் பிரிவுகள் நீதி விசாரணை செய்யும் உரிமையைப் பத்திரிகைக் குழுவிற்கு வழங்கியுள்ளது

### அவதூறுச் செய்திகள் [Defamation]

தனி மனிதனுக்கும் கூட்டு நிறுவனங்களுக்கும் சட்டம் எல்லாவிதப் பாதுகாப்பையும் அளித்திருக்கிறது. சமுதாய உறுப்

பினர் ஒருவரின் நற்பெயர், செல்வாக்கு, புகழ், ஆகியவற்றைப் பேச்சினால் அல்லது எழுத்தினால் இகழ்வது நியாயமற்றதாகக் கருதப்படுகிறது. சட்டத்தின்முன் எல்லோரும் சமம். எவரைப் பற்றியும் அல்லது எதைப்பற்றியும் நினைத்த போது நினைத்த வாறு எழுதிவிடுவதற்கு எவ்வித உரிமையும் இதழ்களுக்கு வழங்கப்படவில்லை. அவதூறு பற்றிய செய்திகள் மற்ற நாடு களைவிட நம்நாட்டில் கடுமையானவையாகக் கருதப்படுகின்றன. நாடாளுமன்ற, சட்டமன்ற நடவடிக்கைகளில் கூட அவதூறு கண்டு வழக்குத் தொடுப்பது குடியாட்சி நாட்டின் தனிமனித உரிமையாக உள்ளது. அவதூறுச் செய்தியில் இடம் பெற்றவர் தமக்கும் தாம் நடத்தும் தொழிலுக்கும் பாதிப்பேற்படுவதாகக் கருதினால் வழக்குத் தொடர்ந்து பெருந்தொகையை நட்ட ஈடாகப் பெறச் சட்டம் இடம் தருகிறது. இ.பி.கோ. 499, 502-ஆம் பிரிவுகள் குற்றவாளியை இரண்டு ஆண்டுகள் வரை சிறைத் தண்டனையுடன், தண்டத் தொகையும் கட்டவைக்கின்றன.

பேச்சினால் அவதூறு உண்டாக்குவது நிலையா வடிவ அவதூறு (Scandal) ஆகும். எழுத்தில் அவதூறு உண்டாக்குவதே நிலைத்த வடிவ அவதூறு (Libel) எனப்படும். இரண்டாம வகையே மான நட்ட வழக்குகளுக்கு உட்படுகின்றது

அவதூறுச் செய்திகள், செய்தியாளர், ஆசிரியர், பதிப் பாளர் ஆகிய அனைவரையும் இக்கட்டான நிலைகளில் சிக்க வைப்பனவாகும். தலையங்கம், கருத்துப்படம், புகைப்படம் ஆகியவைகூட உரியவர்களால் அவதூறாகக் கருதப்பட இடமளிக் கின்றன. தாம் வெளியிட்டது அவதூறுச் செய்திகளென்று தெரிந்தவுடன் இதழ்கள் திருத்தம் வெளியிட்டு வருத்தம் தெரி விக்க வேண்டும் அடிக்கடி அவதூறு வழக்கில் தண்டனைபெறும் இதழ்களைக் காலப் போக்கில் வாசகர்களே ஒதுக்கி விடுவர். அவை 'மஞ்சள் பத்திரிகை' இடத்தைப் பெற்றுத் தரத்தைத் தாழ்த்திக் கொள்கின்றன.

செய்யாத குற்றங்களையும் இல்லாத குறைகளையும் செய்தித்தாளில் எழுதக்கூடாது மருத்துவர் ஒருவருக்கு மருத் துவம் தெரியாதென்றும், வழக்கறிஞர் ஒருவரைச் சட்டமறியா தவர் என்றும், குறிப்பிட்ட ஒருவரை ஒழுக்கம் குறைந்தவ ரென்றும் எழுத முடியாது. காவல்நிலையச் செய்தியினடிப் படையில் கொலை செய்துவிட்டார் என்று ஒருவரைக் குற்றஞ் சாட்டமுடியாது. நீதிமன்றம் வழங்க வேண்டிய தீர்ப்பைச்

செய்தித்தாள்களே வழங்கிவிடுவது கூடாது. ஒருவர் எழுதாத நூலை அவர் எழுதியதாகக் குறிப்பிட்டுவிடக்கூடாது. ஏனெனில் அந்நூல் குறைபாடு உடையதெனின் சம்பந்தப் பட்டவர் பாதிப்படைகின்றார். இதழ்களில் பயன்படுத்தக் கூடாத அவதூறுச் சொற்கள் சிலவும் உண்டு. பொய்யன், பைத்தியம், அறிவிலி, அயோக்கியன், திருடன், கோழை, மோசடிக்காரன், வேடதாரி, வஞ்சகன், வில்லன், போலியாள், முரடன், மூடன், கொள்ளைக்காரன், குற்றவாளி என்பன போன்ற சொற்களைத் தனிப்பட்ட எவரையும் குறித்து எழுதக் கூடாது; தவறான செய்தியும் அவதூறுச் செய்தியாகவே கருதப் படும். கொலைக் குற்றச்சாட்டு, மோசடி வழக்கு, ஊழல், ஒழுக்கக் குறைவு போன்ற செய்திகளில் ஆளைமாற்றியோ செய்திகளைத் தவறாகவோ கையாளக்கூடாது. இழிவும், தீய குணங்களும் கொண்ட பன்றி, நாய், பாம்பு போன்ற மிருகங் களோடும்; சமுதாயத் தீயோர்களாகக்கருதப்படும் சைலக், மஸ் தான், கோட்சே, பில்லா, எட்டப்பன் போன்ற மனிதர்க ளோடும் எவரையும் ஒப்பிட்டு எழுதுவது அறமாகாது. ஆங்கில நாட்டில் வெள்ளையரை நீக்ரோ என்று எழுதுவதுகூட அவ தூறாகும்.

மானநட்ட வழக்கில் செய்தியினை எழுதிய ஆசிரியர் மட்டுமின்றி வெளியீட்டாளரும் குற்றவாளியாகக் கருதப்படு வார். அவதூறுச் செய்திகள் வெளிவரா வண்ணம் கவனமுடன் கண்காணித்துச் செயல்பட வேண்டும். அப்போதுதான் செய்தித் தாளின் தரம் நிலைத்து நிற்க முடியும்.



# இ த ழி ய ல்

## அருஞ்சொற் பட்டியல் [Glossary]

A

1. Administrative Wing — ஆளுமைப் பகுதி
2. Advertisement Wing — வளம்பரப பகுதி
3. Advertising Agencies — விளம்பர நிறுவனங்கள்
4. Advertising Manager — விளம்பர மேல ளர்
5. Anonymous News — மொட்டைச் செய்தி
6. Art Editor — கலைப்பகுதி ஆசிரியர்
7. Assembly Reporter — சட்டமன்றச் செய்தியாளர்
8. Assignment Book — பணிப்பதுவேடு
9. Astronisher — இடமேல் சிறுதலைப்பு
10. Audit Bureau of Circulation — விற்பனைக்கணிப்புக் குழு

B

1. Balance — சமமாக்கல்
2. Banner — எட்டுப்பத்தித் தலைப்புச் செய்தி
3. Bastard Type — கள்ளெழுத்து
4. Beat — செய்திக் கடமை உலா
5. Bite off — செய்திக் குறைப்பு
6. Bit News — செய்திக் துளிகள்
7. Blind Advertisment — பெயரிடாத விளம்பரம்
8. Blind Interview — மறை நேருரை
9. Blind Spot — பார்வை படா இடம்
10. Block — (படப்) படிமை, படக்கட்டை
11. Blow up — படப்பெருக்கம்
12. Boil — சுருக்கப்படி
13. Boost Box — விளம்பர விளம்பரம்
14. Border — கட்டங் கட்டுதல்
15. Box Score — ஆட்டக்கணிப்புச் செய்தி
16. Box Story — பெட்டிச் செய்தி
17. Bull dog — தலைப்பதிப்பு
18. Bulletin or Late News — கடைசிச் செய்தி, கடைசித்தந்தி
19. Bureau — செய்திகள் மையம்
20. Bussiness wing — வணிகப் பகுதி
21. Byline — பெயர் வரி

1. Caption — படத் தலைப்பு; படத்தொடர் குறிப்பு
2. Caricature — கேலிச் சித்திரம்
3. Carrier — செய்தித்தாள் வழங்குநர்
4. Cartoon — கருத்துப் படம்
5. Censorship — செய்தித் தணிக்கை
6. Chase — எழுத்துப்பிடிச் சட்டம்
7. Circulation — இதழ்விற்பனை

8. Circulation Manager — விற்பனை மேலாளர்
9. Circulation Section — விற்பனைப் பிரிவு
10. City Editor — நகர்ச் செய்தியாசிரியர்
11. City News — உள்ளூர்ச் செய்தி
12. Classified Advertisement — இனவாரி விளம்பரம்
13. Clip or Cutting — செய்தித்துணிப்பு
14. Column — பத்தி
15. Columnist — பத்தியாளுநர்

C

16. Composing — அச்சுக்கோத்தல்
17. Composing Stick — கோப்புமானி
18. Compositor — அச்சுக் கோப்பவர்
19. Copy — எழுத்துப்படி
20. Copy Editor — எழுத்துப்படி திருத்துநர்
21. Copyright — பதிப்புரிமை
22. Creditline — செய்தியகப் பெயர்வரி
23. Crime News — குற்றச்செய்தி
24. Cub-Reporter — இளநிலைச் செய்தியாளர்

1. Dak Edition — அஞ்சல் பதிப்பு
2. Dateline — நாள்வரி
3. Deck — மூன்றுவரித் தலைப்பு
4. Delete — நீக்கு
5. Derogatory News — முரண்பட்ட செய்திகள்
6. Design — அழகு கூட்டல்

D

7. Digest Magazine — திரட்டு இதழ்
8. Display Advertisement — சிறப்பு விளம்பரம்
9. Distribution — இதழ்கள் பரப்பு
10. Dope — செய்திப் பின்புலம்
11. Drop — அடுக்குத்தலைப்பு
12. Double Columr News — இருபத்திச் செய்திகள்
13. Dummy — மாதிரிப்படி

1. Ear panel — காது விளம்பரம்
2. Edition — பதிப்பு
3. Editor — இதழாசிரியர்
4. Editorial — தலையங்கம்
5. Editorial wing — ஆசிரியர் குழு

E

6. Editorial paragraph — துணைத்தலையங்கம்
7. Editorial policy — பதிப்புக்கொள்கை
8. Eight Column News — எட்டுப்பத்திச்செய்தி
9. Em — எழுத்துச் சதுரலகு
10. Evaluation — மதிப்புரை
11. Everyday Imformates — அன்றாடத் தகவலாளர்கள்
12. Expected News or Routine News — வழக்கமான செய்திகள்

1. Facsimile Edition — படிவப் பதிப்பு
2. Face — எழுத்துமுகம்

3. Facsimile transmission — படிவப் பதிப்பு அனுப்புகை
4. Features — சிறப்புப்பகுதிகள்
5. Filler — இட நிரப்பி
6. Five w's (who? what? when? where? why? ) — ஐந்து 'ஏ' க்கள் - (எவர்? என்ன? எப்பொழுது? எங்கே? எதனால்?)
7. Flag — இதழ்முகம்
8. Flash —சிறப்புக் குறுஞ்செய்தி
9. Follow - up — தொடர் செய்தி
10. Foreign Correspondent — வெளிநாட்டுச் செய்தியாளர்

**F**

1. Galley proof — தட்டு மெய்ப்பு
2. Ghost Advertisement — முகவரியில்லா விளம்பரம்
3. Gigger — இரண்டு வரித் தலைப்பு
4. Green Proof — பிழை திருத்தாப்படி

**G**

1. Halftone Block — புகைப்படக் கட்டை
2. Headings — செய்தித் தலைப்புகள்
3. Headlines — தலைமைச் செய்தித் தலைப்புகள்
4. Hot News — சூடான செய்திகள்

**H**

1. Illustration — விளக்கப்படம்
2. Information — தகவல்
3. Interview — நேருரை
4. Issue — வெளியீடு
5. Italics — சாய்வெழுத்து

**I**

1. Journalism — இதழியல்
2. Journalist — இதழாளர்
3. Jump — தொடர்ச்சி

**J**

**K**

1. Kicky Headline — உந்துதல் தலைப்பு

1. Late News — கடைசிச் செய்தி
2. Lead — செய்திச் சாரம்
3. Letters to the Editor — ஆசிரியருக்குக் கடிதங்கள்
4. Libel News — அவதூறுச் செய்திகள்
5. Line Block — வரிப்படக் கட்டை
6. Linotype — தொடர் எழுத்து அச்சு
7. Literary Journal — இலக்கிய இதழ்
8. Lithography — எழுத்துப் படிமை
9. Lobby Correspondent — நாடாளு மன்றச் செய்தியாளர்
10. Local News — உள்ளூர்ச் செய்தி
11. Lower case— சிற்றெழுத்து

**L**

1. Machanical Wing — இயந்திரப்பகுதி
2. Magazine — பருவ இதழ்

3 Mass Media — மக்கள் தொடர்புச்சாதனம்
M 4. Matrix — அச்சுக்கரு
5. Mill — செய்தியாளர் தட்டச்சுப் பொறி
6. Monotype — தனி எழுத்து அச்சு
7. Morgue — இதழியல் நூலகம்

1. News — செய்தி
2. News Agencies — செய்தி நிறுவனங்கள்
3. News Bank — செய்தி வங்கி
4. News body — செய்தி விளக்கம்
5. News editor — செய்தியாசிரியர்
6. News Hole — செய்திப் பரப்பிடம்
N 7. News Pamphlets — துண்டு வெளியீடுகள்
8. News paper — செய்தித்தாள்
9. News source — செய்திக்களம்
10. News story — செய்திக்கதை
11. News value — செய்தி மதிப்பு
12. Night editor — இரவுச் செய்தியாசிரியர்

O 1. Offset Printing — எதிரீட்டு அச்சுமுறை

1. Page Make-up — பக்கங் கட்டுதல்
2. Page Proof — பக்கம் கட்டிய மெய்ப்பு
3. Point — புள்ளி
4. Pool reporting — கூட்டுச் செய்திச் சேகரிப்பு
5. Poster — சுவரொட்டி
P 6. Press Conference — செய்தியாளர் கூட்டம்
7. Printed form — அச்சிட்ட படிவம்
8. Printer — அச்சாளர்
9. Proof — மெய்ப்பு
10. Proof reader — மெய்ப்புத் திருத்துநர்
11. Publisher — பதிப்பாளர்

Q 1. Quads — இடை நிரப்பிகள்

1. Radio photo — வானொலிப் படம்
2. Re-edition — மறுபதிப்பு
R 3. Reference Section — தகவல் குறிப்புப் பிரிவு
4. Reporter — பகுதிநேரச் செய்தியாளர்
5. Rewriting — செய்தி உருவாக்கம்
6. Rotary Machine — சுழலச்சுப் பொறி
7. Royalty — விற்பனைப் பங்குத் தொகை

**S**

1. Sales promotion — விற்பனைப் பெருக்கம்
2. Scoop — முந்து செய்தி
3. Second proof — மறுதிருத்தப்படி
4. See copy — மூலப்படியைப் பார்
5. Single Column News — ஒரு பத்திச்செய்தி
6. Slanding News — ஒருசார்புச் செய்தி
7. Smash — கவர்ச்சிச் செய்தி
8. Society editor — சமுதாயப்பகுதி ஆசிரியர்
9. Space — இடைவெளி
10. Special Correspondent — சிறப்புச்செய்தியாளர்
11. Special editor — சிறப்பாசிரியர்
12. Staff Correspondent — நிரந்தரச்செய்தியாளர்
13. State editor — மாநிலச் செய்தியாசிரியர்
14. Stone — பக்கம் தயாரிக்கும் இடம்
15. Streamer — தலைமைச் செய்தித் தலைப்பு
16. Stringer — பகுதி நேரச் செய்தியாளர்
17. Style Book — கையேடு
18. Sub-Editor — துணை ஆசிரியர்.
19. Sub-Headline — துணைத்தலைப்பு
20. Sunday editor · ஞாயிற்றுப் பகுதியாசிரியர்
21. Suppliment — சிறப்புமலர்
22. Syndicate — செய்திக்கழகம்

**T**

1. Tabloid Newspaper -- சிற்றளவுச் செய்தித்தாள்
2. Telephotograph -- தொலை ஒளிப்படம்
3. Teleprinter — தொலை பதிவுப்பொறி
4. Telex — தொலையச்சு
5. Thirty - முப்பது (30) செய்தி முடிவுக் குறியீடு
6. Time Copy — அணியப்படி
7. Tit Bits — துணுக்குள்
8. Topic Headline — நெற்றித் தலைப்பு
9. Type -- எழுத்து
10. Type Composing Machine — அச்சுக்கோப்பான்
11. Typography — அச்சுக்கலை

**U**

1. Unexpected News or Special News — சிறப்புச் செய்திகள்
2. Upper Case — தலைப்பெழுத்து

**W**

1. Wire photo — மின்கம்பி வழிப்படம்
2. Work Section -- பணிப்பிரிவு

**Y**

1. Yellow paper — மஞ்சள் பத்திரிக்கை

**Z**

1. Zero Hour — செய்திபெறு இறுதிநேரம்

## ABBREVIATIONS

1. A.B.C. — Audit Bureau of circulation
2. A.F.P. — Agence France Presse
3. A.I.N.E.C. — All-India Newspaper Editor's Conference
4. A.I.R. — All India Radio
5. A.P. — Associated Press (U.S.A.)
6. A.P.I. — Associated Press of India
7. B.B.C. — British Broadcasting Corporation
8. D.A.V.P. — Directorate of Advertising and visual Publicity
9. E.N.S. — Express News Service
10. F O C. — From our Correspondent
11. F.O.O.C. — From our own Correspondent
12. F.Y.I. — For your Information
13. H.F.R. — Hold for release
14. H.I. — Human Interest
15. I.A.E.J. — Indian Association for Education in Journalism
16. I.E.N S. — Indian and Eastern Newspaper Society
17. I.F.W.J. — Indian Federation of working Journalist
18. I.L.N A. — Indian Language Newspapers Association
19. I N.F.A — India News and Feature Alliance
20. I.N.S. — International News Service
21. I.I.M.C. — Indian Institute of Mass Communication
22. L.C. — Lower Case
23. N A.F.E N. — Near And Far East News
24. N.B.C. — National Broadcasting Company (U.S.A.)
25. N.P.R. Night Press Rates
26. N.D C.M. — National Documentation Centre on Mass Communication
27. N.E.W.S. — North, East, West, South
28. P.M. — Post Meridian (Evening Newspaper)
29. P.T.I. — Press Trust of India
30. Q. & A. — Question and Answer
31. U.C. — Upper Case (Capital letters)
32. U.N.I. — United News of India
33. U.P.I. — United Press International
34. Ad — Advertisement
35. Col. — Column
36. Em. — A lineal measurement of 12 point (one-sixth of an inch)
37. Head — Headline
38. Pi — To upset or otherwise mix up type
39. Pica — 12 point type
40. Pix — Pictures
41. Reuter — Reuters News Agency
42. Sked — Scheduled
43. TASS — Telegrafnoie Agenstro Sovietskavo Sovuiza (Russian News Agency)

# Quotes on Journalism

## JOURNALISM

Journalism has already Come to be the First power in the Land.

*— Samuel Bowles*

Journalism is Literature in a hurry.

*— Mathew Arnold*

Journalism is the systematic and reliable dissemination of pubilc information, public opinion and public entertainment by modern mass media of communication.

*— G. F. Mott*

Journalism is being and doing, not theorising.

*— Anonymous*

Nothing less than the highest ideals, the most Scrupulous anxiety to do right, the most accurate knowledge of the problems it has to meet, and a sincere sense of social responsibility will save Journalism.

*— Joseph pulitzer*

## THE PRESS

The press must be true. It has always been so and much evil has been corrected by it. If government finds itself annoyed by it, let it examine its own conduct and it will find the cause.

*— Thomas Enfkine*

I believe in the power of the press; but more in its responsibility.

*— Lord Rosebery*

The press is one of the vital organs of modern life, especially in a democracy. The press has tremendous powers and responsibilieties. The press must be respected.

*— Jawaharlal Nehru*

The content of the press is liberal statement as the content of the Book speech, and the content of the movie is the novel.

*— Marshall Mcluhan*

The printing press is the most powerful weapon with which man has armed himself for the fight against ignorance and oppression.

*— James Gar field.*

The press is equally capable of being made the instrument of elevating man to the highest point or of depressing him to the lowest.

*— James Cooper*

Every nation has the kind of press it deserves.

*— Julius Bechem*

**NEWS PAPER**

The best use of a journal is to print the largest practical amount of important truth which tends to make mankind wiser than happier and thus happier.

*— Horace Greeley*

Newspapers are the world's mirrors.

*— James Ellis*

All I know is what I see in the papers

*— Will Regers*

Newspapers always excite curiosity No one ever lays

down without a feeling of disappointment.

— *Lamb*

Newspapers are the Bibles of worldliness. How deliberately they read them. Here they find their law and profits; their judges and chronicles their epistles and revelations.

— *C. H. Supergeon*

Let me make the newspapers, and I care not what is preached in the pulpit or what is enacted in the congress

— *Wendell Phillips*

I read the newspapers to see how God governs the world.

— *John Newton*

In these days we fight for our ideas and newspapers are our fortresses.

— *Heine*

What is to prevent a daily newspaper from being made the greatest organ of social life? Books have had their day. the theatres have had their day, the temple of religion had had its day. A newspaper can be made to take the lead of all these in the great movement of human thought and human civili -sation.

— *James Gordon Bennet*

It is peculiar that presidents don't do better. Heaven knows, they receive plenty of advice from the newspapers.

— *John L. McCaffrey*

It is as white as innocence, as black as sin and as transient as a lover's tryst. but as punctual as a new suitor and as constant as a virtuous wife— "The Newspaper."

— *Manfred Barthel*

## JOURNALIST

Every newspaper editor owes tributes to the devil.

*— La Fontaine*

Journalist always say what they know is untrue, in the hope that if they go on saying it long enough it will come true.

*— A. Bennet*

Great is Journalism. Is not every able Editor a Ruler of the world, being a persuader of it?

*— Carlyle*

I would sooner call myself a Journalist than an author for a Journalist is Journeymen.

*— G. K. Chesterton*

This country is not priest-ridden but press-ridden.

*— Long Fellow*

Every freeman has an undoubted right to lay what sentiments he wishes before the public; to forbid this, is to destroy the freedom of the press. But if he pulblishes what is improper, mischievous or illegal, he must take the consequences of his own temerity.

*— William Blackstone*

Once a journalist, always a journalist.

Doctors bury their mistakes; Lawyers hang them; But Journalists put theirs on the front page.

It is the great journalists that create public Veracity.

*— Karl Jaspers*

**NEWS**

Turn to the press - its teeming sheets survey, Big with the wonder of each passing day; Births, deaths and weddings, forgeries, fires and wrecks; Harangues and hailstones, brawls and broken necks.

*— Charles Sprague*

These the historians of our times display and call it News - the hodge - podge of a day.

The times are big with tidings

*— Rederick*

News, the 'manna' of a day

*— Green*

The news; our morning, noon and evening of Cry, Day after day repeats it till we die.

*— C Donague*

Ill news is winged with facts and flies space.

*— Dryden*

News are as welcome as the morning air

*— Chapman*

When we hear news we should always wait for the sacrament of confirmation.

*— Voltaire*

When a dog bites a man that is not news, but when a man bites a dog that is news.

*— John B. Bogart*

As cold waters to a thirsty soul, so is good news from far country.

*— Proverb*

News is the first report of significant events which have interest for the public.

News is an account of a current idea or problem that interest the public.

News may be defined as an accurate fact or idea that will interest a large number of readers.

News may be defined as an accurate unbaised account of the significant facts of a timely happening that is of interest to the readers of the newspapers that print the account.

News is anything timely that is interesting and significant to readers in respect to their personal affairs or their relation to society and the best news is that which possesses the greatest degree of their interest and significant for the greatest number.

News is an account of an event or a fact or an opinion which interests the peaple.

Anything that people want to read is news, provided it does not violate the canons of good taste and the laws of libel.

News is anything that people will talk about. The more it will excite comment, the greater its value.

News is eveything that happens, the inspiration of happenings, and result of such happenings.

News comprises all current activities which are of general human interest, and the best news is that which interests the readers most.

Comment is free but facts are sacred.

News is the very nourishment and support of human society.

— *Daniel Defoe*

## EDITORIAL

Writing good Editorials is chiefly telling the people what they think, not what you think.

— *Arthur Brisbane*

Newspaper has a right to its Editorial opinion but it has no right to twist the facts''

— *Frank Moraes*

Get your facts first, and then you can distort them as much as you please.

— *G.L. Clemens*

## REPORTER

I have six honest serving men. They taught me all I knew. Their names were what and where and when and how and why and who.

— *Rudyard Kipling*

Sub - editing is a Sine-qua-non for any modern newspaper.

Sub must know something of every thing and every thing about something.

When is doubt cut it out.

— *An advice*

A reporter is a thinking agent of the reader.

— *James M. Neal*

Professional reporters are the hired eyes, legs and brain of the reader, viewer and listener.

Words are the tools of their trade.

— *S. Brown*

## POWER OF THE PRESS

Four hostile newspapers are more to be feared than a thousand bayonets,

-- *Napolean*

We live under a government of men and morning newspapers.

*— Wendell Philips*

What gunpowder did for war, the printing press has done for the mind.

*— Wendell philips*

Were it left to me to decide whether we should have a government without newspapers or newspapers without government, I should not hesitate a moment to prefer the later.

*— Jefferson*

Congress shall make no law abridging the freedom of speeeh or of the press

*— Constitution of the U. S. A.*

**FREEDOM AND DEMOCRACY OF THE PRESS**

Our liberty depends on the freedom of the press and that cannot be limited without being lost.

*— Jefferson*

The freedom of the press is one of the bulwarks of liberty and can never be restrained but by despotic governments.

*— George Mason*

Freedom of conscience, of education of speech, of assembly are among the very fundamentals of democracy and all these would be nullified should freedom of the press ever be successfully challenged.

*— F. D. Roosevelt*

Freedom of the press is the stuff of life for any vital democracy.

*— Wendell L. Wilkie*

A free press is the parent of much good in the state. But even a licentious press is far less evil than a press that is enslaved.

*— Charles Calab Colton*

To Limit the press is to insult a nation; to prohibit reading of certain books is to declare the inhabitants to be either fools or slaves.

*— Chaude Adrien Heluetius*

The press is the great palladium of liberty of the country.

*— Lord Gray*

The restoration of free speech. free association and free press is almost the whole of Swaraj.

*— M. K. Gandhiji*

People without reliable news is sooner or later people without the basis of freedom.

*— Harold Lashi*

The Press is in one sense like the Government, a custodian of Public interests, and any attempt to hamper its freedom by repressive legislation is bound to affect these interests prejudicially, and cannot fail in the end to react upon the position of the Government itself.

*— Gopala Krishna Gokhale*

A free press is the unsleeping guardian of every other right that free men prize.

*— Winston Churchill*

Public opinion is the most potent monarch this world knows today.

*— Benjamin Harison*

It is the newspaper press that has made democracy possible

*— John Bryce*

I have no doubt the democracy of India is in the hands of Journalists

— *A. D. Money.*

The Press is the guardian angels of Democracy.

**PICTURE**

It's the Picture that makes Story.

Every picture tells a Story.

The appeal to the eye is the strongest of all appeals.

The camera cannot lie.

Picture tell a story better than works. A picture is worth a thousand words. What is seen is remembered longer than what is heard.

## துணை நூல்கள்


அந்தோணி இராசு, ஆ.பி. — இதழியல் ஓர் அறிமுகம்-
ஆரோக்கியம் பதிப்பகம் திருச்சி - 3.

அரங்கசாமி, பழநி — செய்தி உலகம்
முத்தமிழ் நிலையம், மதுரை - 19.

ஆதித்தனார், சி.பா. — நாள் தாள் - எழுத்தாளர் கையேடு
தினத்தந்தி, சென்னை - 7.

இராமசாமிப்புலவர், சு.அ. — நாள் - கிழமை - திங்கள் இதழ்
விளக்க வரிசை கழக வெளியீடு, சென்னை - 1.

இராமலிங்கம், டி.எஸ். — இந்திய வரலாறு (1526 - லிருந்து
இன்று வரை) டி.எஸ். ஆர். பப்ளிகேசன், மதுரை - 2.

கலைவாணி, எஸ். — இதழியல் உத்திகள், ஸ்ரீ பராசக்தி
வெளியீடு, குற்றாலம்

காந்தி, மோ.க. — மகாத்மா காந்தியின் சுயசரிதை
தமிழ்நாடு காந்தி நினைவு நிதி வெளியீடு.

கிரி, பி.வி. — செய்தி இதழ்களின் கதை, கழக வெளியீடு,
சென்னை - 1.

குளத்தூரான், க. — தமிழ்ப் பத்திரிகைகள்
ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில்-1.

சம்பந்தன், மா. சு. — அச்சும் பதிப்பும் - தமிழர் பதிப்பகம்,
சென்னை - 1.

சம்பந்தன், மா.சு. — அச்சுக் கலை - தமிழர் பதிப்பகம்,
சென்னை - 1.

சாமி, அ.மா. — தமிழ் இதழ்கள் தோற்றம் - வளர்ச்சி - நவமணி
பதிப்பகம், சென்னை - 4.

சோமலெ. — தமிழ் இதழ்கள் சென்னைப் பல்கலைக் கழக
வெளியீடு.

திரவியம் கா. — தேசியம் வளர்த்த தமிழ்

பாரதிதாசன் — தமிழியக்கம் செந்தமிழ் நிலையம்
இராமச்சந்திரபுரம், திருச்சி மாவட்டம்.

மணியன், தங்க. — பத்திரிக்கைத் தமிழ் மாணிக்கம் பதிப்பகம்
பரணம் (அஞ்சல்) திருச்சி மாவட்டம்.

இதோ தமிழ் இதழ்கள் — வீரமாமுனிவர் தமிழ் ஆய்வுக் கழக
வெளியீடு அருளானந்தர் கல்லூரி
கருமாத்தூர், மதுரை மாவட்டம்.

Arun Bhattacharjce — **The Indian Press Profession to Industry**
Vikas Publication, Bombay.

Bhattacharyya, S. N. — **Mahatma Gandhi - The Journalist,**
Asia Publishing House - Madras.

Bruce Westley — **News Editing,**
Oxford & IBH Publishing Co.

Chalapathi Rau, —**The Press** - National Book Trust.

Duane Bradley — **The Newspaper, Its place in a Democracy**
Avon Books, New York.

Harrold Evans — **Editing and Design** - Heinemann, London.

Jagdish Saran Sharma — 1. Indian National Congress
2. Mahatma Gandhi - Discriptive Bibliography.
S. Chand & Co., Delhi.

James E. Little field & C. A. Kirkpatrick — **Advertising Mass Communication in Marketing**
Feffer and Simons Private Ltd, Bombay-1

James M. Neal & Suzanne S. Brown — **News writing and Reporting,** Iowa State University Ames - IOWA

John R. Biggs — **Basic Typography**
Faber And Faber Ltd., London.

Loosely, A. E. — **The Bussiness of Photo Journalism**

Margarita Barns — **The Indian Press**, George Allen & Unwin Ltd.

Nadig Krishna Murthy — **Indian Journalism**
Prasaranga, University of Mysore.

Natarajan, S. — **A History of the Press in India**
Asia Publishing House, Madras.

Rengasamy Parthasarathi — A hundred years of the HINDU
Kasthuri & sons Ltd, Madras-2.

Ruth Adler — **The working Press**

Saumyendranath Tagore — **Raja Ram Mohan Roy**
Sahitya Acadame, New Delhi.

Shani, J. N. — **Truth about the Indian Press**
Allied Publishers, Madras.

Surendra Nath Sen - **Eighteen Fifty Seven** The Publication Division, Ministry of Information and Broad casting, Government of India.

Taylor, R.M — **Essential Laws for Journalists**
Crosby Lockwood Staples, London.

Tushar Kanti Ghosh — **Journalism as a Factor in Democracy** (Speech) a pamphlet Published by University of Mysore.

— 'India - A Reference Annual 1983'
Publication Division Ministry of Information and Broad Casting, Government of India.

Source Material for a History of the Freedom Movement in India. Vol. II — Government Printing Publication and Stationery. Bombay State, Bombay.








## அறிஞர்கள் பார்வையில் . . .

இந்தியப் பத்திரிகைத்துறை வரலாற்றை யும் பத்திரிகைகளை வெளியிடும் முறை களையும் அறிமுகம் செய்து வைக்கும் இந்நூல் அறிவூட்டும் வகையில் அமைந் துள்ளது. பத்திரிகைகள் அமைப்புக்கலை, அச்சுத்துறை பற்றிய முழு வடிவத்தை யும் தெரிந்து கொள்வதற்கு ஏற்ற நூல்.

— தினமணி



இரா. கோதண்டபாணி
எம்.ஏ., பிஎச்.டி.,

பத்திரிகைக் கல்வியைப் பல்கலைக்கழகங் களில் கற்பிக்கத் தரமான புத்தகங் களோ, தகுதி வாய்ந்த ஆசிரியர்களோ தமிழகத்தில் இல்லையே என மனப்பூர்வ மாகக் கவலைப்படும்நிலையில் இதழிய லின் அடிப்படைகளைத் தரமாக அறி முகப்படுத்தும் திரு. கோதண்டபாணி யின் நூல் பெரிதும் வரவேற்கத்தக்கது.

— டாக்டர் அ. சாந்தா
மதுரைமணி

இதழியல் என்னும் இந்நூல் இதழியல் துறையின் இதய நுட்பங்களை எல்லாம் இனிதில் எடுத்தியம்புகிறது. இந்நூலைக் கற்பவர் ஒரே மூச்சில் படித்து முடிக்கும் வண்ணம் ஆசிரியர் அழகிய எளிய நடை யினைப் பின்பற்றியுள்ளார்.

டாக்டர் த. அமிர்தலிங்கம்
தமிழ்ப்பணி